உ

# தருமதீபிகை

(மூலமும்—உரையும்)

## ஏழாவது தொகுதி.

ஆசிரியர்

ஜெகவீரபாண்டியனார்



மதுரை

சி. வி. என். பிரஸில் பதிப்பிக்கப் பெற்றன.

1957.

## நூலின் அமைதி.

விதிவழி உயிரினம் விளையும் நீர்மையும்
மதிவழி வாழ்வுறும் வகையும் மாதவம்
பதிவழி பரகதி பதியும் பான்மையும்
கதிவழி யாயிது காட்டி யுள்ளது.

## பொதிகையார்.

கம்பனே வள்ளுவனே காவிரியைத் தந்தஅந்தக்
கும்பனே என்றுன்னைக் கூறுவரே—இம்பருயர்
செந்தமிழைப் பேணும் செகவீர பாண்டியநின்
பைந்தமிழைத் தேர்வார் பரிந்து.

882. பொன்றி அழியும் புலையுடல் இவ்வழி
நின்றுள போதே நிலைதெரிந்து—நன்று
புரிந்து புகழறம் பூண்டனரேல் விண்ணோர்
விருந்தினர் ஆவர் விரைந்து. (2)

இ-ள்.

அழிந்து ஒழிகின்ற இழிந்த ஊனஉடல் ஈண்டு அழியாமல் உள்ள பொழுதே தெளிந்த அறிவோடு புகழ் புண்ணியங்களைச் செய்து கொள்பவரே சிறந்த மேலோராய் உயர்ந்து திகழ்வர்; அவரைத் தேவர் விரைந்து விருந்தினரா உவந்துகொள்வர் என்க.

எவ்வழியும் யூகித்து உணரும் திறம் மனிசனிடம் தனியுரிமையாய் அமைந்துள்ளது. யூகி, விவேகி எனவிளங்கி நிற்பவர் உயர்ந்த மேதைகளாய் மதிக்கப்பட்டுள்ளனர் மதி நலம் மனிதனுக்கு அதிசய மகிமைகளை அருளி வருதலால் அது திவ்விய ஒளி என்று எவ்வகையோரும் புகழ்ந்து போற்றப் பெற்றது.

உற்ற துயர்கள் யாவும் நீங்கி உயிர் உயர்நிலை அடைய ஒளி நீட்டி வழிகாட்டியருள்வதே உயர்ந்த மதியாய்த் தெளிந்து கொள்ள வந்தது. அந்தக் காட்சியும் மாட்சியும் ஆட்சியும் இழந்த அளவு அது மழுங்கலாய் இழிந்து மறைந்து போகிறது.

நல்ல அறிவுக்கு அடையாளம் பொல்லாத புலைகளை ஒதுக்கி மனிதனைப் புனித நிலையில் உயர்த்தி வருவதேயாம். உரிய அறிவு நலமாய்ப் பெருகி வரும்போது அதனை உடையவனும் உயர்ந்த மனிதனாய்ச் சிறந்து ஒளி மிகுந்து எழில் நிறைந்து வருகிறான்.

உருவத்தால் மனிதன் ஆயினும் உள்ளத்தே நல்ல அறிவு இல்லையானால் அவன் புல்லிய மிருகமாகவே எள்ளி இகழப்படுகிறான். உற்ற உணர்வு ஒழிந்த அளவு உயர் பிறப்பும் இழிந்தது.

மக்கட் பிறப்பெனும் மாத்திரம் அல்லது
மிக்க வெளிற்று விலங்குக ளேஅவர்
நக்க உருவினர் நாணு ஒழுக்கினர்
தொக்கனர் மண்ணே துளைத்துண்டு வாழ்வார்.

(சூளாமணி)

அல்வழியை நாணி விலகி நல்வழியை நாடி ஒழுகுவோரே நல்ல மக்கள்; அல்லாதவர் மக்கள் வடிவம் மருவியிருந்தாலும் பொல்லாத காட்டு விலங்குகளே என இது விளக்கியுள்ளது.

தக்க இன்ன தகாதன இன்னஎன்று
ஒக்க உன்னலர் ஆயின் உயர்ந்துள
மக்களும் விலங்கே மனுவினநெறி
புக்கவேல் அவ் விலங்கும் புத்தேளிரே.

நன்று தீதுஎன் றியல்தெரி நல்லறிவு
இன்றி வாழ்வதன்றோ விலங்கின்னிடை
நின்ற நன்னெறி; நீ அறியாநெறி
ஒன்றும் இன்மைஉன் வாய்மை உணர்த்துமால் (2)

[இராமாயணம்]

வாலியை நோக்கி இராமன் இவ்வாறு கூறியிருக்கிறான்.

இந்தக் கவிகளின் சுவைகளையும், பொருள்களின் நிலைகளையும் கருதியுணர்பவர் அரிய பல உறுதி நலங்களை அறிந்து கொள்ளுவர். நல்ல விவேகியாய் நெறி முறையே ஒழுகி வருவோனே மனிதன் ஆகின்றான்; அங்ஙனம் ஒழுகாதவன் பிறப்பால் மனிதன் ஆனாலும் இழிந்த மிருகமே என்பதை இங்கே நன்கு தெரிந்து நயங்களை உணர்ந்து கொள்ளுகிறோம்.

ஒருவனுடைய சிறந்த அறிவுக்குப் பயன் அவன் பிறந்த பிறவியின் பயனை விரைந்து அடைந்து கொள்வதேயாம். மனித தேகம் கிடைப்பது மிகவும் அரிது; அருமையான அது உரிமையாய் அமையினும் விரைவில் அழியும் இயல்பினது; உடல் அழிந்து விழுமுன் உயிர்க்கு இனிய உறுதி நலனை உறுகின்றவனே அரிய பெரியவனாய் உயர்ந்து உய்தி பெறுகின்றான்.

நிலையில்லாத நிலைகளை நேரே தெரிந்திருந்தும் நிலையான பேரின்ப நிலையை அடையாமல் கழிவது அவல வாழ்வாம்.

இளமை கழியும் பிணிமூப்பு இயையும்
வளமை வலியிவை வாடும்--உளநாளால்
பாடே புரியாது பால்போலும் சொல்லினாய்
வீடே புரிதல் விதி. (ஏலாதி, 21)

இளமை செல்வம் முதலியன கழிந்து போவதையும், முதுமை நோய் முதலியன புகுந்து கொள்வதையும் கண்ணாரக் கண்டிருந்தும் கதி காணாமல் மண்ணாய் மடிவது மதியாகாது எனக் கணிமேதையார் இவ்வாறு காட்டியிருக்கிறார். துன்பத் தொடர்புகளைத் தொடாமல் நீங்கி இன்ப வீட்டுக்கு உரிய வழி

யை மனிதன் விழிதிறந்து விரைந்து காண வேண்டும் என்பதை மேலோர்யாவரும் ஒளி மிகுந்த மொழிகளால் உணர்த்தியுளார்.

பிறந்தவர் எவரும் இறந்து போவர்; சாவை யாரும் நீக்க முடியாது; ஆயினும் இந்த யாக்கை முடிவை ஆக்கமா அமைத்துக் கொள்ள வேண்டும். பொன்றும் உடலைப் பொருந்தி வந்தவர் புண்ணிய நீர்மை மருவிநின்றால் என்றும் இனியராய் அவர் நின்று திகழ்வர். தேவரும் அவரை உவந்து உரிமை செய்து கொள்ளுவர் ஆதலால் விண்ணோர் விருந்தினர் என நேர்ந்தார்.

தரும நீதியோடு வாழ்ந்து வருபவர் இருமையும் பெருமை பெறுகின்றார். அவருடைய வாழ்வு மனித சமுதாயத்துக்கு இனிய ஒரு புனித போதனையாய் மருவி வருகிறது

**Live righteously; you shall die righteously. [Ovid]**

"நீ நீதியாய் வாழ்; உன் சாவு நீதியாய் வரும்" என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி உணரவுரியது.

பிறப்பின் பயனைப் பெற்றுக் கொண்டவர் இறப்பில் இன்புறுகின்றனர். புண்ணியம் பொங்கிவர வாழ்வதே புனித வாழ்வாம். அவ்வண்ணம் வாழ்பவனே வானவன் ஆகிறான்.

---

883. கற்ற கலையைக் கடமை யொடுபேணி
உற்றதன் வாழ்வை ஒளிசெய்து—சுற்றம்
தொழுது மகிழத் தொழில்புரிந்து வாழின்
பொழுது விளையும் புகழ். (ங)

இ—ள்.

தான் கற்ற கல்வியறிவை நல்ல கருமங்களைச் செய்வதால் நன்கு பேணித் தனது வாழ்வை விழுமிய நிலையில் ஒளிசெய்து உயர்த்தித் தன்னைச் சூழ்ந்த உறவினங்கள் உவந்து மகிழ உதவி புரிந்துவரின் அவன் புகழ் மிகவும் விரிந்து விளங்கும் என்பதாம்.

இயல்பாகவே மனிதன் அறிவுடையவன்; ஆயினும் கல்வியால் அது தெளிவாய் ஒளிபெற்று வருகிறது. சிறந்த அறிவாளிகளின் கருத்துக்களை நூல்களின் வழியாக நுனித்து அறிந்து கொள்வதையே கல்வி என்று உலகம் சொல்லி வருகின்றது.

பலவகை நெறிகளிலும் பரந்து விரிந்துள்ள அந்தக் கல்வியின் நிலைகளே கலைகள் எனத் தொகையாய் நிலவி நிற்கின்றன.

இலக்கியம், சிற்பம், இசை, ஓவியம், கணிதம் முதலியன கலைகள் என வந்துள்ளன. அறிவு நலம் கனிந்த இந்த நிலைகளில் தலைசிறந்து வருபவர் உலகம் நலம்உற ஒளிசெய்து வருகின்றார். கலை நிறைந்த மதிபோல் கலை நிறைந்த மதிமான்கள் பலவகையிலும் இன்பம் புரிந்து வருதலால் மாந்தர் அவர்பால் அன்பு கூர்ந்து யாண்டும் அவரை உரிமையோடு போற்றுகின்றனர். உள்ளம் ஒளிபெற்ற அளவு அந்த மனிதன் வெளியே தெளிவுற்று நிற்கின்றான். தெளிந்தமேதை திவ்விய சோதியாய்த்திகழ்கிறான்.

இந்தக் கலை யறிவு தனியே நின்றால் உலக வாழ்க்கைக்கு உறுதி புரியாது. கருமங்களோடு கலந்தபோதுதான் வாழ்வை வளம்படுத்தி அது மேன்மை புரிந்து விளங்கியருளுகிறது.

உழைப்பின் வழியே பிழைப்பு நடந்து வருதலால் அதனை உணர்ச்சியுடன் செய்பவன் உயர்ச்சி அடைகின்றான். உணராது அயர்ந்து நிற்பவன் உயர்நலங்களை இழந்துவிடுகிறான்.

அறிவும் முயற்சியும் இருவிழிகள்போல் வாழ்வதற்கு வழி காட்டுகின்றன; ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்தால் உறுதி குன்றி விடும். அறிவில்லாத முயற்சியும், முயற்சியில்லாத அறிவும் இகழ்ச்சியாய் இழிவுறும். இருவகையும் மருவின் பெருமை ஆம்.

அறிவு பலவகை நிலைகளுக்கும் ஒளி தருகிறது; அது கலையில் கவியும்போது அதன் நிலை உயர் சுவையாய் எவ்வழியும் ஒளி வீசுகின்றது அந்த நிலை எல்லாருக்கும் எளிதில் அமையாது; அருமையான சிலர்க்கே அது உரிமையாய் அமையும்.

கருமத்தை யாவரும் செய்யலாம்; அவ்வாறு செய்துவருபவரே வாழ்வின் கடமையை வளமாச் செய்தவராகின்றார். தொழில், வினை, கருமங்கள் என்பன வாழ்வின் தருமங்களாய் வந்துள்ளன. வாங்கிய கடனைக் கொடுக்க வேண்டியதுபோல் வாழ்வின் பாங்காய் அடுத்து வந்துள்ளமையால் கருமம் கடமை என நேர்ந்தது. கடத்தால் செய்வது கடமை எனக் காரணக் குறியும் பெற்றது. கடம் = உடல். முன்னது புறப்பொருளால் போந்தது; பின்னது அகப்பொருளால் நேர்ந்தது.

தன் கடமையைக் கருதிச் செய்பவன் எவ்வழியும் பெருமை பெறுகிருன்; அவ்வாறு செய்யாதவன் சிறுமை யுறுகிருன்.

Of all the ways of life but one—
The path of duty — leads to happiness. (Southey)

வாழ்வுக்கு உரிய வழிகள் எல்லாவற்றுள்ளும் கடமையைக் கருதிச் செய்வது ஒன்றே நல்ல வழி; அதுவே இன்ப வாழ்வை இனிது அருளுகிறது என சதே என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிருர். ஈங்கு இது சிந்திக்கத்தக்கது.

There's life alone in duty done,
And rest alone in striving. (Whittier)

கடமையைச் செய்வதில்தான் நல்ல வாழ்வு இருக்கிறது; இல்லையானுல் அது அல்லல்தான் என்னும் இது இங்கே அறிய வுரியது. கருமமே தருமமான வாழ்வைத் தருகிறது.

குடி வாழ்க்கைக்கு இனிய ஆதாரமாயுள்ள கருமங்களைக் கருதிச் செய்து தன் குடும்பத்தை நன்கு பேணி வருபவன் நல்ல ஆண் மகனுய் எங்கும் மேன்மை பெறுகின்ருன்.

நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல். (குறள், 1026)

சிறந்த ஆண்மையாளனுடைய பான்மையைத் தேவர் இவ்வாறு வரைந்து காட்டியிருக்கிருர் இல்லை இனித ஆளும்தன்மை இல்லாண்மை என நின்றது. பேராண்மை போராண்மை ஊராண்மை வில்லாண்மை சொல்லாண்மை முதலாக ஆண்மைகள் பல உள்ளன. அவற்றுள் எல்லாம் உயர்ந்த நல்ல ஆண்மை ஈண்டு நல்லாண்மை என வியந்து சொல்ல வந்தது.

தான் பிறந்த குடியைச் செல்வம் முதலிய நலங்களால் சிறந்ததாக ஒருவன் உயர்த்தியபோது அந்தக்குடியில் உள்ளவர் அனைவரும் அவனைத் தலைவனுக வணங்கி எவ்வழியும் அடங்கி அவனுடைய சொல்வழியே நடந்து வருகின்றனர்; வரவே முடி அரசன் போல் அக்குடிக்கு அவன் தனி அரசனுகின்ருன். தன்னைச் சார்ந்தவரை வளமா வாழச்செய்து தன் ஆணை வழியே அவரை அடக்கி ஆண்டு வருதலால் நல்ல ஆண்மையாளனுயினுன். ஆளும் தன்மை ஆண்மை என அமைந்துள்ளமையால்

அதன் பான்மையும் மேன்மையும் தெளிந்து கொள்ளலாம். குடியை நயமா ஆள்பவன் பின்பு படியை வியனு ஆளும் பாக்கியவானுவான். ஆகவே அவனது அதிசயமகிமை அறியலாம்.

நல்ல ஆண்மையாளனுச் சிறந்து விளங்கி உயர்ந்த புகழை அடையவேண்டின் நீ பிறந்த குடியைநிறைந்தபெருமையுடைய தாச் செய்; கருமவீரன் என்னும் பெருமையும் அருமையான தலைமையும் இருமை யின்பங்களும் அதனுல் உனக்கு உளவாம்.

தாய் தந்தையரைத் தகவாப் பேணி, மனைவி மக்களை இனிது பாதுகாத்து, ஒக்கல் உறவுகளை உரிமையோடு ஓம்பிவரின் அந்த மனிதன் அரிய மகிமைகளை அடைந்து கொள்கிறுன். குடியை உரமாக்கி உயர்த்தி வரமான புகழுடன் உயர்ந்து கொள்ளுக.

---

884. போதனைகள் போதிக்கும் புத்தியினும் எவ்வழியும்
சாதனைகள் சாதிக்கும் சத்தியே—வேதனைகள்
யாவும் அகற்றும் அரிய மகிமைகள்
மேவும் அதனுல் மிகுந்து. (௪)

இ—ள்.

தரும நீதிகளைப் போதிக்கும் அறிவினும் கருமங்களைக் கருதிச் செய்யும் ஆற்றலே ஏற்றம் உடையது; அதுவே துயரங்களை நீக்கி உயர்நலங்களை அருளி எவ்வழியும் உறுதி தரும் என்க.

மனித இனம் வாழுகின்ற இவ்வுலகிற்குக் கருமபூமி என்று ஒரு பெயர் மருவியுள்ளது. செய்த வினைகளால் பிறந்து வந்துள்ள சீவர்கள் செய்யும் கருமங்களால் வாழுவது நேமமா நேர்ந்தது. உயிர் வாழ்வு உயர்வான நிலையில் ஒழுகவுரியது.

அறிவால் மனிதன் பெருமை பெற்றிருக்கிறுன்; ஆயினும் அது பயிற்சி படிந்து முயற்சியில் மூண்டபோதுதான் உயர்ச்சி அடைந்து ஒளி மிகுந்து திகழ்கின்றது. கூரிய பார்வையால் கண் கவின் உறுகிறது; காரிய சாதனையால் அறிவு பெருமை பெறுகிறது. உழையாதவன் பிழையாகவே பிழைக்க நேர்கின்றுன் ஆதலால் அவனுடைய அறிவு எவ்வழியும் பிழைபடுகிறது. பிழைநேராமல்பிழைப்பவனேபெருமைமிகப்பெறுகிறுன்.

தன் சீவியத்தைச் செவ்வையாக உயர்த்தாதவன் எவ்வளவு காவியங்களைப் படித்து வந்தாலும் உலக நிலையில் பயனிழந்தவனுகிறான். குடி வாழ்க்கை சீரும் சிறப்புமாய் உயர்ந்தபோது தான் உலகம் அவனை வியந்து நோக்குகிறது. எல்லா உயர்ச்சிகளும் நல்ல பொருள்களும் முயற்சியால் உளவாகின்றன.

Industry is a loadstone to draw all good things. [Burton]

தொழில் முயற்சி விழுமிய காந்தக்கல்; நல்ல பொருள்கள் யாவும் ஒல்லையில் அதன்பால் வருகின்றன என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி உணர்ந்து கொள்ள வுரியது.

உள்ளம் உடையான் ஊக்கி முயன்று எல்லா ஆக்கங்களையும் அடைந்து மகிழ்கின்றான்; முயலாதவன் யாதும் இலனாய் இழிந்து வருந்துகிறான்; மதியோடு முயல்பவன் அதிசய மனிதனாய் உயர்கிறான்; உயரவே உலகம் அவனை உவந்து புகழ்ந்து விழைந்து வருகிறது. தன்னை ஆக்குவதே தனித்த ஆக்கமாம்.

சாதுரிய சாகசங்கள் சார்ந்து தனியான
மாதுரியம எவ்வழியும் மன்வாய்ந்து---வாதிரியச்
சூழ்ந்தினிது வாழும் சுகுணனை யாவரும்
சூழ்ந்து வருவர் தொழுது.

சீரிய காரிய வீரியங்கள் அமைந்து, எவ்வழியும் உயர்வான இனிய பண்புகள் வாய்ந்து, தடையாய் நேருகிற இடையூறுகளை ஓர்ந்து நீக்கி, வாழுகின்ற குணசீலனை யாவரும் உவந்து உரிமையோடுதொழுதுசூழ்ந்து வருவர்எனஇதுஉணர்த்தியுளது.

அரிய வினையாண்மைகளோடு தன்னைத் தகுதியாக்கிக் கொண்டபோது அந்த மனிதனை எவரும் மிகுதியா மதித்துப் போற்றுகின்றனர். அறிவும் குணமும் செயலும் ஒன்றாய் மருவி வரும் அளவே பெருமைகள் பெருகி வருகின்றன. கூரிய அறிவு சீரிய பண்பால் சிறப்புறுகிறது; அவை காரிய சாதுரியங்களால் கவின் உறுகின்றன. ஆற்றும் காரியம் ஏற்றமான வீரியமாம்.

கூரிய அறிவினும் குணங்கள் கூடிய
சீரிய நன்மனம் சிறந்த தாகுமே;
ஆரியம் முதலிய கலைகள் ஆயினும்
காரியம் இலன்எனின் கடையன் ஆவனே.

கருமவீரமே எல்லா மேன்மைகளுக்கும் பூரணமான காரணமாய்ப் பொருந்தியுள்ளது என்பதை இதனுல் தெரிந்து கொள்கிறேம். கருதி வினைசெயின் உறுதிநலங்கள் பெருகும்.

வாழ்வை வளம் ஆக்கிச் சமுதாயத்தில் மதிப்பை விளைத்து வருகிற செல்வம் முயற்சியால் வருதலால் அது இலட்சுமி என வந்தது; தீதான மடி மூதேவி என எள்ளி இகழ நேர்ந்தது.

**There is no greater cause of melancholy than idleness.**
**(Robert)**

கொடிய துயரங்களுக்கு மூலகாரணம் நெடிய சோம்பலே என ராபெர்ட் என்னும் ஆங்கில அறிஞர் குறித்திருக்கிருர்.

வறுமை சிறுமை முதலிய இழிவுகளை விளைப்பது ஆகலால் மடி கொடியது என நின்றது. அயர்ந்து சோம்பியிராமல் முயன்று காரியங்களைச் சாதித்து வருபவன் செல்வம் சீர்த்திகளை எய்தி எவ்வழியும் வீரியவாளுய் நன்கு விளங்கி வருகிருன்.

885. தம்முடைய தானம் தலைமைங்லை தாழாமல்
செம்மைநெறியோடு சேர்ந்தொழுகின்—எம்மையும்
மேன்மை விளையும் மிகுமதிப்பாம் மேலான
பான்மையே மேன்மை படும். (ரு)

இ—ள்.

தமக்கு உரிமையாய் அமைந்த பதவியை யாண்டும் நிலை குலையாமல் செம்மையாகப் பேணி ஒழுகின் மேன்மையும் மதிப்பும் எவ்வழியும் மிகுந்து விளையும்; மேலான நீர்மையே சீர்மை மிகப் பெறும்; அந்தச் சீரிய நிலையைச் சேருகஎன்பதாம்.

கருதிச் செய்யும் கருமங்களாலேயே மனிதருடைய வாழ்வுகள் மரபாய் நடந்து வருகின்றன. வரம்பு ஒழுங்கு கட்டுப்பாடு என்பன வாழ்க்கையின் செப்பங்களை நுட்பமா வரைந்து வந்துள்ளன. செம்மையான வாழ்வே சிறந்த நன்மையாம்.

காலத்தைக் கணித்துப் பருவம் தவருமல் கருத்தோடு எவன் காரியம் செய்துவருகிருனே அவன் சீரிய கருமவீரனுய்ச் சிறந்து யாண்டும் உயர்ந்த செல்வங்களை அடைந்து திகழ்கிருன்.

விவேகமும் வினையாண்மையும் சாதுர்ய சாகசமும் மனிதனை உன்னத நிலையில் உயர்த்தி யருளுகின்றன. எண்ணமும் செயலும் நல்ல வண்ணமா உயர்ந்து வரும் அளவே உயர்ச்சிகள் உளவாகின்றன. உள்ளம் உயர உயர்வுகள் தெரிகின்றன.

தானம் என்றது தனக்கு வாய்த்துள்ள நிலைமையை. கருதும் கருத்தாலும் பேசும் பேச்சாலும் செய்யும் தொழிலாலும் மனிதனுடைய தகுதி தெரிய வருகிறது. இனிய நீர்மைகளைப் பழகி வருபவன் அரிய சீர்மைகளை மருவி மகிழ்கிருன்.

மேன்மை என்பது மேலான தன்மையிலிருந்து விளைந்து வருகிறது. கீழான புன்மைகள் ஒழிந்த அளவு அந்த மனிதன் மேலானவனுய் மேவி யாண்டும் மேன்மையோடு விளங்கி வருகிருன். விழுமிய நீர்மை கெழுமிய சீர்மையாம்.

எவ்வழியும் இதமான இனிய மொழிகளை ஒருவன் பேசிவரின் அவனுடைய வாழ்வு புனிதம் அடைந்து இனிமை சுரந்து வரும். பேசுகின்ற பெருமை மிருகங்களுக்கு இல்லை; மனிதனுக்கே தனியுரிமையாக அமைந்துள்ளது. இந்த வாக்கின் பாக்கியத்தை நலமாப் போற்றி வருபவர் ஏற்றம் பெறுகின்ருர்.

நாவு நல்லதாளுல் நாடும் நல்லது என்பது பழமொழி.

இனிய சொல்லே பேசுகின்றவன் எங்கும் இன்பம் பெறுவான்; எவரும் அவனை உவந்து போற்றிவருவர்; அரிய பலன்கள் அதனல் பெருகி வரும் என்பது இதனல் தெரிய வந்தது.

துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு. [குறள், 94]

இன்பம் கனிந்த இனிய சொல்லையுடையவர்க்குத் துன்பம் மிகுந்த வறுமை இல்லையாம் என இது குறித்துள்ளது.

இன் சொல்லாளனை எவரும் பிரியமாப் பேணுவர்; அந்தச் சொல்லிலே தருமம் மருவியுள்ளது ஆகலால் அவனுக்கு அல்லல் இல்லை; யாண்டும் நல்ல சுகமே அனுபவிப்பான்; நலம் பல பெறுவான் என்பதை இங்கு நன்கு அறிந்து கொள்ளுகிருேம்.

Who in his pocket hath no money,
In his mouth he must have honey. (Watkyns)

பையிலே பணம் இல்லாதவன் வாயிலே தேனை வைத்துக் கொள்ள வேண்டும் என இது உரைத்துள்ளது. தேன் என்றது சுவையான இனிய மொழியை.

Give a sweet and gentle word. [Herrick]

இனிய வார்த்தையை அமைதியாய்ப் பேசு என இது குறித்திருக்கிறது. பேசும் பெருமையை மனிதன் தனி உரிமையா அடைந்து வந்துள்ளான். அதனைப் புனிதமாகப் பயன்படுத்திவரின் இனிய பல மேன்மைகள் உளவாகின்றன. உண்மையை உணர்ந்து உறுதி செய்து கொள்வது பெரிதும் நன்மையாம்.

மேலான மானுடத்தை மேவிநீ வந்துள்ளாய்
பாலான் நீர்மை படிந்துயர்க---மாலாய்
இழிந்து திரியினோ ஈனப் பிறப்பா
அழிந்து கழிவாய் அறி.

இதனைச் சிந்தனை செய்து தெளிந்து கொள்ள வேண்டும்.

---

886 நம்மை மதியாரை நாம்மதியோம் ஆயினமை
எம்மை யுலகும் எதிர்மதிக்கும்—நம்மை
மதியாதவரை மதிப்ப தவரைச்
சதியாகச் செய்த சதி (சு)

இ—ள்.

நம்மை நன்கு மதியாதவரை நாம் எங்கும் மதிக்கலாகாது; அவ்வாறு மதியாமல் மதிப்போடு நின்றால் எல்லா உலகங்களும் நம்மை எதிர் நோக்கி மதிக்கும்; மதியாதவரை மானம் கெட்டு மதிப்பது அவரைச் சதிவஞ்சமாக் கெடுத்த அதிகேடாம் என்க.

தன்னைப் பிறர் மதிக்க வேண்டும் என்னும் ஆவல் ஒவ்வொரு மனிதனுடைய உள்ளத்திலும் நன்கு உறைந்திருக்கிறது. மதிப்பு என்பது காரணக் குறியாய் மருவி வந்துள்ளது.

தக்க மதியுடையார் உவந்து மதிக்கும் உயர்வே உண்மையான மதிப்பாம். மணிகளின் தரம் அறிந்து மதிப்பவர்போல் மனிதருடைய தராதரங்களைத் தெளிந்த மதியுடையோரே மதித்தருளுகின்றார். தகுதி தெரிந்து தகவோடு மதிப்பவர் தக்கவராகின்றார்.

மதிகேடர் மதித்துப் புகழ்வதும், மதியாது இகழ்வதும் விதி ஆகா. தக்க மேலோர் மதிப்பதே மிக்க மேன்மையாம்.

அவமதிப்பும் ஆன்றமதிப்பும் இரண்டும்
மிகைமக்க ளால்மதிக்கற் பால---நயம்உணராக்

கையறியா மாக்கள் இழிப்பும் எடுத்தேத்தும்
வையார் வடித்தநூ லார். [நாலடியார், 163]

உண்மையா ஓர்ந்து மதிக்கத் தக்கவர் உணர்வுடைய மேலோரே என இது உணர்த்தியுள்ளது. மதிப்பும் அவமதிப்பும் வெளியிலிருந்து வருவன அல்ல; உள்ளத்தின் தகுதி தகாமைகளின் அளவே மனிதனிடமிருந்து அவை உதயமாகின்றன.

செல்வம் கல்வி அதிகாரம் முதலியன மதிப்பை விளைக்கும் ஆயினும் அவை நீதிநெறிகளோடு தோய்ந்த அளவுதான் தேர்ந்த மதிப்பாம். செருக்கு முதலிய சிறுமைகளோடு கலந்தபோது அவை அவமதிப்புகளையே அடைகின்றன. புல்லிய செல்வன் ஒருவன் நல்ல கல்விமானை நோக்கி ஒருமுறை எள்ளலாக் கேலி செய்தான். எவ்வளவு படித்தாலும் பணக்காரரை நச்சித்தான் பண்டிதர்கள் வருகின்றார் என்று அவன் கிண்டல் செய்யவே புலவர் அவனைப் புன்னகையோடு பார்த்தார்; நன்னயமா உரைத்தார். அந்த உரையின வேகப் விவேக ஒளியை வீசியது.

பெரிய அரசன் ஒருவன் மூத்திரம் பெய்யச் சாக்கடைக்குப் போனான்; அந்த அங்கணம அவனைக் கண்டு களித்தது; மன்னர் மன்னவர் எல்லாரும் என் முன்னே வந்து தலை வணங்கி நிற்கின்றார் என்று சொன்னது; அதைப் போல் உள்ளது நீ சொல்லுவது எனச் சுவையாச் சொன்னார். அவன் உள்ளம் நாணி ஒதுங்கிப் போனான். மதியாத மதிகேடரை மதிக்கப் பேசினால் மேலும் அவர் மதிகெட்டு இழிந்துபோவர்; அவ்வாறு ஈனமாய் இழிந்து போகாதபடி ஞானமடைந்து யாரும் தெளிந்து கொள்ளச் செய்வதே சிறந்த மானமான தேர்ந்த மதிப்பாம்.

நம்மை மதியாரை நாமுன் அவமதித்தால்
தம்மை யுணர்ந்தவர் தாழ்ந்திடுவார்---செம்மை
தெரியா தவரைத் தெரிய வுணர்த்தின்
மரியாதை யாகும் மதி.

இந்த மானச தத்துவத்தை ஈண்டு உய்த்து உணர்ந்து கொள்ள வேண்டும். உண்மை யுணர்வே நன்மை தருகிறது.

உன்னை மதியாதவனை நீ மதிக்க நேர்ந்தால் உன்னை நீயே அவமதித்தவனாகின்றாய். அந்த அவமானத்தை விளைத்துக் கொள்ளாதே. உன் உள்ளத்தை உயர்த்தி வாழ்வதே எவ்வழியும் நன்மையாம். செம்மையும் சிறப்பும் திண்மையான சிந்தையில் உள்ளன யாண்டும் தீரனாய் நின்று வீரனாய் விளங்குக.

தம்மை இகழ்வாரைத் தாமவரின் முன்இகழ்க;
என்னை அவரொடு பட்டது? — புன்னை
விறற்பூங் கமழ்கானல் வீங்குநீர்ச் சேர்ப்ப
உறற்பால யார்க்கும் உறும். (நாலடி)

வருவன எவையோ அவை வந்தே தீரும்; மதிப்பிழந்து நில்லாதே: உள்ளந்துணிந்து மானத்தோடு உறுதியாய் வாழுக என ஊக்கியிருக்கும் இதன் நோக்கத்தை ஊன்றி உணர்ந்து கொள்க. மானம் உயிரினும் இனியது; அதனைப் பேணி வருவதே ஞானமாம்.

நான்கு கோடி பொன் பெறும்படியான பாட்டு ஒன்று பாடியிருக்கிறேன்; அந்த அருமைப் பாட்டை உன்னிடம் உரிமையோடு நேரே கூற வந்துள்ளேன் என்று சோழ மன்னனை நோக்கி ஔவையார் ஒருமுறை உல்லாசமாச் சொன்னார். அரிய பொருளுடைய பெரிய கவி என அங்கிருந்தவர் யாவரும் ஆவலா வியந்தார். வேந்தன் அதனை விழைந்து கேட்கநேர்ந்தான். அப்பொழுது அப்பாட்டி பாடிய பாட்டு அயலே வருகிறது.

மதியாதார் முற்றம் மதித்துஒருகால் சென்று
மிதியாமை கோடி பெறும்;
உண்ணீர் உண்ணீர் என்று உபசரியார் தம்மனையில்
உண்ணாமை கோடி பெறும்;
கோடி கொடுத்தும் குடிப்பிறந்தார் தம்மோடு
கூடுதல் கோடி பெறும்;
கோடானுகோடி கொடுப்பினும் தம்முடைய நாக்
கோடாமை கோடி பெறும். (ஔவையார்)

இதைக் கேட்டதும் அரசன் மகிழ்ந்தான். நாலுகோடி பொன் தர இசைந்தான்; இந்தக் கவியின் சுவையை நீ அறிந்து மகிழ்ந்ததே எனக்கு நாற்பது கோடி தந்த படியாம்; வேறு யாதும் எனக்கு வேண்டாம் என்று ஔவை அவனை வாழ்த்திப் போனாள். தரம் குன்றாமல் வாழ்வதே தக்க மேன்மையாம்.

மதிப்பைப் பேணி, மரியாதையைப் போற்றி, நல்லவர்களோடு பழகி, சத்தியத்தைப் பாதுகாத்து வாழுக; அதுவே உத்தம வாழ்வாம் என இது போதித்துள்ளது. இதனைச் சாதித்து வழியும் தகுதியாக உள்ளத்தை உயர்த்தி வருவது நல்லது.

உலகம் உன்னை நன்கு மதிக்க வேண்டுமானால் உன் உள்ளத்தைப் பண்படுத்தி நல்லவனு நீ உயர்ந்து கொள்ளவேண்டும்

தனக்கு மரியாதை தான்தேடான் ஆயின்
எனக்கவனால் என்ன பயன்.

தன் மைந்தனை நினைந்து ஒரு தந்தை இவ்வாறு கூறியிருக்கிறார். மதிப்புடையவன் மணமுடைய மலர்போல் மாண்புறுகிறான்.

The best of lessons–to respect myself. [Southey]

எனக்கு மதிப்பை விளைத்துக் கொள்வதே உயர்ந்த படிப்பு எனச் சதே என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் குறித்திருக்கிறார். தக்க தகைமை மிக்க மகிமையை விளைத்து வருகிறது.

He that respects not is not respected. [G. H.]

மதிப்பைச் செய்து கொள்ளாதவன் மதிக்கப்படான் என இது உரைத்துளது. அரிய மேன்மை இனிய பான்மையால் அமைகிறது. இனிமைப் பண்பு இன்பங்களை அருளுகிறது.

உயர்வும் தாழ்வும் மனிதனுடைய செயல் இயல்களில் மருவி யுள்ளன. நல்ல தன்மைகளை வளர்த்துவரின் மதிப்புகள் அங்கே தழைத்து வருகின்றன. உள்ளம் உயர்ந்து வர உலகம் உவந்து வரும். தனது மேன்மை தன்னுள்ளேயே தனிமையாயுளது.

இயல்பு இனிமையானால் உயர்வு உரிமை ஆகிறது.

---

887. உள்ள மதியை ஒளிசெய் துலகமெலாம்
வள்ளல் எனவுவந்து வாழ்த்திவர—வெள்ளம்
பெருகி வருதல்போல் பேரும்புகழும்
மருவும் கலையை மதி. (எ)

இ-ள்.

கலை ஞானத்தால் அறிவு நலமா வளரும்; இயல்பாயிருந்த அறிவை உயர்வா ஒளி செய்து உலக மாந்தர் உவந்து புகழ்ந்து வரும்படி சிறந்த சீர்த்திகளை விரைந்து தருதலால் கலையை விழைந்து கொள்க; அதுவே தலைமையான மகிமையாம் என்க.

கல்வி முதலிய நல்ல நிலைகளோடு தோய்ந்து வரும்பொழுது தான் அறிவு தலைமையாய் வாய்ந்து வருகிறது; இனிய கலை தோயாத அறிவு கலை இழந்த மதியாய் நிலைகுலைந்து போகிறது.

கல்வி நலங்களைக் கூர்ந்து கற்று ஓர்ந்து தெளிந்து ஒளி சிறந்துள்ள நிலையே கலை என வந்தது. காவியம் ஓவியம் சிற்பம் இசை முதலியன இனிய கலைகளாய் இசை பெற்றுள்ளன.

பொறிகளுக்கும் அறிவுக்கும் கலைகள் சுவைகளை ஊட்டுகின்றன. ஓவியம் கண்களுக்கு உவகை புரிகிறது; இசை செவிகளுக்கு இன்பம் தருகிறது; காவியம் அறிவுக்கு ஆனந்தம் அருளுகிறது. உணர்வின் காட்சிகள் ஒளி மிகுந்து வருகின்றன.

கண்டதே செய்பவாம் கம்மியர்; உண்டெனக்
கேட்டதே செய்ப புலன்ஆள்வார்;—வேட்ட
இனியவே செய்ப அமைந்தார்; முனியாதார்
முன்னிய செய்யும் திரு. (நான்மணிக்கடிகை, 40)

சிற்பியர், கலைஞர், சான்றோர், சாந்த சீலர் ஆகிய இந் நால்வருடைய நிலைகளை முறையே இது நன்கு காட்டியுள்ளது.

கலைஞர் அதிசய மதிமான்கள் ஆகலால் உலகம் துதிசெய்து வர உணர்வு நலங்களை விதி முறையே உதவியருளுகின்றார்.

வானத்தில் தோன்றுகின்ற சந்திரனை மாந்தர் யாவரும் வழக்கமாப் பார்த்து வருகின்றனர்; அந்தப் பார்வையில் வியனை பயன் ஒன்றும் அவர் காணவில்லை. கம்பர் ஒருநாள் கண்டார்; அந்தக் காட்சியை உம்பரும் இம்பரும் உவந்து காண இன்ப ஓவியமா வரைந்து காட்டினார். அயலே வருவது காண்க.

மருமத்துத் தன்னை யூன்று மறக்கொடும் பாவம் தீர்க்கும்
உருமஒத்த சிலையி னேரை ஒருப்படுத்து உதவி நின்ற
கருமத்தின் விளைவை எண்ணிக் களிப்பொடு காண வந்த
தருமத்தின் வதனம் என்னப் பொலிந்தது தனிவெண் திங்கள்;
(இராமா, தைல, 50)

இலக்குவனும் சீதையும் தொடர்ந்துவர இராமன் கானகம் போனான். இரவு நேரம்; நல்ல நிலா வெளிச்சம்; வில்லோடு இராச கம்பீரமாய்ச் செல்லுகின்றான். கீழே நடந்து போகிற இராமச்சந்திரனையும், மேலே துலங்கிநிற்கிற இராச்சந்திரனையும் கவிஞர் ஒருங்கே உவந்து நோக்கினார். ஒளி மிகுந்து திகழ்கின்ற அந்தச் சந்திர மண்டலம் தருமதேவதையின் முகமண்டலம் போல் விளங்கியது என வியந்து கண்டார். நீண்டகாலமாகத் தன்னைத்

தலை எடுக்க ஒட்டாதபடி நிலைகுலைத்து வருகிற அரக்கர் அடியோடு அழிந்து ஒழிவர்; அவரை அழித்து ஒழிக்கவே இந்தக் கோதண்ட வீரனை விதி அழைத்து வருகிறது என்று தருமம் உள்ளம் களித்து உவந்து நோக்கியது; அகத்தில் நிறைந்த அந்த உவகை முகத்தில் பொலிந்து விளங்கியது; அந்த விளக்கத்தை இங்ஙனம் விளக்கியருளினர். தருமத்தின் வதனம் என்னப் போலிந்தது தனி வெண் திங்கள் என்னும் இதில் அரியபல அறிவு நலங்கள் மருவியுள்ளன; நுணுகி உணர்ந்துகொள்ள வேண்டும். இயற்கை நிலைகளைக் கவிஞன் சுவையாகச் சொல்லுகிருன்; அந்த உரைகளில் அழகுகள் அதிசய ஒளிகளை வீசி நிற்கின்றன.

அற்புதமான அழகுக் காட்சிகளைச் சிற்பி கல்லில் காட்டுகிருன்; கவிஞன் சொல்லில் உணர்த்துகிருன்; கலைஞன் ஓவியத்தில் விளக்குகிருன்; விஞ்ஞானி அவற்றைப் பகுத்துப் பார்க்கிருன்; அஞ்ஞானி யாதொன்றும் பாராமல் அவமே போகின்ருன். காண்பவர் நிலைகள் காட்சிகளில் தெரிகின்றன.

கண்ட மலரைக் கவிஞன் கவின்காண்பான்;
கொண்ட கலைஞன் குணம்காண்பான்---அண்டிய
சிற்பி திறம்காண்பான்; தின்று சிதைக்குமே
அற்பக் கழுதை அதை.

இந்தக் கவியில் அடங்கியுள்ள பொருள்களையும் நிலைகளையும் கருதியுணர்பவர் கலைமதியின் சுவைகளை இனிது தெளிந்து கொள்வர். உணர்வு ஒளிபெற உயர்வுகள் வெளிவருகின்றன.

---

888. கலைநிறைந்த போதே ககன மதியும்
நிலையுயர்ந்து நீர்மை சுரந்து—தலைமையாய்
எங்கும் ஒளியின்பம் ஈந்துமேல் ஓங்கியே
தங்கும் வெளியே தழைத்து. (அ)

இ—ள்.

விண்ணில் உள்ள சந்திரன் கலைகள் நிறைந்தபோது ஒளி மிகுந்து நிலை உயர்ந்து இனிய நீர்மைகள் சுரந்து எங்கும் பிரகாசமாய் இன்பங்கள் ஈந்து வருவன்; அதுபோல் மண்ணில் உள்ள மனிதனும் கலை தெளிந்தபோது எவ்வழியும் தலைமையாய் நிலை உயர்ந்து யாண்டும் மேன்மையா விளங்குவன் என்க.

உயாவுடையராய் வாழவே யாவரும் எங்கும் விரும்புகின்றனர். இயல்பான அந்த விருப்பம் உயர்வின் நிலைமை தலைமைகளை நேரே விளக்கி நிற்கிறது. கருதிவரும் அளவே உறுதி நலங்கள் மருவி வருகின்றன. கருத்தும் குறிப்பும் சீவர்களுடைய விருத்திகளைத் துலக்கி வினைவுகளைக் காட்டியருள்கின்றன.

உள்ளம் உணர்வு உயிர் என உரையாடி வருகின்றோம்; ஆன்ம ஒளிகளின் விழிகளே உணர்வும் உள்ளமும். தூய உள்ளமும் தெளிந்த உணர்வும் சேர்ந்தபொழுது அந்த மனிதன் அதிசய மேன்மைகளை நேர்ந்து துதி மிகுந்து திகழ்கின்றான்.

முனிவர், யோகர், சித்தர், ஞானிகள் எனத் தோன்றியுள்ளவர் எவரும் மனநலமும் மதிநலமும் வாய்ந்து வந்தவரே யாவர். மனமும் மதியும் கனமும் கதியும் தரும் இனமாயுள்ளன.

அறிவு கூர்மையாய்த் தெளிவடைவது சீர்மையான மேலோர்களுடைய சீர்மைகளைத் தோய்ந்து வருவதனாலேயாம். மேலான உணர்வு நலங்கள் நல்ல நூல்களிலேயே மேவியுள்ளன. இனிய கலைகள் என நிலவியுள்ள அவற்றை உரிமையோடு பழகி வருபவன் பெரிய கலைஞனாய்ப் பெருகி வருகிறான்.

பொருவிலா இதி காச புராணங்கள்
தெருளு மாந்தர் சிறப்புளர் ஆகுவர்;
தரும நூலும் புராணத்தின் தன்மையும்
கருதி ஓர்ந்த வரேகலை வல்லரே. (கூர்மபுராணம்)

சிறந்த கலைஞன் என உயர்ந்துவர வுரியவனை இது உணர்த்தியுள்ளது. சகலகலாவல்லி என்று சரசுவதி தேவிக்குப் பெயர் அமைந்துள்ளமையால் கலையின் மகிமைகளைத்தெரிந்து கொள்ளுகிறோம். கலைகள் குறைந்தபொழுது மனிதன் சிறுமதியனாய்ச் சீரழிகின்றான். அவை நிறைந்த அளவு பெருமதியன் எனப்பேர் பெற்று நிற்கின்றான். கலை நிறைந்து வர மதி ஒளி மிகுந்து வருகிறது; அது குறைந்து போகவே அது தேய்ந்து போகிறது. வானத்தில் உள்ள சந்திரன் இந்த ஞானத்தை உலகத்துக்கு நேரே தெளிவா உணர்த்திக் கொண்டிருக்கிறான்.

கலையிழந்த மாந்தர் கதியும் மதியும்
நிலையுமே ஒருங்கே இழந்து—முலையிழந்த
மங்கைஎன நின்று மருண்டு மதிமயங்கி
வெங்கயவர் ஆவர் விரைந்து.

கலையறிவை இழந்த பொழுது மனிதன் மருவி நிற்கும் புலை நிலையை இதனால் உணர்ந்து கொள்கிறோம். ஒளி இருளை நீக்கு வதுபோல் கல்வி மடமையை நீக்கி யருளுகிறது. அத்தகைய கல்வி இல்லையானால் எவ்வழியும் பொல்லாத அல்லலேயாம்.

Better be unborn than untaught, for ignorance is the root of misfortune. (Plato)

மூடம் துன்பங்களுக்கு மூலவேர்; அதனை நீக்க வுரிய கல்வியை மனிதன் கல்லாமல் இருப்பதை விட அவன் பிற வாமல் ஒழிவது நல்லது எனப் பிளாட்டோ என்னும் கிரீஸ் தேசத்துப் பெரியார் இவ்வாறு கூறியிருக்கிறார்.

Education makes the man. [Cawthorn]

கல்வி மனிதனை உருவாக்குகிறது என இது குறித்துளது.

மனித உருவில் மருவியிருந்தாலும் கல்லாதவன் மிருகமாய் இழிந்து நிற்கிறான். கற்றவன் தேவனாய் உயர்ந்து திகழ்கிறான்.

---

889. மன்னுயிர் இன்பம் மருவி வரும்வகையே
தன்னுயிரைத் தாங்கித் தகவாற்றி—இன்னருளை
எத்திறத்தும் எவ்வழியும் ஈந்து வருதலால்
வித்தகர் ஆண்மை வியப்பு. (கூ)

இ—ள்.

பிற உயிர்கள் இன்புறும் வழிகளையே எவ்வழியும் நாடித் தன் உயிரைத் தாங்கி நன்னயங்கள் புரிந்து அருள் நீர்மையோடு யாண்டும் நலம் செய்து வருதலால் உபகாரிகளுடைய வாழ்வு உயர்ந்த வியப்புடையதாய்ச் சிறந்த புகழோங்கியுள்ளது என்க.

அயலே சூழ்ந்த சூழலின்படியே மனிதனுடைய வாழ்வு இயல்பாய் மருவி வருகிறது. மக்கள் பெரும்பாலும் மாக்களி லும் கீழாக இழிந்து உழலுகின்றனர். மடமை கொடுமை பொறாமை குரோதம் முதலிய இழி தீமைகளே யாண்டும் நீண் டுள்ளன. பொல்லாத இந்தப் புல்லிய கூட்டத்தினிடையே நல்ல ஒரு நீர்மையாளன் சீர்மையாய் வாழ்ந்து வருவது மிகவும் அரிதாம். மையல் வாழ்வுகள் வெய்ய புலைகளில் விரிந்துள்ளன.

சிறப்பும் செல்வமும் மதிப்பும் சுகமும் தனக்கே வேண்டும்

என்று ஒவ்வொருவரும் எவ்வழியும் வெவ்விய பேராசையோடு பெருகித்திரிகிற நரர்கள் நடுவே பிறர்க்கு இதத்தை நாடுகிறவர் பெரிய ஒரு தெய்வப் பிறவியாய்ச் சிறந்து திகழ்கின்றார்.

கொடிய சுடு வெயிலைத் தன் மேல் தாங்கி இனிய குளிர் நிழலைப் பிறர்க்கு உதவுகிற தருக்கள் போலத் தரும சீலர்கள் தழைத்து நிற்கின்றனர். அத்தகைய உத்தமர்களே வித்தகர் என விளங்கி எத்தகைய நிலைகளிலும் துலங்கி வருகின்றார்.

நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்
வித்தகர்க் கல்லால் அரிது. (குறள், 235)

ஆக்கமும் கேடும் வாழ்வும் சாவும் இதில் வந்திருக்கின்றன.

கேடால் ஆக்கமும், சாவால் வாழ்வும் விளைக்க வல்லவரே வித்தகர் எனத் தேவர் இங்ஙனம் விளக்கியிருக்கிறார். இந்த வித்தகம் இங்கே உய்த்துணர்ந்து ஓர்ந்து சிந்திக்கத்தக்கது.

எண்ணற்கு ஏற்ற வித்தகர் உளரே? (இரணி, 132)

வித்தகர் சொற்களால் மெலிவு நீங்கினன். (விபீடண, 33)

வித்தகர் நிலையை இவை உணர்த்தியுள்ளன. வித்தகவில்லினன் என இராமனை இவ்வாறு சித்திரமாச் சொல்லியுள்ளார்.

ஒருவனுடைய அறிவு ஆற்றல்களுக்கு உரிய உயர்ந்த பயன் பிற உயிர்களுக்கு இதம் புரிவதே; இந்த உண்மையை ஈண்டு நுண்மையாக நன்கு அறிந்து கொள்கிறோம்.

மன்னுயிர்க்கு இதம் செய்வது தன் உயிர்க்கே நலமாய் விளைந்து வருகிறது. விளைபுலத்துக்கு உரம் போடுவதுபோல் எளியவர்க்கு உதவி புரிவது. உரம் செய்த நிலம் வளமாய் உயர்ந்து விளைகிறது; உதவி செய்தவன் நலமாய் உயர்ந்து யாண்டும் உன்னத பதவிகளை அடைந்து கொள்ளுகிறான்.

உரம்செய்த நன்செய் உயர்ந்து விளைந்து
வரம்செய் தருளும் வளங்கள்---தரம்செய்து
பேணும் மனிதன் பெருமையாய் எவ்வழியும்
காணும் மகிமை கனிந்து.

ஒருவன் மேலான மகிமைகளை அடைய வேண்டும் ஆனல் அவன் என்ன செய்ய வேண்டும்? என்பதை இது இனிது காட்டியுள்ளது. பிறர்க்கு இதம் புரிவது பெருந்திருவாய் வருகிறது. பயிர் நீரால்வளர்கிறது; உயிர்நீர்மையால்உயர்கிறது.

தனக்கே சுகமும் புகழும் வேண்டும் என்று சுயநலமாய் அவாவி அலைபவர் துக்கமும் இகழ்வும் அடைகின்றார்; பிறர்க்கு இரங்கி அருள்பவர் புகழும் புண்ணியமும் இயல்பா எய்தி எவ்வழியும் திவ்விய பேரின்ப நலன்களைப் பெறுகின்றார்.

இந்த விசித்திர நிலைகளை உய்த்துணர்ந்து உய்தி பெறுபவர் உத்தம விவேகிகள் ஆகின்றார். பொய்யான மாயமயக்கங்களில் மருண்டு தொலையாமல் மெய்யான ஆன்ம வுறுதியை மேவி மகிழுக. இனிய இதம் அரிய பெரிய பதவியை அருளுகிறது.

———

890. மன்னுயிரைக் காக்க மனமுவந்து சீமூதன்
தன்னுயிரைத் தந்த தகைமையை—உன்னியுன்னி
ஞாலம் வியந்து நயந்து புகழுமே
காலம் கடந்தும் கனிந்து. (௰)

இ—ள்.

பிறவுயிரைக் காக்கத் தன் உயிரைச் சீமூதவாகன் உவந்து தந்தான்; அந்த அரிய கருணை நிலையை எண்ணி எண்ணி என்றும் உலகம் வியந்து புகழ்ந்து அவனை உவந்து வருகிறது என்பதாம்.

சிறந்த நீர்மைகளால் மனிதன் உயர்ந்து வருகிறான். அரிய பண்பு பெரிய சீர்மைகளை அருளுகின்றன. தனக்கே சுகத்தை நாடுவதும் தன்னலமே கருதி விரைவதும் பெரும்பாலும் மக்கள் பால் மருவியுள்ளன. பொதுவான இந்த நிலையைக் கடந்து பிற உயிர்களுக்கு இரங்கிப் பேரருள் புரிந்து தன்னலம் கருதாமல் உதவி செய்பவன் உன்னதமான உத்தமனாகிறான். ஆகவே புண்ணிய மூர்த்தி என்று உலகம் அவனை உவந்து போற்றுகிறது.

கருணை கனிந்த தரும வான்.

சீமூதவாகன் என்பவன் சிறந்த அரச குமாரன்; நல்ல அறிஞன்; எல்லாவுயிர்களிடத்தும் இரக்கம் உடையவன். மலைய வதி என்னும் அழகிய மங்கையை மணந்து சுகமாய் வாழ்ந்து வந்தான். இனிய குளிர் பூஞ்சோலையில் ஒருநாள் தனியே போய் உலாவினான். அவ்வாறு உலாவி வருங்கால் அதன் அயலே மலைச் சாரலில் இருந்து ஒரு பெண் விம்மி அழுகிற ஒலி கேட்டது; அங்கே விரைந்து போனான்; அவளைக் கண்டான்; அம்மா! என்

அழுகிருய்? என்று இரங்கக் கேட்டான். "ஐயா! நான் நாகசாதி மாது; எங்கள் நாட்டு வேந்தனுக்கும் கருட தேவனுக்கும் நேர்ந்த உடன்படிக்கையின்படி நாளும் வீட்டுக்கு ஒரு ஆளை அவனுக்குப் பலி கொடுத்து வரவேண்டும். இன்று என் முறை; எனக்கு ஒரே ஒரு மகன்; சங்கசூடன் என்னும் பேரினன்; எனது கணவன் முன்னமே இறந்து போனான்; அருமை மகன் இன்று சாக நேர்ந்துள்ளான்; புத்திரவாஞ்சையான அந்தச் சோகம் என் உயிரைச் சித்திரவதை செய்கிறது; துயரம் பொறுக்கமாட்டாமல் அழுகிறேன்; இன்னும் இரண்டு நாழிகைக்குள் கருடன் வந்து விடுவான்; என் மகன் அதோ காளி கோவில் எதிரேயுள்ள பலி பீடத்தில் இருக்கிறான்" என்று பரிதாபமாய் உரைத்தாள். அவ்வுரைகளைக் கேட்டதும் இவன் உள்ளம் உருகினன்; மறுகி அழுகிற அவளை இவன் ஆற்றித் தேற்றினன். "தாயே! நான் உனக்கு மூத்த மகன்; நானே இன்று கருடனுக்கு இரையாவேன்; என் தம்பியை அழைத்துக் கொண்டு நீ ஊருக்குப் போ; யாருக்கும் இதை யாதும் சொல்லாதே; சீக்கிரம் போய்விடு" என்று சொல்லிவிட்டுப் பலிபீடத்தை நோக்கி நடந்தான். அந்த அன்னையும் மகனும் அதிசய பரவசராய்த் திகைத்துத் தடுத்தார்; இவன் அவரை வற்புறுத்தி அகற்றிவிட்டு அந்தப் பலிபீடத்தில் படுத்துக்கிடந்தான். கருடன் வந்தான்; தசையைக் கொத்தித் தின்றான்; உடல் முழுதும் சிதைத தீர்ந்த பின் முகத்தை உற்றுப் பார்த்தான். மகிழ்ச்சியோடு பொலிந்து விளங்கியது; கருடன் கலங்கினன். பெரிய திகிலோடு நேரே பேச நேர்ந்தான்.

கருடன்: நீ யார்? நாகனா?

சீமூதன்: யாராயிருந்தால் என்ன? உனக்கு வயிறு நிறைய வேண்டும்; இரை இன்னும் உள்ளது; விரைந்து தின்னு. அதன் பின் பறந்து போ!

கருடன்: ஐயோ! நீ யார்? உண்மையைச் சொல்.

சீமூதன்: தசை முழுவதும் தின்றுவிட்டுப் போ; என் உடலில் இன்னும் கொஞ்சம் ஒட்டிக் கொண்டிருக்கிறது; உன் குடலில் அதைச் சேர்த்தருள்; வேறுவார்த்தை எதற்கு? ஒல்லையில் உண்டு கொள்!

கருடன்: அந்தோ! கொடிய தீமையை இனம் தெரியாமல் செய்துவிட்டேன்; நீ வித்தியாதரன் போல் தெரிகிறது; ஒரு இராச குமாரனாயிருக்க வேண்டும்; நீசமான காரியம் மோசமா நேர்ந்து விட்டதே.

சீமூதன்: உனக்கும் இவ்வளவு இரக்கம் இருக்கிறதா?

கருடன்: நான் கொடியவனா? எனக்கு இரக்கம் இல்லையா?

சீமுதன்: உள்ளம் துடிக்க உயிர்பதைக்க ஊனுடலை
அள்ளி விழுங்கும் அருளுடையாய்!---உள்ளிநீ
என்னை வினவி இடையாறி நிற்கின்றாய்
அன்னை அனையாய் அருந்து.

இந்த உரையைக் கேட்டதும் கருடன் பதறினான்; யாரோ ஒரு தெய்வீகமான கருணையாளன் என்று அஞ்சினான். உறுதி மொழிகள் கூறினான். "இனிமேல் இந்தத்தீமையை நான் செய்யேன்; எனக்கு நல்ல உபதேசம் செய்த ஒரு ஞானகுரு என்றே உம்மை உண்மையாக எண்ணுகிறேன்" என்றுசொல்லி விரைந்து பறந்து போனான். போகவே தருமதேவதை இவன்மேல் அமுத மழை பெய்தது; உடல் சுகமாயது. தங்கள் துயரை நீக்கியருளிய குலதெய்வம் என்று நாகர் இவனைப் போற்றி வந்தனர்.

தயாவீரன் என்று உலகம் புகழ இவன் ஒளிபெற்று நிற்கின்றான். பிறஉயிர்களுக்கு இரங்கி யருளுகின்றவன் பெரிய தருமவானாய் அரிய நிலையில் உயர்ந்து இருமையும் பெரு மகிமைகளை அடைகிறான். சீவதயை தெய்வீக நிலையை அருளுகிறது.

சுகுணதாமன் பரிவு.

ஏம கூடத்தின் வடபால் ஓர் எரிமலையில் தீக்குழம்பு பொங்கி எழுந்தது. அதன் அருகேயிருந்த நகர வாசிகள் அஞ்சி அலமந்தனர். ஒரு முதியவள் மேல் வனதேவதையின் ஆவேசம் தோன்றியது. இந்நாட்டில் உள்ள அரிய ஒரு பொருளை அம்மலைக் குகையில் போட்டால் இந்த ஆபத்து அடங்கிவிடும் என்றாள். அவ்வாறே முத்து வயிரம் முதலிய அரிய விலையுடைய பொருள்களைத் தெய்வம் தொழுது பெய்து வந்தனர்; அபாயம் அடங்கவில்லை; அந்த அதிசயத்தைக் கேள்வியுற்று அத்தேசத்து அரசகுமாரன் ஆன சுகுணதாமன் குதிரை மேல் ஏறி விரைந்து வந்தான்; ஊராரிடம் நிலைமையை உசாவி அறிந்தான்: "இந்நாட்

டின் அரிய பொருள் நானே; என்னைத்தான் எரிமலை பலி கேட்கிறது" என்று சொல்லிக்கொண்டே பரியை விரைந்து செலுத்தி எரியின் குகையில் பாய்ந்தான்; பாயவே தீயின் குழம்பு மாயமா மறைந்தது. அக்கருணை வீரனைத்தொழுது யாவரும் அதிசயமாத் துதி செய்தனர். எல்லா உயிர்களும் சுகமாய் வாழத் தன்னுயிரைத் தனியே ஈந்த புண்ணிய மூர்த்தி என்று விண்ணும் மண்ணும் புகழ விமல சோதியாய் அவன் விளங்கி நின்றான். அவனது ஜீவிய சரிதம் அமர மொழியில் ஒரு காவியமாய் அமைந்துள்ளது. அதிசய ஆண்மை அகிலமும் துதி செய்ய நின்றது.

பற்றி எரியும் படுதீக் குகையுள்ளே
வெற்றி யுறுவீரன் வேகமாய்---உற்ற
பரியோடு பாய்ந்தானே பல்லுயிரும் வாழ
அரியோ சிவனோ அவன்.

இவனுடைய புகழ் இவ்வாறு எவ்வழியும் ஒளி பெற்றுள்ளது. ஜீவதயாபரன் என இக்கோமகனைத் தேவரும் புகழ்ந்து மகிழ்ந்து வருகின்றனர். வித்தக நிலை வியன் கதி தந்தது.

மன்னுயிரைப் பேணும் மகிமை யுடையவன்
இன்னுயிரைக் காணும் இயல்பினனாய்---தன்னுயிரை
மேலான பேரின்ப மெய்நிலையில் உய்க்கின்றான்
வாலாய மாக வணைந்து.

### இந்த அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

உணர்வு நலம் உயர்நிலை அருளும்.
அறம் புகழ் விளையின் அமரரும் விழைவார்.
கடமை புரியின் பெருமை விரியும்.
போதனையினும் சாதனை உயர்ந்தது.
மேலான பான்மையே மேன்மை ஆகும்.
மதிப்பும் மாண்பும் மதிமான் பால் மருவும்.
உள்ள மதியை ஒளி செய்து உயருக.
கலையின் ஒளியால் நிலையான புகழாம்.
அருள் புரிந்துவர அதிசயம் விரிந்து வரும்.
ஜீவதயை தேவ நிதியாம்.

அகூ-வது வரம் முற்றிற்று.

# தொண்ணூறாம் அதிகாரம்.

## வி தி.

அஃதாவது வினைகளால் விதி விளைந்து வரும் நியதி. மனிதனுடைய நிலைமைகளுக்கெல்லாம் நிலையான தலைமையுடையது ஆதலால் அதன் தகைமையை உணர இது ஈண்டு வைக்கப் பட்டது. விதியும் மதியும் கதியும் நேரே காண வந்தன.

891. நினைவு செயலால் நிகழ்ந்தன எல்லாம்
வினைகள் எனவே விரிந்த—வினைதான்
விதியாய் விளைந்து விளைபோகம் ஊட்டிப்
பதியா யுளது பதிந்து. (க)

இ—ள்.

நினைவு சொல் செயல் என்னும் இம்மூவகைகளால் வினைகள் விளைந்துள்ளன; அவை விதிகளாய் விரிந்து போகங்களை ஊட்டி உயிர்களை ஆட்டி உயர்வா உலாவி வருகின்றன என்க.

விதியின் நிலை இங்கே மதி தெளிய வந்துள்ளது.

வினை, விதி, கருமம், நியதி, தெய்வம், முறை, பால், ஊழ், பழவினை என்னும் இவை விதியின் பேர்களாய் அமைந்திருக்கின்றன. யாவும் காரணக் குறிகளையுடையன. பெயர்க் குறிப்புகள் செயல்களின் விளைவுகளைத் தெளிவா விளக்கி நிற்கின்றன.

வினை விளைவுகளுக்கு நினைவே மூல நிலயம். நினைவு எண்ணம் விருப்பம் ஆசை மோகம் என்பன முறையே அரும்பு மலர் பிஞ்சு காய் கனி என இனிது வளர்ந்துள்ளன. நினைவு முதிர்ந்தால் எண்ணம். எண்ணம் முதிர்ந்தால் விருப்பம்; விருப்பம் முதிர்ந்தால் ஆசை; ஆசை மிகுந்தால் மோகம். முடிவான அந்த மோக வேகங்களால் பலர் சாக நேர்ந்துள்ளனர்.

எண்ண அரிய எண்ண அலைகள் மனித சமுத்திரத்தில் நிலையாக மோதிக் கொண்டேயிருக்கின்றன. தொலையாத அந்த அலைகளின்படியே சீவகோடிகள் யாண்டும் புலையாடி வருகின்றன. சித்த விருத்திகளே சீவ விருத்திகளா யுள்ளன.

எண்ணம் இனியது ஆனல் அந்த மனிதன் புனிதனாய் இன்ப நிலைகளை எய்தி மகிழ்கின்றான்; அது தீயதானல் அவன் தீயனாய்த் துன்ப வலைகளில் எவ்வழியும் சுழன்று உழலுகின்றான்.

நல்ல நினைவு, நல்ல சொல், நல்ல செயல் நல்வினைகள் ஆகின்றன. தீய நினைவு, தீய சொல், தீய செயல் தீவினைகள் ஆகின்றன.

அவை புண்ணியங்களாய் இன்பங்களை அருளுகின்றன.

இவை பாவங்களாய்த் துன்பங்களைத் தருகின்றன.

தனது மனம் மொழி மெய்களால் தான் செய்துகொண்ட வினைகளின் பலன்களையே மனிதன் யாண்டும் அனுபவித்து வருகின்றான். விளைத்த விளைவுகள் போல் இழைத்த வினைகளும் கிளைத்து எழுந்து தம்மைச் செய்தவரைச் சேர்ந்து கொள்ளுகின்றன. வினைப் போகங்களை நுகர்ந்து கழிக்கவே மனித இனங்கள் பிறந்து இறந்து தொடர்ந்து படர்ந்து வருகின்றன.

ஆற்றிய வினைகளை அனுபவிக்கவே
ஏற்றிய உடல்களை எடுத்து வந்திவண்
வீற்றுவீற் றாகவே விரிந்து மானுடம்
தோற்றிய பலன்களைத் துய்த்து மாயுமால்.

மனித மரபின் தோற்றங்களையும் கரும விளைவுகளின் மருமங்களையும் இது காட்டியுள்ளது. காரண காரியங்கள் பூரணமான நியமத்தோடு பொருந்தி வருகின்றன. மனிதனுடைய செயல் கருமம் என வந்தது. அது முதிர்ந்தபோது வினை என நின்றது; அது வளர்ந்த பொழுது விதி என நேர்ந்தது. விதி முதிர்ந்த அளவில் நியதி ஆயது; பின்பு அது தெய்வம் எனத் திகழ்ந்தது. இன்னவாறே பிறவும் நேர்ந்துள்ளன; காரணங்களைக் கருதிக் காணுக. வினையின் விளைவுகள் வியன் பெயர் எய்தின.

நியதி = நியமமாய் நியமிக்கப்பட்டது.
தெய்வம் = சீவர்களை நடத்தும் திவ்விய ஆற்றல் உடையது.
பால் = இன்னாருக்கு இன்னது என்று பாகமானது.
முறை = உரிய அளவே ஒழுங்காய் அமைந்தது.
உண்மை = யாதும் பொய்யாமல் பொருந்திநிற்பது.
பழவினை = இந்தப் பிறவிக்கு முந்திச் செய்தது.
ஊழ் = முன்னம் புரிந்தவினை முதிர்ந்து மூண்டது.

இன்னவாறு வினைகள் விளைந்துள்ளன. தாம் செய்த கருமங்களின் பலன்களை மாந்தர் மாந்தி வருவது அதிசய மருமங்களாயுள்ளது. விதி ஊட்டுவதையே உண்ண முடியும்; மாறாக வேறு ஒன்றும் பண்ண முடியாது. அது அளந்தபடியே வாழ்வு.

ஆழ அமுக்கி முகக்கினும் ஆழ்கடல்நீர்
நாழி முகவாது நானாழி---தோழி
நிதியும் கணவனும் நேர்படினும் தம்தம்
விதியின் பயனே பயன். [மூதுரை, 19]

விதி அமைத்தபடிதான் யாருக்கும் இனிய போகங்கள் அமையும்; அதற்கு மேலே யாதும் அமையாது என ஔவையார் இவ்வாறு கூறியுள்ளார். நாழி விதிக்கும், கடல்நீர் நிதிக்கும் உவமைகளாம். எவ்வளவு செல்வங்கள் நிறைந்திருந்தாலும் வினையின் அளவே அனுபவம் என்பதை இது நன்கு விளக்கியுள்ளது. விதி முகந்து தந்ததே உயிர்களின் நுகர்வாய் வந்தது.

ஊழ்ஊட்டா தாயின் உலகமெல்லாம் கொண்டாலும்
கூழ்ஊட்டும் கொள்ளா குடல். (அரும்பொருளமுதம்)

உலகம் ஆளும் அரசர் ஆயினும் விதி அளந்த அளவே நுகர்வு என இது குறித்துள்ளது. நிதியாலும் மதியாலும் எவ்வளவு உயர்ந்திருந்தாலும் விதியின் வசமாகவே யாவரும் அடங்கியுள்ளனர்; அதைக் கடந்து யாரும் யாதும் செய்ய இயலாது. அரிய மேதைகளும் உரிய விதிவழியே உழலுகின்றார்.

The best of men cannot suspend their fate;
The good die early, and the bad die late. (Defoe)

நல்லவர்கள் இளமையில் இறந்து போகின்றனர்; கெட்டவர்கள் முதுமையில் சாகின்றனர்; ஆகவே சிறந்த மேலோர்களும் விதியைக் கடக்க முடியாது என இது குறித்திருக்கிறது.

விதி அதிசய வலியுடையது; யாவரும் அதன் வசமாய் நடப்பர்; சீவர்களுக்குச் சுகபோகங்களை ஊட்டுவதும், துக்க சோகங்களை நீட்டுவதும் அதன் தொழில்களாயுள்ளன.

———

892. முற்பிறப்பில் செய்து முடிந்தவினை ஊழாகிப்
பிற்பிறப்பில் வந்து பிடிக்குமால்—இப்பிறப்பில்
நல்வினைக்கும் தீவினைக்கும் நாயகனீ ஆதலினால்
ஒல்லும் வகையை உணர். (உ)

இ-ள்.

முன் பிறவியில் செய்தவினை ஊழ் ஆய் ஓங்கிப் பின் பிறவி

யில் வந்து பிடிக்கிறது; இந்தப் பிறப்பில் நல்ல வினைக்கும் தீய வினைக்கும் நீயே நாயகன் ஆதலால் நல்லதை ஓர்ந்து ஒல்லையில் செய்து கொள்; அதுவே உயர் சுகம் நல்கும் என்பதாம்.

எவ்வகையானும் செய்தவினை செய்தவனை எவ்வழியும் தப்பாமல் வந்து சேர்ந்து கொள்ளுகிறது. அது நல்வினை ஆனால் வளமாய் இன்பம் தருகிறது; தீவினை எனின் கொடுமையாய்த் துன்பம் புரிகிறது. வினைகளின் தொடர்பு விசித்திரமுடையது.

பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத்---தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தேதற் செய்த
கிழவனை நாடிக் கொளற்கு. (நாலடியார், 101)

ஆயிரம் பசுக்கள் கூடியிருந்தாலும் ஒரு இளங்கன்று விரைந்து போய்த் தன் தாயை அடைந்து கொள்ளும்; அது போல் எவ்வளவு மனிதப்பரப்பு விரிந்திருந்தாலும் வினை தன்னைச் செய்தவனைத் தவறாமல் தழுவிக் கொள்ளும் என இது விளக்கியுள்ளது. தாயும் கன்றும் போல வினையும் வினையாளனும்; எனவே தொடர்பும் தொன்மையும் தோய்வும் அறியலாகும்.

நல்வினையால் இன்பமும் தீவினையால் துன்பமும் உயிர் இனங்கள் தொடர்ந்து யாண்டும் நுகர்ந்து வருகின்றன.

"நல்வினை தீவினை என்றிரு வகையால்
சொல்லப் பட்ட கருவில் சார்தலும்
கருவில் பட்ட பொழுதினுள் தோற்றி
வினைப்பயன் விளையும் காலை உயிர்கட்கு
மனப்பேர் இன்பமும் கவலையும் காட்டும்." (மணிமேகலை, 30)

இருவகை வினைகளின் இயல்புகளை இது உணர்த்தியுள்ளது.

கோவலன் சரித்திரத்தை விரித்து உரைத்திருக்கும் சிலப்பதிகாரம் என்னும் காவியம் வினைப்பயனைத் தெளிவாக விளக்கவே விளைந்து வந்துள்ளது. ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதைக்காட்டவே இப்பாட்டுடைச்செய்யுளை யாம் நாட்டுதும் என இளங்கோவடிகள் வழங்கியுள்ளமை ஈங்கு உளங்கொளவுரியது.

தன் கணவனை அநியாயமாய் மன்னன் கொன்றுவிட்டான் என்று கண்ணகி உள்ளம் கொதித்து மதுரையை எரிக்க நேர்ந்த

போது பராசக்தி அப்பத்தினி எதிரே தோன்றிப் பழவினை வினைவுகளை நயமா விளக்கியருளினாள். அயலே வருவது காண்க.

“கடிபொழில் உடுத்த கலிங்கநன் னாட்டு
வடிவேல் தடக்கை வசுவும் குமரனும்
தீம்புனல் பழனச் சிங்க புரத்தினும்
காம்பெழு கானக் கபில புரத்தினும்
அரசாள் செல்வத்து நிரைதார் வேந்தர்;
வீயாத் திருவின் விழுக்குடிப் பிறந்த
தாய வேந்தர் தம்முள் பகையுற
இருமுக் காவதத்து இடைநிலத்து யாங்கணும்
செருவெல் வென்றியின் செல்வோர் இன்மையின்
அரும்பொருள் வேட்கையில் பெருங்கலன் சுமந்து
கரந்துறை மாக்களிற் காதலி தன்னொடு
சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்தின்ஓர்
அங்காடிப் பட்டு அருங்கலன் பகரும்
சங்கமன் என்னும் வாணிகன் தன்னை
முந்தைப் பிறப்பில் பைந்தொடி கணவன்
வெந்திறல் வேந்தற்குக் கோத்தொழில் செய்வோன்
பரதன் என்னும் பெயரன்அக் கோவலன்
விரதம் நீங்கிய வெறுப்பினன் ஆதலின்
ஒற்றன் இவன்எனப் பற்றினன் கொண்டு
வெற்றிவேல் மன்னற்குக் காட்டிக் கொல்வுழி இக்
கொலைக்களப் பட்ட சங்கமன் மனைவி
நிலைக்களம் காணாள் நீலி என்போள்
அரசர் முறையோ! பரதர் முறையோ!
ஊரீர் முறையோ! சேரியீர் முறையோ! என
மன்றினும் மறுகினும் சென்றனள் பூசலிட்டு
எழுநாள் இரட்டி எல்லை சென்றபின்
தொழுநாள் இதுவெனத் தோன்ற வாழ்த்தி
மலைத்தலை ஏறிஓர் மால்விசும்பு ஏணியில்
கொலைத்தலை மகனைக் கூடுபு நின்றோள்
எம்முறு துயரம் செய்தோர் யாவதும்
தம்முறு துயரம் இற்றாகுக என்றே
விழுவோள் இட்ட வழுவில் சாபம்
பட்டனிர் ஆதலின் கட்டுரை கேள்நீ
உம்மை வினைவந்து உருத்த காலைச்

செம்மையி லோர்க்குச் செய்தவம் உதவாது.
வாரொலி கூந்தல்நின் மணமகன் தன்னை
ஈரேழ் நாளகத்து எல்லை நீங்கி
வானோர் தங்கள் வடிவின் அல்லது
ஈனோர் வடிவில் காண்டல் இல்லென
மதுரைமா தெய்வம் மாபத்தினிக்கு
விதிமுறை சொல்லி அழல்வீடு கொண்டபின்.
(சிலப்பதிகாரம், 23)

முன் பிறப்பில் செய்த தீவினை பின் பிறப்பில் ஊழாய் உருத்து வந்து கோவலனைக் கொன்று தொலைத்திருக்கும் நிலையைத் தேவதை இவ்வாறு விளக்கி உரைத்துள்ளது. சங்கமன் என்பவன் ஒரு வணிகன்; அவன் நீலி என்னும் மங்கையை மணந்து இனிது வாழ்ந்து வந்தான்; அவ்வாறு வருங்கால் கலிங்க தேசத்திலே சிங்கபுரத்தில் இருந்த வசு என்னும் அரசனுக்கும், கபிலபுரத்தில் இருந்த குமரன் என்னும் குறுநில மன்னனுக்கும் பகை மூண்டது. அதனால் அந்நாட்டில் உணவுப் பொருள்கள் அதிக விலைகள் ஏறின; அங்கே போனால் நல்ல வியாபாரம் நடக்கும் என்று கருதித் தன் மனைவியுடன் சங்கமன் சிங்கபுரத்தை அடைந்தான்; தங்குவதற்கு ஓர் இடம் பார்த்த பின் கடைவீதியில் பண்டங்களை விற்று வந்தான்; அயலிடத்திலிருந்து புதியனாய் வந்துள்ள இவன் அதிக சாதுரியமா வாணிகம் செய்துவருவதைக் கண்டு பரதன் என்பவன் பொறாமை கொண்டான்; அவன் அரசனிடம் அணுகி வேலை செய்து வந்தவன் ஆதலால் இவன்மேல் கோள் கூறினான். எதிரியிடமிருந்து வேவு பார்க்கவே கரவாக இங்கு வந்துள்ளான்; இவனை ஒல்லையில் கொல்ல வேண்டும் என்று மூட்டினான்; மூட்டவே அரசன் வணிகனைக் கொலை செய்யப் பணித்தான்; அவன் கொலையுண்டு வீழவே மனைவி கொடுந்துயரோடு துடித்து அழுது பதைத்து ஒரு மலை மேல் ஏறி நின்று தன் உயிரை மாய்க்க நேர்ந்தாள்; அப்படி அவள் சாக மூண்டபொழுது "என் கணவனைக் கொல்வித்தவன் கொடிய கொலையுண்டு சாவான்; அவனுடைய மனைவி என்னைப்போலவே அழுது தவித்து அலமந்து அழிவாள்" என்று வயிறெரிந்து சபித்துச் செத்தாள். அன்று அவள் இட்ட சாபப்படியே இன்று முடிந்துள்ளது; விதியை விலக்க யாராலும்

முடியாது என்று தெய்வம் கண்ணகி நேரே கூறிக் கண் மறைந்து போயது. அவள் கதி கலங்கி மதி மயங்கினள்.

விதியின் விளைவுகளை இந்தச் சரிதம் அதிசய விநயமா விளக்கியுள்ளது. யாவும் கூர்ந்து ஓர்ந்து சிந்திக்கத்தக்கன.

தசரத மன்னன் ஒரு நாள் வேட்டைக்குச் சென்றான். சிங்கங்களையும் யானைகளையும் நாடி அலைந்தான்; எங்கும் காணாமையால் ஒரு நதியருகே குளிர்பொழில் நிழலில் ஒளிசெய்து நின்றான். அவ்வமையம் சலபோசனன் என்னும் ஓர் இளைஞன் அந்த ஆற்றில் சலம் எடுக்க வந்தான். தான் கொண்டு வந்த மண் கலசத்தில் தண்ணீரை அவன் மொண்டு கொண்டிருக்குங்கால் யானை வந்து நீர் அருந்துவதாக எண்ணி மன்னன் அம்பு தொடுத்தான். பாணம் பாயவே பையன் ஐயோ! என்று அலறி விழுந்தான். வேந்தன் பரிதாபமாய் விரைந்து வந்து பார்த்து மறுகி உருகினான். அவன் பரிவோடு தேற்றினான்: "அரசர் பெரும! நான் ஒரு ஏழை; என் தாயும் தந்தையும் என்னையே நம்பியுள்ளனர்; இரண்டு கண்களும் அவர்களுக்கு யாதும் தெரியா; நானே அவர்களை யாண்டும் பேணி வருகிறேன்; அதோ அந்தச் சோலை அருகே ஒரு ஆலமர நிழலில் இருக்கின்றனர்; மிகவும் தாகம் என்று சொன்னார்கள்; ஆகவே தண்ணீர் முகந்துபோக இங்கு வந்தேன்; இவ்வாறு இடர் நேர்ந்தது. நீங்கள் யாதும் கவலையுற வேண்டா; ஊழ் மூண்டது; நான் ஈண்டு மாண்டு படுகிறேன்; ஒரே ஒரு வேண்டுகோள்; என் பெற்றோர் நீர் வேட்கையால் என்னை எதிர் நோக்கி ஆவலோடு இருப்பர்; இந்தக் கலசத்தில் கொஞ்சம் தண்ணீர் கொண்டு போய் அவர்களுக்குத் தந்தருளுங்கள்; சாகும்போது அவர்களைத் திசைநோக்கிக்கைகூப்பித் தொழுததாகச்சொல்லுங்கள்" என்று இவ்வாறு சொல்லி முடிந்ததும் அந்த உத்தம புத்திரனுடைய உயிர் போய்விட்டது. அரசன் துயர் மீதூர்ந்து உருகி அழுதான். குறித்த படியே கலசத்தில் சலத்தை எடுத்துக் கொண்டு அவரிடம் போனான். கண்தெரியாத அவர் ஆவலோடு "அப்பா! இவ்வளவு நேரம் என்ன தாமதம்?" என்று தங்கள் மகன் எனக் கருதி இன்னலோடு கேட்டார். மன்னன் யாவும் சொன்னான்; மகன் இறந்தான் என்று அறிந்ததும் அந்த இரு

வரும் நெருப்பில் விழுந்த புழுப்போல் நெடிது துடித்து அழுதார். தசரதன் அவர்க்கு ஆதரவு பல கூறினன். "ஐயன்மீர்! நான் அயோத்தி வேந்தன்; இனம் தெரியாமல் பிழை நேர்ந்துவிட்டது; இன்று முதல் நானே உங்களுக்குப் புதல்வன்; இரதத்தில் வைத்து உங்கள் இருவரையும் என் அரண்மனைக்குக் கொண்டு போகிறேன்; வேண்டிய பணிவிடைகளை விழைந்து செய்வேன்; உளைந்து வருந்த வேண்டாம்; என்னோடு வாருங்கள்" என்று இன்னவாறு கூறி மன்னன் உரிமையோடு வேண்டினன். அவர் யாதும் இசையாமல் அலமந்து அழுதார்.

கண்ணுள் மணிபோல் மகவை இழந்தும் உயிர்காதலியா
உண்ணு எண்ணி இருந்தால் உலகோர்என் என்றுரையார்
விண்ணின் தலைசேருதும்யாம் எம்போல் விடலை பிரியப்
பண்ணும் பரிமா வுடையாய் அடைவாய் படர்வான் என்னு.

(இராமா, நகர்நீங்கு 88)

அந்த இருமுதுகுரவர் கூறியபடியே தசரதன் அடைய நேர்ந்தான். எங்கள் அருமை மகனைப் பிரிந்து நாங்கள் பரிந்து சாவதுபோல் நீயும் சாவாய்! என்று அவர் நொந்து கூறும் போது மன்னனுக்கு மைந்தர் பிறக்கவில்லை. பிள்ளை இல்லையே! என்று ஏங்கி யிருந்தவனுக்கு அவர் வாய்மொழியால் புத்திரர் உண்டாம் என்று தெரிந்து உள்ளம் உவந்திருந்தான். இளமையில் தான் செய்தவினை முதுமையில் விதியாய் மூண்டு தன்னைக் கொல்ல நேர்ந்தது என்று முடிவில் கோசலையிடம் இவன் சொல்லியிருக்கிருன். இராமனைப் பிரிந்து தசரதன் இறந்தது ஊழ்வினையால் என்பதை இங்கே நன்கு உணர்ந்து கொள்ளுகிரோம். விதியின் ஆடல்கள் அதிசயங்களைக் காட்டிவருகின்றன.

வினை என்பது வெளியே இருந்து வருவது அன்று; தான் செய்துகொண்டதையே மனிதன் தவருமல் அனுபவிக்கின்ருன்.

நல்வினைக்கும் தீவினைக்கும் நாயகன் நீ என்றது இன்பமும் துன்பமும் முறையே தருகிற இருவினைகளுக்கும் நீயே தனியுரிமையான கருத்தா என்பது நேரே தெளிவாய்த் தெரிய வந்தது.

All are architects of Fate,
Working in these walls of Time. (Longfellow)

குறித்த ஆயுள் காலத்துள் உழைத்துவருகிற நாம் எல்லாரும்

விதியின் சிற்பிகள் என லாங்பெல்லோ என்பவர் இங்ஙனம் குறித்திருக்கிமுர். விதியின் விளைவுகளும் நுகர்வுகளும் மதி அறிய வந்தன. ஊழ்வினை வாழ்வுள் வளர்ந்து வருகிறது.

நல்ல எண்ணத்தோடு நல்ல கருமங்களைச் செய்துவரின் நல்ல விதியை நாம் உண்டாக்கிக் கொள்ளுகிறோம். அதனுல் எல்லா இன்பங்களும் உளவாம். இனிய விதி விளைந்துவரத் தனி மகிமைகள் விரைந்து வரும். அதனை இனிது ஆக்கிக் கொள்க.

---

893. வினைவினை என்றஞ்சி விளிகின்றீர் அந்த
வினைவிளைவை நீரே விளைப்பீர்—மனமொழிமெய்
தீமையுரு வண்ணம்நீர் செய்மின் அதன்பின்னே
சேமமே யாகும் செழித்து. (௩.)

இ—ள்.

பழவினைகளை நினைந்து பயந்து சாகின்றீர்; அந்த வினை உம்மிடமிருந்தே விளைந்து வந்துள்ளது; உமது மனம் மொழி மெய்களை நலமாச் செய்து கொள்ளுங்கள்; அவ்வாறு செய்து கொண்டால் எவ்வழியும் உமக்கு இனிய சுகமேயாம் என்க.

அல்லல் நேர்ந்தபோது மனிதன் உள்ளம் கலங்குகிமுன். அந்த அல்லல் எதனுல் வந்தது? யார் தந்தது? இதனை அவன் சிந்தனை செய்ய வேண்டும். தான் வேதனை அடைதற்கு உரிய தீவினையை ஏதேனும் ஒருவன் செய்திருந்தால் ஒழிய அவனுக்கு யாதொரு கேடும் யாண்டும் எவ்வகையிலும் வருவதில்லை.

செய்தவினை செய்தவனைச் சேரவரு மேயன்றி
எய்த அயல்ஏதும் ஏமுதே---பெய்து
விளைத்த வினையே விதியாய் விரிந்து
கிளைத்து வருங்காண் கிளர்ந்து.

வினைகள் விளைந்து வருவதை இது விளக்கி வந்துள்ளது.

தான் செய்த கருமத்தின் பலன்களை மனிதன் யாண்டும் யாதும் தவமுமல் அனுபவித்து வருகிமுன். அந்த வரவு எந்த வழியும் சந்ததமும் செவ்வையா முறையே நடந்து வருகிறது.

தினை விதைத்தவன் தினை அறுப்பான்;
வினை விதைத்தவன் வினை அறுப்பான்.

என்பது பழமொழியாய் எங்கும் வழங்கப்படுகிறது.

நல்லது செய்தவனுக்கு நல்ல சுகங்கள வருகின்றன; அல்லது செய்தவனுக்கு அல்லல்களே நேருகின்றன. உழவன் எதை விதைத்தானே அதுவே விளைவாய்ப் பெருகி அவனுக்கு வளமா வருகிறது; அவ்வாறே செய்த கருமங்களும் செய்தவனுக்குத் தம்முடைய பலன்களைத் தகவாத் தந்து வருகின்றன.

Whatsoever a man soweth, that shall he also reap. [Blble]

மனிதன் எதை விதைத்தானே அதையே அறுக்கிறுன் என இது குறித்துளது. செய்தவினையின் படியே பலன் எய்த நேரும் ஆதலால் சுகத்தை விரும்புகிற மனிதன் யாண்டும் நல்ல கருமங்களையே செய்யவேண்டும். வினைவழியே விளைவுகள் வருகின்றன.

வினையின் வந்தது; வினைக்கு விளைவாயது. (மணிமேகலை)

மனித தேகத்தை இது குறித்திருக்கிறது. முன்னம் செய்த வினைகளின்படியே உடல்களை எடுத்து வந்து உயிரினங்கள் ஈண்டு உலாவுகின்றன. உயிர் வாழ்வில் துயர் உருமல் உயர வேண்டுமானுல் யாண்டும் நயமான கருமங்களையே செய்துவர வேண்டும். கருமம் தீயது ஆயின் துயரங்கள் தோய்ந்து வரும்.

தாம் செய்த கருமத்தின் வழியே யாவரும் ஆடி வருகின்றனர். நல்வினை தீவினை என்னும் இருவகைக் கருமங்களின் பலன்களை நுகரவே மனித உருவங்கள் மருவி வந்துள்ளன.

அறம்பாவம் என்னும் அருங்கயிற்ருல் கட்டிப்
புறந்தோல் போர்த்து எங்கும் புழுவழுக்கு மூடி
மலம் சோரும் ஒன்பது வாயில் குடிலை. (திருவாசகம்)

மனித தேகம் தோன்றியுள்ள நிலையை இது துலக்கியுளது.

சும்மா தனுவருமோ? சும்மா பிணிவருமோ?
சும்மா வருமோ சுகதுக்கம்? --- நம்மால்முன்
செய்தவினைக்கு ஈடாச் சிவனருள்செய் விப்பதென்ருல்
எய்தவனை நாடி யிரு. (சிவபோகசாரம்)

தாம் செய்த வினைகளின்படியே சீவர்கள் உலகில் தோன்றியுள்ளனர்; வினைப்போகங்களை அவர்கள் உண்டு வருவதைச்

சிவபெருமான் சாட்சியாய் நின்று கண்டு வருகிருன் என இது காட்டியுள்ளது. சீவ சாட்சி திவ்விய மாட்சியாய் நின்றது.

முன்பு இழைத்த வினைகளினுலேயே உழைத்துப் பிழைத்து உழந்து வருகிற இந்தப் பிறப்பு வந்துள்ளது. துன்பமும் கவலைகளும் தொடர்ந்து வருகின்றன. இன்பமும் அமைதியும் இடையிடையே சிறிது தோன்றி மறைகின்றன; அல்லலான இந்தப் பிறவித் தொல்லைகள் ஒழிய வேண்டுமானுல் உள்ளத்தை வேறு பொல்லாத புலைகளில் அலையவிடக் கூடாது; நல்ல நிலையிலேயே ஒரு முகமாய் நிறுத்தின் வினைகள் யாதும் விளையா; அவை விளையாது ஒழியின் பிறவி தீர்ந்து பேரின்பங்களே உளவாம்.

விதியார் படைப்பும் அரியார் அளிப்பும் வியன்கயிலைப்
பதியார் துடைப்பும்நம் பால்அணுகாது பரானந்தமே
கதியாகக் கொண்டுமற்று எல்லாம்துயிலில் கனவெனநீ
மதியா திருமனமே! இது காண்நன் மருந்துனக்கே.
(பட்டினத்தார்)

அல்லல் யாவும் நீங்கி அதிசய ஆனந்தம் அடையவுரிய ஒரு நல்ல வழியைப் பட்டினத்தார் தம் உள்ளத்தை நோக்கி இவ்வாறு உரைத்திருக்கிருர். மனம் புலன்களில் அலைய நேர்ந்தால் புலையான வினைகள் விளைந்து வரும்; அவ்வினைவால் தொலையாத துயரங்கள் தொடர நேரும் ஆதலால் அவ்வாறு தொடராதபடி தம் சிந்தைக்கு நல்ல சிந்தனையை நயமா நன்கு தந்தருளினுர்.

வினைப்பயனை வெல்வதற்கு வேதம் முதலாம்
அனைத்தாய நூலகத்தும் இல்லை---நினைப்பதெனக்
கண்ணுறுவ தல்லால் கவலைபடேல் நெஞ்சேமெய்
விண்ணுறுவார்க்கு இல்லை விதி. (நல்வழி, 37)

விதியை யாராலும் வெல்ல முடியாது; அது விளையாதபடி தம் உள்ளத்தை உண்மையான பரம்பொருள்மேல் செலுத்திவரின் அவர் விதியை வென்றவராய்க் கதிபெறுகின்ருர் என ஔவையார் இவ்வாறு அருளியிருக்கிருர். விதியை வெல்லுதற்கு நம் மூதாட்டி காட்டியிருக்கும் காட்சி கருதியுணரவுரியது.

மனம் அடங்கிவரின் வினை ஒடுங்கி விடும்.

———

894. தினையளவே ஆனாலும் செய்தவினை முற்றிப்
பனையளவு துன்பம் பயக்கும்—வினைவிளைவில்
அந்தோஎன் றேங்கி அலமருவார் அம்முளையை
முந்தோவச் செய்யார் முனைந்து. (ச)

இ—ள்.

செய்த தீவினை தினை அளவு ஆனாலும் அது பனை அளவு துன்பங்களை விளைக்கும்; அந்த அல்லல்கள் மூண்ட பொழுது அந்தோ என்று ஏங்கி அழுகின்றனர்; துன்ப மூலத்தின் முளையை முன்னதாகக் களையாமல் பின்னர் இன்னல் உறுவது இழிமடமையாம்; மதிகேடான மடமையே விதியாய் அடர்கிறது என்பதாம்.

வினையின் விளைவைத் தெளிவா விளக்குதற்குத் தினையும் பனையும் அளவாய் வந்தன. தினை அரிசி உருவில் சிறியது; பனை மரம் மிகவும் பெரியது; சின்ன ஒரு தீமையை நீ செய்தாலும் பின்னர் அது கொடிய நெடிய இன்னலை விளைத்து விடும் என்பதை உன்னி உணர இவை ஈண்டு உவமைகளா நேர்ந்தன.

தினை உணவுப் பொருள்; தின்ன உரியது; எவரும் விரும்பி உண்பது; வினையையும் அவ்வாறே மக்கள் விரும்பிக் கொள்வர் என்பது ஈண்டு நுண்மையா உணர வந்தது.

மடமையான பழக்கத்தால் தீமையைச் சிறிது செய்தாலும் பின்பு கொடுமையான பெரிய துயரங்களை அடைய நேர்கின்றனர். விளைகின்ற அல்லல் தெரியாமல் அவலமாயுழல்கின்றனர்.

அலமரல் = நிலை குலைந்து வருந்துதல். தீமையைச் செய்து விட்டுப் பின்பு அதன் விளைவுகளான துன்பங்களை அனுபவிக்க நேர்ந்த போது நெஞ்சம் கலங்கி நெடிது வருந்தி அழுது புலம்புவது மனிதரிடம் கொடிய மடமையாய் நெடிது மருவியுள்ளது.

மறத்துறை நீங்குமின் வல்வினை யூட்டும்என்று
அறத்துறை மாக்கள் திறத்தில் சாற்றி
நாக்கடிப் பாக வாய்ப்பறை அறையினும்
யாப்பறை மாக்கள் இயல்பில் கொள்ளார்;
தீதுடை வெவ்வினை உருத்த காலைப்
பேதைமை கந்தாப் பெரும்பே துறுவர்.

(சிலப்பதிகாரம், 14)

தீமை செய்யாதீர்! செய்தால் வெய்ய துயரங்களை அடைய நேர்வீர் என்று பெரியோர்கள் எவ்வளவு வலியுறுத்திச் சொன்னாலும் யாதும் கேளாமல் தீவினைகளைச் செய்து பின்பு துன்பங்கள் புகுந்த பொழுது அந்தோ என்று அலமந்து அழுது புலம்புவது அவலமான பேதைகள் இயல்பாம் என இது குறித்துளது.

தான் செய்த வினையின் பயனை எவனும் அனுபவித்தே தீர வேண்டும்; இது விதியின் நியதி. எந்த வகையிலும் இந்த நியதியை யாரும் கடந்து போக முடியாது. இராகுலன் என்பவன் காந்தார நாட்டு மன்னன் மகன். நல்ல அழகன்; முன் கோபி; ஒரு நாள் அறிஞர் சிலர்க்கு விருந்து புரிந்தான்; அதில் தலைமையான சமையல்காரன் சரியாய் வேலை செய்யவில்லை என்று சினந்து அவனை அறைந்தான்; அவன் இறந்து போனான்; சில நாளில் கொடிய பாம்பு இவனைக் கொதித்துக் கடித்தது; உடனே இவன் துடித்து மடிந்தான்; பின்பு சோழ மன்னன் மகனாய்ப் பிறந்தான். உதயகுமாரன் என்னும் பேரோடு விளங்கியிருந்தான். ஒருநாள் மாலையில் இனியசோலையுள் புகுந்தான்; அங்கே காஞ்சனன் என்னும் விஞ்சையன் வாளால் இவன் வெட்டுண்டு மாண்டான்; பெற்றதாய் பெருந்துயருழந்து அழுதாள்; அந்த அரசியை மணிமேகலை தேற்றினாள். வினையின் விளைவுகளை விளக்கி அத்தேவிக்கு இத்தவமகள் தெளிவு கூறிய மொழிகள் ஞான ஒளிகளாய் ஒளிவீசி வந்தன. சில அயலே வருகின்றன.

"பூங்கொடி நல்லாய்! பொருந்தாது செய்தனை
உடற்கு அழுதனையோ? உயிர்க்கு அழுதனையோ?
உடற்கு அழுதனையேல் உன்மகன் தன்னை
எடுத்துப் புறங்காட்டு இட்டனர் யாரே?
உயிர்க்கு அழுதனையேல் உயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையால் தெரிந்துணர்வரியது
அவ்வுயிர்க்கு அன்பினை ஆயின் ஆய்தொடி
எவ்வுயிர்க்கு ஆயினும் இரங்கல் வேண்டும்
மற்றுஉன் மகனை மாபெருந் தேவி
செற்ற கள்வன் செய்தது கேளாய்!
மடைக்கலம் சிதைய வீழ்ந்த மடையனை
உடல்துணி செய்தாங்கு உருத்தெழும் வல்வினை
நஞ்சுவிழி அரவின் நல்லுயிர் வாங்கி

விஞ்சையன் வாளால் வீட்டிய தன்றே
ஆங்கதின் தனையோ ஈங்கிது நீஎனின்
பூங்கொடி நல்லாய் புகுந்தது இது." (மணிமேகலை, 23)

மகனை இழந்து மறுகி அழுத அரசிக்கு இவ்வாறு அறிவு கூறியிருக்கிருள். சமையலாளைக் கொன்ற வல்வினை முதலில் அரவால் உயிர் வாங்கியது; பின்பு விஞ்சையன் வாளால் வெட்டி வீழ்த்தியது என விளக்கியிருக்கும் வித்தகம் உய்த்துணரத் தக்கது. தன்னைச் செய்தவனை எவ்வழியும் தொடர்ந்து வினை கொல்லும் என்பதை இங்கே நன்கு தெளிந்து கொள்ளுகிறோம்.

அசோதரன் என்பவன் பவணமாதேவன் என்னும் அரசனுடைய அருமை மகன். இனிய குணநீர்மைகளுடையவன். ஒரு நாள் தனது அழகிய மனைவியோடு பொழிலிடையிருந்த பொய்கையில் நீராடினன்; அப்பொழுது அங்கே தாமரைச் செறிவுள் ஒரு அன்னக்குஞ்சைக் கண்டான். அதன் அழகு கண்ணைக் கவர்ந்தது; மனைவியும் பிரியமா விரும்பினள்; விரும்பவே அதனை எடுத்து வந்து அரண்மனையில் வைத்து அருமையா வளர்த்தான்; பொன்வள்ளத்தில் பால்ஊட்டி நாளும் நன்கு பேணி வந்தான்; ஒரு நாள் தந்தை கண்டான்; சிந்தை கவன்றான்: "ஆ! இந்த இளங்குஞ்சைப் பிரிந்து தாய் வருந்துமே! யார் இது செய்தது?" என்று அருகே நின்றவரை வினவினன். "இளவரசு" என்றனர். உடனே தனது இருக்கைக்கு வந்து மகனை வரவழைத்தான்; குமரன் வந்து வணங்கி நின்றான். அவனை அருகே இருத்தி, "நீ அன்னப்பார்ப்பைப் பிடித்து வந்திருப்பது என் உள்ளத்தை வருத்துகிறது; அது தாயைப் பிரிந்து வருந்தியுள்ளது போல் நீயும் பெற்றோரைப் பிரிந்து சிறைப்பட்டு வருந்த நேருமே! வினை மிகவும் கொடியது; தன்னைச் செய்தவனைத் தவருமல் அது இன்னல் செய்து விடுமே" என மன்னன் மிகவும் மறுகினன்.

பூவைகிளி தோகைபுணர் அன்னமொடு பன்மா
யாவைஅவை தம்கிளையின் நீங்கியழ வாங்கிக்
காவல்செய்து வைத்தவர்கள் தங்கிளையின் நீங்கிப்
போவர்புகழ் நம்பி! இது பொறிபிலது கண்டாய்!
(சீவகசிந்தாமணி)

தந்தை கூறிய இந்த வார்த்தைகளைக் கேட்டதும் மைந்தன் வருந்தினுன்; தெரியாமல் செய்து விட்டேன் என்று மறுகி வணங்கித் தாதையிடம் விடைபெற்று மீண்டு வந்தான். அந்த அன்னக்குஞ்சை எடுத்துக் கொண்டு போய்ப் பழைய இடத்தில் சுகமா விட்டு மீண்டான். அறியாமல் அவம் செய்துவிட்டேனே என்று மனம் கவன்முன்; உடனே அரசைத் துறந்து தவம் செய்யப் போனுன். அவனே பின்பு ஏமாங்கத நாட்டு மன்னன் மகனுய்ப் பிறந்தான். முன்னம் பறவைபால் செய்திருந்த சிறிய ஒரு தீவினையால் பிறந்தபோதே தாயைப் பிரிந்து பருவம் வரும் வரையும் மறைவாயிருந்தான். சீவகன் என்று சிறந்த கீர்த்தியோடு உயர்ந்திருந்தவன் சரிதம் இவ்வாறு பிறந்து வந்துளது. பிறவிகள் விதியின் உறவுகளை அறிவிக்கின்றன.

தான் செய்தவினை தன்னைவந்து பற்றிக்கொள்ளும்; அதனை அனுபவியாமல் எவனும் தப்பமுடியாது என்பதை இதனுல் உணர்ந்து கொள்ளுகிருேம். வினைகள் எவ்வழியும் தொடர்ந்து படர்ந்து அடர்ந்து வந்து தம் பயன்களை ஊட்டிவிடும் என்பதைக் காவிய சீவியங்கள் யாவும் ஒவியமாக் காட்டியுள்ளன.

ஓடிப் பறந்தே உழந்தாலும் ஊழ்வினை தான்
கூடிப் புகுந்து குலாவலால்---நாடித்தான்
உள்ளியதைக் கொள்ள உருதுகாண் உள்ளாதும்
துள்ளிமுன் நிற்கும் தொடர்ந்து.

இதனை உள்ளி உணர்ந்து ஊழ்நிலை தெளிக.

ஒழிகென ஒழியாது ஊட்டும் வல்வினை
இட்ட வித்தின் எதிர்ந்துவந்து எய்தி
ஒட்டுங் காலை ஒழிக்கவும் ஒண்ணு. (சிலப்பதிகாரம், 10)

உறற்பால நீக்கல் உறுவர்க்கும் ஆகா;
பெறற்பால் அனையவும் அன்னவாம்; மாரி
வறப்பின் தருவாரும் இல்லை அதனைச்
சிறப்பின் தணிப்பாரும் இல். (நாலடி, 104)

விதியின் அதிசய நிலைகளை இவை விளக்கியுள்ளன.

---

895. இன்பம் உறவேண்டின் எவ்விடத்தும் நல்வினையே
அன்போ டயராமல் ஆற்றுக—என்பலனும்
செய்த வினைஅளவே சேரும் அயல்ஒன்றும்
எய்த வருவ திலை. (ரு)

இ-ள்.

இன்பமே பொருந்த விரும்பின் எங்கும் என்றும் நல்ல வினைகளையே நயந்து செய்க; செய்த வினையின் அளவே பலன்கள் எய்த வருகின்றன; வேறு வகையில் யாதும் வருவது இல்லை; இந்த உண்மையை உணர்ந்து உறுதியை நாடிக் கொள்ளுக.

இருளில் வழி நடப்பவனுக்கு விளக்கு ஒளி தந்து உதவி புரிகிறது; அதுபோல் மருளான உலக வாழ்க்கையில் மருவியிருக்கின்ற மனிதனுக்கு அறிவு நெறிமுறைகளை விளக்கித் தெளிவு தருகின்றது. சென்றதும் நிகழ்வதும் வருவதும் ஆகிய மூன்று காலநிலைகளையும் ஊன்றியுணர்ந்து தன் உயிர்க்கு உறுதி நலம் காண்பவன் உயர்ந்த மதிமானய்ச் சிறந்து திகழ்கிறான்.

மனித சமுதாயத்தில் பலவகையான மாறுபாடுகள் காணப்படுகின்றன; படவே இந்தப் பிறவிக்கு முந்திய பிறவியின் தொடர்புகள்தோய்ந்திருப்பதை ஓர்ந்துஉணர்ந்து கொள்கிறான்.

காலையில் வேலை செய்தால் மாலையில் கூலி கிடைக்கிறது. வேலைசெய்யாமல் சோம்பியிருந்தால் கூலி கிடையாது. முன்னே நல்ல வினைகளைச் செய்திருந்தவர் செல்வர்களாய்த் தோன்றுகின்றனர்; அவ்வாறு செய்யாதவர் வறியராய் நிற்கின்றார். இப்பிறவியில் ஊக்கி முயன்றாலும் ஆக்கங்களை அடைந்து கொள்ளலாம். ஊழின் வழியே வாழ்வுகள் வளம் பெற்று வருகின்றன. நதி நீர் பரந்துவரின் பயிர்கள் வளமாய் வளர்ந்து வரும்; அதுபோல் விதி நீர் விரிந்துவரின் உயிர்கள் சுகமாய் வாழ்ந்து வரும். ஊழ் ஊட்ட உயிர்கள் உண்டு வருகின்றன.

"ஊழ்எனப் பட்ட தாழ்புனல் படுகரில்
தெய்விகம் முதலாச் செப்பும் மதகும்
ஒவ்வொரு மதகா யுடனுடன் திறந்து
தாகம் என்னும் தனிப்பெருங் காலில்
போகம் எனனும புதுபபுனல் கொணர்ந்து
பாயுமஜம பொறியாம வாய்மடை திறந்து

பருவம் பார்த்து வரன்முறை தேக்கலும்
இதத்துடன் அகிதம் எனுமிரண்டு ஊற்றில்
புதுப்புனல் பெருகிப் புறம்பலைத்து ஓட
வார்புன லதனை மந்திர முதலா
ஓராறு வகைப்படும் ஏரிகள் நிரப்பி
விளைவன விளைய விளைந்தன அறுத்தாங்கு
ஒருகளம் செய்யும் உழவன் ஆகி
மாநிலம் புரக்கு மாசிலாமணி." (பண்டாரமும்மணி, 11)

ஊழ் என்னும் பெரிய குளத்திலிருந்து தண்ணீர் பாய்ந்து வருதலால் உயிர்கள் ஆகிய பயிர்கள் செழித்து வளர்ந்து வாழ்ந்து வருகின்றன என்று இது குறித்துள்ளது. இதில் அமைந்துள்ள உருவக நிலைகளை ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும்.

எவ்வுயிர்க்கும் இதமான இனியகாரியங்களை ஒருவன் செய்தால் அவை நல்வினையாய் ஓங்கி அவனுக்கு எவ்வழியும் இன்பங்களை அருளுகின்றன. நெல்லை விதைத்தவனுக்கு நல்ல அரிசி கிடைக்கிறது; அது போல் நல்லதைச் செய்தவனுக்கு நலங்கள் பல வருகின்றன. அல்லதைச்செய்தவன் அவலமே அடைகிறான்.

தாம் செய்த கருமங்களின் வழியே சீவர்களுக்குச் சுக துக்கங்கள் உளவாகின்றன. நல்ல கருமம் செய்தவன் தருமவான் ஆகின்றான்: ஆகவே அவன் யாண்டும் இன்பமும் மேன்மையும் பெறுகின்றான். அல்லல் நேரினும் நல்லதே காண்கிறான்.

ஆடகச் செம்பொற் கிண்ணத்து ஏந்திய அலங்கல் தெண்ணீர்
கூடகம் கொண்ட வாழ்நாள் உலந்ததேல் கொல்லும்; பவ்வத்
தூடகம் புக்கு முந்நீர் அழுந்தினும் உய்வர் நல்லார்
பாடகம் போலச் சூழ்ந்த பழவினைப் பயத்தின் என்றான்.
(சீவகசிந்தாமணி, 510)

தங்கக்கிண்ணத்தில் தண்ணீர் பருகுங்கால் ஒரு அரசன் விக்கிச் செத்தான்; அதே சமையத்தில் கப்பல் உடைந்து கடலிடையே வீழ்ந்த ஒரு மனிதன் தப்பிப் பிழைத்துக் கரை ஏறி வந்து வாழ்ந்தான்; அந்தச் சரித்திரங்களை இது விசித்திரமா விளக்கியிருக்கிறது. பழவினையின் விளைவுகள் அளவிடலரியன; அதன்வழியேயாவும் நடந்துவருகின்றன என்பதுதெரிய வந்தது.

தலைஎழுத்து என்பது விதிக்கு ஒரு பெயர். முன்னமே செய்த கருமங்களின் படியே பிறப்பிலேயே பிரமா சீவர்களை வரைந்து விடுகிறான். அந்த எழுத்தின் வழியே இன்ப துன்பங்களை யாவரும் நுகர்ந்து யாண்டும் தொடர்ந்து வருகின்றனர்.

அழுதால் பயன்என்ன நொந்தால் பயன்என்ன ஆவதுஇல்லை
தொழுதால் பயன்என்ன நின்னை ஒருவர் சுடவுரைத்த
பழுதால் பயன்என்ன நன்மையும் தீமையும் பங்கயத்தோன்
எழுதாப் படிவரு மோசலியா திருஎன் ஏழைநெஞ்சே!
(பட்டினத்தார்)

விதி எழுதிய படியே யாவும் நடைபெறும் எனத் தம் நெஞ்சை நோக்கிப் பட்டினத்து அடிகள் இவ்வாறு கூறியிருக்கின்றார்.

செய்த வினையின் படியே பலன்கள் எய்த வருகின்றன. நல்ல நினைவுகளோடு நல்ல வினைகளைச் செய்பவனே எல்லா வழிகளிலும் சிறந்து இன்ப நலங்களை அடைந்து மகிழ்கின்றான்.

நல்ல சுகமாக நாளும்நீ வாழ்ந்துவர
நல்ல வழிஒன்று நாடினேன்---அல்லலை
எவ்வழியும் எவ்வுயிர்க்கும் என்றுமே எண்ணாதே
அவ்வழியே ஆனந்தம் ஆம்.

இன்பம் விளையும் நிலையை இது இனிது விளக்கியுள்ளது. இதனைக் கருதியுணர்ந்து உறுதியோடு ஒழுகி உயர்ந்து கொள்ள வேண்டும். அல்லது கடிந்து நல்லது புரிந்து நலம் பல பெறுக.

896. அடுசிலையில் நின்றெழுந்த அம்புபோல் செய்த
கொடுவினையின் துன்பம் கொதித்துக்—கடிதேறித்
தப்பாமல் நேரே தவறாமல் தாக்குமே
அப்போது நோதல் அவம். (சு)

இ—ள்.

எய்த வில்லில் இருந்து விடுபட்டு எழுந்த பாணம்போல் செய்த வினையிலிருந்து சீறி எழுந்த துன்பம் எவ்வழியும் யாதும் தப்பாமல் தாக்கி வருத்தும்; அப்பொழுது வருந்துவதால் யாதொரு பலனும் இல்லை; எப்பொழுதும் இதனை உணர்க.

வினையின்படி விளைவே அன்றி நினைவின்படி எவனும் அனுபோகங்களை அடைவதில்லை. முன்னம் செய்த கருமங்களின் பலன்களையே மருமங்களா மானுடங்கள் மருவி வருகின்றன.

கொடிய தீவினைகளைச் செய்தவன் துயரங்களை நுகர்ந்து துடித்து அயர்கின்றான்; இனிய நல்வினைகளை இழைத்தவன் இன்ப நலங்களைச் சுகித்து எவ்வழியும் களித்து வருகின்றான்.

பொல்லாத தீமைகளைச் செய்தவன் நல்ல சுகபோகங்களை விரும்புவது எட்டி விதையை நட்டினவன் இனிய மாங்கனியைத் தின்ன விழைவதுபோல் இன்னலான மட்டித்தனமேயாம். கொள்ளி கொண்டு தலை சொரிந்து பிள்ளை அழும் பேதைமைபோல் உள்ளி உணராமல் தீமையைச் செய்து கொண்டு துயரங்களில் அழுந்தி மனிதர் மறுகி அழுது மடிந்து போகின்றார். மையல் நோக்கும், மாயப் போக்கும், மடமையும் வையமாந்தரை நையப் புடைத்து நாளும் வதைத்து வருகின்றன.

தீய வழியில் ஒருவன் ஒருமுறை பழகினால் பின்பு அவன் நல்ல வழியில் வருவது அரிது; அந்த இழி பழக்கத்தால் அழி துயரங்களையே அவன் அடைய நேர்கின்றான். வினைவிளைவை உணராமல் வீணே விதியை நோவது மதிகேடாய் மருவியது.

செய்தவினை எய்த கணைபோல் குறிதவறாமல் பாய்கின்றது. அடுசிலை என்றது கொல்லும் தொழிலுடைய வில் என அதன் கோலம் தெரிய வந்தது. அல்லல் விளைவுகள் அச் சொல்லில் விளங்கி நின்றன. தீவினை தீய துயரங்களையே செய்கிறது.

எவரையும் வினை விடாமல் அடுதலால் அது அதிசய விதியாய்த் துதி செய்ய நின்றது. மணிமுடி துறந்து இராமன் கானகம் போனதும், அகில வுலகங்களையும் அடலாண்மையோடு ஆண்ட இராவணன் அவலமாய் மாண்டதும் விதியின் விளைவுகளே. அது ஆட்டியபடியே யாவரும் ஆடி வருகின்றனர்.

இளமையில் இராமன் உல்லாசமாய்க் கூனியின் முதுகில் ஒரு வில் உண்டையை வீசினான். அது அவளுக்கு வேதனை ஆயது; அந்தச் சிறிய தீவினையால் தனது பெரிய அரசை இழந்து இந்த இனிய கோமகன் கொடிய காட்டுக்குப் போக நேர்ந்தான். வினையின் பலன்கள் விசித்திரங்களாய் விரிகின்றன.

நல்ல தவத்தால் எல்லா நலங்களையும் எய்தியிருந்த இலங்கை வேந்தன் பின்பு பலர்க்கும் அல்லல் புரிந்தான்; முடிவில் சீதையின் உள்ளம் கொதிக்கச் செய்தான்; அதனால் அடியோடு அழிய நேர்ந்தான். விதியின் விளைவுகள் வியப்புகளை விளைத்து எங்கும் வியனுற நிற்கின்றன. அதன் ஆற்றல்கள் அளவிடலரியன.

தந்தை விரும்பியபடி அரசுரிமையை அடைய இராமன் இசைந்தான். முடிசூட்டு விழாவுக்குப் பலதேசங்களிலுமிருந்து அரசர்கள் வந்தனர்; நகரம் அதிசய நிலையில் அலங்கரிக்கப் பெற்றது. எவ்வழியும் இன்பக் களிப்புகள் பொங்கி எழுந்தன. அவ்வமையம் அரசமாளிகை மேல் ஏறி நிலா முற்றத்தில் நின்று இராச வீதிகளைக் கூனி பார்த்தாள்; அவள் அங்கே தோன்றி நின்ற தோற்றத்தைக் காவியநாயகன் ஓவியமா வரைந்து காட்டியிருக்கிறார்; அந்தக் காட்சியை அயலே காண வருகிறோம்.

அந்நகர் அணிவுறும் அமலை வானவர்
பொன்னகர் இயல்பெனப் பொலியும் ஏல்வையில்
இன்னல்செய் இராவணன் இழைத்த தீமைபோல்
துன்னரும் கொடுமனக் கூனி தோன்றினாள்.

(இராமா, மந்தரை, 39)

இக்கவியின் சுவையைக் கருதிக் காண வேண்டும். வினையின் விளைவை இனிது விளக்கியுள்ளது. இலங்கை தென் திசையில் இருக்கிறது; அயோத்தி வடகோடியில் உளது; இடைவெளி ஆயிரத்து எழுநூறு கல் நடை வழியாய் நிற்கிறது. இந்நகரின் உபரிகையில் ஏறி நின்றுள்ள அக்கிழவி இராவணனுடைய தீவினை நிழல்போல் நீண்டு தோன்றினாள் என்றது ஆன்ற பலபொருள்கள் தோன்ற நின்றது. மேலிருந்து கீழ் இறங்கியதும் கூனி கைகேசியிடம் கோள் மூட்டுவாள்; கொடுமை விளையும்; இராமன் மணிமுடி சூடான்; சடை முடியனாய்க் காட்டுக்குப் போவான்; சீதையும் தொடர்ந்து போவாள்; அவளை இடையே இராவணன் கவர்ந்து செல்வான்; அதனால் அவன் குலத்தோடு அழிந்து ஒழிவான்; இந்த அழிவுகளை எல்லாம் தெளிவாய்த் தெரிய இவ்வுவமை வந்தது. வினையின் வரவு நினைவுற அரியது.

இன்னல் செய் இராவணன் என்றது இனிய செய்து சுகமாய் வாழ்ந்து வந்தவன் இன்னலோடு அழிய நேர்ந்தமைக்கு

உரிய காரணம் தெரிய நின்றது. செய்த தீவினை எவனையும் சீரழித்து அடியோடு தொலைத்துவிடும் என்பதை இலங்கை வேந்தன் சரித்திரம் நன்கு துலக்கி நின்றது.

நல்வினை இனிய அமுதம்; தீவினை கொடிய விடம்.

தன்னை உண்மையாக உரிமையோடு நன்கு பேணுகின்றவன் புன்மையான தீமைகளைக் கனவிலும் கருதலாகாது. தீய எண்ணம் சிறிதே எனினும் அதனை எண்ணினவன் எவ்வழியும் தப்பாமல் அதன் வெவ்விய துயரை அனுபவிக்கின்றான். இயற்கை நியமம் யாதும் தப்பாத செப்பம் மிகவுடையது. அது ஆட்டியபடியே ஆருயிர்கள் யாண்டும் ஆடி வருகின்றன.

மெத்துதிறல் ஆடவரும் மெல்லியல் நல்லாரும்
சித்தமுற நன்கினொடு தீதுசெயல் ஊழே
உய்த்தபடி அல்லது இலையாம்; உழவர்ஒண்செய்
வித்துபய னேஅலது வேறுபெற லாமோ?

(கந்தபுராணம்)

வித்திய விளைவை உழவர் பெறுதல்போல் பொத்திய வினையின் பலனையே இருபாலும் ஒருபாலும் கோடாமல் நுகர்கின்றன என இது குறித்துளது. கருதி வந்ததே காணவருகிறது. உறுதி நலங்களை ஓர்ந்து சிந்தனை செய்து உயர்ந்து கொள்ளுக.

---

897. வல்ல அறிஞர் வறிஞராய் வாடுதலும்
புல்லர் பொருளால் பொலிதலும்—தொல்லை
வினைவிளைத்து நிற்கும் வினையமே அல்லால்
நினைவதற் குண்டோ நிலை. (எ)

இ—ள்.

சிறந்த அறிவாளிகள் வறியராய் வாடுகின்றனர்; இழிந்த மடையர்கள் பொருள் வளம் உடையராய்ப் பொலிந்து வாழுகின்றனர்; இவை வினையின் விளைவே அன்றி வேறு நினைய இடம் இல்லை; ஆகவே அதன் நிலையை உணர்ந்து வாழுக என்பதாம்.

விதியின் விளைவுகளைத் தெளிவாக அறிய மதிமானையும் மதிகேடனையும் ஒருங்கே இணைத்து இது இங்கே விளக்கியுள்ளது.

அறிவு அதிசய ஆற்றலுடையது; அதனை உடையவர் எல்

லாம் உடையராய் யாண்டும் உயர்வுறுகின்றனர். பொருளை ஈட்டவும், காக்கவும், நல்ல வழிகளில் செலவு செய்யவும், சுக போகங்களை நயமா அனுபவிக்கவும் அறிவு வல்லது; அத்தகைய அறிவை உரிமையாக உடையவர் பொருள் இன்றி வறியராய் மறுகுகின்றனர். இன்மையும் உடைமையும் புன்மையுறுகின்றன.

நல்ல அறிவு சிறிதும் இலராய்ப் பொல்லாத புலைகளில் இழிந்துள்ள பலர் செல்வ வளம் எய்திச் செழித்துக் கொழுத்துத் திரிகின்றார். மாறுபாடான இந்த விபரீத நிலைகளை உலகத்தில் கண்டு வருகிறோம்; இதற்குக் காரணம் என்ன? கருதி உணர்ந்தால் உறுதியான உண்மைகள் நேரே தெரிய நேருகின்றன.

பொருளுக்கு எவ்வழியும் தனியுரிமையாளர் வறியராய் ஏங்கவும், அந்த உரிமை யாதும் இல்லாத புல்லர் செல்வராய் ஓங்கவும் நேர்ந்துள்ள பாங்குகளை நூலோரும் மேலோரும் யாங்கணும் ஆய்ந்து ஓய்ந்து முடிவில் விதியே என்று தேர்ந்துள்ளனர். வினையின் அளவே மனித வாழ்வு மருவி வருகிறது.

குசேலர் தெளிந்த அறிவாளி; சிறந்த குணசாலி; அருள் நலம் கனிந்து நல்லவராயிருந்த அவர் பொருள் இல்லாமையால் அல்லல் பல அடைந்தார். வறுமையால் வாடி மனைவி மறுகிய போதெல்லாம் அவள் உள்ளம் தேற உறுதிகள் பல கூறினார்.

அலரவன் தீட்டிவைத்த ஆயுளின் அளவை காறும்
விலகிலா வினைக்குத் தக்க விருப்புறு வெறுப்புறுவும்
இலகவுண்டு; இன்றேல் இன்றாம் இன்னுயிர் உடம்பின்வாழ்தல்;
மலர்தலை உலகத்து என்று வகுப்பர்நூல் உணர்ந்த வல்லோர்.

வினையின் அளவே பொருளும் போகமும் உளவாம்; இல்லாமையை நினைந்து நீ வருந்தலாகாது என்று மனைவிக்கு இவ்வாறு அவர் புத்திபோதித்திருக்கிறார். நல்ல சீலமுடைய அவர் பொல்லாத வறுமையால் அல்லலுழந்திருந்தது, பழவினைவலியை விழிதெரிய விளக்கி விதியின் அதிசய நிலையைத் துலக்கி நின்றது.

இம்மை மறுமை இருமையும் நன்கறிந்த
செம்மை யுளமுடைய சீலர்கள்—வெம்மைதரு
பொல்லா வறுமையுறப் புல்லர் வளமுறுதல்
எல்லாம் விதியின் இயல்.

விதியின் விசித்திரச் செயலை இது இனிது விளக்கியுள்ளது.

புல்லர் என்றது புன்மையான நிலையிலுள்ள சிறியரை. காட்டிலுள்ள மரம் கொடி செடிகளுள் புல் மிகவும் சிறியது; அதுபோல் நாட்டிலுள்ள சிறியர் புல்லர்என நேர்ந்தார். அற்பர் கீழோர் கயவர் என இழிவா எள்ளப்படுபவர் உள்ளப் பண்பு இல்லாத புல்லரே. மனநிலை இழிந்த அளவு மனிதன் தாழ்கிறான்.

பொல்லாத புல்லர் நல்ல செல்வங்களை அடைவதும், நல்லோர் அவற்றை இல்லாமல் இருப்பதும் இயற்கைக்கு விரோதம்; இந்த மாறுபட்டுக்கு மூலகாரணம் பழவினையின் விளைவேயாம். பொருள் வருதற்கு உரிய தொழிலை முன்னம் செய்து முடித்தவர் அப்பிறவியில் அதனை எளிதே அடைந்து கொள்கின்றார்; அங்ஙனம் செய்யாதவர் அதனை எய்தாமல் நிற்கின்றார்.

நல்லார் நயவர் இருப்ப நயமிலாக்
கல்லார்க்குஒன் றாகிய காரணம்---தொல்லை
வினைப்பயன் அல்லது வேல்நெடுங் கண்ணாய்!
நினைப்ப வருவதுஒன் றில். (நாலடி, 265)

கல்விகளை நன்கு கற்று நல்ல குணசாலிகளாயுள்ளவர் செல்வம் இல்லாமல் வருந்துகின்றார்; கல்லாதமூடர்கள் அதனை எளிதே பெற்றுக் களி மிகுத்திருக்கின்றார்; இது என்னே பாரிழவு? என்று தன்மனைவி மறுகிக் கேட்டபோது ஒரு கவிஞர் அவளை நோக்கி இவ்வாறு கூறியிருக்கிறார். வினைப்பயன் என்று நினைப்பு ஊட்டியது இப்பொழுதாவது நல்ல வினைகளைச் செய்து கொள்ள வேண்டும் என உய்தி நிலையை எண்ணியேயாம்.

உலக வாழ்வு பலவகை விசித்திரங்களையுடையது; அறிஞர் வறிஞராய் நிற்கின்றார்; அறிவிலிகள் செல்வராய்த் திகழ்கின்றார்; மாறுபாடான இந்நிலைகளைக் கண்டதும் வேறே ஒரு விதி தனியே உளது என்று மதி தெளிகின்றது. அந்தத் தெளிவில் அரிய பல உண்மைகள் ஆராய்வோடு வெளிவருகின்றன.

அறிவு உயிரின் ஒளி; தெய்வத்திரு; அதனையுடையவர் இயல்பாகவே உயர்ந்து கொள்ளுகின்றனர்; பொருளை அவர் அதிகமா மதிப்பதில்லை; ஆகவே அதனை மிகுதியும் அடையாமல் அவர் விலக நேர்ந்தனர். அந்த விலக்குவியனுன இலக்குடையது.

உள்ளே உணர்விலிருந்து ஊறுகின்ற கல்வியின்பத்தை

நுகர்ந்து வருபவர் வெளியே செல்வத்தைநாடி அலையமுடியாது ஆதலால் வறுமை அவரை உரிமையாக அடைந்து கொள்கிறது; அதனால் அவரது பெருமை மருமமாய்ப் பெருகி வருகிறது.

என்றும் அழியாத விழுமிய கல்விச் செல்வத்தையுடைய புலவர்கள் பொன்றி அழிகின்ற புல்லிய செல்வத்தை நாட நேர்ந்தபோதுதான் அரசர்களை வள்ளல்களை உவந்து பாட நேர்கின்றனர். அந்தப் பாடல்களால் அவர்களுக்குப் புகழ்கள் உளவாகின்றன; பிறர்க்குக் கலைகள் வளர்கின்றன; உலக சரித்திரங்களும் வெளியே தெளிவாய்த் தெரிய வருகின்றன.

ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி உழவாப்
பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறும் அழூஉம்தன் மகத்துமுகம் நோக்கி
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக் கண்என்
மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண!
என்னிலை அறிந்தனை ஆயின் இந்நிலைத்
தொடுத்தும் கொள்ளாது அமையலென் அடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணமை முழவின் வயிரியர்
இன்மை தீர்க்கும் குடிப்பிறந் தோயே! (புறம், 164)

தமது வறுமை நிலையைக் குறித்துக் காட்டிப் பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் குமணனிடம் இவ்வாறு கூறியிருக்கிறார். நெடுநாள் உலை ஏற்றாமையால் அடுப்பில் காளான் பூத்திருந்தது; தாய்ப்பால் இல்லாமல் குழந்தை தளர்ந்து அழுதது; மனைவி மறுகி என்முகம் நோக்கி நின்றாள்; நான் உன் முகம் நோக்கிவந்தேன் என்று அவர் உரையாடியுள்ள அழகு ஊன்றி உணரவுரியது. உயர்ந்த அறிஞர் இழிந்த மிடியால் வருந்துகிறார்.

திறவாக் கண்ண சாய்செவிக் குருளை
கறவாப் பால்முலை கவர்தல் நோனாது
புனிற்றுநாய் குரைக்கும் புல்லென் அட்டில்
காழ்சேர் முதுசுவர்க் கணச்சிதல் அரித்த
பூழி பூத்த புழற்கா ளாம்பி

ஒல்குபசி யுழந்த ஒடுங்குநுண் மருங்குல்
வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த
குப்பை வேளை உப்பிலி வெந்ததை
மடவோர் காட்சி நாணிக் கடைஅடைத்து
இரும்பேர் ஒக்கலொடு ஒருங்குடன் மிசையும்
அழிபசி வருத்தம் வீட. [சிறுபாண்]

வீடு சுவர் சரிந்தது; கூரை பிரிந்தது; அடுப்பில் ஆம்பி பூத்தது; அடுக்களையில் நாய் குட்டிபோட்டு அவலமாயுளது; உப்பு இல்லாமல் வெந்த கீரையைத்தின்றுநைந்து வந்துள்ளேன் எனஒருபுலவர் நல்லியக்கோடனிடம் போய் இவ்வாறு சொல்லி யுள்ளார். நல்ல அறிவும் பொல்லா வறுமையும் புலையாடியுள.

நலம்பாடு அறியா இலம்பாடு அலைப்ப
நீர்வாய்ச் சிதலையும் நூல்வாய்ச் சிலம்பியும்
சிலவிட மேய்ந்த சிறுபுன் குரம்பையில்
மசகமும் உலங்கும் வாய்ப்படைக் குடவனும்
பசையில் யாக்கைத் தசைகறித்து உண்ண
அரும்பசிக்கு உணங்கியும் பெரும்பிணிக்கு உடைந்தும்
சாம்பல் கண்டு அறியாது ஆம்பி பூத்த
எலிதுயில் அடுப்பில் தலைமடுத்து ஒதுங்கிச்
சிறுசிறார் அலறப் பெருமனைக் கிழத்தி
குடங்கையில் தாங்கிய கொடிற்றினள் குடங்கைக்கு
அடங்கா உண்கண் ஆறலைத்து ஒழுக
அழுகுரல் செவிசுட விழுமநோய் மிக்குக்
களைகண் காணாது அலமரும் ஏல்வையில்
கடவுள் நல்லூழ் பிடர்பிடித்து உந்தக்
கன்னிமதில் உடுத்த காசிமா நகரம்
பெருவளம் சுரக்க அரசுவீற் றிருக்கும்
மழுவலன் உயர்த்த அழல்நிறக் கடவுள்
பொன்னடி வணங்கி இன்னிசை பாடலும்
அந்நிலைக் கண்ணே அகல்விசும்பு ஒரீஇச்
சுரபியும் தருவும் பெருவளம் சுரப்ப
இருமையும் பெற்றனன் யானே நீயும்அத்
திருநகர் வளமை பாடி இருநிலத்து
இருநிதிக் கிழவன் ஏக்கறுப்பத்
திருவொடும் பொலிக பெருமகிழ் சிறந்தே.
[காசிக்கலம்பகம், 58]

கொடிய வறுமையில் நெடிய துயராய் மறுகியிருந்த நான் முடிவில் காசிவிசுவநாதரைக் கண்டு பாடினேன்; தெய்வத்திரு எய்தி இருமையும் இன்புற்றேன்; நீயும் போய்ப் பாடி குபேர சம்பத்தைப் பெறுக என ஒரு புலவர் மற்று ஒருவருக்கு வழி காட்டியிருப்பதை இது தெளிவாக் காட்டியுள்ளது.

காவென்றும் சிந்தா மணிஎன்றும் நீஎன்றன் கையில்அள்ளித்
தாவென்றுரைக்கத் தரித்திரம் பின்சென்று தள்ளிஎனைப்
போஎன்றுரைக்கவும் நாணம்அங் கேஎன்ன போவதுஇங்கு
வாஎன்று இழுக்கவும் வந்தேன் விராலி மலைக்கந்தனே.
[மங்கைபாகர்]

பிறரைப் புகழ்ந்து பாடிப் பொருள் பெறும்படி வறுமை தள்ள, மானம் தடுக்க மறுகி நின்ற புலவர் முருகன் சந்நிதியில் வந்து இவ்வாறு உருகி முறையிட்டிருக்கின்றார். நல்ல கல்வியறிவுடையவர் பொருள் இல்லாமல் வருந்துவதை இவற்றால் அறிந்து கொள்கிறோம். புலவர் வறுமை என்பது பழமொழியாய் வந்துள்ளது. புலமையும் வறுமையும் உறவுரிமைகளாய் உள்ளன.

"Poverty is the muses' patrimony." [Burton]

வறுமை கவிஞரின் பரம்பரை உரிமை என இது குறித்துளது.

கல்விச் செல்வம் உடையவர் உலகப் பொருளைப் பெரும்பாலும் அடையாமல் இருப்பது எந்நாட்டிலும் இயல்பாயுள்ளது. கிரீஸ் தேசத்தில் பிறந்த ஹோமர் (Homer) என்பவர் சிறந்த கவிஞர். அவர் இயற்றியுள்ள காவியத்தை உலகமொழிகள் பலவும் உவந்து போற்றுகின்றன. கோடிக் கணக்கில் புத்தகங்கள் செலவாகியுள்ளன. அத்தகைய பெரிய கவிஞர் வறிஞராய் வாழ்ந்துள்ளார். உண்ண உணவு இல்லாமல் பட்டினியும் கிடந்திருக்கிறார். அவர் இறந்து போனபின் யாவரும் உரிமை கொண்டாடிப் புகழ்ந்து துதிக்கின்றார். தாமஸ் ஹீவுட் என்பவர் அந்த நிலையைக் குறித்து வருந்தி வரைந்துள்ளார்.

Seven wealthy towns contend for Homer dead,
Through which the living Homer begged his bread.
(Seward)

ஹோமர் உயிரோடு இருக்குபபோது சோற்றுக்குத் திண்டாடினர்; இறந்துபோனபின் சிறந்த ஏழுநகரங்கள் அவர்

நமக்கு உரியவர் என்று தம்முள் மாறுடிப் போராடுகின்றன என்னும் இது ஈங்கு ஊன்றி உணர்ந்து கொள்ள வுரியது.

இதுவரை கூறியவாற்றால் மதி நலனும் விதி நிலையும் தெரிய வந்தன. விதிகாட்டிஊட்டியவழியேமதிகண்டுஉண்டுவருகிறது.

898. செய்த வினைப்பயனே சேரவரும் ஈசனுமே
எய்த அயல்யாதும் ஈயானே—உய்தியெலாம்
உன்னிடமே உள்ளனகாண் ஓர்ந்தினிய நல்வினையை
இன்னே புரிக இனிது. (அ)

இ—ள்.

நீ செய்த வினையின் பயனே உன்னை வந்துசேரும்; மாறாக வேறு யாதும் வாராது; ஈசனும் ஈயான்; உயர்வு தாழ்வுகள் எல்லாம் உன்னிடமே உள்ளன; இந்த உண்மையை உணர்ந்து நன்மையை விரைந்து செய்து உயர்ந்து கொள்ளுக.

தந்தை மைந்தன் என இந்தவாறு காரண காரியத் தொடர் பாய் மனித சமுதாயம் மருவி வருதல்போல் வாழ்வுகளும் கரும வினைவுகளை உரிமையோடு கலந்து வந்துள்ளன. இயற்கை நியமம் வியத்தகு நிலையில் எல்லாவற்றையும் இயக்கி வருகிறது.

முன்னும் பின்னும் தாம் செய்த வினைகளின் பலன்களை நுகர்ந்தே சீவர்கள் தொடர்ந்து படர்ந்து வருகின்றனர். எவர் வாழ்வும் அவரவருடைய விதியின் வழியே பதிவாயுளது. பழமையில் செய்தவினை கிழமையாய்ப் பதிந்தது; அந்த ஊழ் ஊட்டியவாறே இன்பங்களும் துன்பங்களும் எவ்வழியும் கால்நீட்டி எழுகின்றன. அவ்வாறு எழுந்தனவே அனுபவங்களாயின.

வேண்டாத துன்பமும் மேவல்போல் இன்பமும்
வேண்டா விடினும்உண்டு உந்தீ பற
விதி வழி நெஞ்சேஎன்று உந்தீ பற. [அவிரோதவுந்தியார், 90]

உண்டுநீர் வையத்துள் எல்லாரும் எத்துணையும்
வேண்டார்மன் தீய விழைபயன் நல்லவை
வேண்டினும் வேண்டா விடினும் உறற்பால
தீண்டா விடுதல் அரிது. [நாலடி, 109]

நீடும் தலைகீழ்கால் மேலாகி நின்றாலும்
கூடும் படியன்றிக் கூடாதால்—ஓடி

வருந்தாமல் உள்ளபடி வந்திடக்கண் டாறி
இருந்தாலென் நெஞ்சே யினி. (சிவானந்தமாலை)

ஆமே ஒருவர் ஒருவருக்கு இடரை அகற்றுவதும்
ஆமே ஒருவர் ஒருவருக்கு இடைநன்மை ஆக்குவதும்
தாமேது செய்தனர் அன்னது தாமே புசிப்பதன்றிப்
போமே தலையில் பொறித்தான் பிறழ்ந்து நினைப்பினுமே.
(விநாயகபுராணம்)

தாம் செய்த வினைகளின் பலன்களையே யாரும் அனுபவிப்பர்; வேறு மாறாக எவரும் எதையும் பெற முடியாது என இவை உறுதியா உணர்த்தியுள்ளன.

கரும விளைவுகள் அதிசய மருமங்களா மருவி உயிரினங்களை ஊடுருவி நிற்கின்றன. தமக்கு நேருகிற கேடுகளை உணராமல் தீமைகளைச் செய்து கொண்டு திரிவது மடமைக் களிப்புகளா யுள்ளன. செய்த எதுவும் செய்தவனைச் சேர்ந்து கொள்கிறது.

பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும். குறள், 319)

காலையில் ஒருவன் பிறர்க்குத் துன்பம் செய்யின் மாலையில் அது அவனுக்குத் தானாகவே வந்துசேரும் எனத் தேவர் இவ்வாறு வினைப்பயனை விளக்கி விதிமுறையைத் துலக்கியிருக்கிறார்.

முற்பகல் செய்தான் பிறன்கேடு தன்கேடு.
பிற்பகல் காண் குறூஉம். (சிலப்பதிகாரம், 21)

முற்பகல் செய்வினை பிற்பகல் உறுநரின். [பெருங்கதை, 1-56)

முற்பகல் ஓர்பழி முடிக்கின் மற்றது
பிற்பகல் தமக்குறும் பெற்றி என்னவே. [கந்தபுராணம்]

முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும். (கொன்றைவேந்தன்)

வினையின் விளைவுகளைக் குறித்து வந்துள்ள இவை இங்கே சிந்திக்கத்தக்கன. பிறர்க்குக் கேடு செய்கின்றவன் தன்உயிர்க்கே கொடிய துன்பங்களை விளைத்துக் கொள்கிறான். தன்வினை தன்னைச் சுடும் என்பது பழமொழியாய் வந்துள்ளது. செய்த தீவினை செய்தவனைச் சுட்டுப் பொசுக்கி நீறாக்கிவிடும் என்பதை இதில் நேரே தெரிந்து நிலைமைகளை ஓர்ந்து கொள்கிறோம்.

Punishment is a close attendant on guilt. [Horace]

செய்த தீமையைத் தொடர்ந்தே தண்டனையும் அடர்ந்து நிற்கிறது என இது குறித்திருக்கிறது. தனக்கு வருகிற துயரை உணராமல் இடர்களைச் செய்து படருழந்து படுதுயராய் உழல்வது மனிதனிடம் கொடிய மூடமாய் நெடிது ஓங்கியுள்ளது.

அறிய வுரியதை அறியாமையால் அல்லலைச் செய்து எல்லையில்லாத தொல்லைகளை அடைகிருன். நல்ல மதி மாண்டுபோகவே பொல்லாத விதி மூண்டு வர நேர்ந்தது. மனிதன் அரிய கல்விகளைக் கற்கிருன். பெரிய செல்வங்களைப் பெறுகிருன்; ஆனல் அறிய வேண்டியதைச் சரியா அவன் அறிந்து கொள்வதில்லை.

தன்னுடைய நினைவு செயல்களிலிருந்தே வினை விளைகிறது; அந்த வினையே பின்பு விதியாய் வருகிறது; வினைமூலம் இனியது ஆனல் நல் விதி; கொடியது ஆனல் தீ விதி; நல் விதி யாண்டும் இன்பம் நல்கும்; தீவிதி என்றும் துன்பமே தரும்; இந்த உண்மையை ஒருவன் என்று உணர்ந்து நன்று புரிகிருனே அன்றே அவன் அல்லல் எல்லாம் நீங்கி நல்ல சுகங்களைப் பெறுகிருன்.

---

899. கொற்றக் குடைகவித்துக் கோவாய் நிலவலும்
ஒற்றைத் துணியின் றுழலலும்—உற்ற
வினையின் பயனின் விளைவே அயலே
நினையின் உறுவ தெவன். (கூ)

இ—ள்.

வெண்கொற்றக் குடைகவித்து அரியணையில் அமர்ந்து சிறந்த அரசனய் ஒருவன் உலகை ஆளுதலும், உடுக்க ஒரு கிழிந்த துணியும் இன்றி ஒருவன் இழிந்து உழலுதலும் வினையின் விளைவுகளே; இவற்றை ஈண்டு உணர்ந்து கொள்ளவேண்டும் என்க.

உலக வாழ்வில் மனிதருடைய நிலைகள் பலவகைகளில் மாறுபாடாய் வேறுபட்டு விரிந்து நிற்கின்றன. உருவ பேதங்களைப் போலவே வாழ்விலும் பேதங்கள் பெருகியுள்ளன.

சிலர் இயல்பாகவே வளங்கள்பல வாய்ந்து சுகமாய் வாழுகின்றனர்.
சிலர் சிறிது முயன்று பெரிதும் உவகையராய் உலாவுகின்றனர்.
சிலர் வருந்தி உழைத்து அருந்திய அளவில் சீவிக்கின்றனர்,
பலர் படாதபாடுகள்பட்டும் பசியும்பட்டினியுமாய்ப்பதைக்கின்றனர்.
பலர் அவல நிலைகளில் கவலைகளா யிழிந்து மறுகியுழலுகின்றனர்.

யாதும் இல்லாமல் பலர் அல்லலாய் அலமந்து திரிகின்றனர்.

ஒத்த பிறப்பினையுடைய மக்கள் உள்ளே இத்தகைய வேறுபாடுகள் ஏறி நிற்கின்றன; இந்நிலைகளுக்குக் காரணம் என்ன? வெளியே காணப்படுகிற காரியங்களுக்கெல்லாம் பூரணமான காரணங்கள் உள்ளே மருமமா மறைந்திருக்கின்றன.

தாம் செய்த வினைகளின் அளவே பலன்கள் விளைந்து வந்துள்ளன; அந்த வினைப்போகங்களை மாந்தர் முறையே நுகர்ந்து வருகின்றனர். அந்நுகர்வில் வேறுபாடுகள் நேரே தெரிய நின்றன. இனிய சுகமும் கொடிய துக்கமும் வினையின் விளைவுகள்.

தழைவிரி கற்ப நாடு சார்தலும், புவியில் யாரும்
விழைதரு போகம்துய்த்து மேவலும் நல்லூழ் ஆமால்;
பிழைபட நிரயத்துஆழ்ந்து பெருந்துயர் உறலும், மண்மேல்
குழைமிடி ஆதித் துன்பு கூர்தலும் தீயூழ் அன்றே. (குசேலம்)

வினைகளின் பயன்களை இது நன்கு விளக்கியுள்ளது.

இம்மையில் நல்ல சுகபோகங்களை அனுபவித்தலும், மறுமையில் தேவ போகங்களை அடைதலும் நல்வினையால் அமைகின்றன; இங்கே வறுமை நோய்களால் வாடி உழலலும், பின்பு கொடிய நரக துன்பங்களில் அழுந்தி வருந்தலும் தீவினையால் நேர்கின்றன. சீவிய நிலைகள் சிந்தனைக்கு வந்தன.

தாம் செய்த கருமபலன்களையே 'யாவரும் அனுபவிக்க நேர்ந்துள்ளனர். விரும்பினும் விரும்பாவிடினும் தம்மைச் செய்தவரை இம்மியும் தவறாமல் செம்மையா வந்து அவை சேர்ந்து கொள்ளுகின்றன. அவ்வாறு சேர்ந்ததே அனுபவமாம்.

கழுமலத் தியாத்த களிறும் கருவூர்
விழுமியோன் மேற்சென் றதனல்—விழுமிய
வேண்டினும் வேண்டா விடினும் உறற்பால
தீண்டா விடுதல் அரிது. (பழமொழி, 62)

ஒருமுறை சோழநாடு அரசனை இழந்திருந்தது; உரிய ஒருவனை அடைய விரும்பிக் கழுமலம் என்னும் ஊரிலிருந்து பட்டத்துயானையை அலங்கரித்து அமைச்சர் வெளியே விட்டனர்; அது பல இடங்களையும் கடந்து முடிவில் கருவூர்க்கு வந்தது; தெருவில் நின்ற ஒரு இளைஞனை எடுத்து முதுகில் வைத்துக் கொண்டு போயது; அக்குமரனை யாவரும் வணங்கி அரசன் ஆக்கினர்.

கரிகால் வளவன் என்னும் பெரிய புகழோடு அவன் அரசுபுரிந்திருந்தான். முன்னம் அரிய புண்ணியத்தைச் செய்திருந்தமையால் பின்னர் யாதும் கருதாமலே மேலான அரசபதவியை அப் பாலன் எளிதே அடைந்து இன்ப மீக்கொண்டான்.

நல்ல வினைகளைச் செய்துள்ளவன் எல்லா நலங்களையும் ஒருங்கே எய்திப் பெரும் போகங்களை அனுபவிக்கிருன். அங்ஙனம் செய்யாதவர் யாதும் இல்லாதவராய் அல்லலுறுகின்றனர்.

திணைத்துணையர் ஆகித்தம் தேசுள் அடக்கிப்
பனைத்துணையார் வைகலும் பாடழிந்து வாழ்வர்
நினைப்பக் கிடந்த தெவனுண்டாம் மேலை
வினைப்பயன் அல்லால் பிற. (நாலடி, 105)

அறிவு கல்வி ஆண்மை சீலம் முதலியவற்ருல் மேலான பெரியோரும் வறுமையால் வாடிப் பெருமை குன்றிச் சிறுமையுழந்துள்ளனர்; அதற்குக் காரணம் என்ன? பழவினைப் பயனை இது தெளிவா விளக்கியுள்ளது எனப் புலவர் ஒருவர் உள்ளம் உருகி இதனை இவ்வாறு உலகம் அறியப் பாடியிருக்கிருர்.

விதி வகுத்த வழியே மனித வாழ்வுகள் நடந்து வருகின்றன. அது ஆட்டியபடியே யாவரும் ஆடி வருகின்றனர்.

Let us go wheresoever the fates propel us or drive us back. (Virgil)

வினையின் விதிகள் நம்மை உயர்த்தியும் தாழ்த்தியும் உந்தித் தள்ளுகின்றன; அவ்வாறே நாம் போக நேர்ந்துள்ளோம் என இது குறித்துள்ளது. மனித மரபு வினைகளை மருவி வருகிறது.

நினைவு சுகங்களை விரும்புகிறது; ஆயினும் வினையின் அளவு தான் அவை வருகின்றன; ஆகவே நல்ல வினையை ஒல்லையில் செய்து கொள்ளுக; அதனுல் இன்பங்கள் உளவாகின்றன.

---

900. விதியை விலக்க விதியாலும் ஆகா
மதியால்பின் என்னும் மதித்து—விதியை
விதிக்கும் வினையை விரியா தடக்கின்
கதிக்கு வழியாகும் காண். (ம)

இ-ள்.

நேர்ந்த விதியை விலக்கத் தேர்ந்த விதியாலும் முடியாது;

ஆகவே மதியால் மதித்து என்னும்? விதியை விளைக்கின்ற வினையை விரிக்காமல் நீ அடக்கினால் அது கதியை நேரே காட்டியருளும்; இந்த மருமத்தை அறிந்தால் மகிமை பெருகி வரும்.

விதியும் மதியும் கதியும் இங்கே காண வந்துள்ளன.

மதியால் மனிதர் மாண்புற்று வருகின்றனர்; வரினும் இந்த மதி அந்த விதியின் வழியே வேலை செய்து வருகிறது. மூண்ட விதி நீண்ட வலியுடையது; யாண்டும் ஆண்டவனாகவே அதிசய நிலையில் அது அமைந்துள்ளது. அது காட்டி ஊட்டிய படியே யாவும் கண்டு உண்டு களித்து வருகின்றன.

பிரமாவுக்கு விதி என்று ஒரு பெயர்; எல்லா வுயிர்களையும் முறையே படைப்பவன் என்பது அதன் பொருள். யாவும் விதிக்கின்ற அந்தச் சிருட்டி கருத்தாவும் விதியை விலக்க முடியாது. ஆகவே விதியின் வலிமையும் அதன் நிலைமையும் எவ்வளவு அதிசயமான தலைமையில் உள்ளன என்பதை உணர்ந்து கொள்ளலாம். மூண்ட விதி வழியே முடிவுகள் நீண்டு வருகின்றன.

விதி பெரிதா? மதி பெரிதா?

இப்படி ஒரு கேள்வி பண்டு தொட்டே ஒரு முதுமொழியாய் ஈண்டு மூண்டு வந்துள்ளது. விதிக்கும் மதிக்கும் நெருங்கிய ஓர் உறவு நிலைத்திருப்பதை இது உணர்த்தி நிற்கிறது.

மனத்திலிருந்து கிளைத்து எழுகின்ற நினைவின் வழியே வினை விளைந்து வருகிறது. வினைக்கு மூலமான அந்த நினைப்பை நல்லதாகச் செய்ய வல்லது மதியே; அவ்வாறு செய்திருந்தால் அது நல்வினையாய் இன்பமே தரும்; அங்ஙனம் செய்யாதவிடின் அது தீவினையாம்; அல்லலை விளைக்கின்ற அது பொல்லாத விதியாய்ப் பொங்கிவருங்கால் எந்த மதியும் அதை யாதும் எதிர்க்க முடியாது. விதி மூண்டுவரின் மதி மாண்டு போம் என்னும் முதுமொழி விதியின் அதிசய நிலையை நன்கு விளக்கியுள்ளது.

"விதியினால் வாழ்வதல்லால் மேதினியோர் தங்கள்
மதியினால் வாழ்வதுவொன் றுண்டோ—பதிதோறும்
சங்கரனும் ஐயம்எடுத் துண்டான்; தடங்கடல்சூழ்
மங்கையுடன் காடுறைந்தான் மால்."

தேவதேவரும் விதியை விலக்க முடியாது என்பதை விளக்குதற்குச் சிவபெருமானையும், திருமாலையும் இது நேரே

எடுத்துக் காட்டியுள்ளது அயன் தலையைக் கிள்ளியதால் சிவன் பலி எடுக்க நேர்ந்தான்; மாலும் மாலால் மறுகியுழன்ருன்.

விருந்தை என்பவள் சலந்திரன் மனைவி; அதிசய அழகி; அவள் மேல் மால் மால்கொண்டான்; வஞ்சம் புரிந்து அவ் வஞ்சியை மருவினன்; அவள் நெஞ்சம் தெளிந்து சினந்து சபித்தாள். அக் கற்பரசி கடுத்து வைததை அயலே காணுக.

பொற்புறு கணவனைப் போல வந்துளனைப்
பற்பகல் புணர்ந்தனை! பகைவர் மாயையால்
கற்புடை மனைவியைக் கவர்ந்து போகநீ
சொற்படு பழியினைச் சுமத்தியால் என்ருள். [கந்த, ததீசி, 291]

அந்தப் பத்தினியிட்ட சாபம் மாயனை மருவி நின்று விதியாய் நீண்டு பின்பு இராமனை வேதனை செய்ய மூண்டது. பருவத முனிவர் சாபமும் அதனோடு கூட நேர்ந்தது. தன்னை இன்னன் என்று அறியாமல் மயங்கி மாயன் இன்னலுழந்து திரிவான் என்பது இராமாவதாரத்தில் முடிவாய் நின்றது.

கன்னி யந்துழாய்க் கமலலோசனன்தயரதற்கு
மன்னு நன்மகன் ஆகியே வந்தனன் உதித்து
முன்னை அந்தகாரத்தினல் மூடிடப் பட்டுத்
தன்னை மாயன்என்று அறிந்திடா துறைந்தனன் சார்ந்தே.
[இலிங்கபுராணம், உத்தர, அம்பரீ 85]

நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி
அடலரு முந்நீர் அடைத்த ஞான்று. [மணிமேகலை, 17]

விதியின் தந்தை விதிவசமாய் வந்துள்ளமையை இவற்ருல் உணர்ந்துகொள்ளுகிருேம். ஊழின்சூழ்வுஓர்ந்துசிந்திக்கவந்தது.

அரசுரிமையை இழந்து இராமன் காட்டுப் போக நேர்ந்த போது இலக்குவன் வெகுண்டு மூண்டு வில்லோடு விரைந்து வந்து "அரசர் பெரும! இந்த முடிசூட்டு விழாவுக்கு இடையூறு செய்தவரை அடியோடு அழித்து நான் உங்களுக்கு மணிமுடி சூட்டுவேன்" என்று வீராவேசமாய்க் கூறினன். அப்பொழுது அந்த அருமைத் தம்பியை நோக்கி இக்குல மகன் சொன்னது உலக வுள்ளங்களை உருகச்செய்தது. விதி நிலையை விளக்கி மதி நலத்தோடு மொழிந்த அதனை அயலே காண வருகிருேம்.

நதியின் பிழையன்று நறும் புனல் இன்மை அற்றே
பதியின் பிழை அன்று; பயந்து நமைப்புரந்தாள்

மதியின் பிழைஅன்று; மகன்பிழை அன்று; மைந்த!
விதியின் பிழைநீ இதற்கு என்னைவெகுண்டது என்றான்.
(இராமா, நகர், 133)

அரசாளும் விதி இப்பொழுது எனக்கு இல்லை; காட்டுக் போகவே என் தலை எழுத்துஉள்ளது; பிறர் எவர் மீதும் பிழை கூறலாகாது; அமைதியாயிரு! என்று தன் தம்பியை இந்நம்பி இங்ஙனம் அடக்கியிருக்கிறான். இந்த அருமைப் பாசுரத்தின் பொருளையும் சுவையையும் நுணுகி உணர்ந்து இனிது நுகர வேண்டும். பெரியவன் வாய்மொழி அரிய ஒளிகளை வீசியுளது.

எவரையும் விதி விடாது; எவ்வளவு மதியுடையராயினும் விதியை வெல்லமுடியாது. விதி வழியே மதி என்பது பழமொழி. அந்த மூதுரையின் படியே யாவரும் வாழ நேர்ந்துள்ளனர்.

முதிர்தரு தவமுடை முனிவர் ஆயினும்
பொதுவறு திருவொடு பொலிவர்ஆயினும்,
மதியினர் ஆயினும், வலியர்ஆயினும்,
விதியினை யாவரே வெல்லும் நீர்மையார்? [கந்தபுராணம்]

விதியினை வெல்ல வல்லவர் யாரும் இல்லை; அது வகுத்தபடி தான் எவரும் வாழமுடியும் என இது வரைந்து காட்டியுளது.

அதிசயம் ஒருவரால் அமைக்க லாகுமோ?
துதியறு பிறவியின் இன்ப துன்பம்தான்
விதிவயம் என்பதை மேற்கொளாவிடின்
மதிவலி யான்விதி வெல்ல வல்லமோ? (1)

தெரிவுறு துன்பம்வந் தூன்றச் சிந்தையை
எரிவுசெய்து ஒழியுமது இழுதை நீரதால்;
பிரிவுசெய்து உலகெலாம் பெறுவிப் பான்தலை
அரிவுசெய் விதியினர்க்கு அரிதுண்டாகுமோ? (2)

அலக்கணும் இன்பமும் அணுகுநாள் அவை
விலக்குவம் என்பது மெய்யிற்று ஆகுமோ?
இலக்கமுப் புரங்களை எய்த வில்லியார்
தலைக்கலத்து இரந்தது தவத்தின் பாலதோ? (3)

பொங்குவெங் கோளரா விசும்பு பூத்தன
வெங்கதிர்ச் செல்வனை விழுங்கி நீங்குமால்;
அங்கண்மா ஞாலத்தை விளக்கும் ஆய்கதிர்த்
திங்களும் ஒருமுறை வளரும் தேயுமால். [4]

இந்தப் பாசுரங்கள் இங்கே கூர்ந்து ஓர்ந்து சிந்தனை செய்யவுரியன. சீதையைப் பிரிந்து நோதலுழந்து வந்த இராமனுக்குச் சடாயு இவ்வாறு விதியின் அதிசய நிலைகளைக் குறித்துப் போதித்திருக்கிறார். அதிமேதையான அவ்வீரன் மதி தெளிந்து ஆறுதலுறும்படி விதியின் விளைவுகளை விளக்கி முதியவன் பேசியிருப்பதில் ஞானஒளிகள் வீசி நிற்கின்றன. யாவும் கருதியுணரவுரியன. படைப்புக் கடவுளான பிரமாவைத் தலை இழக்கச்செய்தது; அழிப்புக் கடவுளான சிவபிரானைப் பிச்சை எடுக்கப் பண்ணியது; தேவராசனான இந்திரனை இழிந்து திரியப்புரிந்தது; ஒளிப்பிழம்புகளான சூரிய சந்திரர்களை இருண்டு மருண்டு இளிவுற இயற்றியது; அத்தகைய அதிசய ஆற்றலுடைய விதி எதிரே யார் என்ன செய்யமுடியும்? அது ஆட்டியபடியே யாவும் ஆடி முடிகின்றன. மதி வலியால் விதி வெல்ல வல்லமோ? என்று அந்த முதியவன் உள்ளம் உருகி இப்படிச் சொல்லியிருக்கிறான். இராமனோடு தன்னையும் உளப்படுத்தித் தன்மைப் பன்மையில் கூறியிருப்பதைக் கூர்ந்து சிந்திக்க வேண்டும். தன் அருமைப் பிள்ளையை ஒரு முதுமைப் பிதா உழுவலன்போடு தழுவி மறுகி மொழியும் பரிவுக் காட்சியை அறிவுக் கண்ணால் கண்டு நிலைமைகளை எண்ணி இங்கே நாம் கண்ணீர் மல்கி உருகி நிற்கின்றோம்.

மகாவீரனும் அதிசய மேதையும் ஆகிய இராமன் தனது இனிய மனைவியை இழந்து கொடிய துயரோடு மறுகி வந்துள்ளான்; இராவணனது வாளால் வெட்டுண்டு சிறகு இழந்து சடாயு சாக நேர்ந்திருக்கிறான்; இந்த நிலையில் சிந்தை நொந்து அந்த மைந்தனுக்குத் தேறுதல் கூறுகின்றான் ஆதலால் விதியின் வலியைத் தெளிவா விளக்கி விவேகமா ஆறுதல் அருளினான்.

> கதிதரும் அயனும் மாலும் கடக்கரும் கொடிய நீர்மை
> விதியினை எளிய நம்மால் வெல்லலாம் தகைமைத் துண்டோ?
> அதிகம்வந்து எய்தா மேனாள் அமைத்தவே அடுக்கும் அல்லால்
> மதிவலோய்! இதற்கு வாடி வருந்தலை என்று சொன்னான்.
>
> (அரிச்சந்திர, காசி, 68)

> புதியவான் அமுதம் ஈந்து புலவரை வளர்ப்பான் மேனி
> திதிதொறும் தேய்வ தானான்; சிறுவிதி சாபம் தீரான்;
> நதிபொதி பவள வேணி நாதனார் அடியார் அன்றி
> விதிதனை மதியினாலே வெல்லவும் வல்லார் உண்டோ?
>
> (திருக்குற்றால, தக்கன், 31)

சந்திரனுக்கு உடல்ஊனம்; தனதனுக்குஓர் கண்ஊனம்; தருவினிழல்
இந்திரற்கோ பகக்குறியாம்; இமயனுக்கோ புழுக்காலாம்; இரவியீன்ற
மைந்தனுக்கோ கால்முடமாம்; வனசனுக்குஓர் தலைகுறையாம்; வரா
[லாநீதேல்
பந்தமுள மானிடரை விதிவிடுமோ ஆலவாய்ப் பதியு ளானே.
(சொக்கநாதர்)

விதியின் அதிசய வலிகளை இவை விளக்கியுள்ளன.

விதியால் தனக்கு நேர்ந்துள்ள சாவை முன்னதாக அறிந்து பரிட்சித்து மன்னன் அதனை விலக்க முயன்று மிகவும் எச்சரிக்கையா யிருந்தான்; இருந்தும் குறித்த நேரத்தில் இறந்தே போனான். எவ்வழியும் விதி எவரையும் வென்று போகின்றது.

முன்னறிந்து முன்சூழ்ந்து மூண்டுதனைக் காத்திருந்தும்
மன்னன் பரிட்சித்து மாண்டொழிந்தான்—என்னவகை
செய்தாலும் முன்செய்த தீவினையைத் துய்க்காமல்
உய்வார் எவர்காண் ஒளிந்து.

தன்பயனை ஊழ் ஊட்டாமல் ஒழியாது என்பதை இது தெளிவாக் காட்டியிருக்கிறது. தன்னைச் செய்த கிழவனைப் பழவினை விடாமல் பற்றிக் கொள்ளுகிறது; ஆகவே அது தெய்வம் என நின்றது. அது செய்தபடியே யாவும் எய்த வருகின்றன.

நல்வினை சுகத்தையும், தீவினை துயரையும் இறையும் தவறாமல் முறையே தருதலால் விதி நெறியே முறை என வந்தது.

ஊழ்வினை முன்னமே முடிவாய் மூண்டது; யாரும் அதனை நீக்க முடியாது; யாண்டும் தன்பலனை அது தந்தே விடுகிறது. அது அளந்து படிபோட்ட படியே எவரும் சுக துக்கங்களை நுகர்ந்து உலக வாழ்வில் உழந்து வருகின்றனர்.

A little sorrow, a little pleasure,
Fate metes us from the dusty measure
That holds the date of all of us. (Swinburne)

எல்லாருடைய வாழ்நாளும் விதியின் கையில் உள்ளது; அது முகந்து அளந்த அளவின்படியே சுகமும் துக்கமும் தொடர்ந்து வருகின்றன என்னும் இது இங்கே உணர்ந்து கொள்ளவுரியது. விதி காட்டியதையே யாரும் காணுகின்றனர்.

பகுத்தறிவுடைய எவரும் விதியின் வலியை வகுத்து அறிந்து மதித்து வருகின்றனர். பொல்லாத விதி நேரே பொங்கி எழுந்த பொழுது நல்ல மதியும் மங்கி மறைந்து போகிறது.

மாதண்டை வந்துநின்ற மாரீசனை மறந்து
கோதண்ட வீரன் குடிபோனான்—தீதண்டு
மேதையே ஆனாலும் வெய்ய விதிவிளையின்
பேதையே ஆவன் பிறழ்ந்து.

மகா மேதையான இராமனும் மாயமானைக் கண்டு மதி மயங்கினான். அது வஞ்சம் உடையது; இராட்சச மாயையால் நேர்ந்தது என்று தம்பி தடுத்தும் கேளாமல் நம்பி அதன்பின் னேபோனான்; அதனால் தனது அருமை மனைவியை இழந்து அல்லல் பல உழந்தான். விதியை மதியால் வெல்ல முடியாது என்பதை இந்த அதிபதி நிலை நன்கு தெளிவாக்கி நின்றது.

There is no armour against fate. (Shirley)

விதியைத் தடுக்க வல்ல கருவி யாண்டும் இல்லை என்னும் இந்த ஆங்கிலவாசகம் ஈண்டு ஊன்றிஉணர்ந்துகொள்ளவுரியது.

தீயவினைகளைச் செய்யாதே; செய்தால் அவை தீயவிதியாய் மூண்டு யாண்டும் ஓயாது உன்னை வதைக்கும்; நல்லதையே நாடிச் செய்; அது எங்கும் உனக்கு இன்பமே அருளி இசை புரிந்துவரும். இந்த உண்மையை உணர்ந்து உயர்நிலை யுறுக.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

விதி என்பது வினையின் விளைவே.
இருவினைகளுக்கும் நீயே நாயகன்.
மனம் மொழி மெய்கள் நலமானால் நல்லவினையாம்.
அவை தீயவேல் தீவினையே விளையும்.
இன்பம் தருவது நல்வினையே.
துன்பம் புரிவது தீவினையே.
விதி அளந்தபடியே வாழ்வுகள் வளர்ந்துள்ளன.
அதற்கு அயலாக யாதும் அமையாது.
அது ஊட்டியதையே உயிர்கள் உண்ணுகின்றன.
விதியை விலக்க விதியாலும் முடியாது.

௯0-வது விதி முற்றிற்று.

# தொண்ணூற்றோராம் அதிகாரம்.

## பிறப்பு

அஃதாவது உயிர் இனங்கள் பிறந்து வரும் முறை. விதி வழியே பிறவிகள் விளைந்து வருகின்றன; அந்த வரவு நிலைகளை இதில் உணர்த்துகின்றமையால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

901\. ஊன உடலில் உயிர்கள் மருவியிம்
மான உலகில் மறுகுவதும்—வானமுதல்
யாண்டும் பரவி அலமந் தலைவதும்
மூண்ட வினையின் முடிவு. (க)

இ—ள்.

புலை படிந்த உடல்களை மருவிக் கடல் சூழ்ந்த பெரிய இவ்வுலகில் உயிர்கள் குடல் சூழ்ந்த பசியோடு சுலைந்து திரிவதும், பின்பு வானம் முதலிய நிலைகளை அடைந்து நிலையின்றி அலைந்து வருவதும் வினையினால் நேர்ந்த விளைவுகளாம் என்க.

பிறவியின் வரவும் மரபும் அதிசய மருமங்களுடையன. விதியின் விளைவுகளை வெளிசெய்து வருவன; மதிதெளிய முடியாதன. எவ்வழியும் மையல் மயக்கங்கள் மருவியுள்ளன.

உயிரும் உடலும் சேர்ந்து தோன்றும் தோற்றமே பிறப்பு என நேர்ந்தது. மாறுபாடான வேறுபாடுகள் இச் சேர்க்கையில் கூடியிருக்கின்றன; மாயக்கூட்டுறவுகள் மயங்கியுள்ளன; ஆகவே பிறப்பின் குறிப்புகள் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வந்தன.

உயிர் = அருவமானது; உணர்வுடையது; தூயது; அழிவில்லாதது.

உடல் = உருவமானது; உணர்வில்லது; இழிவுடையது; அழிவுறுவது.

இவ்வாறு மாறுபாடுகள் மண்டியுள்ள இரண்டும் ஒன்றாய்க் கூடியிருப்பது வெய்ய வினையின் விளைவா நேர்ந்தது; முன் செய்த வினைகளின் பலன்களைத் துய்த்துக் கழிக்கவே பிறவிகள் இப்படிப் பெருகி வந்துள்ளன. பிறப்பு நிலை இறப்பின் வழியது.

உயர்ந்த புண்ணியங்களைச் செய்தவர் தேவர்களாய்ச் சிறந்து வாழ்கின்றனர்; இழிந்த பாவங்களைச் செய்தவர் எங்கும் ஈனப் பிறவிகளை அடைந்து வருந்துகின்றனர்; புண்ணியம் பாவம் என்

னும் இருவகைகளும் கலந்து நின்றவர் மனித மரபுகளில் மருவி வந்துள்ளனர். வினைவிளைவுகளின் நிலைமைகளுக்குத் தகுந்தவாறு அனுபவங்கள் அமைந்து நிற்கின்றன. துன்ப இன்பங்களின் நுகர்வுகள் தொடர்து படர்ந்து யாண்டும் அடர்ந்திருக்கின்றன.

பிறவி எவ்வழியும் துயரம் உடையது. கருவில் மருவிய நாள் முதல் முறையே உருவடைந்து பத்து மாதமும் தாய் வயிற்றுள் சுருண்டு கிடந்து பருவம் அடைந்தவுடன் மருண்டு புரண்டு மறுகி மயங்கி உருண்டு வந்து உயிர் பூமியில் விழுகின்றது; அப்பொழுது அத்தாய் படுகிற பிரசவவேதனையும், சேய் அடைகிற துயரமும் வாய்மொழியால் வரைந்து கூற முடியாதன. அவ்வாறு பிறந்த குழந்தை உடனே வீறிட்டு அழுகிறது; ஏன்? அந்தோ! துன்பவுலகில் புகுந்தேன்; ஓயாத துயரங்களை அனுபவிக்க நேர்ந்தேனே! என்ற சோகம் இயல்பா எற வேகமா அழச் செய்தது. பிறந்தவுடனே குழந்தை அழவில்லையானல் அது விரைந்து இறந்து போய்விடும். இருந்து வளர்ந்து மூத்து நொந்து சாக வேண்டிய அவசியமில்லை ஆதலால் அழாத வாயோடு அக்குழவி மறைந்து போகிறது. இந்த மருமங்களை இங்கே சிந்தித்துக் கருமங்களைத் தெளிந்து கொள்ள வேண்டும்.

பிறந்தபொழுதே எழுந்த அழுகை வாழ்வின் அல்லல் நிலைகளை விளக்கி இறந்து போகும் வரையும் தொடர்ந்து நின்று முடிவில் எல்லாரும் கூவிப் புலம்பிக் கூடி அழும்படி புரிந்து உடலைக் கிடத்தி விட்டு ஆவி அயலே ஒழிந்து போகிறது. அல்லலும் அவலமும் நிறைந்துள்ளமையால் பிறவி பொல்லாப் புலை என நேர்ந்தது. அழுது பிறந்து, அழுது வளர்ந்து, அழுது வாழ்ந்து, அழுது மாய்ந்து, முழுதும் மாயமாய் முடிந்து போகின்றது.

When we are born, we cry that we are come
To this great stage of fools. (King Lear. 4. 6)

பெரிய பீடையான இந்த மூட உலகத்துக்கு வந்திருக்கிருேமே! என்று வருந்தி நாம் பிறந்த பொழுதே அழுகிருேம் என இது குறித்திருக்கிறது. மனிதப் பிறப்பின் நிலையைக் குறித்து ஆங்கிலக் கவிஞரான ஷேக்ஸ்பீயர் இங்ஙனம் பாங்கோடு பகர்ந்திருக்கிருர். பிறவியும் அழுகையும் உறவாயுள்ளன.

We are born with travail and strong crying,

And from the birth-day to the dying
The likeness of our life is thus. (Swinburne)

வலிய பிரசவ வேதனையும் அழுகையும் கலந்து நாம் பிறந்திருக்கிறோம்; பிறந்த நாளிலிருந்து முடிவாய் இறந்து போகும் வரையும் நம் வாழ்வில் அந்தத் துன்பச்சாயல் தோய்ந்துள்ளது என்னும் இது இங்கே ஆய்ந்து ஓர்ந்து சிந்திக்கத்தக்கது.

As soon as I was born I wept, and every day shows why.
[G. H]

நான் பிறந்த உடனே அழுதேன்; வாழ்வில் ஒவ்வொரு நாளும் அதன் காரணத்தைக் காட்டுகிறது என இது காட்டியுளது. அல்லலான பிறவி அழுகையோடு தொடர்ந்து வந்துளது.

We are born crying, live complaining, and die disappointed.
(gn)

அழுதுகொண்டே பிறந்திருக்கிறோம்; அல்லலோடு வாழ்ந்து அவலமாய் ஏங்கிக் கவலையுடன் சாகிறோம்என இது கூறியுளது.

பிறவியைக் குறித்து மேல்நாட்டார் கருதியுள்ள நிலைமைகள் இன்னவாறுகாணவந்தன. அவலத்துயர்கள் அறியநின்றன.

பிறப்பு துன்பங்கள் நிறைந்துள்ளமையால் பிறவாமை பேரின்பமாய் நின்றது. இங்கே பிறப்பவன் மனிதன்; அங்கே பிறப்பவன் தேவன்; எங்கும் யாண்டும் பிறவாதவன் கடவுள்.

பிறவா யாக்கைப் பெரியோன். (சிலப்பதிகாரம், 5)

இறைவனை இவ்வாறு இளங்கோவடிகள் குறித்திருக்கிறார். பிறவாத கடவுளை நினைந்து பிறவிப் பெருங்கடல் நீந்துக எனத் தேவர் சீவர்களுக்கு ஆவலோடு இனிது போதித்திருக்கிறார்.

கன்னபுரம் என்னும் ஊருக்குக் காளமேகப் புலவர் ஒரு முறை போயிருந்தார்; அங்கே பெருமாள்கோவிலைக் கண்டார்; திருமாலை நோக்கிக் கருமாலை காட்டி ஒரு பாட்டுப் பாடினார்.

கன்னபுர மாலே! கடவுளிலும் நீ அதிகம்;
உன்னிலுமே யான் அதிகம் ஓதக்கேள்---முன்னமே
உன்பிறப்போ பத்தாம் உயர்சிவனுக்கு ஒன்றுமில்லை
என்பிறப்போ எண்ணரிய எண். (காளமேகம்)

கவியினுடைய சுவையைக் கருதிக் காணுக. ஒன்றும் இல்லாதவனைவிடப் பத்து உடையவன் பெரியவன்; அவனைவிடப் பல கோடியுள்ளவன் எவ்வளவு உயர்ந்தவன்! எனக் கவிஞர் இவ்வளவு விநயமாப் பாடிப் பிறப்பின்மையின் பெருமையை விளக்கியிருக்கிருர். பிறவி நீங்கியவன் இறைவன் ஆகின்றான்.

பிறந்து இறந்து உழலுவதே சீவர்களின் இயல்பாய்த் தொடர்ந்து வருகிறது. நீண்ட பிறவிக்கு முடிவான பயன் மீண்டும் பிறவாமல் வேண்டியதைச் செய்து கொள்வதேயாம்.

ஆண்டவா! எனது பிறவியை நீக்கியருள் என்று நீண்ட காலம் உன்னிடம் நான் வேண்டி வருகின்றேன்; நீ யாதும் நீக்காமல் கடத்தி வருகிருய்; பிறவித் துயரம் உனக்குத் தெரியாத ஆதலால் என்பால் பரிந்து இரங்காமல் பராமுகமாயுள்ளாய்! எனக் குமரகுருபரர் சிவபெருமானை நோக்கி வருந்தியிருக்கிருர். பிறவியை நீக்க விரைந்து பிறவாப் பெரியோனிடம் அவர் முறையிட்டுள்ள முறைமையை அயலே காணவருகிறேம்.

மூவர் அகண்ட மூர்த்தி என்று ஏத்தும்
தேவ ரகண்ட தெய்வ நாயக!
நின்னடித் தொழும்பின் நிலைமையின் றேனும்நின்
தன்னடித் தொழும்பர் சார்புபெற்று உய்தலின்
சிறியஎன் விழுமம் தீர்ப்பது கடன்என
அறியாய் அல்லை அறிந்துவைத் திருந்தும்
தீரா வஞ்சத் தீப்பிறப்பு அலைப்பச்
சோரா நின்றஎன் துயர்ஒழித் தருள்கிலை;
புறக்கணித் திருந்ததை யன்றே குறித்திடின்
கோள்வாய் முனிவர் சாபநீர்ப் பிறந்த
தீவாய் வல்வினைத் தீப்பயன் கொண்மார்
உடல்சுமந்து உழலும் அக் கடவுளர்க்கு அல்லதை
பிறவியின் துயர்நினக்கு அறிவரிது ஆகலின்
அருளாது ஒழிந்தனை போலும்
கருணையில் பொலிந்த கண்ணுத லோயே!
(திருவாரூர் நான்மணிமாலை 17)

பரமனேடு உறவுரிமையாய்க் கவி இவ்வாறு உரையாடியிருக்கிருர். உரைகளில் பொருள் அழகும் சுவையுணர்வும்

விநய விநோதங்களும் விரவி மிளிர்கின்றன. கருதி யுணரும் அளவு கலையின் சுவைகள் தலைமையாய்க் கனிந்து வருகின்றன.

உயர்வான உணர்வுடைய பிறவிக்கு உறுதியான பயன் அயலே ஒரு பிறவியை மருவாமல் அந்தமில்லாத அதிசய நிலையை அடைந்து கொள்வதேயாம் என்பது ஈண்டு உணர்ந்து கொள்ள வந்தது. மீண்டும் பிறவாதபடி வேண்டி உயர்க.

"பிரியாத பேரொளி பிறக்கின்றவருள் அருட்
பெற்றோர்கள் பெற்ற பெருமை
பிறவாமை என்றைக்கும் இறவாமை யாய்வந்து
பேசாமை ஆகும்." (தாயுமானவர்)

தெளிந்த ஞானத்தால் தெய்த்திருவருளை அடைந்தவர்கள் உரிமையா அடையவுரியது பிறவாமையே எனத் தாயுமானவர் இவ்வாறு கூறியிருக்கிறார். பிறவி ஒழிவதே பேரின்பவழியாம்.

வினையின் விளைவாய் விரிந்து வந்த பிறப்பு வினையின் நீங்கி யானை நினைந்து உருகிப் புனிதம் அடைந்தவரின் புறமே ஒழிந்து போகிறது. விதி உன்னை வெளியே விடாமல் பிறவியில் ஆழ்த்தி வதைத்து வருகிறது; தெளிவோடு சிந்தித்து அதனை வேரறுத்து ஒளியோடு உயர்ந்து கொள்ளுக; அதுவே இனிய கதி நிலையாம்.

---

902. எண்ணரிய தோற்றங்கள் எங்கும் பரவியுள
மண்ணறிய வந்துள்ள மன்னுயிர்கள்—எண்ணியலுள்
எண்பத்து நான்கிலக்கம் என்ன இயைந்துமே
பண்பெற் றுளகாண் படிந்து.

இ-ள்.

அளவிடலரிய உருவத் தோற்றங்கள் ஈண்டு யாண்டும் பரவி நீண்டு நிலவுகின்றன; அவை எண்பத்து நான்கு நூறாயிரம் கூறான பேதங்களாய் இசைந்து நிற்கின்றன என்க.

உயிர் இனங்களின் வகைகளைத் தொகையா இது உணர்த்தியுளது. பிறப்பு நிலைகளை அறிவது பெரிய கலையாய் நின்றது.

கண் எதிரே தோன்றுகின்ற உருவங்களை மாத்திரம் நாம் கண்டு வருகின்றோம்; காணாதன பல கோடிகள் உள்ளன. எண்ணி அறிய முடியாதபடி எல்லை கடந்துள்ள பிறவிகளுள்

மானிதப் பிறவி நல்லதாய் உயர்ந்திருக்கிறது. முன்னும் பின்னும் எண்ணி நோக்கி எதையும் நுண்ணிதாய் உணர்ந்து உயிர்க்கு உறுதியை அடையும் தகுதி மனிதனிடம் மருவியிருத்தலால் மானுடப் பிறவி அதிசயமுடையதாய் மகிமை மிகப் பெற்றது.

சீவராசிகள் அளவிடலரியன; ஆயினும் அவை ஏழுவகையுள் அடங்கி யுள்ளன. நால்வகைத் தோற்றம், எழுவகைப் பிறப்பு, எண்பத்து நான்கு இலட்சம் உருவ பேதங்களாய்ப் பிறவிகள் மருவி எவ்வழியும் தொடர்ந்து பெருகி யிருக்கின்றன.

வித்து, வேர்வை, முட்டை, கருப்பை என்னும் இந்நான்கும் பிறவிக்கு மூல நிலையங்களாய் ஞாலம் கருத வந்துள்ளன.

மரம் கொடி செடி முதலியன வித்திலிருந்து தோன்றுகின்றன; ஈ கொசு புழு முதலியன வேர்வையிலிருந்து எழுகின்றன; பறவை பல்லி பாம்பு முதலியன முட்டையிலிருந்து வருகின்றன; மானிடம் விலங்கு முதலியன கருப்பையிலிருந்து பிறக்கின்றன. பிறப்பின் கருவுகள் சிறப்போடு தெரிய நின்றன.

உற்பீசம், சுவேதசம், அண்டசம், சராயுசம் என ஆரிய மொழியில் முறையே இவை கூறப்படுகின்றன. தொகை நான்கு; வகை ஏழு; விரிவு எண்பத்து நான்கு நூறுயிரம்; இவ்வாறு பிரிவுகள் நேர்ந்து பிறவிகள் பேர் பெற்றுள்ளன.

"ஈரிரண்டு தோற்றத்து எழுபிறப்புள் யோனிஎண்பான்
ஆரவந்த நான்குநூ யிரத்துள்---தீர்வரிய
கன்மத்துக்கு ஈடாய்க் கறங்கும் சகடமும்போல்
சென்மித்து உழலத் திரோதித்து---வெந்நிரய
சொர்க்காதி போகம்எலாம் துய்ப்பித்துப் பக்குவத்தால்
நற்கா ரணமசிறிது நண்ணுதலும்." (கந்தர்கலி)

வினைக்கு ஈடாகச் சீவகோடிகள் பிறந்து உழலும் நிலைகளை இது விளக்கியுள்ளது. ஏழ்வகைப் பிறப்பினும் ஊழ்வகை உருத்து எவ்வகையிலும் மாருமல் வேலை செய்து வருகிறது.

எழுமை எழு பிறப்பும். (குறள், 107)

பிறப்பின் வகைகளைத் தேவரும் இவ்வாறு குறித்திருக்கிருர்.

"ஊர்வ பதினொன்றும் ஒன்பது மானிடம்
நீர்பறவை நாற்காலோர் பப்பத்தாம்---சீரிய

பந்தமாம் தேவர் பதினுல் அயனபடைத்த
அந்தமில்சீர்த் தாவரநா லைந்து'' [பிறவிநிலை]

தேவர் பதினுலு இலட்சம்.
மானிடம் ஒன்பது இலட்சம்.
விலங்கு பத்து இலட்சம்.
பறவை பத்து இலட்சம்.
நீர்வாழ்வன பத்து இலட்சம்.
ஊர்வன பதினொரு இலட்சம்.
தாவரம் இருபது இலட்சம்.

எழுவகைப் பிறவிகள் எண்பத்து நான்கு இலட்சங்களாய்ப் பரவியிருக்கின்றன. பிறவிக் கணக்கு ஓரளவு காண வந்தது.

உரைசேரும் எண்பத்து நான்குநூ
றாயிரமாம் யோனி பேதம்
நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய்
அங்கங்கே நின்ருன். [தேவாரம் திருவீழி, 4]

இறைவன் நிலையைத் திருஞானசம்பந்தர் இவ்வாறு குறித்திருக்கிருர். பிறவிகளில் உழலும் உயிர்கள்தோறும் பிறவா ஒருவன் மருமமா மருவியிருப்பது உரிமையோடு துதி செய்ய வந்தது. உயிரினங்களுள் மனிதனிடம் பரமன் வரமாயுளன்.

தேவும் மாவும் தாபரமும் பறவையும்
மேவிய மக்கள் ஊர்வ நீரனவும்
பேசில் எழுவகைப் பிறப்பென மொழிப;
அவற்றுள்,
தேவர் ஈரேழ் மக்கள் ஒன்பான்
தாபரம் இருபான் ஊர்வன பன்னொன்று
நீரன விலங்கு புள்நிரல் பப்பத்தாம்
ஆகஎண் பத்திநல் இலக்க பேதம்
மேவும் யோனி யாம்என்று உரைப்பர். (பிங்கலந்தை)

பிறவிகளின் வகை தொகைகளை இதுவும் குறித்துளது.

பிறப்பு பெருந்துயரங்களோடு பெருகியிருத்தலால் பேரறிவு நிறைந்தபோது அதனை நீங்கி உய்ய மாந்தர் நேர்ந்து வருகின்றனர். அருமையாக அவ்வாறு வருபவரை மெய்ஞ்ஞானிகள்

என்று வையம் வியந்து போற்றுகின்றது. பிறவியின் தத்துவங்களை உய்த்துணர்ந்தவர் பிறவாமையைப் பெற முயல்கின்றனர்.

முட்டையில் கருவில் வித்தினில் வெயர்ப்பில்
நிற்பன நெளிவ தத்துவ தவழ்வ
நடப்பன கிடப்பன பறப்பன வாகக்
கண்ணகன் ஞாலத்து எண்ணில்பல் கோடிப்
பிள்ளைகள் பெற்ற பெருமனைக் கிழத்திக்கு
நெல்இருநாழி நிறையக் கொடுத்துஆங்கு
எண்ணான்கு அறமும் இயற்றுதி நீஎன
வள்ளன்மை செலுத்தும் ஒண்ணிதிச் செல்வ!
அளியன் மாற்றம்ஒன்று இகழாது கேண்மதி
எழுவகைச் சனனத்து எம்மனோரும்
உழிதரு பிறப்பிற்கு உட்குவந்து அம்ம!
முழுவதும் ஒரீஇ முத்திபெற் றுய்வான்
நின்னடிக் கமலம் போற்றுப இந்நிலத்து
ஒருபது வகைத்தாம் யோனிதோறு உழன்றும்
வெருவரு பிறப்பின் வேட்கையன் ஆகிநின்
சந்நிதி புக்கும்அத் தாமரைக் கண்ணான்
துஞ்சினன் துயில்ஒரீஇ எழாஅன்
அஞ்சினன் போலுமநின் ஆடல்காண் பதற்கே.

(சிதம்பரமும்மணிக்கோவை 14)

நால்வகை நிலையும் எழுவகைப் பிரிவுமாய் எண்ணரிய பிறவிகள் மண்ணுலகில் பரவியுள்ளன. அந்தப் பிறவித் துயர்களுக்கு அஞ்சித் துறவிகளாய் அருந்தவம் புரிந்து ஞானிகள் வீடு பெற விரைந்து முயலுகின்றனர். கமலக் கண்ணனை திருமால் மீன் ஆமை முதலிய பத்துப் பிறவிகளில் படுதுயருழந்தும் விடுதலைபெற முயலாமல் நெடிய துயிலில் நெடுங்கிடையாய்க் கிடக்கின்றாரே; என்னே இது? எனப் பரமனிடம் கவி பரிவோடு உரையாடியிருக்கிறார். இந்தப் பாசுரத்தின் பொருள் நயங்கள் கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து நன்கு உணரத் தக்கன.

பிறப்பின் விரிவுகள் பெரிய வியப்புகளை விளைத்திருக்கின்றன. சீவப்பிராணிகள சோகப் பிறவிகளில் ஏன் ஓயாது சுழன்று உழலுகின்றன? என்பது யாரும் அறிய முடியாத அதிசய மருமமாயுள்ளது. கருதிஉணர்பவர் ஓரளவுஉறுதிகூறுகின்றனர்.

விதியின் வழியே யாவும் விரைந்து திரிந்து வருகின்றன.

பிறப்பும் இறப்பும் கணந்தோறும் தொடர்ந்து நடந்து வருதலால் அவை கணித நிலைகளைக் கடந்து நிற்கின்றன.

Every moment dies a man,
Every moment one is born. (Tennyson)

ஒவ்வொரு நிமிடமும் ஒருவன் பிறக்கிறான்; ஒவ்வொரு நிமிடமும் ஒரு மனிதன் இறக்கிறான் என டென்னிசன் என்னும் ஆங்கிலக் கவிஞர் இவ்வாறு பாங்கோடு பாடியிருக்கிறார்.

பிறப்பும் இறப்பும் நினைப்பும் மறப்பும் போல் இயற்கையாய் நிகழ்கின்றன. இறந்துபடுவதை யாரும் விரும்புவதில்லை; எல்லாரும் அதனை அஞ்சுகின்றனர். இந்த அச்சம் பிறந்து வருவதில் இல்லை; அதற்குக் காரணம் யாதும் அறிய முடியாத பெரிய மருள் நிலையில் அது மருவி வருதலேயாம்.

அச்சமும் திகிலும் அவலமும் கவலையும் யாண்டும் நிறைந்துள்ளமையால் பிறவியை நீங்குவது பேரின்பமாய் நின்றது.

---

903. தனுகரண போகங்கள் தாமே விரிந்து
மனுகரண மாக மருவி—அனுமிதியால்
ஆய்ந்தறிய நின்ற அறியுந் தொறும்அருகி
ஓய்ந்து வருமால் உணர்வு. (ந)

இ—ள்.

உயிர்களுக்கு உரிமையாகத் தேகங்கள் பொறிகள் போகங்கள் எங்கும் நன்கு பொருந்தியிருக்கின்றன; காரிய காரணங்களோடு கலந்து வந்துள்ள அவை கூரிய அறிவாலும் உணர்ந்து கொள்ள முடியாதபடி மீறி விரிந்து ஓங்கி நிற்கின்றன என்க.

தனு = உடல். தனது என்று மனிதன் உரிமையோடு இனிது பேணி வருவது தனு என வந்தது. மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் இந்த நான்கும் அந்தக் கரணங்கள்; அகத்தே உள்ளமையால் இப்பெயர் அமைந்தது. கண் காது மூக்கு வாய்முதலியன புறத்தே பொறிகளாய்ப்பொருந்தி நிற்கின்றன.

இந்தக் கருவி கரணங்களைக் கொண்டு கரும போகங்களை உயிர்கள் அனுபவித்து வருகின்றன. தேகங்களைக் கொடுத்து

மோகங்களை மடுத்துப் போகங்களை யூட்டிச் சோகங்களை நீட்டி இடையிடையே விவேகங்களைக் காட்டி விதி வழியே ஒருவன் ஆட்டி வருவது அதிசய விளையாடல்களாய் விரிந்து வருகிறது.

தாம் செய்த வினைகளின் இத அகிதங்களுக்குத் தக்கபடி சுக துக்கங்களை மாந்தர் மாந்தி வருகின்றனர். உரிய கருமபலன்கள் அரிய மருமங்களாய் மருவி எவ்வழியும் செவ்வையாய் இயங்கி உயிர்களை முயங்கி உரிமைகளை வழங்கி முடிகின்றன.

அனுமிதி என்றது அனுமானப் பிரமாணத்தை. அஃதாவது கண்டதைக் கொண்டு காணாததை யூகித்து உணர்ந்து கொள்வது. மாறுபாடான காட்சிகளைக் காண நேர்ந்த போது பகுத்தறிவுடைய மனிதன் பரிந்து சிந்திக்கின்றான். காரணங்களைக் கருதியுணர்கிறான். பூரணமான உண்மைகளைத்தெளிந்துகொள்கிறான்.

செல்வம் கல்வி அழகு முதலிய விழுமிய நலங்களை மேவிச் சிலர் மேன்மையாய் விளங்குகின்றார்; வறுமை மடமை அவலம் முதலிய சிறுமைகளை மருவிப் பலர் தாழ்மையாய் வாழ்கின்றார். குருடு செவிடு ஊமை முடம் முதலிய ஊனங்களை அடைந்து சிலர் ஈனமா யுழலுகின்றார். இவற்றுக்கெல்லாம் மூலகாரணங்கள் பழ வினைகளே என்று ஓர்ந்து தேர்ந்து கொள்ளுகிறோம். வினை விளைவுகளை உயிரினங்கள் யாண்டும் நுகர நேர்கின்றன.

குற்றவாளிகளைச் சிறைகளில் அடைத்து அரசன் தண்டித்து ஆற்றுகின்றான்; அது போல் தீவினையாளர்களைப் பிறவிச் சிறைகளில் தள்ளித் துறைகள் தோறும் தோய்த்து வருத்தி இறைவன் முறையே குறைகளைத் தீர்த்து அருளுகின்றான்.

ஆணையால் அவனி மன்னன் அருமறை முறைசெய் யாரை
ஆணையின் தண்டம் செய்தும் அருஞ்சிறை யிட்டும் வைப்பன்;
ஆணையின் வழிசெல் வோருக்கு அரும்பதி செல்வம் நல்கி
ஆணையும் வைப்பன்; எங்கும் ஆணையே ஆணை யேகாண். (1)

அரசனும் செய்வது ஈசன் அருள்வழி அரும்பாவங்கள்
தரையுளோர் செய்யின் தீய தண்டலின் வைத்துத் தண்டத்
துரைசெய்து தீர்ப்பன்; பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமும் சேரார்; அந்த நிரயமுன் னீர்மை ஈதாம். (2)

அருளினால் உரைத்த நூலின் வழிவராது அதன்மம் செய்யின்
இருளுலாம் நிரயத் துன்பத்து இட்டிரும் பாவம் தீர்ப்பன்;

பொருளுலாம் சுவர்க்கம் ஆதி போகத்தால் புணியம் தீர்ப்பன்;
மருளுலா மலங்கள் தீர்க்கும் மருந்திவை வயித்திய நாதன். (3)

மருத்துவன் உரைத்த நூலின் வழிவரின் பிணிகள் வாரா;
வருத்திடும் பிணிகள் தப்பின் தப்பிய வழியும் செய்யத்
திருத்தினன் மருந்து செய்யா துறும்பிணி சென்றும் தீர்ப்பன்;
உரைத்தநூற் சிவனும் இன்னே உறும்கன்மம் ஊட்டித் தீர்ப்பன். [4]

மண்ணுளே சிலவி யாதி மருத்துவன் அருத்தி யோடும்
திண்ணமுா யறுத்துக் கீறித் தீர்த்திடும்; சிலநோய் எல்லாம்
கண்ணிய கட்டி பாலும் கலந்துடன் கொடுத்துத் தீர்ப்பன்;
அண்ணலும் இன்பத் துன்பம் அருத்தியே வினையறுப்பன் (5)

[சிவஞானசித்தியார்]

இன்ப துன்பங்களை ஊட்டி வினைகளை நீக்கி உயிர்களை இறைவன் உயர் கதியில் உய்க்கும் நிலைகளை இது காட்டியுள்ளது. உருவக வுரைகளையும் பொருள் வகைகளையும் கருதி நோக்கி உறுதி நலங்களை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

சீவர்கள் தேகங்கள் எடுப்பதும் போகங்களை நுகர்வதும் சோகங்களில் உழல்வதும் உண்மையான உய்தி நிலையை உணராமல் மோகங்களில்வீழ்ந்து ஏகமாய்க்களிப்பதும் மாயக்கூத்துகளாய் மருவி மாயாத பிறவித் துயர்களை விளக்கி நிற்கின்றன.

அமைதியான தூயசிந்தனையோடு நேயமா ஆழ்ந்து ஆய்ந்து கூர்ந்து தெளியின் ஆன்ம உய்தி மேன்மையாய் வெளியாம்.

---

904. செய்த வினைவிளைவைச் சேர்ந்து நுகரவே
வையமுதல் வானமெலாம் மன்னுயிர்கள்—மெய்கள்
அடைந்து திரிகின்ற அப்போகம் தீர்ந்தால்
உடைந்து மறையும் ஒருங்கு. (ச)

இ—ள்.

தாம் செய்த வினைப் போகங்களை நுகர்ந்து கழிக்கவே பூதலம் மீதலம் பாதலம் முதலாக யாண்டும் உடல்களை மருவி உயிர்கள் திரிந்து வருகின்றன; அவை முடிந்து போனல் இவை யாவும் ஒருங்கே மறைந்து உரிமையில் கலந்து போம் என்க.

பிறவிகள் காரண காரியத் தொடர்புகளாய் வந்துள்ளன.

வித்திலிருந்து பயிர்கள் தோன்றுதல்போல வினைகளிலிருந்து உயிர்கள் தோன்றி எவ்வழியும் நீண்டு நிலவுகின்றன.

விரிந்து பரந்துள்ள தோற்றங்கள் யாவும் முன்பு புரிந்த வினைப்பயன்களையே யாண்டும் அருந்தி வருகின்றன. அவ்வாறு அருந்துங்கால் நினைந்து பேசி விழைந்து செய்த செயல்களே மீண்டும் வினைகளாய் நீண்டு நிற்கின்றன. அந்நிலைகளுக்குத் தக்கவாறு மறுபடியும் பிறவிகள் பெருகி வருகின்றன.

பிறப்பு அடியோடு நீங்க வேண்டுமானல் அதற்கு மூல வித்தான வினைத்தொடர்பு முழுதும் தொலைய வேண்டும். பொல்லா விருப்பு ஒன்று போய்த் தொலையின் அன்றுதான் எல்லாப் பிறப்பும் இறந்து ஒழியும். இவ்வாறு தெளிந்த ஞானம் உதய மாகும் பொழுததான் பிறவியை நீக்க விரைந்து ஞானிகள் துறவிகள் ஆகின்றார். உள்ளம் தெளிந்தவர் உய்தி பெறுகின்றார்.

அல்லலான பிறவி யாண்டும் துக்கமே என்று உணர்ந்த அன்றே கவுதமர் அரசைத் துறந்து இரவே அடவியை அடைந் தார். தத்துவ ஞானத்தால் சித்த சாந்தி அடைந்து உத்தம நிலை யில் ஒளி வீசி நின்ற அவரே புத்தர் எனப் பொலிந்து விளங்கி னர். மருள் நீங்கி மன்னுயிர் உய்ய அருள் ஓங்கிய அதிசய சோதி என உலகம் உவந்து அவரைத் துதிசெய்து வருகிறது.

செல்வங்கள் பலவும் நிறைந்து சிறந்த போகங்களை நுகர்ந்து உல்லாசமாய் உவந்திருந்த அரசன் ஒருநாள் பொல்லாத பிறவித் துயரை உணர்ந்தான்; உள்ளம் கலங்கி உறுதியை நாடித் துறவி யாய் எழுந்தான். அந்த வேந்தனுடைய நிலையை அறிந்ததும் நகர மாந்தர் யாவரும் மறுகி மயங்கி அவனைத் தொடர்ந்து உருகி அழுது உரிமையோடு தடுத்தார். அப்பொழுது அவரை நோக்கி அம் மன்னன் ஆறுதலாக் கூறிய மொழிகள் அரிய ஞான ஒளி களை வெளியே வீசி வந்தன. சில அயலே வருவன காண்க.

அவரவர் வினையின் அவ்ரவர் வருவார்;
அவரவர் வினையள வுக்கே
அவரவர் போகம்; என்றதே ஆயின்
ஆருக்குஆர் துணையதா குவர்கள்?
அவரவர் தேகம் உளபொழுது உடனே
ஆதரவு ஆர்என நாடி

அவரவர் அடைதல் நெறிகன்மத் தடையும்
ஆதரவு ஆதர வாமோ?

வினையுள அளவும் கூடியே நிற்கும்
வினை அகன் றிடின்பிரிந் திடுமால்
வினையினல் வரும்ஆ தரவினின் இயற்கை
மெய்உணர்வு அத்தகை யலவே
வினையிலே உங்கள் இடத்தில்நான் இருக்க
மெய்யுணர்வு ஒன்றையே நாடி
வினையறு கானம் புகுதவே வேண்டி
விரும்பினேன் நீர்நிலும் இங்ஙன். (மகாராசதுறவு)

வினையின் விளைவுகளை இவை விழி தெரிய விளக்கியுள்ளன. மனைவி மக்கள் ஒக்கல் எனப் பக்கம் சூழ்ந்து குழுமியுள்ளது மாயக் கூட்டமே; வினையுள்ள அளவும் கூடியிருந்து அது முடிந்தவுடனே யாவும் பிரிந்து போய்விடும்; பிறவி வினையினல் வருகிறது; வினை மன நினைவால் விளைகிறது; ஆகவே துறவியாய் மனத்தை அடக்குவதே பிறவியை நீக்கவுரிய வழியாம் என அரச முனிவர் இங்கே உணர்த்தியிருக்கிருர். அரிய ஞான நிலை மருவியுள்ள இந்த உரைக் குறிப்புகள் ஊன்றி உணரத் தக்கன.

மீட்டுஇங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே. [திருவாசகம்]

வினைப் பிறவி சாராதிருக்க வேண்டின் புலக்குரம்பை அடக்கி மனத்துறவை மருவியிருக்கவேண்டும் என இறைவனைத் துதிக்கு முறையில்மாணிக்கவாசகர் இங்ஙனம் அருளியிருக்கிருர்.

புலையான பிறவியில் புகுந்தால் அலைவாய்த் துரும்புபோல் யாண்டும் அல்லலாய் நீண்ட கவலையா அலமந்து அலைய நேரும்.

ஓரிடத்தோர் உயிர்நெடுநாள் உறைவதிலை; உதிஎனும்
நீரிடத்துப் புரிவினையால் நிலையிலுடம் பிதுபோனல்
பாரிடத்தில் சுவர்க்கத்தில் பவர்க்கமதில் எங்கெனினும்
சேரிடத்தில் சேருமிது திண்ணம்எனத் தெளிந்திடுதி.
[சேதுபுராணம்]

பிறப்பில் வீழ்ந்த உயிர்கள் இவ்வாறு நெடுந்துயரங்கள் தோய்ந்து நிலைகுலைந்து உழலுகின்றன; ஆகவே துன்பப் பிறவி நீங்குவதே எவ்வழியும் பெரிய இன்பப் பேருய் ஓங்கி நின்றது.

905. உயிரினங்க ளுள்ளே உயர்ந்து மனிதன்
பெயரடைந் திங்கே பெருகி—இயல்சிறந்து
வந்து வளர்ந்தும் வருவ துணராமல்
சிந்தை தளர்ந்தான் சிதைந்து. (ரு)

இ—ள்.

உலகில் தோன்றிய உயிர் இனங்களுக்குள்ளே மனிதன் உயர்ந்த நிலையில் சிறந்து வந்திருக்கிறான்; அவ்வாறு வந்து வளர்ந்தும் உணரவுரியதை உணராமல் உள்ளம் மடிந்து இழிந்து போகிறான்; அப் போக்கு அவனைப் புலையில் தாழ்த்தி விடுகிறது.

சீவப் பிராணிகளுள் மனிதப் பிறப்பு மிகவும் சிறந்தது. பெறலரிய உயர் பிறவியை அடைந்தும் அதனால் பெறவுரிய பெரிய பயனை அடையாமல் இருப்பது கடையான அவல நிலையாம். ஊன இழிவு ஒழிவதே ஞான வழியாகிறது.

அல்லல்கள் யாதும் நேராமல் தன் உயிர்க்கு நல்லதை நாடிக் கொள்வதே ஒருவனுடைய கூரிய அறிவுக்குச் சீரிய பயனும். பொறி வெறிகளில் இழிந்து போகாமல் புலன்களை அடக்கி நெறியே ஒழுகிவருபவனே நிலையான பேரின்ப நிலையை அடைய நேர்கின்றான். நியமமான சீலத்தால் சித்தம் சுத்தி ஆகிறது; ஆகவே முத்தி நிலை அவனுக்கு முதல் உரிமையாய் வருகிறது.

மனம் மாசு படின் மனிதன் நீசம் அடைகிறான்; அடையவே ஈசன் அருளை இழந்து அவன் இழிந்து கழிந்து தொலைகின்றான்.

உள்ளம் கெட்டபொழுது மனிதன் கெட்டவனாய் இழிந்து படுதலால் நல்ல அறிவு அவனிடமிருந்து ஒழிந்து விடுகிறது.

Men that are greatly guilty are never wise. [E. Burke]

மிகவும் குற்றமுள்ள மனிதர் ஒருபோதும் ஞானம் உடையவராகார் என எட்மண்டுபேர்க் என்னும் ஆங்கில அறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார் பிழைகள் படிந்து உள்ளம் பாழ் படின் அந்த மனிதன் உயர் நலங்கள் யாதும் அடையமுடியாது.

தன் உள்ளத்தைப் புனிதப்படுத்தி வருகிறவனே உயர்ந்த கதிகளை அடைய நேர்கின்றான். தான் பிறந்த பிறப்பைச் சிறந்த நிலையில் உயர்த்துகின்றவனே உத்தம மனிதனாய் ஒளி மிகுந்து நிற்கின்றான் உயர்வு என்பது துயர் தோயாத தூய நிலையே.

அரிய பல அறிவு நலங்களுக்கு இனிய நிலையமாய் மனிதப் பிறவி மருவியுள்ளது; உண்மை நிலைகளை ஊன்றி உணரவல்லது. உலக அறிவு கல்வி அறிவு அனுபவ அறிவு ஆன்ம அறிவு என இன்னவாறு மேன்மையான அறிவுகளுக்கெல்லாம் இடமாயுள்ள மனிதன் உறுவதை ஓர்ந்து உணர்ந்து தன் உயிர்க்கு நன்மை செய்துகொள்ளவில்லையானல் அப்பிறவி புன்மையாய்ப் புலையுறுகின்றது. ஆவதை அறியாமை அவகேடாய் முடிகிறது.

வருவது உணராமல் என்றது உயர்ந்த பிறவியில் வந்த மனிதன் மேல் வருவதை உணர்ந்து சிந்தை தெளிந்து முந்துறச் செய்துகொள்ள வேண்டியதைச் செய்யாமல் மையலோடு மறுகி நிற்கும் மடமை நிலையை. மூடம் கேடானபீடை ஆகிறது.

மூப்பு இறப்புகள் மூண்டு நிற்கின்றன; அவை நேருமுன்னரே உயிர்க்கு உறுதியை நேர்ந்துகொள்ள வேண்டும்; அங்ஙனம் கொண்டவனே பிறவிப் பயனைப் பெற்றவனாகிருன்.

பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலம் கழிவன கண்டும் அறிகிலார்;
ஞாலம் கடந்தண்டம் ஊடறுத் தான்அடி
மேலும் கிடந்து விரும்புவன் நானே. (1)

சென்றன நாழிகை நாள்கள் சிலபல
நின்றது நீள்பொருள் நீர்மேல் எழுத்துஒத்து
வென்று புலன்கள் விரைந்து விடுமின்கள்
குன்று விழவதில் தாங்கலும் ஆமே. (திருமந்திரம்)

காலம் கழிவதைக் கருதியுணர்ந்து உயிர்க்கு உய்தியை விரைந்து செய்துகொள்ளுங்கள் என உலகமாந்தரை நோக்கித் திருமூலர் இவ்வாறு உரிமையோடு இனிது உணர்த்தியிருக்கிருர்.

புலையான புலன்களில் அலைய நேர்ந்தால் நிலையான நலன்களை அடைய முடியாது ஆதலால் அவற்றை விலகி நின்றவரே விழுமிய கதியை மேவுகின்றனர். உலக இன்பங்கள் எவ்வளவு உயர்ந்தன ஆயினும் எவ்வழியும் துன்பங்களையே விளைத்து வருகின்றன; ஆகவே அந்த மாய்ச்சுகங்களை வெறுத்து விலகினவரே தூய பேரின்ப நிலையை நேயமாத் தோய்கின்றனர்.

Earth's sweetest joy is but disguised woe. (William)

உலகத்தின் இனிய மகிழ்ச்சி கொடிய துக்கமே என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி உணரவுரியது.

விடம் விடம் அன்று; விடயமே விடம் என முனிவர் இங் ஙனம் முடிவு செய்துள்ளனர். தேகபோகங்களை விழைந்து மோகமா யுழலாமல் விவேகமா யுய்பவரே விழுமிய யோகராய் விளங்கியுள்ளனர். ஆன்ம போகம் அதிசய நிலையது.

அருப்புப் போல்முலை யார்அல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் இட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தை செயச் செயக்
கருப்புச் சாற்றிலும் அண்ணிக்கும் காண்மினே.

(தேவாரம்)

அல்லல் வாழ்க்கையில் இழிந்து கழியாமல் நல்ல பேரின்ப நிலையை நண்ணி உய்யும்படி அப்பர் இப்படி அருளியிருக்கிறார்.

---

906. தோய்ந்து பழகிய தொல்லுயிர் வாசனை
வாய்ந்து வழியே வருதலால்—ஏய்ந்த
பிறவிகள் தோறும் பெருகி வளர்ந்து
மறவி இலதாய் வரும். (சு)

இ—ள்

படிந்து பழகிய வாசனைகளே உயிரை எவ்வழியும் தொடர்ந்து படர்ந்து வருதலால் பிறவிகள்தோறும் அவை பெருகி வளர்ந்து யாதும் தவருமல் அடர்ந்து நின்று உரிய நிலைகளைத் தெளிவா உணர்த்தும்; அந்த நீர்மைகளைச் சீர்மை செய்து கொள்ளுக.

உயிர் வாழ்வின் இயல்புகள் அதிசய மருமங்களுடையன; வெளியே தெளிவா அறியமுடியாதன; மூலவாசனைகள் ஆட்டி வருகிறபடியே ஞாலம் காணச் சீவகோடிகள் ஆடி வருகின் றன. வாழ்வுகள் சூழல்களோடு தோய்ந்து சுழல்கின்றன.

உருவ நிலைகளில் ஒருமையாய் ஒத்து ஓரினம்போல் தோன்றி னும் உயிர்களின் இயல்புகள் அளவிடலரிய மாறுபாடுகளோடு மருவி நிற்கின்றன. ஒரு தந்தைக்கு ஒரு தாய் வயிற்றில் பிறந்த மக்களிடமும் வேறுபாடுகள் விரிந்து தெரிகின்றன. புறமும் அகமும் மிகவும் மாறுபட்டு வேற்றுமைகள் விரவியுள்ளன.

கோடிக் கணக்கான மக்களை நாடி நோக்கினும் ஒருவர் முகம்போல் பிறிது ஒருவருக்கு அது அமையாமல் இருப்பதைத் தெளிவாக அறிந்து கொள்கிறோம். புறத்தில் காணப்படுகின்ற பேதங்கள் அகத்தின் வேற்றுகளை அறிவித்து நிற்கின்றன.

உள்ளே மூண்டு பதிந்துள்ள வாசனைகளின் படியே உயிரினங்கள் யாண்டும் உலாவி வருகின்றன. வெளியே உயர்ந்த மனிதர்கள்போல் தோன்றினும் உள்ளே இழிந்த புன்மைகள் பலரிடம் நிறைந்திருக்கின்றன. மக்கள் எனினும் மாக்களே.

மக்களே போல்வர் கயவர். (குறள், 1071)

கீழ் மக்களுடைய நிலைமையைத் தேவர் இவ்வாறு நயமா விளக்கியிருக்கிறார். ஈனமான இழி மக்கள் வடிவத்தால் மானிடர் போல் தோன்றி நிற்பர்; அந்தத் தோற்றத்தைக் கண்டு ஏமாந்து போகாதே; எச்சரிக்கையாய் ஒதுங்கி வாழுக என இது உணர்த்தியுள்ளது. கயமை நிலை கருதி யுணர வந்தது.

மனித உருவில் மருவியிருந்தாலும் மிருகங்களாகவே பலர் பெருகி நிற்கின்றனர். நரி நாய் பன்றி மாடு ஆடு குரங்குகளாகவே பல மானுடங்கள் ஊனுடம்புகளோடு உழந்து திரிகின்றன. நீதி யுணர்ச்சியின்றி நெறிகேடராய்ப் பொய்யும் புலையும் களவும் கொலையும் படிந்து வையத்தில் மனிதர்போல் பலர் வாழ்ந்து வருகின்றனர். அவல நிலைகளில் உழன்று அழிவுறுகின்றனர்.

சிறந்த மனிதப் பிறப்பை அடைந்திருந்தும் இழிந்த புலைகளில் அழுந்தி உழலுதலால் ஈன விலங்குகளா அவர் எண்ண நின்றனர்.

மனித மாடு, மனித நாய், மனித நரி, மனிதப் பன்றி, மனிதக் கழுதை, மனிதக் குரங்கு என யூகமா ஓர்ந்து உணரும் படி பலர் நேர்ந்து நிற்கின்றனர். ஈனமான அந்த இழி நிலைமையை உணர்ந்து கொள்ளாமல் தங்களைப் பெரிய மனிதராக அவர் நினைந்து களித்து நிமிர்ந்து திரிவது நீசமயக்காய் நீண்டு வருகிறது. இருகால் மிருகங்களாய் எங்கும் திரிகின்றனர்.

தன் உள்ளமே சான்றாய் நேர்மையோடு ஒழுகிவருபவனே உத்தம மனிதனாய் ஒளிபெற்று நிற்கிறான். நெஞ்சம் திரிந்து நெறிகேடரானால் அவர் நீசராய் இழிந்து நாசமாய்ப் போகின்றார்.

தன்னெஞ்சம் தனக்குச் சான்றது வாகச்
சத்தியம் நன்குண ராதே
வன்னெஞ்ச ஞகிக் கூடமே புரிவோன்
வஞ்சகக் கூற்றினும் கொடியோன்
பன்னுங்கால் அவனறன் தெரிசனம் பரிசம்
பழுதுறு நிரயமே தருமால்
புன்னெஞ்சால் அவனும் போய்நரகு எய்திப்
பூமியுள் ளளவும் ஏருஞல். (தத்துவ ரத்தினம்)

மறைமுதல் கலைகள் யாவையும் உணர்ந்து
மாசற உரைத்து மாசொடுந்தான்
கறையுறும் விடயக் கடுவெனும் கடலில்
கருத்தருது அதிலவிழு மாகில்
அறைதரும அவனே கருமசண் டாளன்;
அறிவற இருமையும் இழந்த
பொறியிலி இவனைப் போலும் பாதகரிப்
புவியினில் ஒருவரும் இலையே. (ஞான சித்தி)

மனம் மொழி மெய்கள் புனிதநிலையில் இனிது ஒழுகவில்லை யாஞல் அந்த மனிதன் புல்லியனுய் இழிந்து அல்லல்களுக்கே ஆளாய் அழிந்து போகிருன் என இவை வரைந்து காட்டியுள் ளன. பொருள் நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும்.

அரிய பல நூல்களைப் படித்தாலும் பெரிய பிரசங்கங்களைச் செய்தாலும் அவன் உயர்ந்த மனிதனுக முடியாது; உள்ளம் தூய்மையா அமைந்த அளவுதான் அவன் உயர்ந்து ஒளி பெறு கின்ருன். இருதய சுத்தம் அதிசய சத்திகளை அருளுகின்றன.

சித்த சுத்தி சத்தியத்தால் அமைகிறது; அது அமையவே அற்புத மகிமைகள் யாவும் அவனிடம் மேவி மிளிர்கின்றன. உலகம் அவனை உவந்து தொழுது உரிமையோடு புகழ்ந்து போற்றுகிறது. மனம் புனிதமாஞல் மனிதன் தேவன் ஆகிருன்.

"He who has the truth at his heart need never fear the want of persuasion on his tongue." (Ruskin)

தன் உள்ளத்தில் உண்மையுள்ளவன் தனது நாவில் பிரிய மான வசியமில்லை என்று யாதும் அஞ்ச வேண்டியதேயில்லை என்னும் இது ஈண்டு நெஞ்சம் கூர்ந்து ஓர்ந்து உணர வுரியது.

சத்தியவானை எவரும் விரும்புகின்றனர்; எவ்வழியும் வணங்கி யாவரும் மரியாதை செய்கின்றனர். இத்தகைய உத்தம நீர்மையை யாதும் நழுவ விடாமல் பழகி வருபவன் விழுமிய மேன்மையில் விளங்கி வியன் கதி பெறுகிருன்.

---

907. தீதான வாசனை தீயவனுச் செய்தலால்
ஓதா தனவெல்லாம் ஓதினும்—ஏதும்
திருந்தாமல் அன்னவன் தீவினையே செய்து
வருந்தா துழல்வன் வளர்ந்து. (எ)

இ-ள்.

தீய வாசனைகளையுடையவன் எவ்வளவு வாசித்தாலும் யாதும் திருந்தாமல் தீமைகளையே செய்து செருக்கி வளர்ந்து இழிந்து அழிந்து போகின்ருன்; அந்த அழிவுநிலையைத்தெளிக என்பதாம்.

உரிய மனமும் உறவான இனமும் உற்றசூழலும் பற்றிய பழக்கமும் மனிதனை உருவாக்கி வருகின்றன. சார்ந்த சார்புகள் நல்லனவாயின் அவன் நல்லவனுய் உயர்கிருன்; அல்லனவானல் அவலமாய்த் தாழ்கிருன். உயர்வு தாழ்வுகள் இயல்பாகின்றன.

முன்னைய பிறவிகளில் பழகிய பழக்கம் மூலவாசனையாய் மூண்டு வருகிறது. அது மிகவும் பலமுடையது ஆதலால் அதன் நிலைமைகளுக்குத் தக்கபடியே மனிதன் நேர்ந்து நிற்கிருன்.

கெட்ட பழக்கம் சிறிது தொட்டாலும் அது உயிரை ஒட்டி எவ்வழியும் துயரையே கூட்டும். பிழையான வழியில் ஒருமுறை நழுவினல் பின்பு தெளிவாய் அவன் வெளி ஏறி வருதல் மிகவும் அரிது. பழகியது பழமையாய் வளமை வாய்ந்து வருகிறது.

எண்ண அலைகள் ஆகாயம் எங்கணும் நிறைந்திருக்கின்றன. தூய ஞானசீலர்களும் துறவிகளும் யோகிகளும் தவமுனிவர்களும் கருதிய மேலான கருத்துக்கள் மேலே அமுத வெள்ளங்களாய்ப் பரவி யாண்டும் புனித வாசனைகளை வீசியுள்ளன.

தீயவர்களும், புலையான நிலைகளில் பழகிய புல்லர்களும், பொல்லாத கொலைபாதகர்களும் எண்ணிய எண்ணங்கள் கொடிய நச்சுவிடங்களாய் விரிந்து நெடிது ஓங்கி நிற்கின்றன.

இந்த இருவகை நினைவுணுக்களும் முறையே தமக்கு உரியவர்களிடம் வந்து சேர்ந்து பிரியமா மருவிக் கொள்ளுகின்றன.

இதமான இனிய உள்ளங்களில் புனித எண்ணங்கள் பொருந்துதலால் அவர் விழுமியராய் உயர்ந்து போகின்றார்; கொடிய நெஞ்சங்களில் தீய நினைவுகள் மாயமா வந்து சேர்தலால் அவர் ஈனராய் இழிந்து தாழ்ந்து ஊனமா உழலுகின்றார்.

இழிவான வழிகளில் சிறிது பழகினும் அந்த அளவில் மனிதன் இழிவுறுகின்றான். பழகிய படியே படிவமாய் முடிவடைகின்றான். புகையிலைத் தூளை முதலில் உல்லாசமா மூக்கில் முகர்கின்றான்; மறுநாள் கொஞ்சம் உறுஞ்சுகிறான்; பின்பு அப்பழக்கம் வழக்கமாய் வலிவடைந்து அவனை நன்கு வளைத்துக் கொள்கிறது; கொள்ளவே நாளும் அதனை நயந்து விழைந்து நுகர்ந்து மகிழ்கிறான். பெரிய மனிதனுயிருந்தவனும் பொடிக்கு அடிமையாய்ப் பொடியன் ஆகிவிடுகிறான். பெரிய பண்டிதரும் அரிய துறவிகளும் அதற்கு அடியராய் அலமந்து உழலுகின்றனர். எல்லாவற்றையும் வெறுத்து விட்டு உலகத்தைத் துறந்து போன சந்நியாசிகளும் பொடியை விடமுடியாமல் மடி தழுவி மருவி வருதலால் கெட்ட பழக்கத்தின் வலிமையை உய்த்து உணர்ந்து கொள்ளலாம். தொட்டது தொடர்ந்து கொள்கிறது.

பொன்னைவிட்டேன் பொருளைவிட்டேன் பூமிமுதல்
யாவையுமே போக விட்டேன்
மின்னைவிட்ட மனைவியையும் மேலான
மக்களையும் வெறுத்து விட்டேன்
தன்னைவிட்டேன் என்றிருக்கும் துறவியரும்
பொடியைமடி தழுவித் தாங்கி
உன்னைவிட்டால் உயிர்விடுவேன் என்றிருப்பர்
பொடியே! உன் ஒளிதான் என்னே?

(இந்தியத்தாய்நிலை)

பொடிப்பழக்கம் மனிதனை எவ்வளவு அடிமையாக்கிக் கொள்கிறது என்பதை இது நன்கு வடித்துக் காட்டியுள்ளது.

நல்ல பழக்கங்களைப் பழகி வருபவன் மேலானவனாய் உயர்ந்து திகழ்கிறான்; கெட்ட பழக்கங்களைப் பழகி வருபவன் கீழானவனாய் இழிந்து கழிகிறான். சார்ந்த இனங்களின் சார்

பாகவே மனிதன் பெரும்பாலும் உருவாகி வருதலால் சேரும் சார்புகளை நல்லனவாக நன்கு அவன் நாடிக்கொள்ளவேண்டும்.

சீலமுற்று உயர்ந்தவர்ச் சேரின வீடுறும்
மாலையுற்று அறிவிலார் மருங்கு அடைந்திடின
வேலையுற்று அலை துரும்பு என்ன வெம்பவக்
கோலமுற்று இறந்திறந்து உழலல் கூடுமால். [பாகவதம்

சிறியராயினர் சார்பினை விழையல்மின்
 திறல்கெழு பெரியோராம்
அறிஞ ராயினர் சார்பினை விழைமினே
 அலரிதழ் விரிகொன்றை
வெறிநறுந்தொடை எம்பிரான் சார்பினை
 விழைதலால் உரகங்கள்
மறுவில் ஆற்றல்சால் கலுழனை வினையின
 வாழ்ந்தனை யோ என்ன. (காஞ்சிப்புராணம்)

அழுக்குடைச் சாதியோரும் அடைந்துமெய்ஞ் ஞானிதன்னை
விழுப்புடைத் தலைவர் ஆவர்; வேதகக் குளிகை சேர்ந்த
இழுக்குடை இரும்பும் செம்பும் இலங்குசெம் பொன்னும்; ஆங்கே
ஒழுக்கமோடு அவன்தாள் சேர்மின் ஓங்குவீடு எய்தல் உற்றார்.
[சிவப்பிரகாசம்]

சீலமுடைய மேலோரோடே சேர வேண்டும்; இழிவான தீயவரோடு எவ்வழியும் யாதும் சேரலாகாது என இவை உணர்த்தியுள. இனிய சார்பு அரிய மேன்மைகளை அருளுகிறது.

நல்லவர்களோடு பழகுவதால் நல்ல பழக்கங்கள் உளவாகின்றன; ஆகவே எல்லாநலங்களையும் அவன் எளிதே அடைந்துகொள்ளுகிறான். இனிய நீர்மைகளில் பழகி வருபவன் புனித மனிதனா உயர்ந்து அரிய மகிமைகளை மருவி மிளிர்கிறான். தன் உள்ளத்தே தழுவிய நல்ல பழக்கமே வெளியே ஒருவனை விழுமியனா விளக்கி வருகிறது. ஒழுகி வருவது ஒழுக்கம் என வந்தது.

Character is simply habit long continued. [Plutarch]

தொடர்ந்து பழகிவருகிற பழக்கமே ஒழுக்கமாகிறது என இது உணர்த்தியுளது. இளமையில் பழகியது வளமையாகிறது.

நல்ல எண்ணங்களோடு பழகி வருபவன் இனிய குண சீலனாயுயர்ந்து இன்பம் மிகப் பெறுகிறான். உள்ளம் நல்ல வழியில் பழகவில்லையானால் அவன் எவ்வழியும் திருந்தாமல் இழிந்தே

ழுகிறான். தீயவாசனை பிறவிகள்தோறும் தொடர்ந்து பெருந் துயரங்களையே விளைக்கும். தூயவழியில் பழகிச் சுகம் பெறுக.

———

908 கனிமரம்போல் யார்க்கும் கனிந்து புனிதர்
இனியவ ராகி இருப்பர்—துனிமிகுந்த
எட்டி மரம்போல் இழிமக்கள் எவ்வழியும்
கெட்டதே செய்வர் கிளர்ந்து. (அ)

இ—ள்.

இனிய கனி மரம்போல் எவ்வுயிர்க்கும் இதம் புரிந்து செவ்விய புனிதர் சிறந்து திகழ்கின்றார்; வெவ்விய தீயர் எட்டி மரம்போல் எவ்வழியும் கெட்டதேசெய்து கேடாய் நிற்கின்றார்.

நல்லவர் நிலையும் தீயவர் புலையும் தெரிய வந்தன.

ஒருவன் பிறந்த பிறப்பு சிறப்பாய் உயர்ந்து விளங்குவது அவனுடைய இனிய குண நீர்மைகளாலேயாம். மனம் மொழி மெய்கள் புனிதமாய் இனிமை தோய்ந்து வரவே அவன் ஒரு மனித தெய்வமாய்த் தனி மகிமை வாய்ந்து திகழ்கின்றான்.

அன்பும் பண்பும் நிறைந்து உள்ளம் கனிந்து உயர்ந்தபோது அந்த மனிதனை உலகம் விழைந்து புகழ்ந்து வருகிறது. அரும்பு மலர் காய்கள் மரங்களில் நிறைந்திருந்தாலும் கனிகள் விளைந்த பொழுதுதான் பறவைகள் அங்கே விரைந்து வருகின்றன. இனியபலன்கள் எவ்வுயிர்க்கும் இன்பம் தருகின்றன. அயலார் உவந்து வாழ இயல்பாய் இசைந்து வாழ்பவன் சமுதாயத்தில் உயர்வா இசைபெற்று ஒளி வீசி மிளிர்கின்றான்.

நல்ல நீர்மைகள் உள்ளத்தில் சுரந்துவரின் அந்த மனிதன் உலகத்தில் உயர்ந்து திகழ்கிறான். பிறந்த ஒருவன் பெருந்தகை யாளன் என்று விளங்கி வருவது சிறந்த பேறும். சொல்லும் செயலும் நல்லனவாயின் அவனை எல்லாரும் உள்ளம் உவந்து போற்றுகின்றனர். அவனுடைய கருமங்கள் தருமங்களாம்.

குளிர் நிழலைத் தந்து இனிய கனிகளை உதவி உயிரினங் களுக்கு இயல்பாகவே இதம் புரிந்து வருதலால் கொடை வள்ளல்களுக்கு மரங்கள் நேரே உவமானங்களாய் வந்தன.

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின். (குறள், 217)

உயர்ந்த பெருந்தகையாளனுடைய செல்வம் சிறந்த மருந்து மரம்போல் பலர்க்கும் இதமாய் இனிது பயன்படும் எனத் தேவர் இங்ஙனம் உபகார நிலையை உணர்த்தியிருக்கிறார். மருந்து என்னும் சொல் நிறைந்த பொருள்களையுடையது. உடல் நோய்களைத் தீர்த்து உயிர்க்கு உறுதி நலங்களை அருளுவது மருந்து என வந்தது. இனிய இதங்கள் அரிய அமுதங்களாகின்றன.

உற்ற துயர்களை நீக்கி மக்களுக்கு உதவிபுரிந்து வருபவன் உயர் குலமகனாய் ஒளி மிகப் பெறுகிறான். உயிர்கள் இன்புற ஒழுகிவருபவன் உருவத்தில் மனிதனாயினும் உண்மையில் தெய்வமாய் அவன் உயர்ந்து நிற்கின்றான்.

எவ்வழியும் தன் நலமே நாடி யுழல்பவன் தக்க நலங்களை அடையாமல் வாழ்வில் தாழ்வுறுகிறான்; பிறர்க்கு இதம் கருதி வருபவன் பெரிய மேன்மையாளனாய் அரிய கதிகளை எளிதே அடைகிறான். எண்ணம் இனிதாய் வரப் புண்ணியம் வருகிறது.

ஓர் அறிவுடைய மரமும் நிழல் முதலியன உதவி விழுமிய வாழ்வின் நிலையை ஆறறிவுடைய மனிதனுக்கு அறிவுறுத்தி வருகிறது; அந்த உபகார நீர்மை மதிநலம்சுரந்து அதிசய போதனையாய்த் துதி கொண்டு யாண்டும் மகிமை தோய்ந்துள்ளது.

இலைதழை தளிர்க ளாலும் இனியநல் நிழல்க ளாலும்
அலர்மலர் கனிக ளாலும் அடியுறு வேர்க ளாலும்
பலவுயிர்க் கிதமாய் நின்று பயன்படு மரம்போல் தன்னை
உலகினுக்கு உதவி நின்றான் உயர்பர னாகி நின்றான்.

சீவர்களுக்கு இதம் செய்து வருபவனிடம் தேவ தேவனுடைய திருவருள் நேரே ஆவலோடு வருகிறது; வரவே அவன் எவ்வழியும்திவ்விய நிலைகளைச் செவ்விதா எய்தித் தேசுறுகிறான்.

எங்கே உபகார நீர்மைகள் பொங்கி வருகின்றனவோ அங்கே கடவுளுடைய கருணை ஒளிகள் தங்கி யிருக்கின்றன. வெளி ஆடம்பரங்களாகக் களியாட்டங்கள் புரிந்து வள்ளல் எனப் பிறர் சொல்ல வேண்டும் என்னும் நசையோடு செய்யாமல் உள்ளப் பண்புடன் உவந்து புரிவதே உயர்ந்த மேன்மையாம். இயல்பான இனிய உதவி உயர்வாய் ஒளி புரிகின்றது.

பிறர்புகழ் நினைக்கைம் மாற்றைப் பேணியே உதவி செய்வோர்
அறமுளார் அல்லர்; நித்தன் அருட்குமே அருகர் அல்லர்;
திறவலக் கரம்செய் நன்றைத் திகழிடக் கரம்காணாமல்
வறியர்பாத் திரம்அறிந்து வழங்குவோர் மாட்சியோரே. (1)

மக்கள்தம் பொறையைத் தாங்கும் மகிக்கும்அன்னரைக் காக்க
மிக்கநீர் பொழியா நின்ற விண்முகி லினுக்கும் செய்யத்
தக்கஓர் எதிர்நன்று உண்டோ? சமயத்துஓர் பயனும் வேண்டாது
ஒக்கவே செய்த நன்றி உலகினும் பெரிதாம் மாதோ. (2)

மன்னிய கனிகாய் நீழல் மற்றெலாம் உதவிப் பின்னும்
தன்னையும் உதவா நின்ற தருவெனத் தம்கை ஆர்ந்த
பொன்எலாம் உதவிப் பின்னும் பூட்சியால் உழைத்திட்டேனும்
இன்னுயிர் உதவி ஏனும் இடுக்கண்தீர்ப் பார்நல் லோரே. (3)
(நீதிநூல்)

இவை இங்கே கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்கத் தக்கன.

கனிவான இனிய தன்மை அளவே மனிதன் இன்ப நிலைகளை அடைகிறான்; இந்த நல்ல நீர்மை இல்லையாயின் அவன் பொல்லாதவனாய்ப் புலையுறுகின்றான். எட்டி மரமாய் இழிந்து போகாமல் இனியனாய் உயர்ந்து தனியே இசை மீக்கொள்ளுக.

---

909\. கடலளவு துன்பம் கடுகளவே இன்பமீ
உடலளவே வாழும் உயிர்கள்—குடலளவே
உண்டு களித்திங் குழலும் உயர்நலங்கள்
கண்டு தெளியா கனிந்து. (கூ)

இ-ள்.

துன்பம் கடல்; இன்பம் கடுகு; இந்த நிலையில் உடலோடு கூடி உயிர்கள் வாழுகின்றன; உயர்ந்த கதிநலங்களை உணர்ந்து தெளியாமல் குடலளவே உண்டு உடலளவே கண்டு ஒரு பயனும் காணாமல் உள்ளம் களித்து மடமையாய் உழலுகின்றன.

பிறவியில் பெருகியுள்ள துயரங்கள் அளவிடலரியன. கருவடைந்த நாள் முதல் கொடிய துன்பங்களையே உயிர்கள் அடைந்துள்ளன. கருவிலிருந்து வெளியேறி உருவடைந்தபின் குழந்தைப் பருவம் தொடங்கி வளர்ந்து வருந்தோறும் அல்லல்களையே எவ்வழியும் சீவர்கள் அடைந்து உழந்து அலமந்து உழலு

கின்றனர்; நிலைமைகளை நினைந்து உணராமையால் நெஞ்சம் களித்துத் திரிகின்றனர்; உண்மையை ஊன்றி உணர்ந்தால் உள்ளம் நடுங்கி உய்தியை ஓர்ந்து விரைந்து நாடுவார்.

கருவிடை அழுந்தும் துன்பமும் நிலத்தின்
  கண்ணுறின் கொடியவெந் நோயால்
மருவுவெந் துயரும் நரைதிரை எய்தி
  வருந்திடும் துன்பமும் கூற்றால்
உருவினை ஒருவும் துன்பமும் மீட்டும்
  கருக்குழி ஒன்றுறு துயரும்
வெருவர எண்ணி இன்பவீடதனை
  மேவநன்கு உணர்தலே வேண்டும்.

(ஆனந்தத்திரட்டு)

கருப்பம் என்னும்அக் காரிருட் சிறையினில் கதுவும்
நெருப்பின் வெந்துள்ள நிலைகெடத் தலைதகர்ந் திடவே
பொருப்பில் நின்றுவீழ் பவர்எனப் போந்தமை நினையா
இருப்பு நெஞ்சினர்க்கு என்னையாம் இனிஇயம்புவதே. (1)

குழவியில் அறியாத் துன்பம் குரவரால் குமாரம் துன்பம்
கழிதரு காமநோயால் காளையாம் பருவம் துன்பம்
விழைவுறு போகம் சுட்டி வெறுக்கையை விரும்பி மேவும்
தொழிலினால் துன்பம்அந்தத் தொழிலிடை யுறுததுன்பம்;

கோடையில் வெப்பால் துன்பம் குளிரினால் துன்பம்கூதிர்
வாடையில் ஏற்றால் துன்பம் வார்பனி நோயால் துன்பம்
நீடிய தாக மோக நித்திரை மலாதி தன்னால்
நாள்தொறும் துன்பம் ஆனால் நலம்ஒரு நாளும் இன்றே. (3)

(குறுந்திரட்டு)

வேட்டன பெறாமை துன்பம் விழைநரைப் பிரிதல் துன்பம்
மோட்டெழில் இளமைநீங்க மூப்புவந்து அடைதல் துன்பம்
ஏட்டெழுத்து அறிதல் இன்றி எள்ளற்பாடு உள்ளிட்டெல்லாம்
சூட்டணிந்து இலங்கும் வேலோய் துன்பமே மாந்தர்க்குஎன்றான்.

(சீவகசிந்தாமணி)

அருந்திய குறையின் துன்பம் ஆங்கவை நிறையின் துன்பம்
பொருந்துநோய் பொறுத்தல் துன்பம் பொருந்திய போகத் துன்பம்
மருந்தினுக்கு உழற்றல் துன்பம் மற்றவை அருந்தல் துன்பம்
இருந்தவாறு இருத்தல் துன்பம் யார்கொலோ துன்பம் இல்லார்?

(நாரதம்)

இன்புஓர் அணுவாய் இடரதற்கு மாமலையாம்
புன்போகம் வேண்டிப் புலம்பாதே—என்போடே
உள்ளம் உருகவரும் ஒண்போரூர் ஐயனருள்
வெள்ளமுற நெஞ்சே விரும்பு. (திருப்போரூர்ச்சந்நிதிமுறை)

பிறவித் துன்பங்களுள் சிலவற்றை வரைந்து காட்டிப் பிறவா நிலையைப் பெறும்படி இவை உணர்த்தியுள்ளன. கவி களின் பொருள்களை ஊன்றி நோக்கினால் அல்லல் வாழ்வுகளை யும், அவல நிலைகளையும் ஓரளவு நேரே அறிந்து கொள்ளலாம்.

பசித்தீயை அவிக்க உண்ணுவதும், அந்த உணவுகளைத் தேட உழைப்பதும், மலசலங்களை அருவருப்போடு கழிப்பதும் ஓயாத துயரங்களாய் நாளும் உடன் தொடர்ந்துள்ளன. பிணி மூப்பு சாக்காடுகள் எவ்வழியும் மூண்டு யாண்டும் நீண்டு நிற்கின்றன. இழவுகளின் ஒலிகளே எங்கும் ஓங்கியுள்ளன.

செத்த சவங்களுக்காகச் சாகின்ற சவங்கள் அழுவதே உலக வாழ்வில் இயல்பாய் ஊடுருவி யுள்ளது; அந்த அவல நிலையை உணர்த்தவே பிறந்தபொழுதே குழந்தைகள் அழுகின் றன. சாகும் வரையும் சஞ்சலமே என்பதை அந்த அழுகை தெளிவா ஒலித்து நிற்பினும் யாரும் அதனை உணர்வதில்லை. அதன் காரணங்கள் பூரண அனுபவங்களால் அறிய வருகின்றன.

We wept when we came into the world, and every day tells us why. (The Good-natured man, 1)

இந்த உலகில் வந்து பிறந்தபொழுது நாம் அழுதோம்; அதன் காரணத்தை நாள்தோறும் கண்டு வருகிறோம் என்னும் இது இங்கே காணத்தக்கது. எந்த நாட்டில் பிறந்திருந்தாலும் அறிஞர்கள் பிறவியைப் பெருந் துயரமுடையதாகவே கருதி யுள்ளனர். துக்கமயம் பிறவி எனத் துறவிகள் துணிந்தனர்.

அழிதுயரங்களிலிருந்து நீங்கி உய்ய நல்ல வழியை நாடிக் கொள்ளுவதே சிறந்த அறிவு பெற்ற பயனாம். பிறந்த பிறப்பை யும் அதனால் பெற வுரியதையும் உணர்ந்து உயிர்க்கு உறுதியை அடைந்து கொள்பவனே அதிசய பாக்கியவான் ஆகின்றான்.

பவப்பிணி ஒழிவதே தவப் பயன் ஆகும்.

910. புல்லிய பொல்லாப் புலைநிலையில் போகாமல்
நல்ல பிறவியை நண்ணியுள்ளாய்—ஒல்லையில்
செய்ய வுரியதைச் செய்து திருவருளை
எய்தி யுயர்க இனிது. (ய)

இ-ள்.

புலையான இழிந்த பிறவிகளில் தொலைந்து போகாமல் உயர்வான நல்ல மனிதப் பிறவியை அடைந்துள்ளாய்; விரைந்து செய்யவுரிய நலங்களைச் செய்து தெய்வ அருளை எய்தி உயர்க.

அறிவு நலம் நன்கு அமைந்தது ஆதலால் மனிதப் பிறவி உயர்ந்தது எனப் புகழ்ந்து போற்ற வந்தது. மாடு ஆடு முதலிய இழிபிறவிகளில் இழிந்துபோகாமல் உயர்ந்தபிறப்பை அடைந்து வந்துள்ளமையால் சீவகோடிகளுள் மனிதன் அதிசயமான மகிமையுடையவனாய் எவ்வழியும் மாண்பு மிகப் பெற்றுள்ளான்.

அரிய இந்தப் பிறவியைப் பெற்றவன் இதற்கு உரிய பயனை விரைந்து அடைந்து கொள்ள வேண்டும். பிறவியின் பயனை மறவியால் இழந்துவிடலாகாது. அந்தப் பயன் என்ன? உயிர் துயர் நீங்கி உய்தி பெறுவதே. யாதொரு துன்பமும் இன்றி என்றும் இன்ப மூர்த்தியாயுள்ளவன் இறைவன் ஒருவனே; உயிர்க்கு உயிரான அப்பரமனைக் கருதி உள்ளம் உருகிவரின் பிறவி தீர்ந்து பேரின்ப வெள்ளம் பெருகிவரும். அந்த அதிசய ஆனந்தத்தை இழந்துவிடின் அவலத்துயர்கள் தொடர்ந்து கொள்ளும். காலம் இசைந்த போதே கதிநலம் காணுக.

எய்தற்கு அரியது இயைந்தக்கால் அந்நிலையே
செய்தற்கு அரிய செயல். [குறள், 489]

அரிய சமையம் வாய்த்தபோது செய்ய உரியதை உடனே செய்து உய்க என்னும் இது இங்கே நன்கு சிந்திக்கத்தக்கது.

செத்து வீழுமுன் சீவனுக்கு ஓர்நலன்
ஒத்த தாக உணர்பவர் உத்தமர்;
முத்தர் பெற்றவர்; மூடர் பெறுதவர்
பித்தர் பேதையர் பேயர் பிசாசரே.

இதனை ஈண்டு உய்த்து ஓர்ந்து உணர்ந்து கொள்ளுக.

எடுத்த பிறவியைக் கொண்டு அடுத்த பிறவி அடையாமல்

செய்து கொள்ள வேண்டும்; அவ்வாறு செய்யவில்லையானல் அது அவலப் பிறப்பாயிழிந்து கொடிய கவலைக்கே இடமாம்.

எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான்
யாதினும் அரிது அரிது காண்
இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ
ஏதுவருமோ அறிகிலேன்
கண்ணகல் நிலத்துநான் உள்ளபொழுதே அருட்
ககனவட் டத்தில் நின்று
காலூன்றி நின்றுபொழி ஆனந்த முகிலொடு
கலந்துமதி அவசமுறவே
பண்ணுவது நன்மைஇந் நிலைபதியு மட்டுமே
பதியா யிருந்த தேகப்
பவுரிகுலை யாமலே கவுரிகுண் டலியாயி
பண்ணவிதன் அருளினலே
விண்ணிலவு மதியமுதம் ஒழியாது பொழியவே
வேண்டுவேன் உமதடிமைநான்
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே. (தாயுமானவ..

மானுடப் பிறவி பெறுதல் அரிது; பெற்றால் அது கொண் ஆன்ம வுய்தியைப் பெற வேண்டும்; அந்தப் பேறுதான் பே.. னந்தமாம் எனத் தாயுமானவர் இங்ஙனம் உரைத்துள்ளார்.

எண்ணிலாத நெடுங்காலம் எண்ணிலாத பலபிறவி
எடுத்தே இளைத்திங்கு அவைநீங்கி இம்மானிடத்தில் வந்தித்து
மண்ணின் வாழ்க்கை மெய்யாக மயங்கியுழன்றால் அடியேனுன்
மாறாப்பெருமை தரும்பாத வனசத்துணைஎன்று அடைவேனே?
கண்ணின் மணியே உயிர்க்களியே கருணைப்புயலே சுகக்கடலே
கச்சித்தாய் உச்சியைமோந்து கண்ணோடு அணைக்கும் திருத்தாளா
புண்ணியோர் எண்ணிய கரும்பே பொழிமும் மதவாரணமுகத்தோன்
பொற்பார் துணையே அற்புதனே போரூர் முருகப் பெருமானே!
(திருப்போரூர்ச்சந்நிதிமுறை.)

பிறவிகள் அளவிட லரியன; அவற்றுள் மனிதப் பிறவி பெறுதல் மிகவும் அரிது; அரிய அதனைப் பெற்றால் பெரியவனை நாடிப் பேரின்ப நிலையைப் பெற வேண்டும்; அதுதான் சிறந்த பிறவியின் உயர்ந்த பேறும்; அப் பேற்றை விரைந்து பெறுக எனச் சிதம்பர சுவாமிகள் இவ்வாறு குறித்துள்ளார்.

நினைவு செயல்களால் வினைகள் விளைகின்றன; அவை நல்லன வாயின் புண்ணியங்களாய் இன்பங்களை அருளுகின்றன; தீயன வாயின் பாவங்களாய்த் துன்பங்களே தருகின்றன. இருவினை களும் மருவியே மனிதன் பிறந்துள்ளான் ஆதலால் சுக துக்கங் களை எவ்வழியும் அவன் அனுபவிக்கின்றான். வினையால் விளைந்து வினைப் போகங்களை நுகர்ந்து வருதலால் தேகம் வினைப்போகம் என நேர்ந்தது. ஊழ்வினையே உயிர் வாழ்வில் உலாவி வருகிறது.

**Life is a bumper filled by fate. (Blacklock)**

உயிர் வாழ்வு விதியால் நிறைந்த ஒரு பாண்டம் என்னும் இது ஈண்டு ஓர்ந்து உணரவுரியது. அயல் நாட்டு அறிஞரும் வினையின் விளைவுகளை எண்ணி வருவது வியப்பை விளைத்து வருகிறது. கரும பிண்டம் மருமமாக் காண வந்தது.

மண்பாண்டம் போல் மனித தேகம் மருவியுளது; எப்படி யும் உடைந்து போய்விடும்; அது உடையு முன்னரே அடைய வேண்டியதை விரைந்து அடைந்து கொள்ள வேண்டும்.

மண்ணின் கலம்போல் மருவிய தேகமே
கண்ணிமைபோல் ஆவியைக் காத்துளகாண்-நண்ணியது
நிற்கும் பொழுதே நிலையான பேரின்பப்
பொற்குன்றம் காண்க புகுந்து.

இதன் பொருளைக் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து கொள்ளுக.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

பிறவி வினையின் வழி விளைந்தது.
அளவிட லரிய நிலைகளை யுடையது.
வினைப் போகங்களை நுகர வந்தது.
அது முடிந்தால் ஒழிந்து போவது.
மனிதப் பிறப்பு மகிமை வாய்ந்தது.
பழகிய வாசனை கிழமையா அமைந்தது.
நல்ல பழக்கம் நலம் பல தரும்.
கெட்ட வாசனை கேடே விளைக்கும்.
துயரங்களே பிறவியில் பெருகி யுள்ளன.
பிறவிப்பயன் பிறவா இன்பம் பெறுவதே.

கூக-வது பிறப்பு முற்றிற்று.

# தொண்ணூற்றிரண்டாம் அதிகாரம்

## இருப்பு

அஃதாவது பிறந்த பிராணிகள் இவ்வுலகில் இருந்து வாழும் இயல்பு. பிறப்பின் வழியே நிகழ்வது ஆதலால் அதன் பின் இது வைக்கப்பட்டது. உற்ற பிறப்பும் உரிய இருப்பும் சிறப்பு மிக வுடையன; ஆகவே குறிப்போடு கூர்ந்து அறிய வந்தன.

911. பிறந்து வளர்ந்து பெருகி யிருந்தார்
இறந்து படவே இசைந்தார்—சிறந்த
பயனை நினைந்து பரிந்து புரியார்
மயலில் இழிந்தார் மருண்டு. (க)

இ—ள்.

மனிதராய் இங்கே வந்து பிறந்தவர் வளர்ந்து வாழ்ந்து இறுதியில் இறந்துபோகின்றார்; சாகுமுன் உயிர்க்கு உறுதியை உணர்ந்து புரிந்தவர் உயர்ந்த கதியை அடைந்தார்; அவ்வாறு புரியாதவர் மையலில் அழுந்தி வெய்ய துயரில் விழுந்தார் என்க.

உலக வாழ்வில் மனித சமுதாயம் தனிமகிமையுடையதாய் உயர்ந்துள்ளது. அறிவு நலங்களோடு ஆற்றல்களும் பெருகி யிருத்தலால் யாண்டும் அது ஏற்றமாய் வருகிறது. வாழ்க்கை வசதிகளை வளமாக்கி நலமா வாழ்ந்து வரவே மானிட வாழ்வுகள் மாண்படைய நேர்ந்தன. அனுபவங்களாய் நேர்ந்த நிலைகள் யாவும் ஓர்ந்து சிந்தித்து உயர்ந்த உறுதி காண வாய்ந்தன.

அரிய பிறவியை அடைந்து வந்துள்ள மனிதன் அதற்கு உரிய பயனை உணர்ந்த அளவுதான் உயர்ந்து திகழ்கிறான். எய்திய பிறப்பு எதிரே இறப்பை நோக்கி நிற்றலால் செய்ய வுரியதை விரைந்து செய்து கொள்ள வேண்டும். உறுவதை உணர்ந்து புரிபவன் உறுதி நலங்களை இனிது அடைந்து கொள்ளுகிறான்; புரியாதவன் பரிதாபமா யிழிந்து போகிறான்.

இனிய உணவுகளை உண்டு அழகிய மங்கையரை மருவிச் சுகமா உறங்கி எழுவதே மனித வாழ்வின் இயல்புகளாய் யாண்டும் இயங்கி வருகின்றன. விலங்கினங்களிடமும் இவை துலங்கி நிற்கின்றன. உண்ணல் நண்ணல் உறங்கல் என இந்த

அளவிலேயே இருந்து இறந்துபோனால் அந்த மனித வாழ்வு மாட்டு வாழ்வே. காட்டு விலங்கினும் கடையானதே.

தட்டைகளைத் தின்று பெட்டைகளோடு கூடிக் குட்டிகள் இட்டு மாடுகளும் வாழுகின்றன; அவ்வகையிலேயே மனிதனும் வாழ்ந்தால் அவன் பிறந்த பிறப்புக்குச் சிறப்பு என்னும்? சிந்தனையில்லாத வாழ்வு நிந்தனையாய் இழிந்து கழிந்துஒழிகிறது.

எதையும் பகுத்து நோக்கி அறிகிற மனிதன் தனது பிறப்பின் பயனை ஊன்றி உணர்ந்து உய்தி பெறவில்லையானால் அது கொடிய மடமையான நெடிய கேடாம். அவகேடுகளை அறியாமல் உவகையோடு உழலுவது உலக மையலாய் நிலவி வருகிறது. மருளான மயக்கங்கள் இருளா இயங்குகின்றன.

மானுடப் பிறவி மருவுதல் அரிது; இந்த அரிய பேற்றை மருவி வந்தவன் எவ்வழியும் வெவ்விய துயரங்கள் அணுகாமல் ஆன்மாவை மேன்மையான நிலையில் உயர்த்தி வர வேண்டும்; அவ்வாறு வருபவனே பிறவியின் பயனைப் பெற்றவனாகிறான். உயர்ந்த குறிக்கோள் பொருந்தியதே சிறந்த வாழ்வாம்; உள்ளம் தெளிந்து உண்மையை உணர்வதால் நன்மைகள் வருகின்றன. குடலின் பசியை நீக்கி உடலை வளர்க்க மட்டும் மனிதன் பிறக்கவில்லை; துயர் நீங்கி உயிர் உய்யும்படி செய்யவே உயர்ந்த பிறவியை அடைந்து வந்திருக்கிறான். உணர்வு நலம் கனிந்த இந்தத் தேகத்திலிருந்து விவேகமாய் உறுதி நிலையை அடையவில்லையானால் பிறப்பும் இருப்பும் வாழ்வும் பழுதுபட்டுப் பாழாய் ஒழிகின்றன. இழிவாழ்வுகள் பழிபாவங்களாகின்றன.

அல்லல் யாதும் இல்லாமல் நல்ல சுகங்களே யாண்டும் வேண்டும் என்று எல்லாரும் விரும்புகின்றனர். தாம் கருதியபடி உறுதியா அடைய வுரியதைச் செய்த போதுதான். அது எய்த வருகிறது. சாதனம் இன்றி எதையும் சாதிக்க இயலாது. எளிதே அடைய முடியாத அரிய பிறவியை உரிமையா மருவியிருந்தும் உயிர்க்கு உறுதி நலனை உணராமல் துயர்க்கே வழி செய்து இழி மயலாய் ஒழிவது அழிதுயரான முழு மூடமாம்.

இந்த மானுடப் பிறவிதான் இடரெலாம் நீங்கி
அந்தம் இல்லதோர் அதிசய நிலையினை அடைய

வந்ததாம்இதை மதியுடன் பயன்படுத் தாரேல்
எந்த நாளுமே இழிதுயர் பழிவழி இழிந்தார்.

மதி நலமுடைய பிறவியில் கதி நலம் காணவில்லையானால் பின்பு அதனை அடைவது எவ்வழியும் அரிதாம். தனது இனிய உயிர்க்கு உண்மையாக நன்மையை நாடிக் கொள்ளாதபோது அந்த மனிதப் பிறவி அவலமாய் இழிவுறுகிறது. ஈண்டு அருமையா அடைந்த பிறப்பால் உரிமையா அடையவுரியது மீண்டும் பிறவாமையே. பிறவாத பெருமை என்றும் இறவாத இன்பம் தரும் ஆதலால் அதனை இழந்து விடுவது இழிந்த மடமையாம்.

அடையவேண் டியது அடைந்து மேல் துயரம்
அற்று இன்பம் அளவிலாதாய்க்
கடையதாம் தருவிலங்கு பறவைகள்போல்
வீணாள்கள் கழியா தாகித்
தடையிலா மனனத்தால் வாழ்வதே
உயர்வாணாள்; சனனம் தீர்ந்தோர்
உடையபிறப்பு உயர்ந்ததாம்;கிழவேச
ரிப்பிறப்பாம் ஒழிந்த எல்லாம். (ஞானவாசிட்டம்)

பிறந்த பிறப்பால் பெற வுரியதை இது வரைந்து காட்டியுள்ளது. பிறவித் துயரம் பின்பு தொடராதபடி புனிதமா வாழ்வதே வாழ்வாம்; அல்லாத யாவும் இழிவான தாழ்வுடையனவேயாம். வேசரி=கழுதை. பிறப்பை நீக்க முயலாமல் மடமையாய்க் களித்து வாழ்பவரது இருப்பு கிழக்கழுதைப் பிறப்பாம் என இளித்துக் குறித்தது அரிய பயன் இழந்து நிற்கும் பெரிய பழி தெளிய வந்தது. துயர் ஒழிய வாழ்வதே உயர் நலமாம்.

ஈனமார் பிறவி எல்லாம் இகந்துஉயர் மனிதன் ஆகி
மானமார் மாண்பில் வந்தும் மதிநலம் மருவி ஓர்ந்தே
ஊனமார் துயரம் நீங்கி உயிர்க்கிதம் புரியா னாகில்
கானமார் விலங்கிற் கீழாய்க் கழிந்தவன் ஒழிவன் அன்றே.

உயர்ந்த மனிதப் பிறவியை அடைந்தும் அதனால் அடையவுரியதை அடையாமையால் அது மிகவும் கடையாய் இழிந்தது.

மாசு படியா மனமருவி மாதேவன்
தேசு படிக தெளிந்து

612. ஆட்டும் வினைப்படியே ஆடுகின்ற மானுடங்கள்
வீட்டுநினை வின்றி வெறிகொண்டு—மாட்டு
மதியா யிழிந்து மறுகி யுழந்து
பதிதோறும் நொந்து படும். (உ)

இ—ள்

வினை ஆட்டிய படியே ஆடி வருகின்ற மானிடர்கள் பேரின்ப வீட்டை நினையாமல் பேயராய் உழலுகின்றார்; அறிவிலிகளாய் வெறிகொண்டு திரிகிற அவர் யாண்டும் துயரமே கண்டு எவ்வழியும் பரிந்து துடித்து இரிந்து மடிகின்றார் என்க.

பாவைக் கூத்தைப் போல் சீவக் கூத்துகளும் நேர்ந்திருக்கின்றன. ஒருவன் ஆட்டுகின்ற படியே பாவைகள் ஆடுகின்றன. சீவர்களும் அவ்வாறே வினைகள் ஆட்டியவாறே ஆடி வருகின்றனர். மனிதனுடைய வரவு செலவுகளும் நினைவு செயல்களும் வினையின் வழியே விரிந்து எவ்வழியும் தொடர்ந்து நிகழ்கின்றன. சீவகோடிகளின் இயக்கங்கள் கருமங்களையும் தருமங்களையும் மருமங்களாக் காட்டி வருகின்றன.

இருவினைகளின் படியே பிறவிகள் உருவாகி வந்துள்ளன; ஆகவே இன்பமும் துன்பமும் வாழ்வில் ஊடுருவி யாண்டும் மருவி நிற்கின்றன. நல்வினை நன்கு மிகுந்த பொழுதுதான் ஞானத் தெளிவு தோன்றுகிறது; தோன்றவே வினைகளின் விளைவுகளையும் ஈனத் தொடர்புகளையும் உணர்ந்து மேலோர் சாலவும் வருந்துகின்றனர். அவருடைய உரைகள் உணர்வுகளை அருளுகின்றன.

வினைப்பிறவி என்கின்ற வேதனையில் அகப்பட்டுத்
தனைச்சிறிதும் நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை
எனைப்பெரிதும் ஆட்கொண்டென் பிறப்பறுத்த இணையிலியை
அனைத்துலகும் தொழுந்தில்லை அம்பலத்தே கண்டேனே.
[திருவாசகம்]

தமது ஆன்ம அனுபவத்தை மாணிக்கவாசகர் இவ்வாறு வரைந்து காட்டியிருக்கிறார். பிறவி வினையால் விளைந்தது; வேதனைகள் நிறைந்தது; அதிலிருந்து நீங்கி இறைவன் அருளால் உய்ந்தேன் என உணர்த்தியுள்ளமை ஊன்றி உணரவுரியது.

கொடிய வெவ்வினைக் கூற்றைத் துரந்திடும்
அடிக ளாம்பொருளே நினக்கு அன்பின்றிப்

படியில் ஏழைமை பற்றுகின் றேன்வெறும்
மிடிய னேன்கதி மேவும் விதியின்றே. (1)

விதியை யும்விதித் தென்னை விதித்திட்ட
மதியை யும்விதித் தம்மதி மாயையில்
பதிய வைத்த பசுபதி நின்னருட்
கதியை எப்படிக் கண்டு களிப்பதே? (2)

(தாயுமானவர்)

வினை விதிகளின் நிலைகளை விளக்கிப் பரமபதியை நோக்கித் தாயுமானவர் இவ்வாறு பரிவோடு முறையிட்டிருக்கிறார்.

தாம் புரிந்த வினைகளின்படியே பிறவிகளை அடைந்து யாவரும் உழலுகின்றனர். பிறவித்துயர்களிலிருந்து நீங்க வேண்டுமானால் மனம் தூயராய் ஈசனை நினைந்து உயரவேண்டும் என்பது ஈண்டு அறிய வந்தது. உண்மை உணர்வு ஒளி மிகுந்து உதயமாயபோது அரிய பல நன்மைகள் நேரே தெளிவாய்த்தெரிகின்றன.

மனிதனுடைய நினைவு செயல்களால் வினைகள் விளைகின்றன; அவற்றின் நலம் தீங்குகளுக்குத் தக்கபடி சுக துக்கங்கள் உளவாகின்றன. கருமங்களின் விளைவுகளைச் சீவகோடிகள் யாண்டும் தொடர்ந்து மருமங்களா நுகர்ந்து வருகின்றன.

இருவினை என்ப மனமுதல் மூன்றின்
இயற்றுறும் இதம்அகி தங்கள்
பெருவினைப் பயன்கள் புண்ணிய பாவம்
பேசுமிக் கருமத்தின் பயன்கள்
மருவிடும் இன்ப துன்பமாம் அவைதாம்
மாய்வின்அவ் இருவினைதோற்றும்
ஒருதனு விளைப்ப மற்றொரு தனுவின்
உண்பபடும் கெட்டும்கே டிலவாய். (1)

இன்பமே பயக்கும் புண்ணியம் எல்லாம்;
இழிதரு பாவங்கள் எல்லாம்
துன்பமே பயக்கும்; புண்ணிய பாவம்
தொக்கதம் பயன்தராது ஒழியா;
கொன்படு வினைகள் ஒழியிரு வினையும்
குலாவுறு புண்ணிய பாவ
வன்புறு பயனை அப்பயன் போல
வழங்குறாது ஒழிவகை யிலையே. (2)

(தணிகைப்புராணம்)

வினையின் நிலைகளை இவை தெளிவா விளக்கி யுள்ளன. பொருள்களை நுனித்து உணர்ந்து கொள்க. மனிதன் செய்கிற இனிய நல்வினையால் இன்பம் விளைகிறது; கொடிய தீவினையால் துன்பம்வருகிறது. இருவினையும் தம் பயனை எவ்வகையும் ஊட்டி விடுதலால் சுகதுக்கங்கள் யாண்டும் நீண்டு நிலவுகின்றன.

வினைப்பயன் வந்தக்கால் வெய்ய வுயிரா
மனத்தின் அழியுமாம் பேதை---நினைத்ததனைத்
தொல்லையது என்றுணர் வாரே தடுமாற்றத்து
எல்லை இகந்துஒருவு வார். [நாலடி, 33]

அல்லல் நேர்ந்தால் அது தாம் முன்பு செய்த பொல்லா வினைப்பயன் என்றே நல்ல அறிவாளிகள் அமைதியாய் அனுபவிப்பார்; அத்தகைய வித்தக விவேகிகளே வினைகள் நீங்கி மேலான கதியை மேவுவர் என இது குறித்துள்ளது.

நல்வினைகளைவிடத் தீவினைகளையே அதிகம் செய்து வருதலால் மனித வாழ்வில் யாண்டும் துன்பங்களே நீண்டு நிறைந்து வருகின்றன. அல்லல் வாழ்வு என்று சொல்லி வருவதால் அதன் அவல நிலைகளையும் கவலைப் புலைகளையும் தெளிந்து கொள்ளலாம்.

For Fate has wove the thread of life with pain,
And twins, ev'n from the birth, are misery and man.
(Pope)

அல்லல் ஆகிய நூலால் வாழ்வை விதி நெய்திருக்கிறது; ஆகவே பிறப்பிலிருந்தே துன்பமும் மனிதனும் இரட்டைக் குழந்தைகளாய் இணைந்துள்ளனர் என ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் பாடியிருக்கிறார். துயரமே உயிர் வாழ்வாயுள்ளது.

ஒருவன் புரிந்த வினையின்படியே பலன்கள் அவனுக்கு விளைந்து வருகின்றன. அவற்றிற்கு அதிகமா அயலே விழைவது மயலாய் முடிகிறது. வேலை அளவே கூலி; வினையளவே வாழ்வு என்பது பழமொழியாய் வந்துளதால் நிலைமையை அறியலாம்.

Fate laughs at probabilities. (Lytton)

மனிதனது நசையான நம்பிக்கைகளைக் கண்டு விதி சிரிக்கிறது என்னும் இது இங்கே குறிப்போடு சிந்திக்கவுரியது.

உள்ளம் புனிதமாய் நல்லதை நாடிச்செய்; அந்த நல்வினையால் எல்லா இன்ப நலங்களும் உன்னை நேரே நாடி வரும்.

913. உண்டு களிப்பார் உறுதி நலமொன்றும்
கண்டு களியார் களிப்பெல்லாம்—மண்டும்
பழியும் இழிவும் படர்ந்தே வருமால்
அழிவே அவர்வாழ்வு அவம். (௩)

இ—ள்.

வயிறு ஆர உண்டு களிக்கிறார்; துயர்தீர உயர்நிலை யாதும் ஓர்ந்து காணாமல் பழியும் இழிவும் சேர்ந்து கண்டு பாழே அழிகின்றார்; பழுதான இவர் வாழ்வு முழுதும் பரிதாபமாம் என்க.

அறிவு நலங்கள் அமைந்திருந்தும் பெரிய உறுதி நிலைகளைக் கருதியுணராமல் மனிதர் மருளராய் இழிந்து காலத்தை வீணே கழித்து ஒழிகின்றார். வாழ்வு நல்ல பண்பாடுகளோடு கலந்த அளவுதான் சிறந்த இன்பம் உடையதாய் உயர்ந்த மேன்மைகளை அடைந்து வருகிறது. நெறியோடு புனிதமாய் வாழுகின்ற மனிதன் இவ்வுலகிலேயே இனிய பல நன்மைகளை அடைகிறான்; மேலான ஒரு தேவனா அவன் மதிக்கப் படுகிறான்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும். (குறள், 50)

ஒரு மனிதன் இவ்வுலகில் எவ்வாறு வாழ வேண்டும் என்பதைத் தேவர் இவ்வாறு விளக்கியிருக்கிறார். விளக்கம் விநயம் மிகவுடையது. மனிதனைத் தெய்வம் ஆக்கும் மந்திரம் இங்கே சிந்தனைக்கு வந்துள்ளது. வாழ்வாங்கு வாழுக என நுணுக்கமாகவும் சுருக்கமாகவும் குறித்திருக்கிறார். இந்த வாழ்க்கைச் சூத்திரத்திற்கு உரிய விரிவான பொருள்களை ஒவ்வொரு மனிதனும் கூர்ந்து ஓர்ந்து கொள்ள நேர்ந்து நிற்கின்றான்.

தன்னுடைய வாழ்க்கை கண்ணியமான புண்ணிய நீர்மை தோய்ந்து வர எவன் ஆற்றி வருகிறானோ அவன் விண்ணவனாய் விளங்கி வருகிறான். தான் செய்யும் கருமங்களுள் தருமங்கள் தழுவிவரின் அந்த மனிதனைத் தெய்வமாக்கும் மருமங்கள் அங்கே மருவியுள்ளன. செயல்புனிதமாக மனிதன் உயர்கிறான்.

வையத்துள் வாழ்பவர் மனிதர்.
வானத்துள் வாழ்பவர் தேவர்,

உலகில் வாழும் மனிதன் நல்ல சிந்தனையாளனாய் அறிவும் அன்பும் பெருகி அறநீர்மைகள் மருவி நெறிமுறையே ஒழுகி வரின் இகமும் பரமும் அவனை உயர்வா மதித்து உவந்து கொண்டாடும்; மறுமையில் தேவனாய் அவன் மகிமை மிகப்பெறுவான். இந்த அரிய பேற்றை இழந்து கழிவது அவலப் பிறப்பாய் இழிந்து ஒழியும். தன் பிறப்பை இழிவாக்கின் அழிதுயரேயாம்.

கண்டபடி களித்துத் திரிவது மிருகங்களின் இயல்பாம்; அறிவுடைய மனிதர் அவ்வாறு எவ்வகையிலும் திரியலாகாது.

உறுதி நலம் என்றது உயிர் உயர்ந்து தெய்வீக நிலையடையும் தலைமையை. அமைந்த ஆயுள் அளவே உடம்புள் உயிர் இருக்க முடியும்; அதற்குள் உண்மையான உறுதிநலனைத் தேடிக் கொள்ள வேண்டும்; தேடாது ஒழியின் அவ்வாழ்வு கேடான பாழாய் இழிந்து படுதுயரங்களையே நெடிது விளைத்து வரும்.

பொறிகளில் வெறிகொண்டபோது மனிதன் நெறிகேடன் ஆகிறான்; ஆகவே அவன் வாழ்வில் பாவங்கள் விளைகின்றன. ஒரு தீயவனால் உலகில் பல தீமைகள் உளவாகின்றன.

உள்ளம் கெட்டபொழுது அந்த மனிதன் எல்லாரையும் கெடுக்க நேர்கிறான். தீய தூர்த்தர்களால் எவ்வளவோ பெண்கள் தீயராய் இழிந்துள்ளனர். காமப் பித்தர்கள் இல்லையானால் எத்தனையோ உத்தமிகளை இந்நாடு உரிமையாப் பெற்றுப் பெருமை அடைந்திருக்கும். பொல்லாத பொறி வெறியரால் நல்லார்கள் அரியராயிருப்பது நாட்டின் கேட்டைக் காட்டி நிற்கிறது.

பெண்களுக்கு நல்லார் என்று ஒரு பெயர் அமைந்துள்ளது. அவரது நன்மையும் தன்மையும் மென்மையும் மனித வாழ்க்கையைமேன்மைப்படுத்தியாண்டும் இனிமைதோய்ந்துவருகின்றன.

"நல்லார்கள் எல்லாரும் நல்லவரே தன்மையால்
வல்லாரால் கேடு படாராயின்---நல்லறிவு
ஆண்மக்கள் பற்பலர்க்கே உண்டாகும் பெண்டிரும்
மாண்பு கெடுக்கா விடின்." [ஔவையார்]

வன்மையான தன்மையுடைய ஆடவர்கள் வலிந்து கேடு செய்யாதிருந்தால் நல்லார் என்னும் பெயரைத் தமக்கு இயல்பாக வுடைய பெண்கள் எல்லாரும் எவ்வழியும் நல்லவர் ஆகவே

இருப்பர் என ஔவையார் இவ்வாறு அதிசயமாக் குறித்திருக்கிறார். குறிப்பு கூர்ந்து நோக்கி ஓர்ந்து உணர வுரியது.

நல்லார் எனமகளிர் நானிலத்தில் நின்றாரேல்
பொல்லார் எவர்காண் புகல். (அரும்பொருளமுதம்)

நல்லாரைக் கெடுப்பவர் எல்லாரும் பொல்லாதவரே ஆகின்றார்; ஆகவே மனிதசமுதாயத்தை மாசுபடுத்தும் நீசராய் அவர் நாசம் உறுகின்றார். ஆண்மகனுக்கு ஒழுக்கமும் பெண்மகளுக்குக் கற்பும் அற்புத மகிமைகளைப் பொற்புடன் அருளுகின்றன.

"So dear to heaven is saintly chastity,
That when a soul is found sincerely so,
A thousand liveried angels lackey her." [Comus]

புனிதமான கற்பு பரமபதத்துக்கு மிகவும் பிரியமாகிறது; ஒரு உயிரை உண்மையா அவ்வாறு காணும்பொழுது ஆயிரக் கணக்கான தேவதைகள் அவளுக்குப் பணிவாய் ஏவல் செய்கின்றன என்று மில்ட்டன் என்னும் ஆங்கிலக் கவிஞர் இவ்வாறு பாடியிருக்கிறார். இத்தகைய கற்புடையவர் இருந்தால் அந்த நாடு எத்தகைய மேன்மையுடையதாம் என்பதை உய்த்துணர்ந்து கொள்ளலாம். ஆடவரும் இவ்வண்ணம் கற்பு அமைந்திருந்தால் அதிசய மகிமைகளை எளிதே அடையலாம்.

அரிய பேறுகள் அனைத்தையும் எளிதினில் அடைந்து
பெரிய மேன்மைகள் பெறஒரு வழியுளது அதுதான்
உரிய தன்மனை அன்றிமற்று உள்ளவர் எல்லாம்
பிரியம் மேவிய தாய்தங்கை என்று பேணுதலே.
(வீரபாண்டியம்)

இதனை உரிமையோடு கருதி ஓர்ந்து உறுதியா ஒழுகுக.

---

914. செத்து மடியுமுன்னே சீவனுக் கோருறுதி
ஒத்துணர்ந்து கொள்ளாமல் ஊனமாய்—நித்தமும்
பாழே கழித்துப் படுதுயர்க்கே ஆளாகி
வாழல் கொடிய வசை. (௪)

இ—ள்.

உடல் அழிந்து ஒழியுமுன் உயிர்க்கு உறுதியை உரிமையுடன் அடைந்து கொள்ள வேண்டும்; அங்ஙனம் அடையாமல்,

நாளை வீணே கழித்து வெய்ய துயர்க்கே ஆளாகி வாழ்வது கொடிய வசையாம் என்க.

ஆன்ம நலனை அடைவதே பிறவியின் மேன்மையான பலன்; விழுமிய அதனைப் பெறவில்லையானல் இழிவான பழியுடைய தாய் வாழ்வு தாழ்வாம். மிருகம் பறவை முதலிய இழி பிறவி களில் உயர்வான பலன்களை அடைய முடியா; அருமையான இந்த மனிதப் பிறவிதான் இருமை நிலைகளையும் தெளிவா அறிந்து எவ்வழியும் இனிது முயன்று எளிதே உய்திபெற வுரியது.

அரிய வழியில் அடைந்தது அவலமாய் இழிந்து போகாத படி செய்து கொள்வதே தெளிந்த ஞானமாம். பேறல் அரியது; இறல் எளியது எனப் பிறவி அமைந்துள்ளது. நீர் மேல் குமிழி, வானிடுவில் என மானிட வாழ்வைக் கூறுவது காவிய மரபாய் வந்தது. நிலையாதவாழ்வில்நிலையானதை நேர்வதுதலையாயபயன்.

பிறந்து வாழ்ந்து வருகிற ஒவ்வொரு பிராணியின் தலையிலும் சாவு தலைமையாய்ச் சார்ந்திருக்கிறது. அந்த முடிவு நேரு முன்னரே முடிவான பயனை அடைந்து கொள்ள வேண்டும்.

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும். [குறள், 335]

பேசமுடியாமல் நாவடங்கி விக்கிச் சிக்கிச் சாகு முன்ன மே உன் உயிர்க்கு நல்லதைச் செய்து கொள்ளுக எனத் தேவர் இவ்வாறு சீவர்களுக்குப் போதித்திருக்கிருர். இறந்துபடுவோம் என்னும் உணர்ச்சி ஒருவனுக்குப் பிறந்த பயனை விரைந்து பெறச் செய்யும் ஆதலால் இறப்பு நிலை சிறப்பாக் குறிக்க வந்தது. சாதலை உணர்வது ஆதலை அடைவதாம்.

சுடுகாடு மனிதனுக்கு மதிநலம் ஊட்டி முன் எச்சரிக்கை யாய் முடிவைக் காட்டுகிறது. அந்த உண்மையைக் கண்டு உணர்ந்தால் தனக்கு நன்மையை அவன் காண நேர்கின்றான். மயானவைராக்கியம் என்பது முதுமொழியாய் வந்துள்ளது. இறந்துபட்டுள்ள இழவுகளை விழி எதிரே விளக்கி மனிதனுக்கு ஒரு தெளிவை அது அருளி வருவதை இம்மொழியால் அறிந்து கொள்ளலாம். ஈம நினைவு சேம நலனை நேமமா அருளுகிறது.

களரி பரந்து கள்ளி போகிப்
பகலும் கூவும் கூகையொடு பிறழ்வா

ஈம விளக்கில் பேஎய் மகளிரொடு
அஞ்சுவந் தன்றிம் மஞ்சுபடு முதுகாடு
நெஞ்சமர் காதலர் அழுத கண்ணீர்
என்புபடு சுடலை வெண்ணீறு அவிப்ப
எல்லார் புறனும் தான்கண்டு உலகத்து
மன்பதைக்கு எல்லாம் தானாய்த்
தன்புறம் காண்போர்க் காண்பறி யாதே. (புறம், 356)

ஒரு சுடுகாட்டை வரைந்து காட்டிக் கதையங் கண்ணனார் என்னும் சங்கப் புலவர் உலகத்துக்கு இங்ஙனம் உறுதிநலனை உணர்த்தியிருக்கிறார். உலகத்தில் பிறந்த மக்களுக்கெல்லாம் தான் ஒரு சிறந்த நிலையம் ஆகி எல்லாருடைய முடிவுகளையும் நேரே கண்டு தன் முடிவை யாரும் காணாதபடி அந்த மயானம் இருந்துள்ளது. களரி = காடு. ஈமவிளக்கு = பிணஞ்சுடு விறகில் பிறங்கிய தீ. ஆறறிவுடைய மனிதனே! ஓரறிவும் இல்லாத சுடுகாடும் உனக்குப் பேரறிவைக் காட்டியுள்ளது; அதன் உண்மை நிலையைக் கண்டு தெளிந்து நன்மையை நாடிக் கொள்ளுக. நீ பிணமாய் வீழுமுன் நல்ல மணமாய் உயருக; உயராமல் அயர்ந்து நின்றால் என்றும் கொடிய துயராம் எனக் கவி சுவையாக் குறித்துள்ளார். குறிப்புகள் கூர்ந்து சிந்திக்க வுரியன.

வெள்ளின் மாலையும் விரிந்தவெண் தலைகளும் கரிந்த
கொள்ளி மாலையும் கொடிபடு கூறையும் அகலும்
பள்ளி மாறிய பாடையும் எலும்புமே பரந்து
கள்ளி யாரிடைக் கலந்ததோர் தோற்றமும் கடிதே. (1)

காக்கை ஆர்ப்பன கழுதுதம் கிளையொடு கதறித்
தூக்கள் ஈர்ப்பன தொடர்ந்தபல் பிணங்களும் தூங்கச்
சேக்கை கொள்வன செஞ்செவி எருவையும் மருவி
யாக்கை கொண்டவர்க்கு அணைதலுக் கரிதது பெரிதும்.
[நீலகேசி]

செத்த சவங்களுக்கு இடமான சுடுகாட்டை இவை வித்தக விநயமா விளக்கி யுள்ளன. நீ சாகுமுன் உன் உயிர்க்கு ஆக வேண்டியதை விவேகமா ஆற்றிக் கொள்க என்னும் போதனைக் குறிப்புகள் இங்கே சாதனையோடு கூர்ந்து நோக்க வந்தன.

இறந்து போகவே பிறந்திருக்கின்ற மனிதன் இறப்பு நேருமுன் பிறப்பின் பயனைப் பெறுவது பெரிய கடமையா மருவி

யுளது. அதனை அடைய வில்லையானல் அவனுடைய வாழ்வு மடமையாய் இழிந்து எவ்வழியும் வெய்ய துயரமா முடிகிறது.

நல்ல பழக்கங்களும் மேலான சிந்தனைகளும் மனிதனைப் புனிதனுக்கி உயர்த்துகின்றன. உள்ளம் நல்லதாய் உயர எல்லா மேன்மைகளும் எளிதே வருகின்றன. அவ்வரவால் பிறப்பும் இருப்பும் பெருமை மிகப்பெற்று இருமையும் இன்புறுகின்றன.

---

915. தன்னுயிர்க்கு மேன்மை தனைநாடி எவ்வழியும்
மன்னுயிர்க்கு நன்மை மருவியே—பொன்னுயிராய்
வாழ்ந்து வருவாரே வாழ்வார் வழுவினர்
வீழ்ந்தார் இழிவாய் விளிந்து. (ரு)

இ—ள்.

பிறவுயிர்களுக்கு இரங்கி இதம் புரிந்து தம் உயிர்க்கு விழுமிய மேன்மைகளைத் தேடிக்கொள்பவர் எவ்வழியும் திவ்விய நிலையில் வாழ்ந்து வருகின்றார்; அல்லாதவர் இழிவாய் வீழ்ந்து ஒழிகின்றார்; அவ்வாறு ஒழிந்து போகாமல் தெளிந்து வாழ்வது நலமாம்.

தான் பிறர் என்னும் வேறுபாடுகள் மானச மருமங்களாய் மருவியிருக்கின்றன. அருளும் அயலும் எவ்வழியும் பெருகி வந்துள்ளன. தனது உடல் தாய் தந்தையர் மனைவி மக்கள ஒக்கல் உறவுகள் பக்கம் படர்ந்து நிற்கின்றன. பழக்கமாய்த் தொடர்ந்து வந்தன யாவும் அயலே அடர்ந்துள்ளன. உரிமையாய் உற்றவரிடமாத்திரம் யாவரும் பிரியம் கொண்டாடுகின்றனர்; மற்றவரிடம் அவ்வாறு புரியாமல் பொதுவாய் நடந்து வருகின்றனர். பழகிய வாசனைகளே கிழமை தோய்ந்து கேண்மை வாய்ந்து யாண்டும் வளமையாய் நீண்டு வந்துள்ளன.

பிற உயிர்களுக்கு இரங்கி அருளும்பொழுது அந்த மனிதன் பெரியவனாய் உயர்ந்து ஒளிபெறுகின்றான். உரைகளில் இனிமையும் செயல்களில் இதமும் கனிந்து வரும் அளவு அவனிடம் உயர் நிலைகள் சுரந்து உறுதி நலங்கள் ஓங்கி வருகின்றன.

செல்வம் கல்வி அறிவுகளால் ஒருவன் உயர்ந்தபோது அந்த வகைகளில் தாழ்ந்துள்ளவர்க்கு உதவி செய்வது அவனுக்குக் கடமை ஆகின்றது. உயர்ந்த மலையிலுள்ள நீர் தாழ்ந்த நதிகளில்

பாய்ந்து பயிர்களுக்கு உதவுதல்போல் மேலோர் விதிமுறையே உயிர்களுக்கு உதவுகின்றனர். உறவினர் அயலினர் பெரியவர் சிறியவர் உயர்ந்தவர் இழிந்தவர் என்று வேறுபாடுகள் யாதும் காணுமல் எவ்வுயிரையும் பேரருளோடு பேணி வருபவனே திவ்விய நிலையை நேரே காணியாக் காணுகிருன்.

உடலுறுப் புகள்மேல் கீழ்என்று உன்னிடாது ஓம்பல்போலும்
தடமலை கொண்ட நீரைத் தாழ்தரைக்கு அளித்தல் போலும்
தொடர்புறு மேலோர் தங்கைத் தோய்நிதியாவும் தாழ்ந்தோர்க்கு
இடஎனக் கடவுள் ஈந்தான் எனநினைந் திடுவர்மாதோ.

(நீதிநூல்)

இதனை ஈண்டு நினைந்து நீதிகளைத் தெளிந்து கொள்ள வேண்டும்.

பிற உயிர்களுக்கு இதமாய் உதவி செய்து வரும் அளவே ஒருவனுடைய வாழ்வு புண்ணியம் உடையதாய்ப் பொலிவடைந்து வருகிறது. ஆன்மாக்கள் பரமான்மாவின் உறவினங்கள் ஆதலால் சீவகோடிகளுக்கு இதம் புரிபவனைத் தேவதேவன் விழைந்து நோக்கி உவந்து தழுவிக் கொள்கிருன். உள்ளம் இரங்கி உதவி வருந்தோறும் அவ்வுயிர் உயர்ந்த பரம நீர்மையை மருவி மிளிர்கிறது. தண்ணளியுள் புண்ணியம் விளைகிறது.

“அருளும் அன்பும் ஆருயிர் ஓம்பும்
ஒருபெரும் பூட்கையும ஒழியா நோன்பின்
பகவன்.” [மணிமேகலை, 3]

புத்தரது நீர்மையை இவ்வாறு ஒரு தவ மகள் குறித்திருக்கிருள். உலக மக்களுடைய அவல நிலைகளைக் கண்டு கவலை கொண்டு இரங்கி அத்துன்பங்களை நீக்கும் பொருட்டே தமது இன்ப நிலையமான அரச வாழ்வை அடியோடு துறந்து அடவி புகுந்து அருந்தவம் புரிந்த பெருந்தகை ஆதலால் இவரது சீவதயையை வியந்து ஞாலம் முழுவதும் சாலவும் புகழ்ந்து போற்றுகிறது. ஆருயிர்க்கு அருளுவது அதிசய நீர்மையாம்.

தன்னுயிர் ஓம்பாது தண்ணளி நிறைந்து
மன்னுயிர் ஓம்பிய மாதவன்.

என மகிமை பெற்றிருத்தலால் இவருடைய நீர்மை சீர்மைகளை நேரே தெரிந்து நெஞ்சம் வியந்து கொள்ளுகிருேம்.

சிறந்த மனிதப் பிறவியை அடைந்தது உயர்ந்த கதிகளை அடைந்து கொள்ளவேயாம்; அறிவும் அன்பும் பரிவும் பண்பும் அதிசய நலங்களை அருளுகின்றன. இந்த இனிய இயல்புகள் மருவியபொழுது மனிதன் புனிதனாய் உயர்ந்து தனி நிலையில் விளங்கி எவ்வுயிர்க்கும் எவ்வழியும் இதமே செய்கிறான்.

உதவியாளனை உலகம் உவந்து தொழுகிறது; இதம் இல்லாதவனை எள்ளி இகழ்கின்றது. இனிய உதவியால் மனிதன் தனிமகிமைகளை அடைதலால் புனிதனாய்ப்பொலிந்து திகழ்கிறான்.

முனிவினும் நல்குவர் மூதறிஞர் உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர்---நனிவிளைவில்
காயினும் ஆகும் கதலிதான் எட்டிபழுத்து
ஆயினும் ஆமோ அறை. (நன்னெறி, 28)

உபகாரிகள் நயவர்; அஃது இல்லாதவர் கயவர் என இது காட்டியுளது. இனிய தீங்கனியும் எட்டியும் என்று சுட்டியது முறையே அவருடைய மேன்மை கீழ்மைகளை ஊன்றி உணர.

ஜீவர்களுக்கு இரங்கி அருள்பவன் திவ்விய நிலையில் சிறந்து திகழ்கிறான்; அந்த இனிய நீர்மை இல்லையேல் மனித வாழ்வு இன்னாததாய் இழிகின்றது; அவ்வாறு இழிவு நேராதபடி எவ்வழியும் உரிய வாழ்வைப் புனிதமாக்கி இனியனாய் உயர்க.

---

916. பொய்காட்டி உள்ளம் புரைக்காட்டப் பூதலத்தில்
மெய்காட்டி ஓர்மகன் மேவிநிற்றல்—கைகாட்டி
மாமரம்போல் ஆமவன்றான் மக்கள் உருவமைந்த
பாமரமென் றோர்க பரிந்து. (சு)

இ-ள்.

உள்ளம் புன்மையாய் உணர்வுநலம் இன்றி இவ்வுலகில் ஒருவன் ஓங்கி நிற்பது மனித உருவில் மருவியுள்ள நெடிய ஒரு கைகாட்டி மரத்தின் பாங்கேயாம் என்க.

மனிதப் பிறவி பெறுதல் அரிது ஆயினும் அந்தப்பிறப்பை அடைந்து வந்துள்ள மக்கள் பலர் மாக்கள் போலவே இழிந்து உழல்கின்றனர். அறிவுநலம் குன்றி அவல நிலைகளில் அலைந்து கண்டதையே கண்டு உண்டதையே உண்டு வீணே வளர்ந்து

நீண்டு பூமிக்குச் சுமைகளாய் நின்று பிறவிப்பயன் யாதும் காணுமல் அழிந்து ஒழிந்து போகின்றுர்.

இழிந்த மிருகங்களின் இயல்பும் உயர்ந்த மனிதஉருவமும் மருவி யிருத்தலால் மானிடர் என்று மதிக்க முடியாமலே பலர் ஈனமடைந்து ஊனமாய் உழந்து திரிகின்றனர்.

பலருடைய செயல் இயல்கள் அவருடைய பழவினை நிலைகளை வெளியிடுகின்றன. மனித விலங்குகளாய் இயங்கி வருவது வியந்து காண வருகிறது. மாட்டுப்பாடும் மனிதவாழ்வும் கூட்டுறவுகளாய்க் கூடி நிற்கின்றன. முன்னம் நல்ல அறிவாளிகளை மதித்துப் போற்றுதவர் பின்னர்ப் பொல்லாத மடையர்களாய்ப் புலையடைய நேர்ந்தனர். கரும வினைவுகள் மருமமாய்த் தொடர்ந்து எவ்வழியும் அடர்ந்து படர்கின்றன- விதி எற்றித் தள்ளிய படியே சீவர்கள வீழ்ந்து வாழ்ந்து வருகின்றனர்.

மதிநலம் உடையரை மதித்திடாதவர்
கதிநலம் இழந்துபின் கடையர் ஆகுவர்;
விதிமுறை ஒழுகிய விழுமி யோர்களைத்
துதிபுரி யாதவர் சுமட ராவரே. (1)

அன்னியன் மனைவியை அவாவி நோக்கினன்
மன்னிய தீமையால் மறுபிறப்பினில்
தன் இரு கண்ஒளி இழந்து தாழ்குவான்;
முன்னிய தீவினை முடுகிக் காயுமே. [2]

பாலிய விதவையாய்ப் பரிந்து நிற்பவர்
கோலிய பாவம்ஏது? என்னின் கொண்டவன்
வேலியாய் இருக்கவும் விலகி வேருெரு
காலியைக் கரவினில் கலந்த தீமையே. (3)

களியராய் வளத்தொடு களித்து வாழுங்கால்
அளியராய்ப் பிறர்க்கு அருளாத தீமையால்
எளியராய் இவ்வழி இழிந்து நின்றுளார்
ஒளியராய் உண்மையை உணரின் உய்குவார். (4)

(கருமகீதை)

வினைகளின் விளைவுகளை விளக்கி வந்துள்ள இந்தப் பாசுரங்கள் இங்கே கூர்ந்து சிந்திக்கத்தக்கன. மடமை சிறுமை குருடு

வறுமை முதலிய இழி நிலைகளில் அழுந்தியுழல்பவருடைய பழ வினை வகைகளை இவை தொகையா வரைந்து காட்டியுள்ளன.

நெஞ்சம் நிலை குலைந்து ஒருமுறை இழிந்தவர் பின்பு வரு பிறவிகள் தோறும் இழிவடைய நேர்கின்றனர். அதிலிருந்து தெளிந்து உயர்வடைய வேண்டுமாயின் நாளும் நல்ல பழக்கங் களை நன்கு பழகி எங்கும் இனியராய் ஒழுகி வர வேண்டும்.

முயன்று பயின்று வரும் அளவே மனிதன் உயர்ந்து வருகி ருன். முயலாமலும் பயிலாமலும் நின்றுவிடின் அவன் பிறவி பழுதாய் இழிந்துபடுகிறது. நல்ல மனப் பயிற்சியே எல்லா உயர்ச்சிகளுக்கும் மூலகாரணமா யுள்ளது. எவனுடைய உள் ளம் ஊக்கி உயர்ந்து வருகிறதோ அவனை நோக்கி ஆக்கங்கள் யாவும் விரைந்து வருகின்றன. தருமங்களும் சார்கின்றன.

Constancy is the foundation of virtues, [Bacon]

மனவுறுதி தருமங்களின் ஆதாரமாயுளது என்னும் இது இங்கே அறியவுரியது. மனம் நல்ல நெறிகளில் பழகிக் கருதிய கருமங்களை உறுதியா முடித்துவரின் அந்த மனிதன் அதிசய நிலைகளில் உயர்கிருன். உள்ளத்தின்படியே உலகத்தில் யாவரும் உலாவுகின்றனர். அந்தக்கரணங்கள் அற்புத யந்திரங்களா யமைந்திருக்கின்றன; அவை நலமாயின் யாவும் நன்மையாம்.

கூரிய அறிவுத் தெளிவும் சீரிய மனப்பண்பும் மனிதனை உன்னத நிலையில் உயர்த்தி ஒளிபெறச் செய்கின்றன. அவை ஒருமையாய் மருவிய அளவே பெருமைகள் பெருகி வரு கின்றன. நல்ல நீர்மை இலையேல் பொல்லாப் புலைகளே புகும்.

மனித வுருவில் மருவி வரினும்
இனிய இயல்கள் இலையேல்---இனியாத
காட்டு விலங்காக் கழிவன் கடையான
மாட்டு மரபே மதி.

வீட்டுக்கு விளக்கு ஒளிபோல் மனிதக் கூட்டுக்குள் உணர்வு ஒளிபுரிகின்றது; அது தெளிவாய் அமையவில்லையானல் அவன் வாழ்வு இளிவாகின்றது. இனிய இயல்பும் உணர்வும் நல மாப் பெருகிவரும் அளவு மடமை இருள் நீங்கி மதி ஒளிஓங்கும்.

917. மண்ணுலகம் எல்லாம் வரைந்து தனிஅரசாய்
விண்ணும் புகழ விளங்கினும்—உண்மையுடன்
தன்னுயிர்க்குச் சேமம் தனியாகச் செய்திலனேல்
என்ன பயனும் இலன். (எ)

இ-ள்.

ஒரு பெரிய அரசனாய் இவ்வுலகம் முழுதும் ஆண்டாலும் தனது உயிர்க்கு இனிய உறுதிநலங்களை மருவிக் கொள்ளவில்லையானால் அப்பிறவியால் அவனுக்கு யாதொரு பயன் இல்லை என்க.

மனித மரபுள் மன்னன் பெரியவன்; கருவிலேயே திருவுடையவனாய் உருவடைந்து வந்துள்ளவன்; உலகத்தை ஆளும் உரிமையை இயல்பாக மருவித் தலைமையான நிலையில் தழைத்து நிற்பவன்; அத்தகைய வேந்தனும் தன்பிறப்பின் பயனை உய்த்துணர்ந்து உய்தி பெறானாயின் அப்பிறவி ஊனம் உடையதாய் ஈனம் அடைகிறது. ஆன்மபலன் உறுவதே மேன்மைபெறுகிறது.

ஒருவன் பெற்ற உயர்ந்த பிறப்புக்குச் சிறந்த பயன் பின்பு எந்த உடலிலும் பிறவாமல் செய்து கொள்ளுவதேயாம். எவ்வழியும் வெவ்விய துன்பங்களே நிறைந்துள்ளமையால் பிறவி நீக்கமே பேரின்பமாய் நின்றது. முத்தி என்னும் சொல் பிறவித் துயரிலிருந்து உயிர் விடுதலை பெறுவது என்னும் பொருளையுடையது. அப்பேறே பேரானந்தமாம்.

முன்னம் செய்த புண்ணியத்தால் அரசனாய்ப் பிறக்கின்றான்; அந்தப் பிறவியில் நெறி வழுவாமல் நீதிமுறை புரிந்தால் மேலும் உயர்ந்த வேந்தனாய்ச் சிறந்து தோன்றுகின்றான்.

சீவர்கள் புரிகிற நல்வினைகள் அவரை முறையே உயர்த்தித் தேவர்கள் ஆக்குமே அன்றிப் பிறவியை நீக்கா; புண்ணிய போகங்களை நுகர்ந்து முடிந்த பின் விண்ணவரும் வேறு பிறவிகளை நண்ணுகின்றனர். பிறத்தலும் இறத்தலும் பிழைத்தலும் உழைத்தலும் விழித்தலும் உறங்கலும்போல் தொடர்ந்து நடந்து வருகின்றன. பிறவித் தொடர்புகள் பேராது படர்கின்றன.

நற்றிறம் புரிந்தோர் பொற்பதி எய்தலும்
அற்புளம் சிறந்தோர் பற்றுவழிச் சேறலும்
அறப்பயன் விளைதலும் மறப்பயன் விளைதலும்

பிறந்தவர் இறத்தலும் இறந்தவர் பிறத்தலும்
புதுவது அன்றே தொன்றியல் வாழ்க்கை.
(சிலப்பதிகாரம், 30)

செய்த வினைகளின்படியே உயிரினங்கள் பிறவிகளை அடைந்து சுழன்று வருவதை இது வரைந்து காட்டியுள்ளது. பொற்படி = பொன் உலகம். மண்ணுலகில் மருவியுள்ள மாந்தர் எல்லாருக்கும் ஒருவன் வேந்தனாயினும் சாந்துணையும் மேன்மையோடு வாழ்ந்து பின்பு வீய்ந்து போகிறான். அந்த இறப்பு மீண்டும் ஒரு பிறப்பாய் ஈண்டு நீண்டு வருதலால் நிலைதெரிய நின்றது.

ஒருவன் உயர்ந்த புண்ணியத்தைச் செய்தாலும் அது அவனுக்குச் சிறந்த தெய்வப்பிறப்பைக் கொடுக்குமே அன்றிப் பிறவியை நீக்கிப் பேரின்பம் அருளாது. ஆகவே என்றும் அழியாத விழுமிய ஆனந்த நிலையை நாடுகின்றவன் நல்வினைகளையும் அயலே ஒருவி மேலான ஞான நிலையைக் கூடி உயர்கிறான்.

உண்மையான மெய்யுணர்வே ஆன்மாவுக்கு மேன்மையான உய்தி தருகிறது. அந்தத் தத்துவ ஞானத்தைப் பெற்றவனே உத்தமமான முத்தன் ஆகிறான். மண்ணுலக போகமும் விண்ணுலக இன்பமும் வெறும் மாயத்தோற்றங்களாய் அவன் எதிரே தோன்றுகின்றன. பிறவி தோன்றாதபடி பேணுகின்றான்.

புறப்பேறு களைவேண்டி இயற்றுகின்ற
புண்ணியத்தைப் புவியில் உள்ளோர்
சிறப்பான நல்லறிவு மிகவேண்டும்
என்றுமுதல் செய்யின் பேறும்;
இறப்பான ஆபத்து விளைநிலமாய்
இருந்துதுயர் வேலை ஆகிப்
பிறப்பான நச்சுமர வித்தாகும் பேதைமையைப்
பிளக்கல் வேண்டும். (ஞானவாசிட்டம்)

பிறவித் துயரங்களுக்கெல்லாம் பேதைமையே மூலகாரணமாயுள்ளது. மெய்யறிவால் ஆய்ந்து வையமையல் நீங்கி உய்தி பெறுக எனச் சனகமன்னன் இன்னவாறு குறித்திருக்கின்றார்.

உணர வேண்டியதை உரிமையோடு உணர்ந்து உண்மையாக அடைய வேண்டியதை நன்கு அடைந்துகொள்ளுவதே நல்லறிவுக்கு உரிய பயனும். பிறப்பு என்னும் பேதைமை நீங்கச்

சிறப்பு என்னும் செம்பொருள் காண்பதே அறிவு என மனிதனுடைய உயர்ந்த அறிவுக்குச் சிறந்த பலனைத் தேவர் இவ்வாறு வரைந்து காட்டியிருக்கிறார். காட்சி கருதியுணரத் தக்கது.

சரியான பயனை அடையாமல் சாக நேர்ந்தால் மீண்டும் பிறவித் துயரங்களை அடைய நேரும் ஆதலால் பெற்ற பிறப்பு பெரும் பிழையாய் முடிகிறது. தன் உயிர்க்குச் சேமத்தைச் செய்துகொண்டவனது பிறப்பும் இருப்பும் பெரிய மகிமைகளையுடையனவாய் அரிய கீர்த்திகளைப் பெறுகின்றன.

வருந்தேன் இறந்தும் பிறந்தும் மயக்கும் புலன்வழிபோய்ப்
பொருந்தேன் நரகில் புகுகின்றிலேன்புகழ் மாமருதில்
பெருந்தேன் முகந்துகொண்டு உண்டு பிறிதொன்றில் ஆசையின்றி
இருந்தேன் இனிச்சென்று இரவேன் ஒருவரை யாதொன்றுமே.
[மருதூர்மும்மணி, 3]

பட்டினத்தார் இருந்துள்ள நிலையை இங்ஙனம் குறித்திருக்கிறார். சிவபெருமான் ஆகிய செந்தேனை வாரி உண்டு யாதொரு ஆசையுமின்றியிருந்தமையால் பிறவி நீங்கிப் பேரின்ப நிலையை அடைந்துள்ளார். ஆன்ம அனுபவமான அவ்வுண்மை உரைகளில் உணரவந்தது. அரிய பிறவி பெற்றபயன் தெரிய நின்றது.

---

918. ஆடும் திரிகை அரைச்சுற் றடையுமுனே
ஓடும் நினைவோ ஒருகோடி—கூடியஇம்
மாய மனத்தை மருவி யுளவரையும்
தீய துயரே தெளி. (அ)

இ—ள்.

ஆடுகிற திரிகை அரைச் சுற்று வருமுன் ஒரு கோடி நினைவோடு ஓடிவருகிற மாயமனம் மருவியுள்ள வரையும் தீய துயரங்கள் ஒழியா; அம்மாயம் ஒழியின் மகிமை விளையும் என்க.

இராகிவரகு முதலிய தானியங்களை அரைத்து மாவாக்கும் யந்திரத்துக்குத் திரிகை என்று பெயர். சுழன்று திரிந்து வருவது என்னும் காரணக்குறி அமைந்தது. அது அரைச்சுற்று வருமுன்னரே மனிதனுடைய மனம் உலக முழுவதையும் பலமுறை சுற்றி அலகிலாத அடலோடு யாதும் சலியாது வந்து விடும்,

அதிசய வேகத்துக்குக் காற்றை உவமை கூறுவர்; அதனினும் கடுவேகம் உடையது மனம். வாயுவேகம், மனோவேகம் என்பன பழமொழிகளாய் வந்துள்ளன. ஒரு நிலையில் இன்றி ஓயாமல் ஓடியுழல்வதே மனத்தின் இயல்பாய் மருவியுளது. அது ஆட்டியபடியே மனிதன் ஆடி வருகிறான். நீர்மை தோய்ந்து மனம் நெறியோடு அமைந்து நிற்பின் அந்த மனிதன் பெரிய மகானாய்ப் பேரின்ப நிலையைப் பெறுகிறான்; அது வெறி கொண்டு திரிய நேர்ந்தால் அவன் பேயனாயிழிந்து பெருந்துயரங்களை அடைகிறான். ஆசை மோகம் எனப் பேசுகின்ற மோசங்கள் யாவும் நினைவின் வழியே நெடிது நிமிர்ந்து நிலாவுகின்றன.

காதல்எனும் மனைவியின்பின் செல்கின்ற
　　மனம்என்னும் கடிய ஞாளி
பேதைமைமே வியஎன்னைப் பிணந்தின்னு
　　மாறுபோல் பிடுங்கித் தின்னும்
மோதுபெருங் காற்றினால் மூறிந்தெழுந்த
　　துரும்புபோல் மோகம் எய்த
வாதைமனம் பெரும்பாழின் மிகவீழ
　　அதிதூரம் மலங்கத் தள்ளும். (1)

வேராறுபொய் யாய்ச்செறிந்த வடிவாகி
　　விசாரத்தால் விரோதம் ஆகும்
கோரமனம் பேய்பிடித்த சிறுவரைப்போல்
　　பலதொழிலில் கூட்டா நிற்கும்
பார்அகன்று பாதலம்போம் பாதலத்தின்
　　நின்றகன்று பாரில் மீளும்
சோரமனம் கிணற்றுமரம் பழங்கயிற்றால்
　　எடுப்பதுபோல் தொழிலில் தள்ளும். (2)

கடுமனவன் பேய்கனலில் கொடிதாகும்
　　மலைகளினும் கடத்தற்கு ஒண்ணா
நெடுவயிரத் தினும்வலிது கடல்பருகி
　　மேருவினை நேரே பேர்த்துச்
சுடுகனலை விழுங்குகினும் நிறுத்தரிது
　　புலன்முழுதும் தோன்று மூலம்
கெடுமுலகு ஈதுண்டெனில்உண்டு; இலதாகில்
　　இலதுஇதனைக் கெடுத்தல் வேண்டும். [3]
(வாசிட்டம்)

மனநிலைகளைக் குறித்து மகான்கள் இவ்வாறு கருதியுள்ளனர். உருவக வகையில் மருவி வந்துள்ள பொருள் நிலைகளை ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். மானச மருமங்கள் அதிசய விளைவுகளாய்ப் பெருகி வினைநிலைகளை விளக்கியிருக்கின்றன.

கடல்களைப் பருகிவிடலாம்; மலைகளை எடுத்து எறியலாம்; கனல்களை விழுங்கலாம்; வேறு எதையும் செய்து முடிக்கலாம் மனதை அடக்க முடியாது; இதனை அடக்கி ஒழித்தால் ஒழியப் பிறவித் துயரங்கள் ஒழியா; உயிர்க்கு உய்தியில்லை; ஒரு கதியும் கிடையாது எனக் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது.

உலகப் பொருள்களை ஓயாது அவாவி, தேக போகங்களை வேகமா விழைந்து மோக மயக்கங்களில் நீண்டு மூண்டு வருவன எல்லாம் நீண்ட துன்பங்களுக்கே நிலையான காரணங்களா நிலைத்து வருகின்றன. துக்கவிளைவுதெரியாதுபுரிகின்றனர்.

கூடிவந்த அரிய பிறவியால் அடையவுரிய பயனை யாதும் உணராமல் அயலே மயலாய் ஓடி அவல ஆசைகளை மனம் விளைத்து வருதலால் துறவிகளும் தவசிகளும் ஞானிகளும் அதனோடு மாறாய் யாண்டும் மூண்டு போராடி வருகின்றனர்.

இமையளவு போதைஒரு கற்பகா லம்பண்ணும்
இவ்வுலகம் எவ்வுலகமோ
என்றுஎண்ணம் வருவிக்கும் மாதர்சிற் றின்பமோ
என்னில்மக மேருவாக்கிச்
சுமைஎடுமின் என்றுதான் சும்மாடு மாய்எமைச்
சுமையாளும் ஆக்கி நாளும்
துற்புத்தி பண்ணியுள நற்புத்தி யாவையும்
சூறையிட்டு இந்திரசாலம்
அமையஒரு கூத்தும் சமைந்தாடும் மனமாயை
அம்மம்ம வெல்லல் எளிதோ?

மனத்தின் மாயசாலங்களை விளக்கித் தாயுமானவர் இவ்வாறு மறுகியிருக்கிறார். புலன்களை அடக்கிப் புனித நிலையில் பரமான்மாவை மருவி மகிழ்ந்த இராசயோகி ஆதலால் இடையிடையே மனம் சலனம் அடையும் பொழுது அதனோடு இதமா வாதாடியுள்ளார். அந்த வுண்மையை அவருடைய வாய்மொழிகள் தெளிவாக்கி யுள்ளன. மனமாயை என்றது நினைவுற வுரியது,

வஞ்சமோ பண்டையுள வாதனையால் நீ அலைந்து
கொஞ்சமுற்றாய் உன்னைக் குறைசொல்ல வாயும்உண்டோ?
அஞ்சல்அஞ்சல் என்றிரங்கும் ஆனந்த மாகடற்கீழ்
நெஞ்சமே என்போல நீயழுந்த வாராயோ? (1)

வந்தவரவை மறந்துஉலகாய் வாழ்ந்துகன்ம
பந்தமுற உன்னைப் படிப்பிக்கக் கற்றவர்யார்?
இந்தமதி ஏன்உனக்கிங்கு என்மதிகேள் என்றாலே
சந்ததமநெஞ் சேபரத்தில் சாரின்இன்பம் உண்டாமே. [2]
(தாயுமானவர்)

தம் உள்ளத்தோடு அம்மாதவர் உரையாடியுள்ள உணர்வு நலங்களை இங்கே ஓர்ந்து தெளிகிறோம். மனம் நல்லது ஆனால் அந்த மனிதன் எல்லா நன்மைகளையும் எளிதே அடைகிறான்; அது தீயதேல் எவ்வழியும் கொடிய அல்லல்களையே அவன் அடைய நேர்கின்றான். அவல விளைவுகள் அறிய வந்தன.

இனிய நீர்மையில் மனம் பழகிவரும் அளவே மனிதன் புனிதனாய் உயர்ந்து தனி மகிமைகளைப் பெறுகிறான்.

**The mind makes a man noble. (Seneca)**

மனிதனை மேன்மையாக்குவது மனமே என இது குறித்துளது.

அமைதியான மனம் அதிசய நிலைகளில் உயர்த்தி ஆனந்தங்களை அருளுகிறது. தன் உள்ளத்தை அடக்கி ஆள்பவன் உயர்ந்த மகானாய் ஒளிபெற்று நிற்கின்றான். அவ்வாறு அடக்காமல் அதன் வழியே உழல்பவன் அறிவிலியாய் இழிந்து கழிகிறான்.

**A wise man will be master of his mind,**
**a fool will be its slave. (Syrus)**

தன் மனத்தை அடக்கி ஞானி தலைவனாய் நிற்கிறான்; மூடன் அதற்கு அடிமையாய் அலைகிறான் என்னும் இது ஈண்டு அறியவுரியது. சிறந்த மேதைக்கும் இழிந்த பேதைக்கும் உள்ள வேற்றுமையை இங்கே தெரிந்து கொள்கிறோம். உள்ளத்தை வசப் படுத்திய அளவு மனிதன் உயர்ந்து திகழ்கின்றான்.

இசையும் இன்பமும் இனியநல் இதயத்தால் எய்தும்;
வசையும் துன்பமும் மாசுறு மனத்தினால் மருவும்;
அசைவில் ஆண்மையாய் அதிசய நிலையுற அமைந்தார்
நசையை வென்றனர் நன்னெறி நின்றனர் நயந்தே.

இதன் பொருளை உணர்ந்து புனிதனாய் உயர்க.

919. அரிய மனிதன் அடைய உரிய
பெரிய பயனைப் பெறவே—பிரியமுறும்
இவ்வுருவம் எய்தி யிருக்கின்றாய் உன்இருப்பின்
செவ்வி தெரிக தெளிந்து. (கூ)

இ—ள்

அருமையான இந்த மனித உருவத்தை உரிமையோடு மருவி யிருப்பது விழுமிய பயனைப் பெறவேயாம்; இவ்வுண்மை தெளிந்து நன்மையை ஓர்ந்து விரைந்து விழைந்து கொள்ளுக.

அடைய அரியதை அடைந்தவன் மேல் அடைய வுரியதை விரைந்து அறிந்து கொள்ள வேண்டும். உரிமையை உணர்ந்து கடமையைச் செய்து வருபவனே கருதிய பலன்களைக் கைவரப் பெறுகிறான். மேலான கருத்துகள் எவ்வழியும் மேன்மைகளை விளைத்து வருகின்றன. எண்ணம் உயர எல்லாம் உயர்கின்றன.

தன் பிறப்பின் அருமையை எண்ணிப் பெறுவதை நோக்கிய அளவுதான் அந்த மனிதனுடைய இருப்பு சிறப்படைந்து வருகிறது. எண்ணி உணராத வாழ்வு இழிந்துபடுகிறது.

உள்ளம் நல்ல இயல்புகள் தோய்ந்து உயர்ந்துவரின் எல்லா மகிமைகளும் அங்கே வெள்ளமாய் விரைந்து வருகின்றன. மனம் புனித நீர்மையில் இனிது வளர்ந்தபோது அந்த மனிதன் தனி நிலையில் உயர்ந்து திகழ்கிறான். நெஞ்சமே நிலைமைகளுக் கெல்லாம் தலைமையாயுள்ளது. புறத்தில் நிகழும் செயல்கள் உளத்தின் சாயல்களே. அகம் இனியதேல் யாவும் இனிமையாம்.

மனமே மனிதன்; மதியே கதி என்பது முதுமொழியாய் வந்துள்ளது. மனம் பண்பு படிந்து சீரோடு முயன்றுவரின் அம்மனிதன் பெருமையடைந்து பேரோடு பெருகி வருகிறான்; மதி நெறிமுறையே கருதிவரின் நல்ல விதி விளைந்து கதிநலங்களை அருளுகிறது. மனமும் மதியும் இழிவாய் மாறுபடின் மனிதன் எவ்வழியும் கழிவாய்ச் சிறுமை அடைந்து சீரழிய நேர்கிறான்.

மனமே மனிதன் அதன்வழியே
வாழ்வும் தாழ்வும் வளர்ந்துவரும்;
தனமே தலமே தனிக்கலையே
சார்ந்த யாவும் மனம்இனிதேல்

இனமே எல்லாம் இன்பமாய்
　　இசைகள் பரவித் திசைஏறும்;
முனமே அதுதான் தீதானால்
　　முழுதும் பழுதாய் முடிவுறுமே.

மானச நீர்மையை விளக்கி வந்துள்ள இது இங்கே கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்திக்கத்தக்கது. வெளியே தோன்றுகின்ற பெருமை சிறுமை முதலிய தோற்றங்களுக்கெல்லாம் உள்ளே மனமே மூலகாரணமாயுள்ளது. அதை ஒருவன் நல்ல வழியில் பழக்கி வந்தால் அவன் எல்லாப் பாக்கியங்களையும் எளிதே அடைந்து எவ்வழியும் திவ்விய நிலையில் உயர்ந்து கொள்கிறான்.

தன் அகத்தைத் தனக்கு இனிய சுகமாகப் பெற்றவன் சகத்தில் உயர்ந்து யாண்டும் மகத்துவங்கள் காணுகிறான். பெரிய மகான், அரிய ஞானி என உலகில் உயர்ந்து விளங்குபவர் எவரும் உள்ளத்தின் நன்மையாலேயே ஒளிமிகுந்து வெளியறிய நின்றுள்ளனர். மனம் நலமாய் உயர மனிதன் மகிமையாய் உயர்கிறான். அவன் உயர்ந்த அளவு இழிந்த புலைகள் அவனை யாதும் அணுகாமல் ஒழிந்து போகின்றன.

The higher a man stands, the more the word vulgar becomes unintelligible to him. (Ruskin)

மனிதன் உயர உயர இழிமொழி அவனுக்குத் தெரியாது போகிறது என்னும் இது இங்கே நன்கு அறியவுரியது.

உருவத்தால் மனிதன் எனத் தோன்றினாலும் உள்ளம் நீர்மையாய் உயர்ந்த போதுதான் அவன் சீர்மை மிகுந்து சிறந்து திகழ்கிறான். நல்ல பண்புகள் அமைந்த அளவே பிறவி பெருமை பெறுகிறது. அவை சரியாக அமையவில்லையானால் அப்பிறப்பு யாதொரு சிறப்பும் இன்றி இழிவாய் ஒழிந்து போகிறது.

பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்புஒவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். (குறள், 972)

பிறப்பையும் சிறப்பையும் சேர்த்துத் தேவர் இவ்வாறு விளக்கியிருக்கிறார். அரிய செயல் பெரிய நிலையை அருளுகிறது.

மக்களுக்கு இருவகை நிலைகள் வாய்ந்துள்ளன. ஒன்று பிறப்பு; மற்றது சிறப்பு. முன்னது பழவினை வசத்தால் இயற்

கையாய் அமைவது; பின்னது விழுமிய தொழில்களால் விளை வது. சீரிய கருமங்களைக் கூரிய நோக்கோடு செய்து நேர்மை யாய் வருபவன் சிறந்த மனிதனாய் உயர்ந்து சிறப்பு மிகப் பெறுகிறான். அரிய வினைகளை ஆற்றிப் பெரியவன் ஆகுக.

மனித மரபில் பிறப்பது மிகவும் அரிது; அவ்வாறு பிறந்த வன் எவ்வகையும் இறந்து போகவே நேர்ந்துள்ளான்; அந்த இறப்பு நேருமுன் இடையே சிறிது இருந்து வாழுகிறான். இந்த இருப்பில் பிறப்பின் பயனைப் பெற வேண்டும். உண்மையான பிறவிப் பயன் யாது? மீண்டும் பிறவாமையே யாம். பிறவி எவ்வளவு உயர்வுடையது ஆயினும் எவ்வழியும் துன்பங்களே நிறைந்துள்ளமையால் அதனை நீங்கி உய்வதே பேரின்பம் என நேர்ந்தது. அந்த இன்பநிலை எய்துவதே மனிதன் வந்த பயனும்.

கூர்மையான அறிவு மனிதனிடம் சீர்மையா அமைந்துள் ளது; அதனால் உண்மையை உணர்ந்து அவன் உய்தி பெற வேண்டும். சிறந்த அறிவுடைமைக்கு அடையாளம் நிறைந்த ஒழுக்கமே; அந்தச் சீலமே மனிதனை மேலான நிலையில் உயர்த்தி யருளுகிறது. இனியபான்மைகள் அரியமேன்மைகளாகின்றன.

The highest manhood resides in disposition, not in mere intellect. (H. W. Beecher)

உயர்ந்த மனிதத் தன்மை அறிவில் இல்லை; குணத்தில் தங்கி யுள்ளது என்னும் இது இங்கே ஊன்றி உணர வுரியது.

நல்ல நீர்மையால் உள்ளம் தூய்மையாய் உயருகிறது; அது உயரவே உயிர் துயர் நீங்கி உயர்கதி யுறுகிறது.

---

920. உறுவ துணராமல் உள்ளம் களித்து
மறுமை நிலையை மறந்து—சிறுமையாய்
நாளைக் கழித்தார் நமனுக் கிரையாக
ஆளைக் கழித்தார் அவர். (ம)

இ-ள்.

மேல் உறுவதை உணர்ந்து உயிர்க்கு உறுதியை விரைந்து தேடாமல் நாளை வீணே கழித்து வருபவர் எமனுக்கு இரையாய் அவமே அழிந்தார்; அவ்வாறு அழிந்து ஒழியாமல் தெளிக.

இயல்பாகவே மனிதரிடம் நல்ல அறிவு அமைந்துள்ளது; இருந்தும் அதன் பயனை அடையாமல் மயலாய் இழிந்து கழிவதே மாயமயக்கமாய் யாண்டும் மருவி வருகிறது. பல நூல்களைப் படிக்கின்றார்; கலைகளைக் கற்கின்றார்; காவியங்களை உணர்கின்றார்; உலகநிலைகளை அறிகின்றார்; வானமண்டலங்களை ஆராய்கின்றார்; கிரக சஞ்சாரங்களைத் தெரிகின்றார்; இன்னவாறு யாவும் ஆவலோடு தெரிய நேர்ந்தவர் தன்னைக் குறித்து யாதும் தெரியாமல் அவலமாய் அழிந்து ஒழிகின்றார். மதிகேடராய் இழிந்து கழிந்து ஒழிந்து போவது அதிசய விநோதமாய் விரிந்து நிற்கிறது.

சாவு யாவருக்கும் தலைமேல் இருக்கிறது; அது நேருமுன் நேர்ந்த பிறவிக்கு ஆர்ந்த பயனை ஓர்ந்து உணர்ந்து ஏதேனும் ஓரளவு உறுதிநலம் அடைந்தவனே உத்தமனாய் உயர்கின்றான்; அல்லாதவர் எல்லாரும் பித்தராகவே இழிந்துபடுகின்றார்.

துன்பத் தொடர்புகள் தொலைந்து இன்பப் பேறுகள் எய்தும்படி வாழ்வதே வாழ்வாம்; அவ்வாறு வாழ்பவனைத் தேவர் முதல் யாவரும் புகழ்ந்து வருகின்றார். உத்தம மனிதனுடைய வாழ்நாளைக் குறித்துப் புத்தர் ஒருமுறை போதித்த போதனை வித்தக ஞானமாய் விளங்கித் தத்துவ நீர்மையைத் துலக்கி நின்றது. அந்தக் காலத்தில் வழங்கி வந்த பாலி மொழியில் அது எழுதப்பட்டுள்ளது. அயலே வருவது காண்க.

யோச வஸ்ஸஸதம் ஜீவே அபஸ்ஸம் அமதம் பதம்
ஏகாஹம் ஜீவிதம் ஸேய்யோ பஸ்ஸதோ அமதம்பதம்.
[தம்மபதம், 114]

அமுத பதத்தை அறியாமல் ஒருவன் நூறு ஆண்டுகள் வாழ்வதினும் அதனை அறிந்து ஒரு நாள் வாழ்வதே உயர்வுடையது என்னும் இது ஈண்டு ஊன்றி உணர வுரியது.

என்றும் அழியாத பேரின்ப நிலையையே அமுதபதம் என்று இங்கே குறித்திருக்கிறார். இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் ஒரு மகான் உரைத்ததை இன்றும் அறிவுலகம் உரிமையோடு கருதி வருகிறது. பொய்யான மாய வாழ்வில் மெய்யான உண்மையை உணர்ந்து கொள்வது மேலான கதியை அருளும் ஆகலால் அது மேன்மையான தூய மந்திரமா எண்ண நேர்ந்தது. உயிர்க்கு உய்தி புரிவது ஒளி மிகுந்த வாழ்வா உயர்

வுறுகிறது. பயனுடையது விழுமிதாய் வியனடைந்தது; பயன் இல்லது இழி மடமையாய்க் கழிவடைந்தது.

மடமையா வருடம் நூறு வாழ்வதின் மதிகூர்ந்து ஓர்ந்த
கடமையைக் கருதி ஓர்நாள் கழியினும் கதிமுன் காணும்;
அடவியில் புகுந்தார் ஏனும் அருந்தவம் புரிந்தார் ஏனும்
உடலுறு பயனை ஓர்வார் உயர்கதி பரனை ஓர்வார்.

ஆன்ம நோக்கமான ஞானநாட்டம் ஒருகணம் காணினும் அது இனிய அமுத வாசனையாய் அரிய பரகதியை அடையச் செய்யும் ஆதலால் அதிசய பாக்கியமாத் துதி செய்ய வந்தது.

மனிதனுடைய நல்ல அறிவுக்குப் பயன் தன் உயிர்க்கு யாண்டும் அல்லல் நேராமல் ஆக்கிக்கொள்வதே யாம். உண்மை தெளிந்து உய்தி புரியும் உணர்வே ஞானம் என மேன்மையா விளங்கியுளது. அதற்கு மாறுன எதுவும் அஞ்ஞானம் என அவலமடைந்துள்ளது. துன்பமும் அழிவும் எவ்வழியும் தொடர்ந்துள்ள உலகப் பொருள்களை அவாவி யுழல்வது மாய மயக்கமாம்; என்றும் அழியாத இன்ப நிலையை எய்துகின்ற வரே தூய ஞானிகளாய்த் துலங்கியுள்ளனர்.

மெய்ப் பொருளை அறிந்தவர் பொய்ப் பொருளை இகழ்ந்து விடுகின்றனர். மருள் இருள் என மருண்டு இருண்டு நிற்கும் நிலையிலேதான் துயரப் பிறவி நிலையாய்த் தொடர்ந்து கொள் கிறது. உண்மை உணர்வு ஒழியவே புன்மை புகுந்துகொண்டது.

பொருளல் லவற்றைப் பொருள்என் றுணரும்
மருளானும் மாணுப் பிறப்பு. (குறள்; 351)

யாதும் நிலையில்லாத புலையான உலகப் பொருள்களை உண்மை என்று நம்பி உழலும் மாய மயக்கத்தாலேயே தீய பிறப்புகள் தோன்றியுள்ளன என்று தேவர் இங்ஙனம் தெளித் துள்ளார். தத்துவ நிலைகளை உய்த்துணர்ந்து உத்தம விவேகியாய் உய்தி பெறவேண்டும் என்பது ஈண்டு உணர வந்தது.

சகம்என உடலம் என்னத் தகுகரணங்கள் என்ன
அகம்என இதமதென்ன அழிவில்போகங்கள் என்ன
வகைபட உயிர்கட்கு ஆதல் மாயைஅம் மாயைநீக்கிப்
புகலரு முத்தி சேரும் அவர்கள் புண்ணியத்தி னோரே.
(பரிபூரணசித்தி)

அவல நிலைகளை உணர்ந்து தெளிந்து ஆன்ம ஞானத்தால் விடுதலை பெறுபவரே மேலான புண்ணிய சீலர் என இது விளக்கியுளது. மெய்யறிவு மனிதனுக்கு உய்தி தருகிறது; பொய்யறிவு புலைகளில் ஆழ்த்துகிறது.

The wise man alone is free, and every fool is a slave. (Stoic).

ஞானி ஒருவனே விடுதலை பெற்றுத் தலைவனாய் நிற்கிறான்; மற்ற மூடர் எல்லாரும் அடிமைகளாகவே அல்லல்களில் வாழுகின்றனர் என்னும் இது இங்கே உள்ளம் தெளிய வுரியது.

நல்ல அறிவுக்கும் பொல்லாத மடமைக்கும் உள்ள வேற்றுமையை ஈண்டு உணர்ந்து கொள்கிறோம். தன் வாழ்நாளைப் பாழாக்காமல் உயிர்க்கு உயர்ந்த பயனை அடைந்து கொள்பவனே சிறந்த ஞானி ஆகிறான்; அருமையாய் அமைந்த நாளைப் பழுதுபடுத்துபவன் இழுதையாய் இழிந்து கழிந்து ஒழிகிறான்.

உனக்கு அமைந்த ஆயுளை இனிமை செய்து உயர்பயனுறுக.

வாழ்நாட்கு அலகா வயங்கொளி மண்டிலம்
வீழ்நாள் படாஅது எழுதலால்---வாழ்நாள்
உலவாமுன் ஒப்புரவு ஆற்றுமின் யாரும்
நிலவார் நிலமிசை மேல். (நாலடி, 22)

இறப்பு நேருமுன் உயிர்க்கு உறுதி பெறும்படி உணர்த்தியுளது.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மனிதனது இருப்பு இறப்பை நோக்கியுள்ளது.
சாவு நேருமுன் தக்க பயனை அடைய வேண்டும்.
வாழ்வை வீணாக் கழிக்கலாகாது.
உயிர்க்கு உறுதி பெறுவதே உயர் வாழ்வாம்.
அவ்வாறு பெருவழி அது பெரிய பிழையாம்.
இழி வாழ்வு பழி துயராம்.
பயன் இழந்தது பாழ் படிந்தது.
பாழாகாமல் வாழ்வை உயர்த்துக.
பிறவிநலம் தெரிவது பெரிய பேறும்.
உறுவதை உணர்ந்து உய்தி பெறுக.

கூஉ—வது இருப்பு முற்றிற்று.

# தொண்ணூற்றுமூன்றும் அதிகாரம்

## இறப்பு.

அஃதாவது பிறந்து வாழ்ந்து வந்த மாந்தர் இறந்துபோகும் நிலை. பிறப்பும் இருப்பும் இறப்பை நோக்கி வருதலால் இறுதி நேருமுன் உறுதிநலனை உணரும்படி இது ஈண்டுவைக்கப்பட்டது.

921. பிறப்பும் இறப்பும் பிரியாமல் என்றும்
மறப்பின்றி மாறி வரலால்—வறப்பின்றி
வையம் வழங்கி வருமால் வரவுநிலை
உய்ய அருளும் உணர்வு. (க)

இ—ள்.

சீவர்களுடைய பிறப்பு இறப்புகளை மருவி இந்த உலகம் என்றும் குன்றாமல் வளமாய் இயங்கி வருகிறது; அந்த வரவில் அரிய உறுதி நலங்களை அறிவு தெளிவா அருளியுள்ளது என்க.

உலகில் தோன்றுகின்ற உருவத் தோற்றங்கள் சிலகாலம் நிலவியிருந்து பின்பு மறைந்து போகின்றன. அவ்வாறு மறைவதையே இறப்பு என்று நாம் குறித்து வருகிறோம். அறுதியாய் இறுதியுறுவது இறப்பு என வந்தது. பிறந்த எதுவும் இறந்து படுவது முடிந்த முடிவாய் நின்றது.

பிறப்பும் இறப்பும் விழிப்பும் உறக்கமும்போல் இயல்பாய் இணைந்து எவ்வழியும் தொடர்ந்து பிணைந்துள்ளன. பகல் இரவு, நினைப்பு மறப்பு, விழிப்பு உறக்கம் எனப் பிறப்பு இறப்புகள் பிரியா இரட்டைகளாய் மருவியிருக்கின்றன.

உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு. (குறள், 339)

பிறப்பு இறப்புகளைக் குறித்துத் தேவர் இவ்வாறு விளக்கியிருக்கிறார். உறங்கலும் விழித்தலும் மனித வாழ்வில் நாள் தோறும் தொடர்ந்து நடந்து வருகின்றன. தெளிவான அந்த அனுபவ நிலைகளை ஒப்புக்காட்டி இறத்தல் பிறத்தல்களின் தொடர்புகளை நயமாத் துலக்கி யருளினார். உறங்குதல் சாதலையும் விழித்தல் பிறத்தலையும் முறையே உணர்த்தியுள்ளது; இந்த உண்மையை உணர்ந்து உயிர்க்கு நன்மையைச் செய்து கொள்

ளுக; கொண்டால் விழிப்பதுபோல் மீண்டும் பிறக்கின்ற உயிர் செழிப்பாய்ச் சிறந்து வரும் என்பது தெரிய வந்தது.

பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்றது. [மணிமேகலை, 16]

சாதுவன் என்னும் அறிஞன் சாதல் பிறத்தலை இங்ஙனம் ஆதரவான போதனையோடு குறித்திருக்கிறான். இயல்பாக மாறி மாறி நிகழும் என்பதை உவமானம் தெளிவாக்கி நின்றது.

To die: to sleep; no more. (Hamlet 3, I)

சாவது ஒருவகை உறக்கமே என இதுவும் குறித்துள்ளது.

இழித்தக்க செய்துஒருவன் ஆர வுணலின்
பழித்தக்க செய்யான் பசித்தல் தவறோ?
விழித்திமைக்கு மாத்திரை அன்றோ ஒருவன்
அழித்துப் பிறக்கும் பிறப்பு. (நாலடி, 302)

கண்மூடிக் கண்திறப்பது போல் இறப்பும் பிறப்பும் விரைந்து நிகழ்கின்றன; அழிவுடைய இந்த வாழ்வில் இழிவான காரியங்களைச் செய்யாமல் நல்ல மானத்தோடு வாழவேண்டும் என மதிநலங்களைத் துலக்கி இது இங்ஙனம் உணர்த்தியுள்ளது.

சாவை நூலோர் நினைவுறுத்துவது தனது வாழ்வை மனிதன் சால்போடு நன்கு நடத்த வேண்டும் என்று கருதியேயாம்.

துறக்கமே முதல வாய தூயன
யாவை ஏனும்
மறக்குமா நினையல் அம்மா
வரம்பில தோற்று மாக்கள்
இறக்குமாறு இதுஎன்பான்போல்
முன்னைநாள் இறந்தான் பின்னாள்
பிறக்குமாறு இதுஎன்பான்போல்
பிறந்தனன் பிறவா வெய்யோன்.
(இராமா, கங்கை, 49)

சூரியன் மறைந்து பின்பு உதயமான நிலையைக் கவி இங்ஙனம் வரைந்து காட்டியிருக்கிறார். பிறந்தவன் எவனும் இறந்து போவன்; அவ்வாறு இறக்குமுன் உயிர்க்கு உயர்ந்த உறுதி நலனை அடைந்துகொள்ளுக என மாந்தர்க்கு அறிவு போதிக்கும் பொருட்டு முதல் நாள் இறந்ததுபோல் மறைந்து மறுநாள்

பிறந்ததுபோல் ஆதவன் தோன்றினன் என்னும் இது ஈண்டு ஊன்றி உணர வுரியது. கதி நிலை காணக் கதிரவன் காட்டினன்.

பகலும் இரவும் போல் பிறப்பும் இறப்பும் இயல்பாய்த் தொடர்ந்து நிகழ்ந்து வரும் என்பதை இதனல் அறிந்து கொள்ளுகிறோம். நல்லது தீயது என்னும் இருவகை வினைகளைச் சீவர்கள் செய்துவருதலால் அவற்றின் பயன்களான இன்ப துன்பங்களை முறையே அனுபவித்து வருகின்றனர். அவ்வரவில் பிறத்தலும் இறத்தலும் பிறழாமல் பெருகித் தொடர்கின்றன.

இருவினை இன்பத் துன்பத்து இவ்வுயிர் பிறந்திறந்து
வருவது போவ தாகும் மன்னிய வினைப்பலன்கள்
தரும்அரன் தரணி யோடு தராபதி போலத் தாமே
மருவிடா வடிவும் கன்ம பலன்களும் மறுமைக் கண்ணே.
(சிவஞானசித்தியார்)

சாதலும் பிறத்தல் தானும் தம்வினைப் பயத்தின் ஆகும்
ஆதலும் அழிவும் எல்லாம் அவைபொருட்கு இயல்புகண்டாய்!
நோதலும் பரிவும் எல்லாம் நுண்ணுணர்வு இன்மை யன்றே
பேதைநீ பெரிதும் பொல்லாய் பெய்வளைத் தோளி என்றான்.
[சீவகசிந்தாமணி 269]

இறத்தலும் பிறத்தல் தானும் என்பன இரண்டும் யாண்டும்
திறத்துளி நோக்கின் செய்த வினைதரத் தெரிந்த வன்றே
புறத்தினி உரைப்பது என்னே பூவின்மேல் புனிதற் கேனும்
அறத்தினது இறுதி வாழ்நாட்கு இறுதி; அஃது உறுதி என்ப.
[இராமாயணம், கிட்கிந், அரசியல் 35]

வீதலும் பிழைத்தல் தானும் விதிவழி அன்றி நம்மால்
ஆதலும் அழிவும் உண்டோ நின்னில்வேறு அறிஞர் உண்டோ?
பூதலம் தன்னில் யாவர் புதல்வரோடு இறந்தார் ஐயா!
சாதலிங்கு இயற்கை அன்றென்று அருளுடன் தடுத்த காலை.
(பாரதம், 13-151)

பிறந்த ஆகம்ஒன்று இறந்திடாப் பெருமையும் உடைத்தோ
எறிந்த வான்சிலை வீழ்ந்திடாது இருப்பது இங்கில்லை;
செறிந்த காரியம் என்பதுஎன் றாயினும் சிதையும்
இறந்திடாதுகா ரணம்எனப் படுமதே என்றும். [பிரபுலிங்கலீலை

சூழ்ந்தனஎல்லாம் பிரியும் தோன்றினஎல்லாம் நசிக்கும்
தாழ்ந்திடுமற்று உயர்ந்த வெல்லாம் தனிநகரும் மாளிகையும்
பாழ்ந்துடவைப் படும்அனுமான் பழுத்தபழம் தனக்கு என்றும்
வீழ்ந்திடலே கதிஆனல் விளியாதே சரீரம்தான்.(சேதுபுராணம்)

இறப்பு நிலைகளை இவை குறித்து வந்துள்ளன. உரைகளில் மருவியுள்ள பொருள்களோடு உறுதியான உணர்வு நலங்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். வாழ்வின் உண்மைகளை உணர்ந்து தெளிந்த அளவு மனிதன் மகானாய் உயர்ந்து திகழ்கிருன். சாவின் நினைவு ஆவதை விரைந்து அடையச் செய்கிறது.

பிறந்த மனிதன் சிறந்த அறிவோடு வளர்ந்து வாழ்ந்து வருகிருன்; அவ்வாழ்வு சாவை நோக்கியே நடந்து வருகிறது. நேர்ந்த ஆயுள் ஒவ்வொரு நிமிடமும் தேய்ந்து கழிந்து வருதலை ஓர்ந்து உணராமையால் உள்ளம் களித்து மேல் நோக்காய் வியந்து திரிகிருன். சாவின் வாயிலுள்ள நிலைமையைச் சிறிது உணர்ந்தாலும் அவன் ஆவிக்கு இனியனாய் ஆவதைச் செய்து கொள்ளுவான். சாதலை உணர்வதே ஓதலின் உயர் பயனும்.

நிலையாமை நிலையை நேரே தெரிபவனே தலையான ஞானி ஆகிருன்; ஆகவே அழியாத பேரின்ப நிலையை எளிதே அடைந்து கொள்ளுகிருன். இறத்தலை எதிரறிந்தவன் மீண்டு பிறத்தலை மேவாதபடி விவேகமாய்ப் பிழைக்க நேர்கின்ருன்.

கணமும்நீ சாகின்ருயே! கருதிஅந் நிலையை ஓர்ந்து
குணமுடன வாழ்க; வாழ்ந்தால் கூற்றுவன் உன்பால் அன்பு
மணமுடன் புரிந்து நேரே மாறிலா இனபத் துய்ப்பன்
பிணமென உடலம் வீழப் பேரின்பம் பெறுவாய் நீயே.

இதனை உரிமையோடு ஓர்ந்து சிந்திக்க வேண்டும்.

சாவின் நினைவு வாழ்வினை ஒழுங்கு செய்து உயர்த்தி வர உதவி புரிகிறது. எதிரே ஓர் அபாய அறிவிப்பைக் கண்டவன் முன் எச்சரிக்கையாய் உபாயம் சூழ்ந்து இதமாச் செல்வன்; அதுபோல் மரண நிலையை அறிந்தவன் உயிர்க்கு உறுதியா அரணம் சூழ்ந்து அதி விரைவா உரம் செய்து கொள்வன்.

Death is as the foreshadowing of life.
We die that we may die no more. [H. Hooker]

மரணம் உயிர் வாழ்வின் முன்னறிவிப்பாயுளது; இனிமேல் சாவில்லை என்று நாம் சாகிறோம் என்னும் இது இங்கு அறிய வுரியது. இறப்பின் அறிவு பிறப்பின் பயனைப் பெற வுதவுகிறது.

கரும்பிலிருந்து சாரம் பிழிந்து கொண்டபின் அதன் சக்கை எரிந்து போங்கால் யாரும் வருந்தார்; அதுபோல் பிறந்த இந்த

உடம்பின் பயனை அடைந்து கொண்டால் இறந்து போகும் போது எவரும் பரிந்து வருந்தமாட்டார்.

பெற்ற பிறப்பின் பெரும்பயனைப் பெற்றவர்
மற்ற இறப்பின் மறுகுவரோ---உற்ற
பலனடைந்த பின்பு பயிர் அழியின் யாரே
புலனழிந்து நிற்பர் புலந்து.

இதில் வந்துள்ள உவம நிலையை ஓர்ந்து உறுதி நலனைத் தேர்ந்து கொள்க. வாழ்வாங்கு வாழ்பவன் சாவுக்கு அஞ்சான்.

நல்ல சிந்தனையோடு புனிதமாய் வாழுகின்றவனுக்கு இம்மையும் மறுமையும் இனிமை சுரந்து இன்ப நிலையமாகின்றன. வையக வாழ்வைவிட வானக வாழ்வு அவனுக்கு மேன்மையாய் வருகிறது; வரவே தேவ ஒளி அவன்பால் மேவி மிளிர்கிறது.

மரணத்துக்கு அவன் அஞ்சுவதில்லை; அதனை இயற்கை நிகழ்ச்சியா மகிழ்ச்சியோடு கருதி உறுதியாய் நிற்கிறான்.

Death has nothing terrible which life has not made so.
(T. Edwards)

வாழ்க்கையில் கொடுமை இல்லையானால் அந்த மரணத்தில் யாதொரு திகிலும் இல்லை என்று இது குறித்துள்ளது.

சாவையும் வாழ்வையும் ஒருங்கே இணைத்து உறுதியுண்மைகளை உணர்த்தியுள்ள இதை ஈண்டு நன்கு சிந்திக்க வேண்டும்.

மனம் மொழி மெய்கள புனிதமாய் நாளும் நயனோடு ஒருவன் வாழ்ந்துவரின் அவ்வாழ்வு கண்ணியம் நிறைந்த புண்ணிய வாழ்வு ஆகிறது; ஆகவே தேவபோகம் அவனை அணுகி நிற்கிறது; நிற்கவே எடுத்த தேகத்தைக் கழித்து விடுவதில் களிப்பே மிகுதலால் இறப்பு அவனுக்கு உவப்பையே தருகிறது.

ஈண்டு வந்து பிறந்த மனிதன் மீண்டும் பிறந்து இறந்து உழலாமல் சிறந்த பேரின்ப வாழ்வை அடைந்து கொள்ளும்படி பிறப்பு குறிப்போடு உணர்த்தியுள்ளது; அந்த உண்மையை ஊன்றியுணர்ந்து விரைந்து நன்மை பெறுக.

பிறந்தாய் இருந்தாய் பெயர்ந்திறந்து போமுன்
அறந்தான் அடைக அறிந்து.

ஆருயிர்க்கு உரிய இனிய அமுதம் அறிய வந்தது.

922. உடுத்த உடையை ஒதுக்கி அயலே
அடுத்த உடையணியும் ஆறே—எடுத்த
உடம்பிதை நீக்கி ஒழித்தோர் உடம்பை
இடம்பெற நிற்றல் இறப்பு. (உ)

இ-ள்.

உடுத்தியிருந்த ஆடையைக் களைந்து நீக்கி வேறு ஒரு உடையைப் புனைந்துகொள்வதுபோல் எடுத்த உடம்பை இழந்து அடுத்த ஓர் உடலை அடைந்து கொள்வதே இறப்பாம் என்க.

இறப்பு இன்ன நிலையது என்பதை இது உணர்த்துகிறது.

உயிர் உடலை எடுத்து வந்துள்ளது. அந்த உடல் உடையை உடுத்தி நிற்கிறது. தான் அணிந்த ஆடையை அது மாறி மாறிக் களைந்து விடுகிறது; அது போலவே உயிரும் உடலை நீக்கிவிட்டு அயலே ஒன்றை மருவிக் கொள்கிறது. இயல்பாய் நிகழும் இந்த நீக்கத்தையே இறப்பு என்று நாம் குறித்து வருகிறோம். இறத்தல் என்னும் சொல் கடத்தல், கழிதல், முடிதல் என்னும் பொருள்களை யுடையது. முடிவு தெரிவது விடிவு தெளிவதாம்.

பிறந்தன யாவும் இறந்து படுதல் இயற்கை நியமமாய்த் தொடர்ந்து வந்துள்ளது. தோன்றியபடியே நீண்டு நில்லாமல் சிலகாலம் மட்டும் நின்று பின்பு தோன்றாமல் எல்லாம் தொலைந்து போதலால் பிறவிகள் மாயத் தோற்றங்கள் என நேர்ந்தன. தோன்றலும் மறைதலும் தொடர்ந்து நிகழ்கின்றன.

தெரிவாக ஊர்வன நடப்பன பறப்பன
செயல்கொண்டிருப்பன முதல்
தேகங்கள் அத்தனையும் மோகங்கொள் பௌதிகம்
சென்மித்த ஆங்கு இறக்கும். [தாயுமானவர்]

உடலோடு தோன்றிய உயிரினங்கள் யாவும் பிறந்தபடியே இறந்துபோம் எனத் தாயுமானவர் இவ்வாறு இறப்பு நிலையை விளக்கி யிருக்கிறார். பிராணிகளுள் மனிதன் மாத்திரம் மரணத்தை எதிரே உணர்ந்திருத்தலால் அதனை எண்ணுந்தோறும் நெஞ்சம் அஞ்ச நேர்ந்தான். அந்த அச்சம் கொச்சையாம்.

சாவுக்கு அஞ்சுதல் விவேகம் அற்ற செயல். சாவு ஒருவனுக்கு எப்பொழுது நேருமோ அப்பொழுதுதான் வரும்;

அதற்குமுன் யாதும் அணுகாது; அது நேர்ந்தபோது யாராலும் அதனைத் தடுத்து நிறுத்த முடியாது; இந்த முடிவை முடிவாக அறிந்தவர் இறப்பை நினைந்து யாதும் வருந்தார்.

சாரும்போ தன்றிநமன் சாரான்; தருபோகம்
நேரும்போ தன்றிஒன்றும் நேராதே---ஒரும்
உணர்வுடையார் யாதுறினும் உள்ளஞ்சார்; அஞ்சும்
உணர்வில் ஒருவன் உளம்.

தெளிந்த மேதைகள் சாவுக்கு அஞ்சார்; இழிந்த பேதைகளே அதற்கு அஞ்சுவர் என்றுநெஞ்சுதெளிய இது குறித்துளது.

ஆவாரை யாரே அழிப்பர் அதுவன்றிச்
சாவாரை யாரே தவிர்ப்பவர்---ஓவாமல்
ஐயம் புகுவாரை யாரே விலக்குவார்
மெய்யம் புவியதன் மேல். (நல்வழி, 13)

யாவும் ஊழின்படியே நேரும்; சாவை யாரும் தடுக்க முடியாது என ஒளவையார் இவ்வாறு குறித்திருக்கிறார்.

உறக்கமும் விழிப்பும் எவ்வாறு இயற்கையாய் நிகழ்கின்றனவோ அவ்வாறே இறப்பும் பிறப்பும் இயல்பாய்த் தொடர்ந்து தோன்றுகின்றன. நிகழ்ச்சிகள் எவ்வழியும்நியமங்களுடையன.

**It is as natural to man to die, as to be born. (Bacon)**

பிறப்பது போலவே இறப்பதும் மனிதனுக்கு இயல்பாயுளது என்னும் இது இங்கு உயர்வா நன்கு உணர வுரியது.

உடல் தோன்றி மறைவதையே பிறப்பு இறப்பு என உலகம் கூறி வருகிறது. உயிர் என்றும் அழியாதது; யாண்டும் அழியாத உயிர்க்கு எவ்வழியும் அழிகின்ற உடல் கூடாய் அமைகிறது. உடுத்த உடை அழுக்காய்க் கிழிதல்போல் அடுத்த உடல் கிழமாய் அழிகிறது. இந்த அழிவில் சிந்தை தளர்கிறது.

குழவி பிள்ளை பாலன் காளை குமரன் கிழவன் என நிகழ்வன யாவும் இளமை கழிந்த இழவுகளேயாம். இளமை கழிவதும் மூப்பு வருவதும் சாவின் தனியான அடையாளங்களாம்.

பழைய ஆடை கிழிந்து போனால் புதிய ஆடை வருவது போல் மூத்து முதிர்ந்த உடல் இறந்துபோனால் பின்பு இளமையான புதியவுடல் வளமையாய்ப் பிறந்து வருகிறது.

தேஹிநோஅஸ்மிந்யதா தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா
ததா தேஹாந்தரப்ராப்திர்தீரஸ் தத்ர ந முஹ்யதி. [கீதை, 2-13]

உயிர்க்கு உரிய இவ்வுடலில் இளமை வாலிபம் மூப்புகள் தோன்றுதல்போல் தேகமும் நீங்கி வேறு ஒரு பிறப்பு உண்டாகிறது; இவ்வுண்மையை உணரும் தீரன் சாவில் யாதும் கலங்க மாட்டான் எனக் கண்ணன் இன்னவாறு விசயனிடம் கூறியுள்ளார். இறப்புக்கு அஞ்சாமையே சிறப்பான ஞானமாம்.

எடுத்த உடல் இறந்துபடுமுன் எய்திய பிறவிப் பயனை அடைந்துகொள்ள வேண்டும்; அவ்வாறு அடைந்தவன் உயர்ந்து போகிறான்; அடையாதவன் கடையா யிழிந்து படுகிறான்.

குழவியாய்ப் பால னாகிக் குமரனாய் வளர்ந்து மூத்துக்
கிழவனாய்த் தளர்ந்து நொந்து கிளையழச் சாக நேர்ந்தாய்!
அழகிதுன் வாழ்வை நோக்கி ஆருயிர்க்கு அமுதை ஆக்கிப்
பழகிய பிறவி நீங்கிப் பரகதி படரு வாயே.

தன்னை வந்து வணங்கிய ஒரு முதியவனை நோக்கி ஒரு முனிவன் கூறிய இவ்விழுமிய மொழியைக் கூர்ந்து ஓர்ந்து கொள்க.

---

923\. பிறப்பின் பெரும்பயனைப் பெற்றவனே பின்பாம்
இறப்பினை இன்பா எதிர்வன்—மறப்பாகிப்
பாவம் பயின்று பழுதே கழிந்திருந்தான்
சாவில் வெருள்வன் தளர்ந்து. (௩)

இ—ள்.

பிறந்த பிறப்பின் சிறந்த பயனை அடைந்து கொண்டவன் இறந்துபடுவதை இன்பமா எதிர் கொள்கிறான்; அவ்வாறு அடையாமல் பாவம் படிந்து பழுதே பொழுதைக் கழித்தவன் சாகநேர்ந்தபோது மருண்டு வெருண்டு மறுகி அழுவன் என்க.

அறிவுநலம் கனிந்த அரிய பிறவியை அடைந்துள்ள மனிதன் அதற்கு உரிய பயனை விரைந்து அடைந்து கொண்டால் அவன் உயர்ந்த பாக்கியவானாய்ச் சிறந்து திகழ்கிறான். பெற்ற பிறவி பெருமையுறுவது உற்ற கருமத்தின் உறுதியாலேயாம்.

இந்த உயர்ந்த மனித வுருவில் நான் பிறந்தது எதற்கு? வளர்ந்து முயன்று வாழ்ந்து வருவது எதன் பொருட்டு? நாள்

தோறும் ஆயுள் கழிந்து போவதால் இறந்துபடுமுன் அடைந்து கொள்ள வேண்டியது எது? இன்னவாறான கேள்வியைத் தன் உள்ளத்தோடு ஒவ்வொரு மனிதனும் உசாவி யுணர வேண்டியவனுயிருக்கிருன். சொந்தமான இந்த விசாரணை அமைந்த அளவு அந்த மனிதன் எந்த வகையிலும் ஏதேனும் ஓரளவு ஆன்ம ஊதியத்தை அடைந்து மேன்மை பெற நேர்கிருன்.

கல்வி கேள்வி அறிவு முதலிய நல்ல உணர்வுகள் எல்லாம் தெளிவான விசாரணையால் ஒளிமிகப் பெற்று உறுதி நலங்களை அருளி வருகின்றன. ஓர்ந்து சிந்திக்கும் அளவே மனிதன் உயர்ந்து திகழ்கிருன். சிந்தனையில்லாத வாழ்வு நிந்தனையாய்த் தாழ்ந்து ஒழிகிறது எண்ணி யுணராதவன் மண்ணாய்மடிகிருன்.

இளமை கழிவதும் மூப்பு வருவதும் தன் எதிரே பலர் சாவதும் கண்கூடா மனிதன் காணுகிருன்; கண்டும் உயிர்க்கு உறுதியா யாதும் புரியாமல் ஊனமாய் உழல்கின்றுன்.

இறந்துபடுமுன் ஆன்ம வூதியத்தை அடைந்து கொள்ள வேண்டும் என்றே நிலையாமை நிலையை மேலோர் நேரே எடுத்துக் காட்டியுள்ளனர். நூலோர் பலரும் இதனை வலியுறுத்தி வருகின்றனர். சாதலை விளக்கிச் சார்தலைத் துலக்குகின்றுர்.

புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்று எண்ணி
இன்னினியே செய்க அறவினை---இன்னினியே
நின்றுன் இருந்தான் கிடந்தான் தன் கேள் அலறச்
சென்றுன் எனப்படுத லால். (நாலடி, 29)

புல்லின் நுனிமேல் உள்ள சிறிய பனித்துளி போல் உன் வாழ்வு விரைவில் அழிந்துபோம். இங்கே நின்றுன், அங்கே இருந்தான், அதோ கிடந்தான், இதோ செத்தான் என்று பலர் மாண்டு மடிவதை நேரே பார்த்திருக்கிருய்; நீயும் அவ்வாறே ஒல்லையில் சாகப் போகிருய்; சாகுமுன் விவேகமாய் உன் உயிர்க்கு நல்லதைச் செய்துகொள் என இது உய்தி காட்டியுள்ளது. அழிவுக் காட்சி தெளிவுக்குச் சாட்சியாய் நின்றது.

ஆமினி மூப்பும் அகன்றது இளமையும்
தாமினி நோயும் தலைவரும்---யாமினி
மெய்யைந்தும் மீதூர வைகாது மேல்வந்த
ஐயைந்தும் ஆய்வது அறிவு. (வெண்பாமாலை)

மூப்பும் நோயும் மூண்டு சாக நேர்ந்துள்ளாய்; தேக போகங்களில் மோகமா யிழிந்து போகாமல் தத்துவ நிலைகளை உய்த்துணர்ந்து முத்தி நலம் பெறுக என இது புத்தி போதித் துள்ளது. உடல் விழுமுன் உயிர்க்கு உறுதிகாண உணர்த்தியது.

பண்டம்பெய் கூரை பழகி விழுந்தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்;
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே. (திருமந்திரம்)

நீ செத்தால் உன் மனைவி மக்கள் யாரும் உன்னோடு கூட வரமாட்டார்; உனது தருமமும் தவமும் ஞானமுமே கூட வரும்; ஆதலால் அவற்றையே உரிமையா நாடித் தேடிக் கொள்க என்று திருமூலர் இவ்வாறு மனிதனுக்கு மதிநலம் கூறி யிருக்கிறார். உடம்பைப் பழங்கூரையாக் குறித்தது அது விழுந்து ஒழியும் அவதி தெரிந்து விரைந்து கதிபெற வந்தது.

ஒருவனுக்கு அமைந்த ஆயுள் நாள் கணந்தோறும் கழிந்து போகிறது; அதனை உணர்ந்து அவன் உய்தி பெற வேண்டும்; உள்ளம் புனிதமாய் நல்ல வழியில் ஒழுகினால் அவன் தருமவான் ஆகிறான்; ஆகவே இருமையும் அவனுக்கு உரிமையாய் இன்பம் தருகின்றன. அறமே ஆவிக்கு இனிய துணையாம்.

ஆற்றிய அறம் ஒன்றே ஆருயிர்க்கு என்றும்
போற்றிய நலங்களைப் பொருந்தச் செய்தலால்
ஏற்றிய வலிஎன இருமை இன்பெனத்
தேற்றிய அமுதெனத் தெரிய நின்றதே.

இதனை இங்கே நன்கு தெரிந்து நன்மை யுறுக.

தான் செய்த புண்ணியமே எண்ணியபடி யெல்லாம் மனித னுக்கு இன்ப நலங்களை அருளி வருகின்றது என்று புத்தர் ஒரு முறை திரளான சனங்களுக்குப் போதித்தருளினார். அன்று அவர் பாலி மொழியில் கூறியதை உலக மொழிகள் பலவும் உவந்து போற்றி வியந்து புகழ்ந்து விழைந்து வருகின்றன. அந்த மூல மொழி அயலே காண வருகிறது.

த[illegible]ரே ஸு[illegible]சரிதம் நதம் துச்சரிதம் சரே
தம்ம[illegible] ஸு[illegible]கம் ஸேதி அஸ்மிம் லோகே பரம்ஹிச.
[தம்மபதம், 169]

நல்ல ஒழுக்கம் ஆன தருமத்தில் நட; தீய வழியில் நடவாதே; தருமநெறி நடந்தவன் இவ்வுலகத்திலும் மறு உலகத்திலும் இன்பமே பெறுகிறான் என்னும் இது இங்கே அறிய வுரியது.

நல்ல கருமங்களைச் செய்துவருகிற தருமவான் மறுமையில் பெரிய சுகங்களையும் அரிய மகிமைகளையும் அடை[illegible]த்துள்ளமையால் மரணத்துக்கு அவன் அஞ்சுவதில்லை; அதனை உவந்து எதிர் நோக்கி நிற்கிறான். பொல்லாத பாவங்களைச் செய்தவன் கொடிய அல்லல்களை அடைய நேர்ந்திருத்தலால் சாவு நேரும் போது ஆவி அலமந்து அவன் அஞ்சி நடுங்குகிறான்.

"The bad man's death is horror; but the just does but ascend to glory from the dust." [Habbington]

கெட்ட மனிதனுடைய சாவு கொடிய பயங்கரமாயிருக்கிறது; நல்ல நீதிமானுடைய மரணம் இழிவிலிருந்து நீக்கி உயர்ந்த மகிமையை அவனுக்கு அருளுகிறது என்னும் இது இங்கே ஊன்றி உணர வுரியது.

அல்வழியில் இழியாமல் நல்ல நெறிகளில் ஒழுகி உயர்க.

---

924. சூத்திரம் நின்றவுடன் தோல்பாவை வீழ்வதுபோல்
ஆத்திர மானவினை அற்றவுடன்—காத்திரம்
மண்ணில் விழுந்துவிடும் மாயமா வாழ்விதனை
எண்ணிச் செருக்கல் இடர். (ச)

இ-ள்.

ஆட்டும் கயிறு நின்றவுடன் ஆடிவந்த தோல்பாவைகள் வீழ்ந்து விடும்; அதுபோல் வினைத்தொடர்பு அற்றவுடன் உடல்கள் மண்ணில் மாய்ந்து விழும்; இத்தகைய மாய வாழ்வை நிலை என்று எண்ணிக் களித்தல் தொலையாத துன்பமாம் என்க.

சூத்திரம் = இரகசியமா யிணைந்திருக்கும் கயிறு.

ஆத்திரம் = ஆசை மீதூர்ந்த அவசரம்.

காத்திரம் = கரணங்கள் மருவிய உடல்.

வினைகளின் விளைவாகவே பிறவிகள் விளைந்து வந்துள்ளன. அவற்றின் போகங்களை அனுபவித்து முடிந்தவுடன் உயிர்கள் நீங்கிப் போகின்றன; போகவே தேகங்கள் செயலிழந்து

கிடக்கின்றன அந்தக் கிடைதான் இறப்பு, சாவு, இழவு, மரணம், முடிவு என்று பல பெயர்களால் சொல்லப்படுகிறது.

கயிறு அறுந்தவுடன் பாவைகள் செயல் இழந்து விழுந்து விடுகின்றன; உயிர் பிரிந்தவுடன் உடல்கள் அடலழிந்து படுகின்றன. தோலால் செய்த பாவைகள் ஆட்டம் ஒய்ந்து கிடப்பதுபோல் ஆவி நீங்கிய தேகங்களும் அவலமாயிழிந்து கிடக்கின்றன. காக்கையும் கழுகும் நாயும் நரியும் பேயும் தின்னும் இரை என்று யாக்கைகள் இழிவாப் பேசப்பட்டுள்ளன.

ஒன்பதுவாய்த் தோல்பைக்கு ஒருநாளைப் போலவே
அன்புவைத்து நெஞ்சே அலைந்தாயே---வன்கழுக்கள்
தத்தித்தத் திச்சட்டை தட்டிக்கட் டிப்புட்டுக்
கத்திக்குத் தித்தின்னக் கண்டு. (பட்டினத்தார்)

கழுகுகளுக்கு இரையாயுள்ள ஒன்பது துளைகளையுடைய தோல்பை எனப் பட்டினத்தார் இங்ஙனம் உடம்பைச் சுட்டி இகழ்ந்திருக்கிறார். உடல் பிணமாய் விழுமுன் உயிர்க்கு உறுதி நலனைத் தேடிக் கொள்ள வேண்டும் என்றே பலரும் பாடியிருக்கின்றனர். காயம் மாயப் பொய் எனக் கவிகள் காட்டியுள்ளன.

தோற்போர்வை மேலும் துளைபலவாய்ப் பொய்மறைக்கும்
மீப்போர்வை மாட்சித் துடம்பானல்---மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும். [நாலடியார்]

பல துவாரங்களுடைய தோல் போர்வையால் மூடியுள்ள உடம்பின் உண்மை நிலையை நாடியுணர்ந்து உயிர்க்கு உறுதியை விரைந்து தேடுக என இது வரைந்து உணர்த்தியுள்ளது.

ஆன்ம ஊதியம் அதிசய மேன்மையாய்த் துதி செய்ய நின்றது. உயர்ந்த பிறவிப் பயன் என மேலோர் புகழ்ந்து போற்றுவது உயிர் சிறந்த கதியில் ஏற்றமாய் விளங்கி நிற்பதையே.

நேர்ந்த பிறப்பில் உயிர்க்கு நிலையான தலைமையை அடைந்து கொண்டவன் நித்திய முத்தன் என நிலவி நிற்கிறான். பிறப்பின் பயனைச் சிறப்பாகப் பெற்றவன் இறப்பை உவப்பா எதிர் நோக்கி இராசகம்பீரமாய் இனிது வாழுகின்றான். ஆவிக்கு ஆன இனிய பலனை அடைந்தவன் அரிய ஞான வீரன் ஆகின்றான்;

ஆகவே சாவுக்கு யாதும் அஞ்சாமல் சீவ ஒளி நிறைந்து தேசு மிகுந்து திவ்விய நீர்மையில் மிளிர்கின்ருன். இறப்பை அஞ்சாத வரே என்றும் துஞ்சாதவராய் இசை மிகப் பெறுகின்ருர்.

புனித வாழ்வு மனிதனை மகான் ஆக்கி இனிய வானுலகத்தில் உய்த்தலால் அவன் எவ்வழியும் திவ்விய நிலையில் சிறந்து திகழ்கிருன். அச்சமும் அவலமும் நீங்கிச் சீவன் உச்ச நிலையை அடைவதே உயர்ந்த மனித வுருவை மருவிய சிறந்த பயனும்.

He that lives to live forever, never fears dying. (Penn)

என்றும் நித்தியமா வாழ வாழ்கிறவன் சாதலை யாதும் அஞ்சான் என இது போதனை செய்து குறித்திருக்கிறது.

வாழ் வாங்கு வாழ்பவன் தேவனுக நேர்ந்துள்ளமையால் மேவிய உடல் நீங்குவதை விழைந்து நிற்கின்ருன். வாழ்வைப் பழுதாக்கி நாளை வீணே கழித்தவன் சாக நேருங்கால் ஆவி குலைந்து அல்லலுழந்து அழிதுயரடைகின்ருன்.

இறந்து படுவோம் என்று எல்லாருக்கும் தெரியும்; ஆயினும் மதிகேடராய் அதனை மறந்துவிடுகின்றனர். இன்ன நேரம்தான் சாவு நேரும் என்று முன்னதாக யாரும் அறிய முடியாது ஆதலால் நாளும் நல்லதையே பழகிவரின் அவ்வாழ்வு சாவை அஞ்சாத தேவ வாழ்வாய்ச் சிறந்து தெளிவு மிகுந்து விளங்கும்.

நெல்அறுக்க ஓர்காலம் மலர்கொய்ய
ஓர்காலம் நெடிய பாரக்
கல்அறுக்க ஓர்காலம் மரம்அறுக்க
ஓர்காலம் கணிதம் உண்டு
வல்அரக்கன் அனையநமன் நினைத்தபோ
தெல்லாம்நம் வாழ்நாள் என்னும்
புல்அறுக்க வருவன் எனின் நெஞ்சமே
மற்றினியாம் புகல்வது என்னே? (1)

முற்றியபின் கனியுதிரும் பழுப்புற்றுத்
தழையுதிரும் முழுது மேநெய்
வற்றியபின் விளக்கவியும் என்னஓர்
திடம்உண்டு; மக்கள் காயம்
பற்றியஅக் கருப்பத்தோ பிறக்கும்போ
தோபாலப் பருவத் தோமூப்பு

உற்றபின்போ வீழ்வதுஎன நிலையின்றேல்
இதன்பெருமை உரைப்பது என்னே! (நீதிநூல்)

மனித வாழ்வின் நிலைமை இவை இனிது காட்டியுள்ளன. காட்சிகளைக் கருதி உணர்ந்து இறுதி நேருமுன் உயிர்க்கு உரிமையான உறுதி நலங்களை உணர்ந்து கொள்ள வேண்டும்.

உயிர்வாழ்வு உயிர்ப்பு அளவில் உலாவி வருகிறது. புறத்தே நீண்டமூச்சு அகத்தே மீண்டு வருவதே ஈண்டு வாழ்வாயுள்ளது. வெளியே போனது உள்ளே மீளாது ஒழியின் அதுவே அழிவாம். அந்த இறப்பு நிலையைக் குறிப்போடு கூர்ந்து ஓர்ந்து பிறப்பின் பயனைச் சிறப்பாக விரைந்து செய்து கொள்ளுக.

---

925. வழிவழியாய் மன்பதை வையமிசை என்றும்
ஒழிவின்றி ஓங்கி வளரக்—கழிவாகி
மூத்து வருந்தும் முதுமை களைந்துறவாய்க்
காத்து வருமிறப்பு காண். (ரு)

இ—ள்.

மாந்தர் வழிமுறையே தொடர்ந்து இவ்வையத்தில் புதிது புதிதாய் ஓங்கி வளர்ந்து வரும்படி மூத்த முதிர்ந்த கிழங்களைக் கழித்து நீக்கி இறப்பு யாண்டும்இனிது காத்துவருகிறதுஎன்க.

இந்த உலகம் உயிரினங்களின் தொடர்பால் ஒளி மிகுந்து தெளிவமைந்து வளம் அடைந்து வருகின்றது. சீவகோடிகள் தோன்றவில்லையானல் நெடிய பூமி கொடிய பாலைவனமாயிழிந்து பாழடைந்துபடும். கடல்கள் சூழ்ந்த ஞாலம் உடல்கள் சூழ்ந்து வருவதால் உயர்ந்து ஓங்கி மிளிர்கிறது. பிறந்த பிராணிகளும் பருவம் முதிர்ந்து இறந்து போகவில்லையானல் உருவங்கள் செறிந்து நிறைந்து வையம் வெய்யதாய் நைய நேரும்.

பழுத்த பழங்கள் உதிர்ந்து வீழ்வதுபோல் மூப்பு முதிர்ந்த கிழங்கள் இயல்பாய் இறந்துபடுகின்றன. இந்த இறப்பினலேயே உலகம் சிறப்படைந்து சீரோடு செழித்து வருகிறது.

விளைந்து முதிர்ந்த பயிர்கள் அழிந்து போகின்றன; போகவே மீளவும் இளம் பயிர்கள் கிளர்ந்து வளர்ந்து வருகின்றன. தளர்ந்து மூத்த கிழங்களை உலகிலிருந்து ஒருங்கே ஒழித்து நீக்கி

நிலத்தை நலமாப் பாதுகாத்து வருதலால் இறப்பு வையத்தை வளமாப் போற்றி வரும் உரிமையாளனாய்ப் பெருமை மிகப் பெற்று ஊழி முதல்வன் என ஒளி மிகுந்து உறுதி புரிந்துள்ளது.

கூற்றுவன், எமன், காலன் என மேலான பெயர்களால் ஞாலம் போற்றி வருவன யாவும் இறப்பின் மாற்று உருவங்களே. உருவக உரைகள் கால தேவதைகளைக் காட்டியுள்ளன.

காலன் வாய்ப்படு முன்னரே காலகாலனைக் கருதி உய்ய வேண்டும் என்பது மேலோர் வாய்மொழி. பிறவிக் கடலுள் வீழ்ந்து வாழ்ந்து வருதலால் ஊனுடம்புடைய மானுடங்கள் மீனினங்கள் என நேர்ந்தன. அந்த மீன்களை வளைத்துப் பிடித்து வாரி வருகிற வகையால் கருங்காலன் செம்படவன் என நேர்ந்தான். அவன் கையில் அகப்படாதவன் சிவன் காலைச்சேர்கிறான்.

''கூற்றுஎனப் பெயரிய கொடுந்தொழில் நுளையன்
ஊற்றமில் யாக்கை உவர்நீர்க் கேணிப்
புலத்தலை உயிர்மீன் அலைத்தனன் பிடிப்ப
ஐவளி பித்துஎன அமைத்துவைத் திருந்த
முத்தலைத் தூண்டில் தூண்டி அத்தலை
வாழ்நாள் மிதப்பு நோக்கித் தாழாது
அயிறலைத் தொடங்கி எயிறு அலைத் திருத்தலின்
தள்ளா முயற்சி தவறுபட்டு ஒழிந்தென
வெள்குறீஇ மற்றவன் விம்மிதன் ஆக
அருட்பெருங் கடலின்அவ் ஆருயிர் மீனம்
கருக்குழி கழியப் பாய்ந்து தெரிப்பரும்
பரமா னந்தத் திரையொடும் உலாவி
எய்தரும் பெருமிதம் எய்த
ஐயநின் கடைக்கண் அருளுதி எனவே.

(திருவாரூர்நான்மணி, 13)

ஒரு நுளையன் வலையில் பல மீன்கள் அகப்பட்டன; அவற்றுள் ஒன்று அதிசயமாய்த் துள்ளிக் குதித்து அயலேயிருந்த நல்ல நீரில் பாய்ந்து மறைந்தது; அதுபோல் எமன் கையில் சிக்கியுள்ள உயிரினங்களுள் நான் ஒருவன் தப்பிப் பிழைத்து உன் திருவடியாகிய பேரின்பக் கடலில் புகுந்து வாழும்படி எனக்கு அருள் புரிய வேண்டும் இறைவனே! என்று சிவபெருமானை நோக்கிக் குமரகுருபரர் இவ்வாறு துதித்திருக்கிறார். கவியில் சுரந்துள்ள பொருள்களையும் உருவக நிலைகளையும் அறிவின் சுவைகளையும் ஊன்றி ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

எண் இறந்த பிராணிகள் மண் நிறைந்து திரிகின்றன. அவற்றுள் மனித இனம் மதிநலமுடையதாய் மருவி வந்துள்ளது. பிறந்தன யாவும் இறந்து போய்விடும் என்று உணர்ந்து கொள்வதில் மனிதன் உயர்ந்து நிற்கின்றான். நூலறிவாலும் அனுபவ உணர்வாலும் அழிவு நிலையைத் தெளிவாகத் தெரிந்துள்ளமையால் விழுமிய பிறவிப் பயனை விரைந்து பெறுவது சிறந்த உரிமையா நேர்ந்தது. கண்ட காட்சி கதிகாட்டி யருளுகிறது.

கொண்ட பாவனை பிறவியாம் பூதங்கள்
குலைந்துபோம்; திசைதோன்ரு;
கண்ட தேசங்கள் பிறசொலாத் திரிந்திடும்
கனகிரி துகள் ஆகும்;
உண்டெனும் தன்மை விழுங்கிட உலகு போம்;
உம்பர்போம்; புவனம் போம்;
மண்டு வாரிபோம்; உடுக்கள்போம்; தானவர்
வானவர் கணம் போகும். (1)

சித்தர் பொன்றுவர்; துருவனும் சிதைகுவன்;
சிவன் அயன் திருமார்பன்
தத்து வந்தனில் ஒன்றுவர்; காலமும்
தருமமும் முடிவாகும்;
மத்த வானும்போம்; மயக்கமே தருவதாய்
வாக்கொடு செவிக்கு எட்டாச்
சுத்த மாம்பொருள் ஒன்றினல் இகழ்வுறத்
தொல்லுலகு இழிவாகும். [வாசிட்டம்] (2)

யாவும் இறந்துபடும் இழவு நிலைகளை இங்கே விழி யூன்றி வியந்து காணுகிறோம். சாவிலேயே இவ்வாறு வாழநேர்ந்துள்ளமையால் சாகுமுன் ஆக வேண்டியதை மனிதன் அடைய நேர்கின்றான். அடையாவழிக் கடையா யிழிகிறான்.

நீதி நெறியான வாழ்வு தேவ நிதியாய் வருகிறது. எவனுடைய வாழ்வு தூய்மை தோய்ந்து தொடர்கிறதோ அது தேவ வாழ்வாய்ச் சேமம் அடைந்து தேசு மிகுந்து திகழ்கிறது.

The creed of the true saint is to make the most of life, and to make the best of it. (E. H. Chapin)

உண்மையான மகான் வழி உயிர்வாழ்வை மிகுதியும் நன்மை ஆக்கியருள்கிறது என்னும் இது இங்கே நன்கு அறிய வுரியது.

சித்த சுத்தியான வாழ்வு நித்திய முத்தியை நேரே தருகிறது; அவ்வாறு வாழ்பவனைப் புத்தேளுலகமும் போற்றி வருகிறது. பெற்ற பிறப்பின் பேற்றைச் சிறப்பா அடைந்தவனுக்கு உற்ற இறப்பு எவ்வழியும் செவ்வையாய் உவகையே புரிகிறது.

**Death is the golden key that opens the palace of eternity. (Milton)**

என்றும் அழியாத பேரின்ப வுலகைத் திறக்கிற தங்கத் திறவு கோலாய்ச் சாவு மேவியுளது என மில்ட்டன் என்னும் ஆங்கிலக்கவிஞர் இறப்பைக்குறித்து இங்ஙனம் கூறியிருக்கிறார்.

நித்திய நிலை முத்தி என நின்றது. புனித வாழ்வுடையவர் அந்தஅரிய இனிய பரகதியை எளிதே உரிமையா அடைகின்றார்.

---

926\. செத்தொழிவம் என்னும் சிறுநினைவொன் றில்லைஎனின்
முத்தி நிலையை முதல்விழைந்து—இத்தரையில்
யாரே அருள்செய் தறம்புரிவார் அம்மைஎனும்
பேரேனும் உண்டோ பிற. (கூ)

இ-ள்.

இறந்து தொலைவோம் என்னும் இந்தச் சிறிய நினைவு ஒன்று இல்லை ஆனால் அரிய தருமங்களை யாரும் செய்யார்; அழியாத பேரின்ப நிலையைப் பெற எவரும் விரும்பார்; மறுமை என்ற பேரே மறைந்து போம்; இந்த உண்மையை உணர்ந்து கொள்க.

முயற்சிகளைச் செய்து உயர்ச்சியாய் வாழும்படி பசி உயிர்களை இயக்கி வருகிறது; அதுபோல் இறப்பும் மனிதர்க்குச் சிறப்பான உணர்ச்சிகளை உதவியருளுகிறது. காரண காரியத் தொடர்புகள் கருமங்களின் மருமங்களாய் மருவியுள்ளன. உள்ளம் தெளிந்து சீவர்கள் உயர்கதிகளை அடையச் சாவு உறுதியா மேவியிருப்பது வித்தக விநோதமாய் விளங்கி நிற்கிறது.

பொய்யான புலைகளை அறிந்த அளவு மெய்யான நிலைகளை அடைய நேர்கின்றான். இறந்து போவோம் என்ற எண்ணமே பிறந்த பயனை விரைந்து பெறச் செய்கிறது. உணர்வு நலம் கனிந்த சிந்தனைகள் உயர்ந்த பலன்களை உரிமையோடு உதவுகின்றமையால் அவை சீவ ஒளிகளாய் வியந்து புகழ வந்தன.

மனிதப் பிறப்பு மதிநலம் உடையது ஆதலால் நித்திய அநித்தியங்களை நேரே உய்த்து உணர்ந்து நெறிமுறையே கடமைகளைச் செய்துவருகிறது. அறிவோடு நல்ல வழியே ஒழுகி வருதலால் அரிய பல மேன்மைகள் அதனிடம் பெருகி வருகின்றன. எய்திய பிறவியால் செய்து கொள்வதைத் தெரிந்தவன் சிறந்த நிலையில் உயர்ந்து சீர்மையோடு விரைந்து உய்தி பெறுகிறான்.

எடுத்த தேகம் விழுமுன் எதிரிலே
மடுத்த யாவும் மதியுடன் ஆற்றினன்
அடுத்த தேவப் பிறவியை ஆக்கினன்
தொடுத்த மேன்மை தொடர்ந்து தொடருமே.

தெளிந்த விவேகத்தோடு கருமங்களைச் செய்வதால் விளைந்து வரும் பலன்களை இது நன்கு விளக்கியுள்ளது. கருத்தோடு முயன்று வாழ்கின்றவனே விருத்தி யடைந்து வியனு விளங்கி வருகிறான். கருதி யுணராத மனிதன் விருதாவா இழிந்து பரிதாப நிலைகளில் அழுந்தி யுழந்து வீணே கழிந்து போகிறான்.

A man without a purpose is soon down at zero. [Carlyle]

குறிக்கோள் இல்லாத மனிதன் பாழான கீழ் நிலையில் விரைந்து வீழ்கிறான் என்னும் இது ஈண்டு ஊன்றி உணர்ந்து கொள்ள வுரியது. சரியான குறி இலேயேல் வாழ்வு வெறியாம்.

கூரிய அறிவும் சீரிய கருத்தும் சிறந்த குறிக்கோளும் வாழ்வை மகிமைப்படுத்தி வருகின்றன. சாவை நோக்கியே வாழ்வு நடந்து வருதலால் அந்த அழிவு நிலையை முன்னதாக எண்ணி உணர்பவர் தெளிவான விவேகிகளாய்ச் சிறந்து திகழ்கின்றார். உயிர்க்கு விழுமிய நன்மையை நாடுபவர் உடலின் அழிவை உணர்ந்து கொள்ளுகின்றார். தாம் தெளிந்து கொண்ட உண்மையை உலகம் தெளிய அளியோடு உணர்த்துகின்றார்.

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போடு உயிரிடை நட்பு. (குறள், 338)

கூட்டை விட்டுப் பறவை பறந்து போதல்போல் உடம்பை விட்டு உயிர் பிரிந்து போம் எனத் தேவர் இவ்வாறு சாவை உணர்த்தியுள்ளார். பிரிவு நேருமுன் பெற வுரிய பேறு பெறுக.

பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந்து உளுத்து
அசும்பு ஒழுகிய பொய்க்கூரை

இத்தை மெய்எனக் கருதிநின்று இடர்க்கடற்
சுழித்தலைப் படுவேனை, (மாணிக்கவாசகர்)

பொத்தல் மண்சுவர்ப் பொல்லாக் குரம்பையை
மெய்த்தன் என்று வியந்திடல் ஏழைகாள்! (அப்பர்)

என்பினால் கழிநிரைத்து இறைச்சிமண்
சுவர்எறிந்து இதுநம் இல்லம்
புன்புலால் நாறுதோல் போர்த்துப்பொல்
லாமையால் முகடு கொண்டு
முன்பெலாம் ஒன்பது வாய்தலார்
குரம்பையின் மூழ்கிடாதே
அன்பனா ரூர்தொழுது உய்யலாம் மையல்கொண்டு
அஞ்சல் நெஞ்சே! (சம்பந்தர்)

மணம்என மகிழ்வர் முன்னே மக்கள்தாய் தந்தை சுற்றம்
பிணம்எனச் சுடுவர் பேர்த்தே பிறவியை வேண்டேன்நாயேன்.
(சுந்தரர்)

சாமாறும் கெடுமாறும் தமர்உற்றார் தலைத்தலைப் பெய்து
ஏமாறிக் கிடந்து அலற்றும் இவைஎன்ன உலகியற்கை?
(நம்மாழ்வார்)

சாதலும் பிறத்தலும் என்றிவற்றைக்
காதல்செய்யாது உன்கழல் அடைந்தேன். (திருமங்கையாழ்வார்

பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்து பட்டாடைசுற்றி
முத்தும் பவளமும் பூண்டோடிஆடி முடிந்தபின்பு
செத்துக் கிடக்கும் பிணத்தருகேஇனிச் சாமபிணங்கள்
கத்தும் கணக்கென்ன காண்கயி லாபுரிக் காளத்தியே.
(பட்டினத்தார்)

மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய்
அணியிழையார் வாழ்த்தொலிபோய் அழுகைஒலியாய்க் கழியக்
கணமதனில் பிறந்திருமிக் காயத்தின வருமபயனை
உணர்வுடையார் பெறுவர்உணர்வு ஒன்றுமிலார்க்கு ஒன்றும்இலை.
[திருவிளையாடல்]

மன்றம் கறங்க மணப்பறை ஆயின
அன்றவர்க்கு ஆங்கே பிணப்பறையாய்---பின்றை
ஒலித்தலும் உண்டாம்என்று உய்ந்துபோ மாறே
வலிக்குமாம் மாண்டார் மனம். (நாலடியார்)

சாவைக் குறித்து மகான்கள் எண்ணியுள்ள நிலைகளை இங்கே

நாம் கண்ணூன்றி உணர்ந்து கொள்கிறோம். பிறவித் துன்பம் நீங்கிப் பேரின்ப நிலையை அடையநேர்ந்தவர் இறப்பைக் குறிப் போடு கருதநேர்ந்தனர். கருதியது உறுதிகளை உணர்த்தியது.

மணமகனே பிணமகன்; மணப்பறையே பிணப்பறை.

என்றது மனித வாழ்வின் அழிவு நிலையை விழி தெரிய விளக்கித் தெளிவு அருளி நின்றது. கலியாண மகிழ்ச்சிகள் அப் பொழுதே இழவு அழுகைகளாய் மாறிவிடுகின்றனவே; இந்த அவல நிலையில் உள்ள வாழ்வில் உயிர்க்கு உறுதியை விரைந்து தேடாமல் கவலையின்றிக் களித்துத் திரிவது கழிமடமையாம் என்பது காண வந்தது. உறுதி கண்டு உய்ய வேண்டும்.

All things that we ordained festival,
Turn from their office to black funeral;
Our instruments to melancholy bells,
Our wedding cheer to a sad burial feast,
Our solemn hymns to sullen dirges change,
Our bridal flowers serve for a buried corse,
And all things change them to the contrary.
[Romeo And Juliet, 4, 5,]

கலியாணத்துக்கு நியமித்த எல்லாப் பொருள்களும் இழவுச் சடங்குக்கு மாறின; தக்க கருவிகள் துக்கங்களை மருவின; மணவிருந்து பிணவிருந்தாயது; மங்கலப்பாட்டுகள் ஒப்பாரிகளா யின; இனிய மணமலர்கள் பிணமாலைகளா யிசைந்தன; இன்ப நலம் எல்லாம் துன்பங்களாய் முடிந்தன என்னும் இது இங்கே அறிய வுரியது. மாய வாழ்வுகள் மாயும் வாழ்வுகளாயுள்ளன.

சாவின் நிலைமையைச் சரியாய்த் தெரிந்தவர் பெரிய ஞான சீலராய் மேலான கதியை மேவ நேர்கின்றார். நேரவே இறப்பை விருப்பா அவர் எதிர் நோக்கிச் சிறப்போடு நிற்கின்றார்.

Death expecteth thee everywhere; be wise, therefore, and expect death everywhere. (Quarles)

மரணம் உன்னை எங்கும் எதிர்பார்த்து நிற்கிறது; ஆதலால் நீ விவேகியாய் விரைந்து யாண்டும் அதனை எதிர் நோக்கி நில் என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி உணர வுரியது.

உண்மையை உணர்ந்து தெளிவதே ஞானம்; அது அமைந்த

அளவு மனிதன் ஞானியாய் உயர்ந்து திகழ்கின்றான். ஐயோ! சாவு வந்துவிட்டதே என்று நெஞ்சம் திகிலாய் அஞ்சி நடுங்காத படி முன் எச்சரிக்கையாய்த் தருமநெறி தழுவித் தகவோடு வாழ்ந்துவரின்மரணபயம் நீங்கிஎங்கும்மகிமை மிகப்பெறலாம்.

---

927. கரணங்கள் யாவும் கலங்கக் கடுகி
மரணம் வருவ தறிந்தும்—அரணமொன்றும்
தேடாமல் வீணே திரிந்து கழிவார்போல்
மூடர் எவரே முதல். (எ)

இ-ள்.

அந்தக் கரணங்கள் யாவும் கலங்கி நடுங்கும்படியான மரணம் வருவதை அறிந்தும் தம் உயிர்க்கு யாதொரு உறுதி நலனையும் கருதிக் கொள்ளாமல் வீணே திரிந்து கழிவார் போல் முழுமூடர் வேறு யாரும் யாண்டும் இலர் என்பதாம்.

பிறவிப் பயனைப் பெறுபவன் பெரிய மகான் ஆகிறான்; பெறாதவன் பேதையாய் இழிவுறுகிறான். உற்ற உடம்பின் உயர்வையும், உரிய வாழ்வின் குறிக்கோளையும், சாவின் துயரையும், செத்தபின் நேரும் அல்லல்களையும் உய்த்து உணராமையால் ஊனமாயிழிந்து மானிடர் ஒழிந்து போகின்றார். துயரப் பிறப்பையும் துன்ப வாழ்வையும் இன்பமா எண்ணி இறுமாந்து களித்து ஈனமா அழிந்து போவதே சிறுமாந்தரின் செயலாய் மயலோடி நிற்கிறது. வந்த காரியத்தை உணராமல் வாளா மாண்டு கழிவதே மீளாத மாய மோகமாய் யாண்டும் நீண்டு வருதலால் மனிதருடைய நிலைகள் மையல் வெறிகளா மருவின.

பிறப்பும் இறப்பும் துயரங்களோடு தொடர்ந்து வந்துள்ளன. பெற்ற தாய்க்குப் பிரசவ வேதனையை விளைத்துப் பெரிய அல்லல்களுடன் குழந்தை பிறக்கிறது. வாழ்விலும் எல்லையில்லாத துன்பங்களை எய்தி யுழலுகின்றது; சாவிலும் கருவி கரணங்கள் எல்லாம் கலங்கி நடுங்க மயங்கி முடிகிறது. உடலை எடுத்து வந்த போதும் அதனை விடுத்து ஓடும்போதும் துக்கங்களே பக்கம் எங்கும் தொடர்ந்திருத்தலால் பிறப்பும் இருப்பும் இறப்பும் கொடிய துன்பங்கள் என முடிவாய் அஞ்ச நேர்ந்தன.

புலன்ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட்டு ஐம்மேல் உந்தி
அலமந்த போதாக அஞ்சேல்என்று
அருள்செய்வான். (தேவாரம்)

சாகும்போது மனிதன் படுகிற பாட்டை இப்பாட்டு நன்கு வரைந்து காட்டியுள்ளது. அஞ்சி அலமந்து அல்லலாய் இறந்து படும் சமையத்தில் அஞ்சாதே! என்று அருள் புரிந்தருளும் பரமபதி என இறைவனை ஞானசம்பந்தர் இவ்வாறு உளம் உருகித் துதித்துள்ளார். மரணவேதனைகள் மதிதெளிய வந்தன.

பரணமாகிய பெண்டிரும் சுற்றமும் பண்டுதம் கையில்தந்த
இரணமானவை கொண்டிடஇவரைவிட்டு இயம்பிடாதிவண்ஏகு
மரணவேதனை யாவரால் அறியலாம் மயங்கிஐம் புலன்அந்தக்
கரணம் யாவையும் கலங்கிட வருதுயர் கடவுளே அறிகிற்பார்.
(குறுந்திரட்டு)

மனித வாழ்வின் மருமத்தை இது உணர்த்தியுளது. மனைவி மக்கள் எனச் சுற்றியுள்ள கூட்டத்தினிடம் முன்பு வாங்கியிருந்த கடன் தீர்ந்தவுடன் அவன் முடிந்து போகிறான்; அவ்வாறு போவதுதான் சாவாகிறது. புலன் ஒடுங்கிக் கரணங்கள் கலங்கி அழியும் அந்த மரணவேதனையைக் கடவுள்தான் அறிவார் என்று பரிதாபமாய் உரைத்தது மீண்டும் பிறவாதபடி உய்தி பெற. பிறப்புமூப்புஇறப்புகள்பெருந்துயர்களாகின்றன.

முதுகுபற்றிக் கைத்தலத்தால் முன்ஒருகோல் ஊன்றி
விதிர்விதிர்த்துக் கண்சுழன்று மேற்கிளைகொண்டு இருமி
இதுவென் அப்பர் மூத்தவா றென்று இளையவர்ஏசாமுன்
மதுவுண் வண்டு பண்கள்பாடும் வதரி வணங்குதுமே.
[பெரியதிருமொழி]

கிழமாயிழிந்து தளர்ந்து சாகுமுன் பதரி நாராயணனை நினைந்து உய்தி பெறுவோம் என்று பரகாலனார் இவ்வாறு பிறவியின் பயனை உலகம் அறிய உணர்த்தியிருக்கிறார். உடல் முதிர்ந்து ஒழிந்து போதலை உணர்ந்த மேதைகளே உயிர்க்கு உறுதி நலனை விரைந்து நாடுகின்றனர். உணராத பேதைகள் இழிகின்றனர்.

தோன்றுழித் தோன்றி நிலைதவக் கறங்கும்
புற்புதச் செவ்வியின் மக்கள் யாக்கைக்கு

நினைப்பினும் கடிதே இளமை நீக்கம்;
அதனினும் கடிதே மூப்பின் தொடர்ச்சி;
அதனினும் கடிதே கதுமென மரணம்;
வாணாள் பருகி உடம்பை வறிதாக்கி
நாணாள் பயின்ற நல்காக் கூற்றம்
இனைய தன்மையது இதுவே இதனை
எனதுஎனக் கருதி இதற்குஎன்று தொடங்கிச்
செய்தன சிலவே; செய்வன சிலவே;
செய்யா நிற்பன சிலவே; அவற்றிடை
நன்றுஎன்ப சிலவே; தீதுஎன்ப சிலவே;
ஒன்றினும் படாதன சிலவே என்றிவை
கணத்திடை நினைந்து களிப்பவும் கலுழ்பவும்
கணக்கில் கோடித் தொகுதி. [கோயில்நான்மணி]

இளமை மூப்பு மரணம் முதலிய நிலைகளைக் குறித்துக் காட்டி மனித வாழ்வைப் பட்டினத்தார் இப்படி நயமா விளக்கியிருக்கிறார். நாளும் எமன் வாய்க்குள் இரையாய்க் கழிகின்ற மனிதன் தனது அழிவு நிலையை உணர்ந்து அழியாத முழு முதல் பரமனைக் கருதி உருகி உய்ய வேண்டும் என உரிமையோடு போதித்துளார். போதனையில் வினைகளின் வேதனைகள் விளங்கின.

சாவை எதிர் அறிந்து வாழ்வைப் புனிதமாக்கிப் புண்ணிய சீலராய் வாழவேண்டும் என்றே மேலோர் எண்ணி நடந்து நயம்பி யருளுகின்றார். பெரியோருடைய வாய்மொழிகள் இனிய அனுபவங்கள் தோய்ந்து தனியே காண வருதலால் மனித சமுதாயத்துக்கு அவை நன்மை புரிந்து வருகின்றன.

He who should teach men to die, would, at the same time, teach them to live. [Montaigne]

மரணத்தைக் குறித்து மனிதருக்கு உணர்த்துகிறவன் அதே சமையத்தில் நன்கு வாழவும் போதிக்கிறான் என்னும் இது இங்கு அறிய வுரியது. நெறியே வாழின் சாவு நேரே தாழுகிறது.

உடல் அழியுமுன் உயிர்க்கு உறுதி நலனை அடைபவனே மதிமான்; அவ்வாறு அடையாதவன் மடையனாகவும் கடையனாகவும் இழிந்து கதி இழந்து போகிறான்.

உற்ற உடல்ஒழியு முன்னே உயிர்க்குறுதி
பற்றி உயர்க பரம்.

ஆன்ம நலம் ஆனந்த நிலையமாம்.

928. பிறப்புடனே கூடப் பிறந்து பிரியா
இறப்பும் இருக்கும் இயல்பால்—அறப்பயனை
முன்னுக ஓர்ந்து முடிக்க முடிவின்கண்
என்னுனும் இல்லை இடம். (அ)

இ—ள்.

பிறந்து வருதலும் இறந்து மறைதலும் என்றும் பிரியாத உறவுகளாய்த் தொடர்ந்து நிகழ்கின்றன; இறப்பு நேருமுன் பிறப்பின் பயனை விரைந்து பெறுக; பெருது நின்ருல் பெரிய துயராம்; உறுவதை உணர்ந்து உறுதிநலனை அடைந்து கொள்க.

நீண்டகாலம் சுகமாய் வாழவேண்டும் என்றே யாண்டும் யாவரும் விரும்புகின்றனர்; அவ்வாறு அவாவிவரினும் மூண்ட வினை அளவே வாழ்வுகள் ஈண்டு நிகழ்ந்து வருகின்றன; வினைப் போகங்கள் முடிந்தால் தினைப் போதளவும் தேகங்கள் நில்லா. உடல்கள் நிலைத்துள்ள போதும் உணர வேண்டியதை உணராமல் உயிர்க்கு உறுதியை நாடாமல் உலகமையலிலேயே ஊனமாயுழன்று ஒரு பயனும் காணுமல் வறிதே மானுடங்கள் ஒழிந்து போகின்றன; அப் போக்குகள் பொல்லாப் புலைகளாயுள்ளன.

செய்த வினையளவே தேகங் களெய்திப்
பெய்த அளவே பெருகி---உய்தி
பெறுவ தறியாமல் பீழைகளே நாடி
இறுவ துயிர்கள் இயல்பு.

சீவர்கள் தோன்றி வாழ்ந்து மாய்ந்து மறையும் நிலைகளை இதனுல் ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகிருேம். பிறந்தவர் எவரும் இறந்துபடுவது விழி எதிரே தெளிவாய்த் தெரிந்திருந்தும் ஆன்ம நலனை அடையாமல் அவமே இழிந்து அவலமா அழிந்து போவது அறியாமையின் செறிவாய் அடர்ந்து தொடர்ந்துள்ளது.

செத்துச் சவம் ஆகுமுன் உத்தம மனிதன் ஒத்ததை உணர்ந்து உய்திபெற வேண்டும்; இறப்பு நேர்ந்தபின் யாரும் யாதும் செய்ய முடியாது ஆதலால் அது நேரு முன்னரே சீர் செய்க.

மகத நாட்டில் மாலதி என்று ஒரு மாது இருந்தாள்.

அவளுக்கு ஒரே ஒரு மகன்; குசலன என்னும் பேரினன்; ஒரு நாள் இறந்து போனான்; அத்தாய் கதறி அழுதாள்; அன்று அவ்வூர் அருகே ஒரு சோலையில் புத்தர் வந்து தங்கியிருப்பதைக் கேள்வியுற்று அவரிடம் விரைந்து போய் இறந்த தன் மகனை எழுப்பியருள வேண்டும் என்று பரிந்து புலம்பினாள். கருணை வள்ளலான அவர் அவளது பரிதாப நிலையை அறிந்து உள்ளம் உருகினார்; செத்தவனைப் பிழைப்பிக்க முடியாது என்று நேரே சொன்னால் அவள் துயரமாய்ச் சாவாள் என்று இரங்கி வித்தக விநயமா ஓர் இதமொழி கூறினார். "அம்மா! இவ்வூரில் யார் வீட்டிலேனும் கொஞ்சம் வெண்கடுகு வாங்கி வா; அது வந்தால் உன் மகன் பிழைத்து வருவான்" என்றார். இதோ நான் வாங்கிவருகிறேன் என்று அவள் வேகமாய்ப் போகநேர்ந்தாள்; அவளை மறுபடியும் அழைத்து "யாரும் சாகாத வீட்டில் அதை வாங்கி வா!" என்று பாங்கோடு பகர்ந்து அனுப்பினார். அவள் அவ்வாறே வீடு வீடாகப் போய்க் கேட்டாள்; சாகாத வீடு யாண்டும் யாதும் இல்லை ஆதலால் வெறுங்கையோடு அவள் மீண்டு வந்தாள். அதன்பின் இறப்பின் உண்மையை உணர்ந்து உள்ளம் தெளிந்து பிறப்பைப் புனிதமாக்க நேர்ந்தாள். புத்தரைக் குருதேவராகத் துதித்துத் துறவியாய் அரியதவம்புரிந்தாள்.

*இறந்தமகன் எழுந்துவர வேண்டும்எனின்*
*இவ்வுலகில் இறவா இல்லில்*
*நிறந்திகழும் வெண்கடுகு நீசிறிது*
*வாங்கிவர வேண்டும் என்றார்;*
*பறந்தவளும் இடங்கள்தொறும் போய்எங்கும்*
*வினவினாள் பாரில் யாண்டும்*
*பிறந்தவர்கள் எல்லாரும் இறந்தவரே*
*எனத்தெளிந்து பெயர்ந்து வந்தாள்.*

தனது அருமை மகன் இறந்து போனமையால் இறப்பு நிலையைத் தெளிந்து பிறப்பின் பயனை அவள் பெற விரைந்தாள்.

காவிரிப்பூம்பட்டினத்தில் கோதமி என்று ஒரு பார்ப்பனி இருந்தாள். அவளுடைய மகன் சார்ங்கலன் என்னும் பேரினன்; இளைஞன்; ஒரு நாள் மாலையில் அவ்வூர் அயலே யிருந்த பெரிய மயானச்சாலைக்குப் போனான். கழிந்த வெள் எலும்புகளையும் வெண் தலைகளையும் கண்டான்; நெஞ்சம் கலங்கினான்; அந்த

நெடிய திகிலால் உடனே இறந்து போனான்; தாய் அறிந்து பதைத்தாள்; அழுது ஓடிச் சம்பாபதி என்னும் மயானதேவதையிடம் போய் முறையிட்டாள்; தன் உயிரை வாங்கிக்கொண்டாவது தனது மகனை எழுப்பித் தர வேண்டும் என்று மறுகி வேண்டினாள். இறந்தவரை எழுப்ப இயலாது; நீ வீணே வருந்தாதே என்று அத் தெய்வம் தேற்றி விடுத்தது; அவள் கடுத்து விரைந்து மகனை எரித்துவிட்டுப் புத்திர சோகம் பொறுக்க முடியாமல் உடனே இறந்து போனாள். காலதேவதையிடம் அவள் உருகிவேண்டியது பரிதாபமாயிருந்தது. அயலேவருவது காண்க.

ஆரும் இலாட்டிஎன் அறியாப் பாலகன்
ஈமப் புறங்காட்டு எய்தினோன் தன்னை
அணங்கோ பேயோ ஆருயிர் உண்டது
உறங்குவான் போலக் கிடந்தனன் காண்! என
அணங்கும் பேயும் ஆருயிர் உண்ணா;
பிணங்குநூல் மார்பன் பேதுகந்தாக
ஊழ்வினை வந்துஇவன் உயிர்உண்டு கழிந்தது
மாபெருந் துன்பம்நீ ஒழிவாய் என்றலும்
என்உயிர் கொண்டுஇவன் உயிர்தந்தருளில்எ.
கண்ணில் கணவனை இவன்காத்து ஓம்பிடும்
இவன்உயிர் தந்துஎன் உயிர்வாங்கு என்றலும்,
முதுமூ தாட்டி இரங்கினள் மொழிவோள்;
ஐயம் உண்டோ ஆருயிர் போனால்
செய்வினை மருங்கில் சென்றுபிறப்புஎய்தல்
ஆங்கது கொணர்ந்துநின் ஆரிடர் நீக்குதல்
ஈங்குஎனக்கு ஆவதுஒன்றன்றுநீ இரங்கல்
கொலையற யாமெனும் கொடுந்தொழில் மாக்கள்
அவலப் படிற்றுரை ஆங்கது மடவாய்
உலக மன்னவர்க்கு உயிர்க்குஉயிர் ஈவோர்
இலரோ இந்த ஈமப் புறங்காட்டு
அரசர்க்கு அமைந்தன ஆயிரம் கோட்டம்
நிரயக் கொடுமொழி நீஒழி. (மணிமேகலை, 6)

இறந்த மகனை எழுப்பி அருளும்படி அத்தாய் வேண்டியதும், அதற்குக் காலதேவதை பதில் கூறியதுமான இதில் அரிய பல பொருள்கள் மருவியுள்ளன. யாவும் கருதி யுணர வுரியன.

இறப்பு எவ்வழியும் தொடர்ந்துள்ளது; யாரும் அதைத்

தப்பிப் பிழைக்கமுடியாது; இன்னபொழுதுதான் நேரும்என்று எவரும் அதனை முன்னதாக அறிய இயலாது.

நெடிய மடமையால் மனிதன் கொடிய தீவினைகளைச் செய்கிறான்; செய்யவே வெய்ய அந்த வினைப்பயன்களை அனுபவிக்க வேறு வேறு பிறவிகளை எடுத்து மாறி மாறி மடிந்து முடிகின்றான்; அம்முடிவு யாண்டும் முடியாமல் மீண்டும் மீண்டும் நீண்டு நெடிது ஓங்கி வருகிறது. நெடிய மரம் சிறிய விதையிலிருந்து தோன்றுதல்போல் கொடிய பிறவி மடமையிலிருந்து தோன்றி மதிகேடாகவே வளர்ந்து மையல் மயக்கங்களே கிளர்ந்து மாய மோகங்கள் விரிந்து தீயவினைகள் சூழ்ந்து ஓயாத சாவுகளிலேயே உழந்து எவ்வழியும் தேயாமல் நிற்கிறது.

பேதைமை என்னும் வித்தில் பிறந்துபின் வினைகள் என்னும்
வேதனை மரங்கள்நாறி வேட்கைவேர் வீழ்த்து முற்றிக்
காதலும் களிப்பும் என்னும் கவடுவிட்டு அவலம் பூத்து
மாதுயர் இடும்பை காய்த்து மரணமே கனிந்து நிற்கும்.
(சீவகசிந்தாமணி)

பிறவியை மரமாக இது உருவகித்துள்ளது. வித்து வேர் கிளை மலர் காய் பழம் முதலிய நிலைகள் இங்கே காண வந்துள்ளன. பிறவிக்கு வேட்கையே வேர் என்றதனால் ஆசை அற்றால் ஒழியப் பிறவி அறாது என்பது அறிய நின்றது. பிறவிக் காடுகளில் மரணங்களாகிய பழங்கள் உதிர்ந்து மீண்டும் பிறவிகளுக்கு வித்துக்களை விரித்து வருகின்றன. இங்கே குறித்துள்ள பிறப்புஇறப்புகளின் குறிப்புகள் உய்த்து நோக்கி உணரத்தக்கன.

செத்துச் செத்துப் பிறப்பது உயிர்களுக்குக் கொடிய துயரங்களாய்த் தொடர்ந்திருக்கிறது. பிறப்பு இருக்கும் வரையும் இறப்பும் கூடவே இருந்துவரும் ஆதலால் பிறவியை அறவே நீங்கி உய்யவே இறைவனை நினைந்து உருகியும் அரிய தவங்கள் புரிந்தும் ஞானிகள் யாண்டும் பெரிதும் முயன்று வருகின்றனர். தெளிவான உணர்வு ஒளிவீசி ஓங்கவே இளிவான பிறவி நிலைகள் தெரிய நேர்கின்றன; நேரவே நேரே பரமனை எண்ணிப் பரிவு கூர்ந்து உரிமையோடு உறுதிநலனை நாடி முறையிடுகின்றனர்.

எழுபிறவி நீர்நிலத்தில் இருவினைகள் வேர்பிடித்து
இடர்முளைக ளேமுளைத்து வளர்மாயை

எனும்உலவை யேபணைத்து விரககுழை யேகுழைத்து
இருள்இலைக ளேதழைத்து மிகநீளும்
இழவுநனை யேபிடித்து மரணபழ மேபழுத்து
இடியும்உடல் மாமரத்தின் அருநீழல்
இசையில்விழ ஆதபத்தி அழியுமுன மேஎனக்குள்
இனியதுஒரு போதகத்தை அருள்வாயே!
[திருப்புகழ், 292]

பிறவித் துயரங்களை விளக்கிக் காட்டி அவற்றில் நின்று நீக்கித் தன்னைக் காத்தருளும்படி அருணகிரிநாதர் முருகக் கடவுளிடம் இவ்வாறு முறையிட்டிருக்கிறார். இறைவன் நித்திய நிலையினன்; சத்திய தயவினன்; பேரின்பப் பெருக்கினன்; அவனைக் கருதி யுருகி வருபவர் பரம புனிதராகின்றார்; ஆகவே இறவாத இன்ப நிலையை அவர் அடைய நேர்கின்றார்.

பரமன்பால் பேரன்போடு பத்தி புரிந்து வந்த காரைக்கால் அம்மையார் இறப்பை மிகவும் விருப்பமா எதிர் நோக்கி நின்றார். இறப்புக்கு அதிதேவதை காலன்; அவனுக்குக் காலனாயுள்ளவன் ஈசன்; காலகாலன் என்னும் பேரால் அவனை ஞாலம் வியந்து துதித்து வருகிறது; பிறப்பு இறப்புகளில் சீவர்களை ஆட்டி யருளுபவன் இறைவனே என்று தெளிந்து கொண்டமையால் பிறவித் துயரை அறவே நீக்க வுரியவன் அவனே எனத் துணிந்து அரிய தவம் மேற்கொண்டு துதித்தாள்.

இறைவனே எவ்வுயிரும் தோற்றுவிப்பான் தோற்றி
இறைவனே ஈண்டுஇறக்கம் செய்வான்---இறைவனே
எந்தாய்என இரங்கும் எங்கண்மேல் வெந்துயரம்
வந்தால் அதுமாற்று வான. [காரைக்காலம்மையார்]

இந்தவாறு சிந்தனை செய்து சாதலே அவன் பாதப் போதைச் சாரவழி என்று ஆதரவாய் அவாவி முடிந்தாள். பிறப்பின் பயனைச் சிறப்பாப் பெற்றவர் இறப்பை விருப்பமாக் கருதுகின்றனர். இறுதியில்கருதியபடியேஉயிர்கள் உறுதியுறுகின்றன.

The end of life is to be like God, and the soul following God will be like him. (Socrates)

வாழ்வின் முடிவு கடவுளின் சூழ்வாயுளது; அவனைக் கருதித் தொடர்கிற சீவன் அவன் போலவே இருக்கும் எனச் சாக்ரட்டீஸ் என்னும் பெரியார் இங்ஙனம் கூறியிருக்கின்றார்.

புண்ணியமான வாழ்வு கண்ணியமாய்க் கதிநலம் காணுகிறது; அங்ஙனம் அல்லாதது அவலமா யிழிந்து கழிகிறது.

The end of a dissolute life is commonly a desperate death.
(Bion)

நெறிகேடான வாழ்வின் முடிவு பரிதாபமான கொடிய துயரச் சாவாய் முடிகிறது என இது குறித்துள்ளது.

தருமநீதியோடு ஒழுகிவரும் புனிதரே மரண பயம் இன்றி மகிமை மிகப் பெறுகின்றார்; அம்முறையில் வாழ்ந்து நன்மை யுறுக. சாவு இனிமை யாய் வரப் புனிதமா வாழுக.

---

929. பேரின்ப மான பெரும்பொருளை விட்டுவந்து
பாரின் புழந்து படுமுயிரை—நேரின்பம்
எய்த உடம்பை இடையகற்றும் சாக்காடு
வெய்தாவ தாமோ விளம்பு. (கூ)

இ—ள்.

அதிசய ஆனந்தமுடைய ஆதிமூலப் பொருளைப் பிரிந்து வந்து அவல நிலைகளில் இழிந்து உயிர்கள் உழலுகின்றன; துயர்களுக்கு இடமாய் நேர்ந்த உடல்களை இடை நீக்கி உய்தி தருகிற சாவு கொடியது ஆகுமா? எவ்வழியும் இனியதே என்க.

பிறப்பும் இறப்பும் இயற்கை நிகழ்ச்சிகள்; மனித முயற்சிகளைக் கடந்தன; பழவினைகளால் விளைந்து வருவன; அவை வந்த வண்ணமே வாழ்வுகள் வாய்ந்து வீழ்வுகள் தோய்ந்துள்ளன. தோன்றின மறையும் என்பது ஆன்ற மறை மொழி.

உருவங்கள் தோன்றலும் சிலகாலம் உலாவித் திரிதலும் பருவம் முடிந்ததும் அருவமாய் மறைந்து போதலும் அதிசய விநோதங்களாய் நிலவுகின்றன. எண்ணரிய நிலையில் மண்ணறிய வந்து விண்ணறிய நின்று எங்கும் அவை பொங்கித் திரிகின்றன.

உயிர்கள் ஏன் இவ்வாறு உடல்களை எடுத்து எவ்வழியும் நிலையின்றி வெவ்விய துயர்களோடு தொடர்ந்து உழலுகின்றன? இந்தக் கேள்விகள் பலருடைய சிந்தனைகளுக்கு வந்துள்ளன; வந்தும் தெளிவான விடைகூற முடியாமையால் பழவினை வழியே பிறவிகள் விளைந்து வருகின்றன என்று விழுமிய மேலோர்

நயமா மொழிந்து வாழ்வில் நல்ல தருமங்களைச் செய்யும்படி தூண்டியுள்ளனர். தருமம் அரிய பல நலங்களை அருளுகின்றது.

பாவம் செய்தவர் கொடிய நரக வேதனைகளை அடைகின்றனர்; புண்ணியம் புரிந்தவர் பொன்னுலகத்தில் தேவபோகங்களை நுகர்கின்றனர்; அறம் மறம் என்னும் இந்த இருவகையும் கலந்தவர் மண்ணுலகத்தில் மனிதராய் மறுகி வாழுகின்றனர்.

இந்த வினைத்தொடர்புகள் அறவே நீங்கிவிடின் ஆன்மா பரமான்மாவை அடைந்து கொள்கிறது; அதுவே முத்தி என்றும், பரகதி என்றும், பேரின்ப வீடு என்றும், அழியாத ஆனந்த நிலையம் என்றும் வியந்து புகழ்ந்து போற்றப்படுகின்றது.

ஊன உடல்களை நீக்கி, ஈனப் பிறவிகளைப் போக்கி, பொல்லாத் துயர்கள் எல்லாவற்றையும் ஒருங்கேஒழித்து உயர்ந்த பரம் பொருளோடு உயிரை எந்த இறப்பு இனிது சேர்க்கின்றதோ முடிவான அந்தச் சாவே அதிசயமுடையதாய்த் துதிசெய்யப் பெறுகிறது. பிறப்பை ஒழித்த இறப்பே பெருஞ் சிறப்புற்றது.

தரும நீதிகள் தழுவிய தேகமே தன்னை மருவி நின்ற உயிர்க்குப் பிறவியை நீக்கிப் பேரின்பங்களைநேரே அருளுகிறது.

> கைத்த சொல்லால் உயிரிழந்தும் புதல்வற் பிரிந்தும் கடையோட
> மெய்த்த வேந்தன் திருவுடம்பைப் பிரியாதுஅரற்றி விட்டிலரால்
> பித்த மயக்காம் சுறவுஎறியும் பிறவிப் பெரிய கடல்கடக்க
> உய்த்து மீண்ட நாவாயில் தாமும் போவார் ஒக்கின்றார்.
>
> [இராமா, தைலம் 73]

தசரதன் இறந்து போனான்; போகவே அந்த உடலைச் சூழ்ந்து கொண்டு அவனுடைய மனைவிமார் மறுகி அழுதனர்; அந்த நிலையை இது இந்தவாறு விந்தையாய் விளக்கி யுள்ளது.

தமது பிராண நாயகனுடைய ஆவி நீங்கிய பின் அத் தேவியர் கூவி அழுத வகையை ஓவியக் காட்சியா எழுதிக் காட்டியிருப்பதில் உயர்ந்த சீவியம் ஒளி வீசி நிற்கிறது. இராச கம்பீரமான அவ் வுடம்பிலிருந்த உயிர் புகழும் புண்ணியமும் பொருந்தி நெடுங்காலம் சுகமா வாழ்ந்து முடிவில் பரம பதத்தை அடைந்தது; அந்த உருவைப் பற்றித் தொடர்ந்து தாமும் பரகதி அடைய வேண்டும் என்று அரசிகள் உரிமையோடு தழுவியிருந்தனர்,

தன்பால் ஏறியிருந்த பிரயாணியை அடுத்த கரையில் சேர்த்து விட்டு அழகான ஒரு தோணி மீண்டு வந்தது; இந்தக் கரையில் ஆயத்தமாயிருந்த பிரயாணிகள் ஆவலோடு விரைந்து அதில் ஏற நேர்ந்தனர்; அதுபோல் தேவியர் யாவரும் அத்தேகத்தைப்பற்றி நின்றனர். அந்தப் பரகதி யாத்திரை இங்கே பார்க்க நேர்ந்தது. பிறவிப் பெரிய கடல் கடக்க உய்த்து மீண்ட நாவாய் எனத் தசரதன் உடம்பை வித்தக விநயமாக் காட்டி யிருக்கும் காட்சி கண்டு உய்த்து உணர்ந்து உறுதிநலங்களை ஓர்ந்துகொள்ளவுற்றது.

தந்தை இறந்தான் என்பதை அறிந்ததும் வனம்போயிருந்த இராமன் வருந்தி அழுதான். அப்பொழுது வசிட்ட முனிவர் அவ்வீரனை ஆர்வமுடன் தேற்றினர். உலக வாழ்வுகளையும் இறப்பு நிலைகளையும் குறித்து அப்பெரியவர் பேசிய அரிய உரைகள் இனிய ஞானஒளிகளை வீசி உறுதிநலங்களை உணர்த்தி உண்மை நிலைகளை நன்கு விளக்கி வந்தன. சில அயலே வருகின்றன.

துறத்தலும் நல்லறத் துறையும் அல்லது
புறத்தொரு துணையிலை பொருந்து மன்னுயிர்க்கு
இறத்தலும் பிறத்தலும் இயற்கை என்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்டநீ! (1)

பெறுவதன் முன்உயிர் பிரிதல் காண்டியால்
மறுவறு கற்பினில் வையம் யாவையும்
அறுபதி னாயிரம் ஆண்டும் ஆண்டவன்
இறுவது கண்டுஅவற்கு இரங்கல் வேண்டுமோ? [2]

சீலமும் தருமமும் சிதைவில் செய்கையும்
சூலமும் திகிரியும் சொல்லும் தாங்கிய
மூலம்வந் துதவிய மூவர்க்கு ஆயினும்
காலம்என்று ஒருவலை கடக்க லாகுமோ? [3]

கண்முதல் காட்சிய கரையில் நீளத்த
உண்முதற் பொருட்கெலாம் ஊற்றம் ஆவன
மண்முதற் பூதங்கள் மாயும்என்ற போது
எண்முதல் உயிர்க்குநீ இரங்கல் வேண்டுமோ? [4]

இவ்வுல கத்தினும் இடரி னேகிடந்து
அவ்வுல கத்தினும் நரகின் ஆழ்ந்துபின்
வெவ்வினை துய்ப்பன விரிந்த யோனிகள்
எவ்வள வில்செல எண்ணல் ஆகுமோ? [5]

உண்டுகொல் இதுவலது உதவி நீ செய்வது
எண்தகு குணத்திஞய் தாதை என்றலால்
புண்டரீ கத்தனி முதற்கும் போக்கரு
விண்டுவின் உலகிடை விளங்கி ஞனரோ. [6]

ஐயநீ யாதொன்றும் அவலிப்பாய் அலே
உய்திறம் அவற்கினி இதனின் ஊங்குண்டோ
செய்வன வரன்முறை திருத்திச் சேந்தநின்
கையிஞல் ஒழுக்குதி கடன்எலாம் என்முன். [7]

விண்ணுநீர் மொக்குளின் விளியும் யாக்கையை
எண்ணிநீ அழுங்குதல் இழுதைப் பாலதால்
கண்ணினீர் உகுத்தலில் கண்டது இல்லே போய்
மண்ணுநீர் உகுத்திதா மரைக்கையால் என்ருன். [8]
(இராமாயணம்)

இந்தப் பாசுரங்கள் கூர்ந்து சிந்திக்கத் தக்கன. தெளிந்த ஞானசீலருடைய வாய்மொழிகளால் உயர்ந்த உண்மைகளேக் கவி இங்கே உலகம் அறிய வழங்கியிருக்கிருர். கவிகள் சுவைகள் சுரந்து வந்துள்ளன. பலமுறையும் கருதி நுகர வுரியன. உறுதி நலங்கள் உணர்வின் மணங்கள் தோய்ந்து ஒளிமிகுந்து நிற்கின்றன. போதனேயில் பொதிந்துள்ள பொருள்கள் இருள் நீக்கி இன்பம் பயக்கும் இயல்புகளோடு உயர்ந்து திகழ்கின்றன.

உடலோடு பிறந்த உயிர் மறைந்தே தீரும்; அந்த இறப்பு நேருமுன் பிறப்பின் பயனேப் பெறின் உயிர் ஒளி மிகுந்து உயரும்; தருமமே உயிர்க்கு எவ்வழியும் உறுதித்துணே; துறவும் ஞானமும் சீவப் பறவைக்கு இரு சிறகுகள் போல் அமைந்துள்ளன; அவை மருவிய அளவு அது மகிமை யுறுகிறது; உன்னே மகன் ஆகப் பெற்ற பெருமையால் மன்னன் பரகதி அடைந்திருக்கிருன்; நீண்ட காலம் புகழோடு வாழ்ந்து நித்திய நிலேயைப் பெற்றுள்ளமையால் நீ உள்ளம் உவந்து கொள்ள வேண்டும்; தேவதேவரும் காலத்தைக் கடந்து வாழமுடியாது; தந்தை இறந்து போனுரே என்று சிந்தை வருந்தாதே; இந்த உலகில் எவரும் நிலேயாய் இருப்பதில்லே; இறத்தலும் பிறத்தலும் இயற்கை; இதனே மறந்து மறுகலாகாது; சிறந்த மேதையான நீ தாதை பால் கொண்டுள்ள பாசத்தால் நெஞ்சம் உருகி நிலே குலேந்து அழுகிருய்; கண்ணீர் சொரிந்து அழுவதை நிறுத்தித் தந்தைக்குத் தண்ணீர் சொரிந்து கருமக் கடனே உரிமையோடு

செய்து அருளுக என மாதவர் இவ்வாறு ஆதரவோடு ஆறுதல் கூறியிருக்கிருர். உணர்வின் ஒளிகள் உரைகளில் மிளிர்கின்றன.

இறத்தலும் பிறத்தலும் இயற்கை என்பதை
மறத்தியோ மறைகளின் வரம்பு கண்டநீ!

என்று இராமனை நோக்கி முனிவர் குறித்துள்ள இதில் இறந்துபடுதலை யாரும் மறந்துவிடலாகாது; மறவாமல் நின்று பிறந்த பயனை விரைந்து அடைந்து கொள்ள வேண்டும் என்பது நன்கு தெரிய வந்தது. உற்ற பிறவியில் உறுவதை உணர்த்தியது.

அரிய மனித தேகம் மருவியது பெரிய பேறுகளைப் பெறவே யாம்; உரிய பொழுதே உயிர்க்கு உறுதிநலனைக் கருதியுணர்வது உயர்ந்த ஞானமாய் ஒளி மிகுந்து வருகிறது. உண்மை நிலைகளைத் தெளிவாக உணர்ந்து கொள்வதே மெய்யுணர்வு என வந்தது. அது நன்கு எய்தியபோது பொய்யான மாயமயல்கள் ஒழிந்து மெய்யான தூய பரம்பொருளைத் தெளிந்து கொள்ளுகின்றனர்; கொள்ளவே பிறவியை அறவே நீக்கிப் பேரின்ப நிலையைப் பெற விரைகின்றனர். அவரது எண்ணம் இறைவனையே எண்ணுகிறது; உரைகளும் செயல்களும் அவனேடேயே உறவு கொண்டாடி உரிமையுடன் முறையீடுகள் புரிகின்றன.

பட்டினத்தார் ஒருமுறை திருவையாறு என்னும் தலத்துக்குப் போயிருந்தார்; கோயிலுள் புகுந்து சிவலிங்கத்தைக் கண்டு தொழுதார்; கண்ணீர் பெருகி மார்பில் வழிய அழுதார்; அவ்வாறு எதை எண்ணி அழுதார்? அதனை அயலே காண வருகிறேம்

மண்ணும் தணலாற வானும் புகைஆற
எண்ணரிய தாயும் இளைப்பாறப்---பண்ணுமயன்
கையாற வும்அடியேன் காலாற வும்கண்பார்
ஐயா திருவையாறு. [பட்டினத்தார்]

தன் பிறவியை நீக்கியருளும்படி இறைவனிடம் இவ்வாறு முறையிட்டிருக்கிருர். எல்லையில்லாத சாவுகளை நான் எய்தியிருக்கிறேன்; நான் பிறந்து இறந்த இடங்களில் எல்லாம் என் உடல்களைச் சுடலைகளில் வைத்துச் சுட்டிருக்கின்றனர்; அந்த வெய்ய சூடு வையகம் எங்கும் பரவியுளது; அவ்வாறு சுடுங்கால் எழுந்த பிணப் புகை வானகம் முழுதும் விரிந்திருக்கிறது;

மண் தணல் ஆற, வான் புகைஆற, தாயர் இளைப்பு ஆற, அயன் களைப்பு ஆற, அடியேன் கால் ஆற ஐயா! கண்பார்! என்று ஐயாறனை நோக்கி ஐந்து ஆறுதல்களை வேண்டியிருக்கிறார். இதில் மருவியுள்ள சுவைகளை நுணுகி உணர்ந்து கொள்ள வேண்டும்.

எழுகடல் மணலை அளவிடின் அதிகம்
 எனதுஇடர்பிறவி அவதாரம்;
இனியுனது அபயம் எனதுஉயிர் உடலும்
 இனியுடல் விடுக முடியாது;
கழுகொடு நரியும் எரிபுவி மறலி
 கமலனும் மிகவும் அயர்வானார்;
கடன்உனது அபயம் அடிமையுன் அடிமை
 கடுகிஉன் அடிகள் தருவாயே! (திருப்புகழ், 288)

அருணகிரிநாதர் முருகப் பெருமானிடம் இவ்வாறு உருகி உரையாடியிருக்கிறார். அளவிடலரிய பிறவிகளை எடுத்து நான் செத்துச் செத்துச் சிதைந்திருக்கிறேன்; இனிமேல் என்னால் சாகமுடியாது; இறப்பை எவ்வழியும் யாதும் நான் காணாதபடி என் பிறப்பை அடியோடு நீக்கி உன் திருவடியில் சேர்த்துக் கொள் என்று உழுவலன்போடு உருகி அபயம் புகுந்திருக்கும் உறவுரிமை அவரது மனவுறுதியைத் தெளிவா விளக்கியுள்ளது.

உடம்பை நீக்கிப் புனிதமான உயிரைத் தனி முதலோடு சேர்த்தலால் சாக்காடு மிகவும் இனியதே என முனிவரர் கருதியுள்ளனர். சாவு அல்லல்களை ஒழித்தருளும் நல்ல துணை ஆயது.

**O death! We thank thee for the light that thou wilt shed upon our ignorance. [Bossuet]**

ஓ மரணமே! எமது மடமை இருள் மேல் ஒளியை வீசி உதவியதற்காக உனக்கு நன்றியறிவான வணக்கம் என இது குறித்திருக்கிறது. குறிப்பைக் கூர்ந்து சிந்திக்க வேண்டும்.

**Death and love are the two wings that bear the good man to heaven. (M. Angelo)**

நல்ல மனிதனைப் பரகதிக்குக் கொண்டு போகிற இரு சிறகுகளா மரணமும் அன்பும் மருவியுள்ளன என்னும் இது இங்கு அறிய வுரியது. இறப்பு இறவா இன்பத்தை அருளுகிறது.

பிறந்தவர் யாரும் இறந்து மறைதல் உறுதி; அந்த இறப்பு

அணுகுமுன் இனிய நன்மைகளைச் செய்து வாழ்வைப் புனித மாக்கிப் புண்ணியனாய் உயர்ந்து கொள்க; அது பேரின்பமாய் வரும். நல்ல ஞானம் நல்கும் தேவாய்ச் சாவு மேவியுள்ளது.

---

930. இறப்பொன் றிலையாயின் இவ்வுலகில் யாரே
பிறப்பின் பெருமை பெறுவார்—இறப்பொன்றே
நின்று புதுமை நிலையை உலகின்கண்
என்றும் இயற்றும் இனிது. (ப)

இ-ள்.

இறப்பே பிறப்பின் பெருமையைப் பெறும்படி தூண்டு கிறது; அது இல்லையானால் யாரும் நல்லதை நாடார்; அதன் நினைவே எல்லாருக்கும் புதிய உணர்ச்சியை யூட்டி அதிசய நலங்களைக் காட்டி அவற்றை அடைய அருளுகிறது என்க.

கால நிலைகளைக் கருதி ஓர்ந்து காரியம் புரிவது மேலான மனித இயல்பாய் மேவியுளது. சென்றகால நினைவும் வருங்கால அறிவும் நிகழ்கால நிலைமைகளை நயமாப் பயனுறச்செய்கின்றன.

பழகிய அனுபவங்கள் மனிதனுக்கு உறுதியான உணர்வு நலங்களை அருளுதலால் அவை உயர்வான நிலைகளை அடைய உதவுகின்றன. கண்ட காட்சிகள் காணாத மாட்சிகளைக் காணப் புரிகின்றன. யாக்கை நிலையில்லாதது; கணந்தோறும் ஆயுள் கழிந்து போகிறது; இளமை நீங்கி மூப்பு ஓங்கி வருதலால் இறப்பு அருகே நெருங்கியுள்ளமை எளிதே தெரிய நின்றது.

உடலையும் உயிரையும் வேறு பிரித்துக் கூறு படுத்துவது கூற்று என நேர்ந்தது. உயிர் வாழ்வின் இறுதி முடிவு இறப்பு என வந்தது. சீவன் சேர்ந்துள்ள அளவும் தேகம் மோகமாப் போற்றப்படுகிறது. அது பிரிந்துவிடின் இது பிணமாய் இழிந்து விடுகிறது. அல்லல் வாழ்க்கைக்கு இடமாய் நின்று இறுதியில் அவலச்சவமாய் முடிதலால் உடலின் நிலையை ஞானிகள் வாழ்வி லேயே தாழ்வா நினைந்து தகவு சூழ்ந்து கொள்ளுகின்றனர்.

"குடும்பத் துடனே குடித்தனம் செய்யக்
குடிக்கூலிக்குக் கொண்ட மனையில்
கண்ட காட்சிகள் கனவிரோ தங்கள்;

இழிவினும் இழிவது எண்சாண் உள்ளது
மலமும் சலமும் மாறா ஒழுக்கது
சுற்றினும் ஒன்பது பொத்தல் உடையது
சீழும் கிருமியும் சேர்ந்து கிடப்பது
என்புதோல் இறைச்சி எங்கும் செந்நீர்
ஆய்ந்து செய்த ஆகரம் உற்றது
அகலல் அணுகல் புகலல் இகலல்
அணிகள் துணிகள் அணிவ தாய
சால வித்தைகள் சதுரில் கொண்டது
கிடந்தும் இருந்தும் நடந்தும் பற்பல
பகர்இம் மனையால் படும்பாடு அதிகம்;
இம்மனைத் தலைவராய் எழுந்த மூவர்
தறுகட் கடையர்; தயவே இல்லார்;
பணிசிரம் முதலாய்ப் பாதம் வரையில்
வாது செய்திடும் வண்கால் வாதி;
பெருகுறு கள்ளினும் பெரிதுறு மயக்கம்
பேதைமை காட்டும் பெருந்தீப் பித்தன்;
கொடுவிடம் ஏறிடும் கொள்கைபோல் இரக்கம்
கொள்ளா திடர்செய் குளிர்ந்த கொள்ளி;
இவர்கள் என்னோடு இகல்வர் இரங்கார்:
எனக்கு நேரும் ஏழ்மையும் பாரார்;
பிண்டம் என்னும் பெருங்குடிக் கூலி
அன்றைக்கு அன்றே நின்று வாங்குவர்;
தெரியாது ஒருநாள் செலுத்தா விட்டால்
உதரத் துள்ளே உறுங்கனல் எழுப்பி
உள்ளும் புறத்தும் ஒள்ளெரி ஊட்டி
அருநோய் பற்பல அடிக்கடி செய்வர்;
இவர்கொடுஞ் செய்கை எண்ணுந் தோறும்
பகீர்என உள்ளம் பதைத்துக் கொதித்து
வெதும்பும் என்னில் விளம்புவது எவனோ?"

(குடும்பகோரம்)

உயிர் குடியிருக்கும் உடலைக் குடில் என்று உருவகித்து இராமலிங்க அடிகள் துயரக் குறிப்போடு இவ்வாறு வருணித்திருக்கிறார். உருவகங்களின் பொருள் நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். வாதம், பித்தம், சிலேட்டுமம் என்னும் மூவரும் இக்குடிலுக்குச் சொந்தக்காரர்; குடியிருப்புக்குக்

கூலியாக நாளும் மூன்று வேளை பிண்டம் போட வேண்டும்; கொஞ்சம் தவறினால் கொடுந்துயர் செய்து வெளியே விரட்ட நேர்வர்; இப்படி அல்லல் வாழ்க்கை வாழ்வதைவிடச் சாவது நல்லது; செத்தால் மீண்டும் பிறவாமல் இருக்க வேண்டும் என இப்பெரியார் உறுதியாக் கருதியுள்ளமை இங்கே காண வந்தது.

ஞான நோக்கு ஊன வாழ்க்கையை ஓர்ந்து உணர்ந்து உய்தி நிலையைத் தேர்ந்து கொள்கிறது. பிறப்பு இருப்பு வாழ்வு சாவு யாவும் அவலக் கவலைக ளாகவே அடர்ந்து படர்ந்துள்ளன; இந்த அல்லல் நிலைகளிலிருந்து ஒல்லையில் நீங்கி நல்ல கதியைக் காண்பதே தனது உயிர்க்கு ஒருவன் நன்மை செய்வதாம்.

நெக்கு நெக்குள் உருகிஉருகி நின்றும் இருந்தும் கிடந்தும் எழுந்தும்
நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்தி நாஞவிதத்தால் கூற்று நவிற்றிச்
செக்கர் போலும் திருமேனி திகழ நோக்கிச் சிலிர் சிலிர்த்துப்
புக்கு நிற்பது என்று கொல்லோ என்பொல்லா மணியைப்புணர்ந்தே.
(திருவாசகம்)

துன்பத் தொடர்பு நீங்கி இன்பமூர்த்தியான இறைவனை அடைய விரைந்து மாணிக்கவாசகர் உருகி மறுகி உரையாடியுள்ள நிலையை இதனால் ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம்.

இறந்து படுமுன்னே இன்னுயிர்க் கென்றும்
சிறந்த கதிநிலையைச் செய்தான்---பிறந்த
பயனை அடைந்தான் பலனிழந்து செத்தான்
துயரையே கண்டான் தொடர்ந்து.

இதனை நினைந்து கொண்டு நிலைமையைத் தெளிந்து கொள்க.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

இறப்பும் பிறப்பும் இணை பிரியாதன.
உடுத்த உடை களைவதுபோல் எடுத்த உடல் கழிவது.
பிறப்பின் பயன் பெறின் இறப்பு இனிமையாம்.
வினைப்போகம் கழியின் தேகம் அழியும்.
முதுமை களைந்து சாவு புதுமை புரியும்.
அதன் நினைவால் அறம் பல விளையும்.
அதனை மறந்திருப்பது மதி கேடாம்.
இறுதி காணுமுன் உறுதி காணுக.
அங்ஙனம் காணின் எங்கணும் இன்பமாம்.
இறப்பே உலகைச் சிறப்புறச் செய்யும்.

கூங-வது இறப்பு முற்றிற்று.

# தொண்ணூற்று நாலாம் அதிகாரம்

## சிறப்பு

அஃதாவது சீவன் அடைய உரிய சிறந்த நிலை. பிறந்த மனிதன் இறந்து படுமுன் விரைந்து பெறத்தக்க விழுமிய பேற்றை உணர்த்துகின்றது ஆதலால் இது ஈண்டு வைக்கப்பட்டது.

931. அரிய பிறப்பை அடைந்த மனிதன்
உரிய சிறப்பை உணர்ந்து—பிரியமுடன்
நாடி வரினோ நலன்கள் அவனிடம்
ஓடி வருமே உவந்து. (க)

இ—ள்.

தான் அடைந்துள்ள மனிதப் பிறப்பு மிகவும் அருமையுடையது; அரிய இந்த உடல் உள்ள பொழுதே அடைய வுரியதை உணர்ந்து ஒருவன் புனிதமா முயன்று வரின் இனிய பல நலன்கள் எளிதே வந்து சேரும்; அந்த வரவு ஆனந்த நிலையம் என்க.

பிறந்த பிறவிப் பயன் மிகவும் சிறந்தது; அதனை விரைந்து தெளிந்து விழைந்து புரிந்து கொள்வது உயர்ந்த நன்மையாம்.

பெற்றபொருளின் பெருமையைத் தெளிவா அறிந்தபோது தான் எவரும் அதனை உரிமையோடு பேண நேர்கின்றார். வழி முறையே தொடர்ந்து வந்த இழிதுயரங்கள் யாவும் நீங்கி விழுமிய நிலையை அடைவதே அறிவுடைய பிறவிக்கு அமைந்த பயனாம். துக்கங்களை ஒக்க நீக்க வல்ல பெருமை மக்கள் உருவில் மருவியிருத்தலால் மனிதப் பிறவி மிகவும் அருமை என வந்தது.

விலங்கு பறவை முதலாகத் தோன்றியுள்ள பிராணிகள் எவற்றினும் மனிதமரபிடம் சிறந்த அறிவுகள் இயல்பாய் நிறைந்திருக்கின்றன; ஆகவே மானுடப் பிறப்பு பெறலரும் பேறாய்ப் பெருமைமிகப் பெற்றது. அருமை பெருமைகள் எல்லாம் அறிவு ஆண்மைகளால் உரிமையோடு தெளிவாய் வெளி வருகின்றன.

அரிய பல நிலைகளைக் கருதியுணரவும், உறுதியாயுணர்ந்ததை ஒழுங்காச் சொல்லவும், சொல்லிய வகைகளைச் சூழ்ந்து செய்யவும் வல்லமை வாய்ந்திருத்தலால் மனிதன் எல்லாம் புரிய வல்லவன் போல் எவ்வழியும் செவ்வையா இசைபெற்று நிற்கின்றான்.

உணர்ச்சி மிகுந்த உயர் பிறப்பை அடைந்தும் உண்மை நிலைகளை ஓர்ந்து தெளிந்து உய்தி பெருமல் புன்மைகளில் இழிந்து புலையாய் உழலுதல் நிலையான மாயமயக்கமாய் நிலவி வருகிறது.

அரிய பிறவிக்கு உரிய பயனை அறிபவன் பெரிய மகானுய்ப் பேரின்பம் உறுகிருன்; அவ்வாறு அறியாதவன் அவகேடனுய் இழிந்து அவலமாய் அழிகின்ருன். நல்ல அறிவுடைய பிறப்பைப் பெற்றவன் அதைக் கொண்டு அல்லல்களை நீக்கிக் கொள்ள வில்லையானுல் அத்தோற்றம் பழி படிந்து பாழ்படுகிறது. வீணப் பிறப்பாய் விளிந்து போகாமல் விழுமிய சிறப்பை அடைந்து கொள்பவன் வித்தக முத்தனுய் நன்கு விளங்கி நிற்கின்ருன்.

பேரஞர் இடும்பை எல்லாம் பிளந்திடும் பிறப்பு நீக்கும்
ஆரமிர்து அரிதில் பெற்ரும் அதன்பயன் கோடல் தேற்ரும்;
ஓரும் ஐம்பொறியும் ஓம்பி உளபகல் கழிந்த பின்றைக்
கூர்எரி கவரும் போழ்தில் கூடுமோ குறித்த வெல்லாம்
(சீவகசிந்தாமணி. 377)

மனிதப் பிறப்பு மதிநலம் உடையது; எல்லா இடும்பைகளையும் ஒருங்கே நீக்க வல்லது; அரிய அமுதம் போன்ற இவ்வுடம்பை பெரிய தவத்தால் பெற்றிருக்கிரும்; பெற்றும் உரிய பயனை அடையாமல் பொறிநுகர்வுகளை அவாவி வெறிகொண்டு வீணே திரிகிருேம்; செத்துச் சுடு காட்டில் உடல் வேகும் போது உயிர்க்கு ஏதேனும் பலன் உண்டா? துயர்க்கே வழிசெய்து அழிவது கொடிய பழியாம்; நெடிய மடமையாம் என இது குறித்துள்ளது. குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ளவும்.

ஆர் அமிர்து அரிதில் பெற்ரும் என்றது மனித தேகம் கிடைத்தற்கு அரிய மகிமை வாய்ந்தது என்பது தெரிய வந்தது. அரிய இனிய அமுது பெற்றவன் அதனை வறிதே இழந்து கழிவது பெரிய பரிதாபமாம்; ஆகவே தேகம் உள்ள பொழுதே தேகி திவ்விய நிலையை அடையும்படி செய்து கொள்ளுக.

சிறந்த கருவி கரணங்கள் வாய்ந்து அறிவு நலங்கள் தோய்ந்து நெறிமுறைகள் அமைந்த பிறவியை அடைந்தும் தன் உயிர்க்கு உறுதி நலனை அடையாமல் ஒழியின் அந்த மனித வாழ்வு மாட்டு வாழ்விலும் கடையாய் இழிந்து படுகிறது.

மேலான சிந்தனைகளை இழந்தவன் கீழான நிந்தனைகளை

அடைந்து அழிகிருன். பொறி நுகர்வுகளில் வெறி மிகுந்து அலே பவர் உறுதிநலன்களே உணராது ஒழிகின்ருர். ஈன இச்சைகள் மனிதனே ஈனன் ஆக்கிவிடுகின்றன; விடவே மனிதன் மிருகமாய் மருவி எவ்வழியும் வெவ்வினைகள் புரிந்து இழிந்து வாழ்கிருன்.

When man is a brute, he is the most sensual. (Howthorne)

சிற்றின்பத்தில் மிகுதியா யிழிந்தபொழுது மனிதன் மிருக மாய்த் திரிகிருன் என்னும் இது இங்கே அறிய வுரியது.

காம இச்சையில் ஆழ்ந்தவன் நேம நியமங்களே இழந்து விடுகிருன்; நெறி முறைகளே விலகிய அளவு அறிவிழந்த விலங்கு களாய் மனிதர் இழிந்து மாண்பிழந்து கழிந்து போகின்றனர்.

சிற்றின்ப ஆசை பேரின்ப நிலேயை நாசம் செய்யும் ஆத லால் அந்தப் புலேயான இன்பத்தைத் தொலேயாத துன்பமாக மேலோர் கருதி விலகி உறுதி கூர்ந்து உயர்வு தோய்ந்துள்ளனர்.

இன்பம் இதாம் இன்பம் இதாம் என்ற எல்லாம்
எரிஎன நஞ்சுஎன நினேக ஏற்றத் தாழ்வாய்த்
துன்புறுபோ கம்பலகால் தேர்ந்து நெஞ்சில்
தோயாமல் எளிதருந்தின் சுகமே ஆகும்;
வன்புபயில் மனத்தோற்றம் நாசம் ஆகும்
மனத்தினது நாசமே மகத்தாம் தோற்றம்;
நன்பரம ஞானிகள் நெஞ்சு இறந்து போகும்
நடை விலங்காம் அறிவிலர்க்கு நவைகூர் நெஞ்சம்.
(ஞானவாசிட்டம், தாசூர, 2)

தெளிந்த ஞானிகள் நிலேயையும், இழிந்த பேதைகள் புலே யையும் இதனுல் உணர்ந்து கொள்கிருேம். விடய சுகங்களேக் கொடிய விடம், நெடிய துக்கங்களாக நினேக என்றது அவற் றின் நீசங்களே நினேந்து தெளிந்து நேரே உய்தி காண வந்தது.

நீ உயர்ந்த பிறப்பில் பிறந்துள்ளாய்; உனது நிலேமையை உணர்ந்து தலேமையான சிறப்பை நன்கு அடைந்து கொள்ளுக.

மனித தேகம் மருவ அரியது;
பனியின் நீர்எனப் பாழ்படும் பாலது;
புனித போதம் பொருந்தி விரைவினில்
வினேயின் நீங்கி வியன்கதி காணுக.

932. பொன்றும் உடம்பு புகையாகு முன்னரே
என்றும் அழியாத இன்பத்தை—நன்று
கருதி அடைந்தான் கடுந்துயரம் எல்லாம்
ஒருவி எழுந்தான் உயர்ந்து. (உ)

இ-ள்.

இறந்துபடும் உடம்பு எரிந்து புகை ஆகு முன்னமே என்றும் அழியாத சிறந்த நிலையை உணர்ந்து அடைக; அவ்வாறு அடையின் அல்லல் எல்லாம் நீங்கி உயர்ந்தாய் என்க.

அழியும் புலையையும் அழியாத ஆனந்த நிலையையும் விழி தெரிய விளக்கி விழுமிய வழியை இது நன்கு துலக்கியுள்ளது.

உடம்பு என்னும் சொல் உயிரோடு உடன்பிறந்து வந்தது என்னும் பொருளையுடையது; உடைந்து போகும் நிலையது என்பதையும் இது உணர்த்தி நின்றது. உயிர்க்கு நிலையமாய் உரிமை தோய்ந்து ஒன்றாய் நின்றுவரினும் இடையே பிரிந்து அழிந்து போவது ஆதலால் பொன்றும் என ஓர் அடையை ஒன்றி வந்தது.

உயிர் நீங்கிய உடனே உடல் சவம் ஆகிறது; சாவை அடைந்தது ஆதலால் சவம் என நேர்ந்தது. இது வெளியே கிடந்தால் அழுகி நாறி உயிரினங்களுக்குத் துயர்களை விளைக்கும்; அவ்வாறு விளையாதபடி இதனை மண்ணில் புதைத்து மறைக்கின்றனர்; அல்லது நெருப்பில் இட்டு எரித்து நீறாக்கி விடுகின்றனர்.

பேரும் சீரும் பெருமையும் பெற்று ஆடையும் அணியும் சாந்தும் தோய்ந்து வாழ்ந்து வந்த உடல் நீறும் புகையுமாய் மாறி மறைகிறது. இந்த உடலுள் மருவியிருந்த உயிர் எங்கே போயது? யாரும் யாதும் தெரிய முடியாத அதிசய மருமமாய் அது அமைந்துள்ளது. சீவ இயக்கம் தெரிய அரிய நிலையில் மருவி வரினும் சீரிய சீவியம் தெய்வீகமாய்த் திகழ்கின்றது.

உடலோடு கூடி வாழுங்கால் உயிர் நன்மைகள் புரிந்திருந்தால் முடிவில் இன்ப உலகத்தை அடைகிறது; தீமைகள் செய்திருந்தால் துன்ப நிலையங்களைச் சேர்கிறது; இரண்டும் கலந்திருந்தால் இன்ப துன்பங்கள் நிறைந்த இந்த உலகத்திற்கு வருகிறது. இது கரும காண்டத்தின் நீண்ட முடிவாய் நிலைத்து நிற்கிறது. காரண காரியங்கள் பூரணமாக் கருதி யுணர வந்தன.

செய்த வினைகளின்படியே தேகங்களை எடுத்துப் போகங்களை நுகர்ந்து சீவர்கள் திரிந்து வருவது விரிந்த வியப்புகளை விளைத்து வாழ்வுகளின் சூழ்வுகளை வளமா விளக்கி வருகிறது.

பலவகையான உடல்களை மருவி அளவிடலரிய பிறவிகளில் ஓயாமல் உழந்து எவ்வழியும் பெருந்துயரங்களையே நுகர்ந்து வருதலால் பிறவி நீங்கிப் பேரின்பம் பெறுவது உயிரின் தாகமாய் ஓங்கி நின்றது. துக்கங்களால் பக்குவங்கள் படிகின்றன.

பொல்லாத ஆசைகளாலேயே புலையான பிறவிகள் பொங்கி வந்துள்ளன. அடர்ந்து படர்ந்து தொடர்ந்து மூண்டுள்ள அல்லல்கள் அறவே ஒழிய வேண்டுமானல் முதலில் அவாவை அடியோடு ஒழிக்க வேண்டும். நீண்டு படர்ந்து நெடிது ஓங்கியுள்ள மரம் நிலையாய் நிலைத்து நிற்பது மூலவேரின் பலத்தினலேயாம்; அந்த அடிவேர் அழிந்தால் நெடிய மரம் நேரே விரைந்து வீழ்ந்துவிடும்; அதுபோல் ஆசை ஒழியின் பிறவி அப்பொழுதே நாசமாய் அழிந்து போம்; போகவே ஏகமான இன்பமாம்.

அவாவினை ஆற்ற அறுப்பின் தவாவினை
தான்வேண்டும் ஆற்ருன் வரும். (குறள், 367)

ஆசையை அறவே ஒருவன் அறுத்து ஒழித்தால் பின்பு அவன் கருதியபடி எல்லாம் உறுதி நலங்கள் பெருகி உயர் பேரின்பம் ஓங்கி வரும் எனத் தேவர் இங்ஙனம் உணர்த்தியுள்ளார். இனிய சுகங்களே வேண்டும் என்று யாண்டும் எண்ணி வருகிற சீவர்கள் கொடிய துக்கங்களை அடைவதற்குக் காரணம் இங்கே பக்குவமாக் காட்டப்பட்டுள்ளது. காட்சியைக் கண்டு தெளிந்து மாட்சியை மருவிக்கொள்ள வேண்டும்.

உற்ற உடல் அழிந்து ஒழியுமுன் உயிர்க்கு உறுதியைப் பெற்றவனே பிறவிக் கடலைக் கடந்தவனுகிருன். யாதொரு அல்லலும் நேராமல் ஆன்மாவை மேன்மையாகப் பாதுகாத்துக் கொள்ளுவதே நல்ல ஞானமாம். அந்த ஞானமே ஊனமான ஈன நிலைகளை உணர்த்தி உண்மையான பேரின்ப நலன்களைப் பெறச் செய்கிறது. தூய ஒளியால் மாய இருள் மறைகிறது.

உடம்பின் இழிவையும் உயிரின் உயர்வையும் பிறவித் துயரையும் தெளிவாத் தெரிய நேர்ந்தவன் எவ்வழியும் செவ்வையா இனிது முயன்று அரிய கதிகளை நேரே அடைய நேர்கின்ருன்.

933. பிறந்த பிறப்பால் பிறவாத இன்பம்
பிறந்து வரவே பெருகிச்—சிறந்தொருவன்
வாழ்வானே ஆமாயின் வானவரும் அன்னவனைச்
சூழ்வார் தொடர்ந்து தொழுது. (௩)

இ—ள்

மனிதன் எனப் பிறந்த ஒருவன் நிலையான புனித இன்பம் நிறைந்து வருமாறு வாழ்ந்து வர வேண்டும்; அவ்வாறு வரின் அவனைத் தேவரும் உவந்து ஆவலோடு சூழ்ந்து வருவார் என்க.

அருமையுடையது என மனிதப் பிறவி பெருமை அடைந்துள்ளது; அத்தகைய அரியதை மருவி வந்துள்ளவன் அதற்கு உரிய பயனை அடைவது பெரிய கடமையாய் அமைந்தது. அரிய நல்ல கருவியை உரிமையாப் பெற்றவன் அதனால் பெறவுரியதை விரைந்து பெறவில்லையானால் இழிந்த மடையனாகின்றான்; ஆகவே அவனுடைய வாழ்வு பழிபடிந்து இழிவடைந்து பாழாகின்றது.

அறிவுடைய பிறப்பை அடைந்தவன் தன் ஆன்மா ஏதாவது சிறிது மேன்மை அடையும்படி செய்து கொண்டபோது தான் சிறந்தவன் ஆகிறான்; பிறந்த பிறப்பும் ஓரளவு உயர்ந்து திகழ்கிறது. உயிர்க்கு ஊதியம் புரியாதவன் துயர்க்கு வழி கோலித் தொலைந்து போதலால் அவன் தோற்றம் பழிக்கு இடமாய்ப் பரிதாப நிலையில் இழிந்து விருதாவாய் முடிகின்றது.

எந்தப் பிறப்பு எய்தினும் எவ்வழியும் துன்பங்களே நிறைந்துள்ளமையால் யாண்டும் பிறவாமையே இன்பம் என வந்தது. உள்ளம் தெளிந்த ஞானிகள் பிறப்பின் அல்லல்களைக் குறிப்போடு உணர்ந்து பிறவாத சிறப்பு நிலையைப் பெற விரைகின்றார். வெய்ய துயர்களை அறிவது மெய்யறிவாகிறது.

"யானை முதலா எறும்பு ஈறாய
ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்தும்,
மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து
ஈனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும்,
ஒருமதித் தான்றியின் இருமையில் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையில் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களின் பேரிருள் பிழைத்தும்

அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களில் தாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களின் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படும்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுகள் தோறும் அடைந்தஅக் காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகல் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுள் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்து
எய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்து
ஈர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையில் பிழைத்தும்
பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறுஎனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி என்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வம் என்னும் அல்லலில் பிழைத்தும்
நல்குரவு என்னும் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம்பு ஆய பலதுறை பிழைத்தும்
தெய்வம் என்பதுஓர் சித்தம் உண்டாகி'' (திருவாசகம்)

யானை முதல் எறும்பு ஈறாகவுள்ள பிராணி வகைகளிலிருந்து தப்பிப் பிழைத்து அரிய மனிதப் பிறவியை அடைந்தேன்; தாயின் கருப்பையில் பத்து மாதங்கள் பதைத்துக் கிடந்து உற்ற துயரங்களை எல்லாம் கடந்து உலகில் பிறந்தேன்; பிறந்த பின்பு அடர்ந்து தொடர்ந்த துன்பங்களையும் கடந்து வளர்ந்து வாலிபம் அடைந்தேன்; காமத் தீயால் வெந்து நொந்தேன்; கல்விச் செருக்கு செல்வத்திமிர் அதிகாரநோய் ஆசைப்பேய் முதலிய பொல்லாத அல்லல்கள் யாவும் அரிதில் நீங்கினேன்; நீங்கவே எல்லாம் வல்ல இறைவன் ஒருவன் உளன் என்னும் நல்ல உணர்வு உள்ளே சிறிது ஓங்கியது; அவ்வாறு ஓங்கியும் உலகப் புலைகள் ஒழிந்து மேலே நிலையாய்ப் போக முடியாமல் நெஞ்சம் மயங்கி நிற்கின்றேன் ஈசா! என்று மாணிக்கவாசகர் இறைவனை நோக்கி இவ்வாறு உருகி மறுகி யிருக்கிறார். அவர் கருதி

மொழிந்துள்ள உறுதிநலங்கள் யாவும் ஓர்ந்து சிந்திக்கத்தக்கன.

பிறவித் துயர்களின் நிலைகளையும், அதிலிருந்து தப்பி உய்வாரது அருமையையும், அவ்வாறு உய்ந்து போகின்ற மகான்களுடைய மகிமையையும் இங்கே நாம் ஒருங்கே உணர்ந்து கொள்கிறோம். புனித மதி இனிய கதியை எய்துகின்றது.

உண்மை தெளிந்தவர் உயிர்க்கு உறுதிநலனை விழைந்து உயர்ந்து உய்தி பெறுகின்றார்; தெளியாதவர் உலக போகங்களில் இழிந்து களிமிகுந்து உழல்கின்றார். மனம் மருண்டு மதியிருண்டு மாய மோகங்களில் ஆழ்ந்து மையல் மயக்கங்களில் வீழ்ந்து வெய்ய துயரங்களையே வைய மாந்தர் விளைத்து வருகின்றனர். அவ்வாறு அவல நிலையில் இழிந்து கிடந்தும் கவலையின்றி வாழ்வது மாயா விநோதமாய் மருவியுள்ளது. ஞான விழி தெளிவாயில்லாமையால் ஈன வழியில் இளிவாய் இழிந்து போகின்றார். மெய்யுணர்வே உய்யும் வழியை அருளுகிறது.

வைய மையல் நீங்கி உய்தி பெறுவது மிகவும் அரிய செயல்; அரிய பெரிய அந்தப் பேறு பெறுபவரை வானவரும் வியந்து நோக்கி வாழ்த்தி மகிழ்கின்றார். மேலான பிறவியால் பெற வுரிய மேன்மையான பலன் மீண்டும் பிறவாமையே; அதனை ஆன்மஞானிகள் எளிதே இனிது அடைந்து கொள்ளுகின்றனர்.

---

934. இனிய இதங்களையே எவ்வழியும் ஆற்றி
மனிதன் புனிதனாய் வாழின்—தனியான
பேரின்ப வாழ்வு பெருகி அவனிடம்
ஓரின்ப மாக உறும். (ச)

இ—ள்.

எவர்க்கும் இனிய இதங்களையே புரிந்து எவ்வழியும் மனிதன் புனிதனாய் வாழ்ந்துவரின் பேரின்ப வாழ்வு அவன்பால் நேரே பெருகி வரும்; அவ் வரவே பிறவியின் பயனும் என்க.

இன்ப வாழ்வின் இயல்பை இது இங்கு நன்கு உணர்த்தியுளது. வாழின் இன்பம் உறும் என்றதனால் அங்ஙனம் வாழா வழித் துன்பமே வரும் என்பது தெளிவாய்த் தெரிய வந்தது.

தான் ஆற்றிய கருமங்களின் பலன்களை யாண்டும் யாதும்

மாற்றுமல் மனிதன் அனுபவிக்க நேர்ந்துள்ளான். இவ்வாறு வினைகளின் நியமங்கள் நேர்ந்திருத்தலால் அவன் எவ்வாறு வாழ்ந்து வர வேண்டும் என்பதை ஓர்ந்து கொள்ளலாம்.

தரும நலங்கள் தோய்ந்து திருந்திய நீர்மையில் ஒழுகி வருபவனே விழுமிய சீர்மைகள் வாய்ந்து மேலான நிலைகளில் விளங்கி வருகிறான். எவனுடைய சித்த விருத்தி சிறந்து வருகிறதோ அவன் உத்தமனாய் உயர்ந்து ஒளி மிகப் பெறுகின்றான். தன் மனத்தை நல்ல வழியில் பழகி வருபவன் எல்லாப் பாக்கியங்களையும் எளிதே அடைந்து கொள்ளுகிறான். நினைவின் வழி வினைகளும், வினைகளின் வழியே போகங்களும் விளைந்து வருகின்றன. தேக வாழ்வுகள் காரணங்கள் கலந்துள்ளன.

நல்ல சுகங்கள் நல்வினையால் வருகின்றன
தீய துயரங்கள் தீவினையால் விளைகின்றன.

கருமங்களிலிருந்தே மனித மரபுகள் மருமங்களாய் வளர்ந்து வந்துள்ளன. அகத்தில் உள்ள அளவே புறத்தில் மனிதன் பொலிந்து தோன்றுகிறான். மனம் இனியதாய் அமைந்தால் அவன் புனிதனா உயர்ந்து புண்ணிய கதிகளை எய்துகிறான். உள்ளம் பழுதானால் எல்லாம் பாழாய் இழிந்துபடுகிறான். மனிதனுடைய மகிமைகளுக்கெல்லாம் இனிய மனம் தனி மூலமாயுள்ளது. இருதய சுத்தம் அதிசய சித்திகளை அருளுகிறது.

மனம் தூயது ஆயின் அதிலிருந்து புனித நினைவுகள் தோன்றுகின்றன; அவை புண்ணியங்களாய் விரிகின்றன; கள்ளம் இல்லாத நல்ல உள்ளம் கடவுள் நிலையம் என்பது பழமொழியாய் வந்து அதன் விழுமிய நிலைமையை விளக்கியுளது.

**A great, a good, and a right mind is a kind of divinity lodged in flesh.** (Seneca)

நீதியான நல்ல உயர்ந்த உள்ளம் உடலுள் தங்கியுள்ள ஒரு தெய்வமே என்னும் இது இங்கே நன்கு அறிய வுரியது.

மனம் புனிதமாய் மருவிவரின் அந்த மனிதன் தெய்வமாய்ப் பெருகி வருகிறான். அது தீயது ஆனால் அவன் பேயாய் இழிந்து நாயாய்க் கழிந்து நீசமா அழிந்து நாசமாய்ப் போகிறான்.

மனம் இனிமை தோய்ந்து செம்மையாய் மருவிய அளவே

மனிதன் மகிமை வாய்ந்து நன்மையாய் வருகிறான். அது சிறு மையானால் அவன் சின்னவனாய் இருமையும் இழந்துவிடுகிறான். மனிதனும் மனமும் மலரும் மணமும்போல் மருவியுள்ளமை யால் இருவகை நிலைமையும் ஒருமுகமாய்த் தெரியலாகும்.

The mind grows narrow in proportion as the soul grows corrupt. [Rousseau]

உயிர் பழுது படுகிற அளவு உள்ளமும் குறுகி இழிவாகிறது என ரூசோ என்னும் அறிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார்.

உயிருக்கும் மனதுக்கும் உள்ள உறவுரிமைகளையும் தொடர்புகளையும் இதனால் உணர்ந்து கொள்கிறோம். கண்ணுள் ஒளிபோல் ஆன்ம விழியாய் அமைந்துள்ள மனம் மாசுபடியாதிருந்தால் தெய்வத்தேசுகள் நிறைந்து எவ்வழியும் செவ்வையாய்ச் சிறந்து விளங்குகிறது. செவ்விய இதயம் திவ்விய உதயமாகிறது.

அகத்தின்படியே சகத்தில் எவரும் சார்ந்து திரிகின்றனர். புண்ணியவான் மகாத்துமா தருமமூர்த்தி என ஒருவன் கண்ணியம் பெறுவதும், பாவி துராத்துமா பழிகாரன் என ஒருவன் இழிவுறுவதும் அவனவனுடைய அகத்தின் விளைவுகளே.

நல்லமனம் இனிய அமுதமாய் எவ்வழியும் இன்பம் தருகிறது; தீயது கொடிய விடமாய் யாண்டும் துன்பமே புரிகிறது.

மனம்இனிய தானால் மனிதன் மகானாய்க்
கனமகிமை யாவுமே காண்பான்---மனம்தான்
கொடியது எனிறோ குடிகேடு செய்து
படுபாவி யாவன் படர்ந்து.

மனத்தின் விளைவுகளை இது தெளிவா விளக்கியுளது.

மேலோர் கீழோர் நல்லோர் தீயோர் என வெளியே மனிதர் தெரிய வருவது உள்ளேயுள்ள மனதின் நிலைமைகளினாலேயாம்; அது நல்ல வழிகளில் பழகிவரின் அதனை யுடையவன் எல்லா வழிகளிலும் உயர்ந்து யாண்டும் இன்பமே காண்கிறான். மனம் செம்மையானால் இம்மையும் மறுமையும் இன்பம் சுரந்து வருகின்றன. அரியசுகங்களை இனிய அகங்களே அருளுகின்றன.

உள்ளம் தூயதேல் பேரின்ப வெள்ளம் பாயும் என்பது முதுமொழி. இனிய இதமுடைய மனிதனுக்குத் தனி அடையாளம் எவ்வுயிர்க்கும் எவ்வழியும் இதம் புரிதலேயாம். சீவர்கள்

மகிழ்ந்துவர ஒருவன் வாழ்ந்துவரின் அது தேவ வாழ்வாம். அத்தகைய திவ்விய வாழ்வை நடத்திச் எத்தகைய நிலைகளிலும் சித்த சுத்தி தோய்ந்து முத்திப் பேரின்பம் பெறுக.

---

935. எய்தற் கரியபிறப் பெய்தினன் அன்னதனால்
செய்தற் குரியதைச் செய்துகொளின்—உய்திநலம்
பெற்றான் பெறானேல் பெருந்துயரே எவ்வழியும்
உற்றான் மறுகி உளைந்து. (ரு)

இ—ள்.

பெறுதற்கு அரிய பிறவியைப் பெற்றுள்ள மனிதன் அதனால் பெறவுரியதை விரைந்து பெற வேண்டும்; அவ்வாறு பெறின் அவன் பேரின்பம் உடையனும்; பெறவில்லையானால் பெருந்துயரங்களையே அடைந்து இழிந்து கழிந்தான் என்க.

தான் அடைந்துள்ள பொருளின் அருமையை உணர்ந்த போதுதான் எவனும் அதனை விழைந்து பேண நேர்கின்றான்; உணரவில்லையானால் யாதும் கருதாமல் வறிதே அகன்று போகிறான். உணர்வு ஓர்ந்து வர உயர்வு நேர்ந்து வருகிறது.

ஆடு மாடு கழுதை முதலிய இழி பிறவிகளில் வீழாமல் உயர்ந்த இந்த மனிதப் பிறவியை அடைந்து வந்திருக்கிறோமே! இதைக் கொண்டு நாம் அடையவுரியதை விரைந்து அடைந்து கொள்ள வேண்டுமே! அவ்வாறு அடையவில்லையானால் பின்பு எவ்வழியும் உய்தியில்லையே! என்று எண்ணி ஏங்குவோரே எய்திய பிறவியில் உய்தி காணும் புண்ணிய நீரராய்ப் பொலிந்து விளங்குகின்றார். உறுநிலனை எண்ணாதவர் அரியபலனை இழந்து அவலமாய் இழிந்து கவலையோடு அழிந்து தொலைகின்றார்.

உற்ற பிறப்பின் பயனை உணர்கின்ற அளவே மனிதன் மகானாய் மகிமை பெறுகிறான்; உணராது ஒழியின் முழுமடையனாய் இழிந்து அவன் கடையனாய்க் கழிந்து ஒழிகிறான். எளிதே எய்த முடியாத அரிய பிறவியை எய்தியிருந்தும் அதன் பயனை அடையாமல் பாழாய்ப் போவது பழிமூடமான பரிதாபமாம்.

ஒளிமிகுந்த மணி விழி யிழந்த குருடன் கையில் இருப்பது போல் மகிமை வாய்ந்த மனிதப் பிறப்பு மதிகெட்ட மடையனிடம் ஒரு சிறப்பும் இன்றி வறிதே இழிந்து கழிந்து போகிறது.

யாதொரு துயரமும் சேராமல் எவ்வழியும் சுகமாய் வாழவே யாவரும் விரும்புகின்றனர். தேகசுகங்களும் போகநுகர்வுகளும் எவ்வளவு வளமா அமைந்திருந்தாலும் மன அமைதியில்லாமல் அல்லலுற்று உழலும் அவல நிலையைச் செல்வரிடமும் அரசர்களிடமும் வரிசையா யாண்டும் நேரே கண்டு வருகிறோம்.

பொறி புலன்களால் நுகர்ந்து வருவது புலையான நிலையது ஆதலால் அது சிற்றின்பம் எனச் சிறுமை யுற்று நின்றது. அருந்தலும் பொருந்தலும் திருந்திய சுவைகளில் செறிந்திருந்தாலும் மூப்பும் பிணியும் மூண்டு நீண்டு யாண்டும் அல்லல்களோடு வருந்தி அழிவதே மானிட வாழ்வாய் மருவியுளது.

உண்டு கழித்தேன் ஒருசுகமும் இப்பிறப்பில்
கண்டு களியேன் கதி இழந்தேன்.

என்று பண்டு ஒரு அரசன் பரிந்து வருந்தியுள்ளதும் ஈண்டு அறிந்து கொள்ள வுரியது. பொறி நுகர்வு வெறி நிகழ்வாகிறது.

சிறந்த மனித அறிவுக்குப் பயன் உயர்ந்த புனித நிலையை அடைந்து உய்ந்து கொள்வதேயாம். மேலான நூலறிவுக்குப் பயன் மெய்யானவாலறிவனை நினைந்து நினைந்து நெஞ்சம் கரைந்து வருவதே; அவ்வாறு வரின் வெவ்விய பிறவித் துயரங்கள் வேரோடு அறுந்துபோம். ஆனந்த நிலையமான ஆதிமூலப் பொருளைத் தோய்ந்த அளவு தீது மூலங்கள் நீங்கிச் சீவன் திவ்விய மகிமையை எய்தித் தேசு மிகப் பெறுகின்றது.

மனிதப் பிறவி பெறுதற்கு அரியது; அருமையான இதனை உரிமையாகப் பெற்றவன் உறுதியாகப் பெற வுரியது மீண்டும் பிறவாமையே; அவ்வாறு பெறவில்லையானல் அப்பிறப்பு சிறந்த பயனை இழந்து இழிந்த பழியோடு வீணே அழிந்து படுவதாம்.

இக்காயம் நீங்கி இனிஒரு காயத்தில்
புக்குப் பிறவாமல் போம்வழி நாடுமின்!
எக்காலத்து இவ்வுடல் வந்துஎமக்கு ஆனதுஎன்று
அக்காலம் உன்ன அருள்பெற லாமே. (திருமந்திரம்)

எடுத்த இந்த உடம்பே முடிவானதாய் இருக்கவேண்டும்; அடுத்த உடலை அடையலாகாது; அவ்வாறு பிறவாத நிலையை அடைந்தவனே பிறவிப் பேற்றைப் பெற்றவனாகிறான். அதனை

இழந்தவன் அவலத் துயரங்களில் அழுந்தி என்றும் உழல நேர்கின்றான். வந்த பிறவியைச் சிந்தனை செய்து உயர்ந்து கொள்ளுக என மனித மரபுக்குத் திருமூலர் இங்கே உரிமையோடு உணர்த்தி யுள்ளதை ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும்.

தான் பிறந்த பிறவி பெருமகிமையுடையதாகச் செய்து கொள்பவனே சிறந்த ஞானியாய் உயர்ந்து விளங்குகிறான். உள்ளம் தெளிந்து தூய்மை ஆய பொழுது உலக மையல்கள் ஒழிந்து போகின்றன; போகவே உண்மையான பரம்பொருளோடு தோய்ந்து உய்தி பெறுகிறான். அந்தப் பேரின்பப்பேறு தான் பிறப்பின் சிறப்பான பயனாய் நேரே சிறந்து திகழ்கிறது.

பிறந்து பெற்ற அறிவால் பெறும்பயன்
நிறைந்த நீர்முகில் நீங்கிய வான்என
அறிந்து தம்மை அமல வியாபகம்
செறிந்து நல்ல தியானத் திருத்தலே. [தேவிகாலோத்தரம்

சிறந்த மனித அறிவுக்கு உரிய சீரிய பயனை இது கூறியுளது. கருமேகங்கள் நீங்கிய வானம் போல் பெருமோகங்கள் நீங்கி உள்ளம் தெளிவாய் விரிந்து உயர்பரனோடு யோகமாய்த் தோய்ந்திருப்பதே விவேகமான பிறவியின் பயனும் என்பதை இதனால் இங்குத் தெளிவாய் அறிந்து கொள்கிறோம்.

பிறவித் துயரம் ஒழிந்து உய்வது மிகவும் அரிய செயல்; வழி வழியே பழகி வந்துள்ள பாசவாசனையின்படியே ஆசைச் சுழல்களில் சிக்கிச் சீவகோடிகள் யாண்டும் அலமந்து உழல்கின்றன. இந்த மாயச் சுழலிலிருந்து நீங்கித் தூய அறிவு தோன்றிய போதுதான் பிறவித் துயரம் தெரிய வருகிறது; தெரியவே பிறவாத பெரியோனை எண்ணி உருகிப் புண்ணிய நீரராய்ப் புனித நிலையை அடைய விரைகின்றனர். அத்தகைய வித்தகரே தத்துவ ஞானிகளாய்ச் சிறந்து திகழ்கின்றார்.

எடுத்த தேகம் இறக்குமுனே எனைக்
கொடுத்து நின்னையும் கூடவும் காண்பனோ?
அடுத்த பேரறி வாயறி யாமையைக்
கெடுத்த இன்பக் கிளர்மணிக் குன்றமே. [தாயுமானவர்]

பிறந்த தேகம் இறந்து படுமுன் சிறந்த நிலையை அடைய வேண்டும் என்று தாயுமானவர் இறைவனை நோக்கி உருகி

மொழிந்துள்ளமையை இதனல் உணர்ந்து கொள்கிரேம். அடுத்த உடல் அடையாதபடி தன் உயிரை உடையவனுக்கே உரிமையா இவர் கொடுத்திருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது.

---

936. துன்பத் தொடர்பு தொடராமல் தோன்றினேன்
இன்பப் பிறப்பே இனிதோங்கி—முன்பென்றும்
காணுத காட்சிகளைக் காட்டிக் கதிநலங்கள்
பூணுகப் பூணும் புனைந்து. (சு)

இ-ள்.

அல்லலான துயரங்கள் தோயாமல் நல்ல பிறவியில் பிறந்தவன் எவ்வழியும் இனியனாய் ஒழுகி விழுமிய நிலையில் அரிய நலங்களைக் கண்டு திவ்விய கதிகளைச் செவ்விதாப் பெறுவன் என்க.

உடலோடு தோன்றிய உயிரினங்களுள் மனிதனுடைய தோற்றம் உயர்வுடையது. சிறந்த மதிநலம் வாய்ந்தது ஆதலால் பிறந்த பிறவியின் பயனைத் தெளிவா உணர்ந்து அதனை அடைந்து கொள்ள விழைந்து எவ்வழியும் விரைந்து நேர்கின்றது.

அழிகின்ற ஊன உடலுள் அழியாத ஞானஉயிர் வினையின் வழியே வந்து தங்கி நினைவின் வழியே வாழ்ந்து வருகிறது. சுக துக்கங்களை வகையா வகுத்து உணர்ந்து கொள்கிறது. வினைத் தொடர்புகளையும் விளைவுகளையும் தெளிவாத் தெளிந்து அவற்றிலிருந்து உய்யும் வழிகளை ஓர்ந்து உறுதி நிலைகளை மருவி மகிழ்வதே அரிய மகிமையாய்ப் பெருமை பெறுகிறது.

உற்ற துயர்கள் யாவும் நீங்கி உயிர் உயர்வுறும்படி செய்வதே பெற்ற பிறவியின் பெரும் பேறும் என முத்தர்கள் மொழிந்துள்ளது சத்திய ஒளியாய் ஓங்கி நித்தியமும் நிலவி நிற்கிறது. தெளிந்த அனுபவ மொழிகள் சீவ அமுதங்களாயின.

பிறப்பில் எவ்வழியும் துன்பங்களே பெருகியுள்ளமையால் பிறவாமை பேரின்பம் என வந்தது. பிறவி வேதனைகள் மறவியுருதபடி துறவிகள் தொடர்ந்து பேசி வருகின்றனர். தாய் உதரத்திலிருந்து நோயுழந்து வீழ்ந்து தரணியில் வந்து சாந்தணையும் சஞ்சலமாய்ச் சலித்து வாழ்ந்து ஆந்தணை யாதும் அறியாமல் மாந்தர் மாய்ந்து போவது மாய விசித்திரமாய் மருவியுள்ளது.

அன்னை தன் வயிணிடை அநேக துன்பமே
பின்னையும் பிறப்புழி பெரிது துன்பமே
தன்னயர் வறவுரை தரிக்கத் தாதையும்
சொன்னவில் குரவனும் சுளியத் துன்பமே.

விடக்கினை விரும்பியே வெறுப்பு மேலிடக்
கடித்துஇரு நாய் தமில் கதறு மாறுபோல்
மூடைப்புழுக் குரம்பையின் மோகம் எய்தியே
விடைப்பரே மனி தரும் தம்மில் வெல்லவே. (2)

திலத்துணை இனிமையைத் திளைக்க மானிடர்
மலைத்துணைத் துயரினை விரைய மாந்துவார்;
துலைக்கணக்கு அறிகிலாத் துரிசி னரவர்
கலைக்கணக் கினத்தலை காண வல்லரோ? (3)

[சிவதருமோத்தரம்]

அல்லலால் செல்வம் துன்பம்; அதினுநல் குரவும் துன்பம்;
கல்வி ஆங்காரம் துன்பம்; கற்றில ரையின் துன்பம்;
மல்லல்மா ஞாலந் தன்னில் வலிமிகின மதத்தால் துன்பம்:
இல்லையேல் வலியோர் தம்மால் ஈடழி வுறலால் துன்பம்; (1)

சிறப்பறு நோயால் துன்பம்; செடிகொள்மூப் பதனுல் துன்பம்;
மறப்புறத் தியக்கம் செய்யும் மரணவே தனையால் துன்பம்;
பிறப்பவர் எக்காலத்தும் பெறுவது துன்பம ஆனல்
துறப்பதே கருமம் துன்பப் பிறவியாம் துயரம்தீர.

(குறுந்திரட்டு)

பிறவித் துன்பங்களைக் குறித்து வந்துள்ள இவை இங்கே சிந்திக்கத் தக்கன. இத்தகைய துன்பங்கள் எவ்வழியும் தொடர்ந்து படர்ந்து உயிரை வாட்டி வதைத்து வருதலால் பிறவி துயரக் கடல், துக்க சாகரம் என மெய்ஞ்ஞானிகள் யாவரும் மிக்க திகிலோடு அஞ்சி விரைந்து அகல நேர்ந்தனர்.

பிறவிப் பெருங்கடலை அறவே கடந்து பேரின்பத் துறையை அடைய வேண்டுமானல் பிறவாத ஒருவனது அடியிணையே இறவாத புணையாய் யாண்டும் தனியே இனிது அமைந்துள்ளது.

பொழிகின்ற துன்பப் புயல்வெள் ளத்தினின் கழல்புணைகொண்டு
இழிகின்ற அன்பர்கள் ஏறினர் வான்யான் இடர்க்கடல்வாய்ச்
சுழிசென்று மாதர்த் திரைபொரக் காமச் சுறவுஎறிய
அழிகின்றனன் உடையாய்! அடியேன்உன் அடைக்கலமே.

(திருவாசகம்)

மெய்யுணர்வுடைய அன்பர்கள் நின் திருவடியை நினைந்து துன்பக் கடலை நீந்தி இன்பக்கரையில் ஏறினர்; நான் அவ்வாறு ஏருமல் இழிந்து பேராத நெடிய பிறவிக் கடலில் வீழ்ந்து பெருந்துயர் உறுகின்றேன்; ஆண்டவா! என்னைக் காத்தருள் என்று சிவபெருமானை நோக்கி மாணிக்கவாசகர் இவ்வாறு அடைக்கலம்புகுந்து அபயமாய்முறையிட்டு வேண்டியிருக்கிருர்.

துயரில் சுடர்ஒளி தன்னுடைச் சோதி நின்றவண்ணம் நிற்கவே
துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண்காண வந்து
துயரங்கள் செய்து தன்தெய்வ நிலையுலகில் புகவுய்க்கும் அம்மான்
துயரமில் சீர்க்கண்ணன் மாயன்புகழ்துற்றயான்ஓர் துன்பம்இலனே.
(திருவாய்மொழி)

தூய ஞானியான நம்மாழ்வார் மாயனை நினைந்து பிறவித் துன்பங்கள் நீங்கியுள்ளமையை இங்ஙனம் குறித்துள்ளார்.

பிறவித் துயரங்கள் மீண்டும் நேராமல் செய்து கொள்ளு வோரே திவ்விய சீவன் முத்தர்களாய்ச் சிறந்து திகழ்கின்ருர். தீய துன்பங்கள் பின்பு எவ்வழியும் யாதும் தொடராமல் தூய பேரின்பமே என்றும் தொடர்ந்து நிற்கும்படி சூழ்ந்து தோய்ந்து வாழ்ந்து வருபவரையே மெய்ஞ்ஞானிகள் என்று வையம் வாழ்த்தி வருகிறது. பயனை அடைந்தவர் வியனை விளங்குகிருர்.

ஞானஒளி வானஒளியாய் வயங்கி வருதலால் மாய மருள்கள் மறைந்து ஒழிகின்றன; வைய மையல்கள் ஒழியவே மெய்யான தெய்வக் காட்சிகள் நேரே தெரிய வருகின்றன.

The intellect of the wise is like glass; it admits the light of heaven and reflects it. (Hare)

ஞானிகளின் அறிவு தெளிந்த கண்ணடி போல் உள்ளது; தெய்வீக சோதி அதில் தோய்ந்து தெளிவாய் ஒளி வீசுகிறது என்னும் இது இங்கே விழியூன்றி நோக்கி அறிய வுரியது.

மெய்யுணர்வு அமைந்த அளவு அந்தப் பிறவி சிறந்ததாய் உயர்ந்து விளங்குகிறது; விளங்கவே உறுதிநலங்களை அடைந்து உய்தி பெறுகிறது. உண்மை தெளிந்தான் நன்மை அடைந்தான்.

தன்னை அறியின் தலைமை தெரியவரும்
இன்னல் ஒழியும் இரிந்து

இதனை உன்னி ஓர்ந்து உயர் நலம் பெறுக.

937. பொறிவெறிய ஞனன் புலையா யிழிந்து
நெறியழிவில் வீழ்ந்து நௌிந்தான்—அறிவமைந்து
நின்றான் கதிநலங்கள் நேரே அடைந்துமேல்
வென்றான் விதியை விரைந்து. (எ)

இ-ள்.

பொறி நுகர்வில் வெறிகொண்டவன் புலையாய் இழிந்து நிலைகுலைந்து வீழ்ந்தான்; அவ்வாறு வெறிகொள்ளாமல் அறிவு அமைந்து நெறியே ஒழுகினவன் விதியை வென்று கதிநலங்கள் கண்டான்; அந்தக் காட்சியை மாட்சியாக் காணுகஎன்பதாம்.

உயிர் வாழ்வு ஐந்து வகையான சூழல்களில் சுழன்று வருகிறது. கண்ணால் காண்பது, மூக்கால் முகர்வது, வாயால் நுகர்வது, செவியால் கேட்பது, மெய்யால் பரிசிப்பது என்னும் இந்த ஐந்துவகை நெறிகளிலே தோய்ந்துதான் மனிதன் இனிது வாழ்ந்து வருகிறான். வாழ்வின் வழி வழிமுறையே வந்துள்ளது.

வாழ்க்கைக்கு இயற்கையாய் அமைந்துள்ள இத் துறைகளில் நெறிமுறையே ஒழுகிவரின் அந்த மனிதன் நீதிமானாய் நிலவி வருகிறான்; நெறிகடந்து அவாமிகுந்து பொறி வெறிகளில் ஓடித்திரிந்தால் அவன் பழி பாவங்களை அடைய நேர்கின்றான். மையல் மயக்கங்கள் வெய்ய துயரங்களை விளைத்து விடுகின்றன.

இழி வழிகளில் சுவைகளை விழைந்து உழல்கின்றவன் உயர் நிலைகளை ஒருங்கே இழந்து போகிறான். இழிந்த இச்சைகள் ஒழிந்தபொழுதுதான் மனிதன் உச்ச நிலையில் உயர்ந்து ஒளி மிகுந்து வருகிறான். தெளிவான ஞான நிலைக்கு அடையாளம் இளிவான ஈன வழிகளை எவ்வகையும் அணுகாமையே யாம்.

நடனம் நாடகம் முதலிய கூத்துகளை நாடிக் காண்பதும் இனிய இசைகளை நசையாக் கேட்பதும் இன்னாத படங்களைப் பார்ப்பதும் இன்பமான பொழுது போக்காக உலக மாக்கள் உவந்து களித்துவரினும் உயர்ந்த தலைமக்கள் அவற்றைஇகழ்ந்து ஒதுங்கி எவ்வழியும் செவ்வியராய் இனிது வாழ்கின்றனர்.

மோகமான காட்சிகள் மாயவெறிகளை விளைத்துத் தீயவழிகளில் செலுத்தித் தீங்கே புரியும் ஆதலால் பொறிபுலன்களின் போகங்கள் பொல்லாத புலைகள் என நல்லோர்களால் எள்ளி இகழ நேர்ந்தன. ஊன இழிவை ஞான விழி நன்கு தெரிகிறது

கண், காது முதலிய கருவிகளுக்குப் பொறி என்று பெயர் வாய்ந்திருப்பது குறியாய் ஆய்ந்து அறிந்து கொள்ள வந்தது. மாயப் பொறிகளில் வீழ்ந்து மாய்ந்து மடியும் விலங்கினங்கள் போல் காயப் பொறிகளில் ஆழ்ந்து மாந்தர் வீய்ந்து கழிகின்றனர். அழிவு நிலை தெரியாமல் அவமே ஒழிகின்றனர்.

பொறிகளை அடக்கி நெறியே வாழ்பவர் நிலையான பேரின்பங்களை நேரே அடைகின்றனர். புலையான இச்சைகள் ஒழிந்து போன அளவே மனிதன் புனிதனாய் மகிமை பெறுகிறான்.

பொறிப்புலன்களைப் போக்கறுத்து உள்ளத்தை
நெறிப்படுத்து நினைந்தவர் சிந்தையுள்
அறிப்புறும் அமுதாயவன் ஏகம்பம்
குறிப்பினுல்சென்று கூடித் தொழுதுமே. (தேவாரம்)

வாங்கி ஐம்பொறி நின்ற மனத்தினை
நீங்கி டாவகை நெஞ்சுள் இருத்தியே
தீங்கு யாவையும் சிந்தை செயாவணம்
பாங்கி யாதது வேபயில் வாயரோ. (பகவற்கீதை)

பூதம் சுழலும் பொறிபுலன்அந் தக்கரணம்
போதம் கழித்துநாள் போக்காதே—போதச்
சிறையா நிறைவகலச் சின்மயனே யத்தே
நிறையா நிறைவாகி நில். (சிவானந்தமாலை)

வாங்கிப் பொறிஐந்துள் நின்ற மனம்தன்னை
நீங்காது அகத்திருத்து உந்தீ பற
நினைவும் எழாமல்என்று உந்தீபற. (அவிரோதவுந்தியார்)

பொறி புலன்களில் வெறிகொண்டு திரியாமல் மனத்தை அடக்கி நெறியே நிறுத்தினவன் நிறை பேரின்பங்களை அடைவான் என இவை உணர்த்தியுள்ளன. பொருள் நிலைகளைக் கூர்ந்து ஓர்ந்தால் ஆன்ம நிலையின் மேன்மையை அறியலாம்.

பொறி வழி வருவது சிற்றின்பம் எனச் சிறுமையுற்றது; அறிவின் வழி விளைவது பேரின்பம் எனப் பெருமை மிகப் பெற்றது. மெய்யுணர்வு தெய்வ ஒளியாய்த் திகழ்கின்றது.

வஞ்சமும் களவும் வெஃகி வழியலா வழிமேல் ஓடி
நஞ்சினும் கொடியர் ஆகி நவைசெயற்கு உரிய நீரார்
வெஞ்சின அரக்கர் ஐவர் ஒருவனே வெல்லப் பட்ட
அஞ்செனும் புலன்கள் ஒத்தார்; அவனும்நல் அறிவை ஒத்தான்.
(இராமா, சுந்தர, பஞ்சசேனு 64)

பஞ்ச சேனாதிபதிகள் என்று பெயர் பெற்றிருந்த ஐந்து தளபதிகளை ஒருங்கே கொன்று தொலைத்து அனுமான் வெற்றி பெற்றுள்ள நிலையை இது உணர்த்தியுள்ளது. ஐம்பொறிகள் போல் எவ்வழியும் வெறிகொண்டு யாரையும் அடக்கி வீறோடு திரிந்து வந்த வெய்ய ஐவரை இவ்வீரன் தனியே வென்று நின்றுள்ளதைக் கவி இங்ஙனம் வித்தக விநயமா விளக்கி யருளினர். பொல்லாத புலன்களை அரக்கருக்கும், நல்ல அறிவை அனுமானுக்கும் ஒப்பு உரைத்தது நுட்ப நிலைகளை உய்த்து உணரவந்தது.

பொறி வெறியனாய்ச் சிற்றின்பங்களை நுகர்பவன் அறிவு கேடனாய் அவல நிலையில் இழிந்து அவமே அழிந்து ஒழிகிறான்.

He that lives in the kingdom of sense, shall die in the kingdom of sorrow. [Baxter]

இந்திரிய சுகங்களில் அழுந்தி வாழ்பவர் துன்ப நிலைகளில் இழிந்து சாவார் என்னும் இது இங்கே நன்கு அறிய வுரியது.

The body of a sensualist is the coffin of a dead soul. [Bovee]

சிற்றின்ப போகியின் உடம்பு செத்த உயிரின் சவப்பெட்டி என இது குறித்துள்ளது. விடயவாஞ்சை கொடிய விடமாய் நெடிய துயர்களை விளைத்து மாந்தரை நிலை குலைத்து வருகின்றது.

காம நுகர்வில் கழி பேரிழிவினன் சாகுமுன்னரே சவநிலையை அடைகிறான். புலன்களை அடக்கி வாழ்பவன் புனிதனாய் உயர்ந்து புண்ணியங்கள் நிறைந்து நலன்கள் பல பெறுகிறான்.

உடல் உள்ளம் உணர்வு உயிர் என்னும் இந்த நான்கு நிலைகளையும் பாங்கோடு கவனித்து மனிதன் பண்போடு வாழவேண்டும். மூலமுதலான ஆன்மா எவ்வழியும் விழுமிய நிலையில் விளங்கிவரக் கருவி கரணங்கள் ஒழுகிவரின் அந்த மனிதவாழ்வு திவ்விய வாழ்வாம். ஞான நெறி நலங்கள் பல தருகிறது.

ஊன நோக்கில் உழல்பவர் என்றுமே
ஈன நோக்கில் இழிந்து கழிகின்றார்;
ஞான நோக்கினர் நாளும் நலமுடன்
வானம் நோக்கி வளர்ந்து வருகின்றார்.

இழிந்த புலையை விலகி உயர்ந்த நிலையைக் கருதி ஒழுகுக.

938. சிறப்போடு செல்வங்கள் எல்லாம் பெறினும்
இறப்போடு ஒழியும் இயல்பால்—மறப்போடா
ஈறிலா இன்பமே என்றும் நிலையான
மாறிலா இன்பம் மதி. (அ)

இ—ள்

சிறந்த மேன்மைகளோடு நிறைந்த செல்வங்கள் எல்லாம் பெறினும் அவை யாவும் அழிந்து ஒழியும் இயல்பின; என்றும் அழியாத பேரின்ப நிலையையே யாண்டும் தெளிவாக ஆய்ந்து பெறுக; அதுவே அதிசய ஆனந்தமாம் என்க.

உயிர் என்றும் நிலையானது; உடல் இடையே பொன்றி ஒழிவது; இந்த இரண்டும் கூடிச் சிறிதுகாலம் சேர்ந்து இயங்கி வருவதே வாழ்வு என வந்துள்ளது. வாழ்க்கைகள் பலவகை நிலைகளில் படர்ந்து தொடர்ந்து பழகியபடியே நடந்து வருகின்றன. மதிநலம் வாய்ந்தது விதிமுறை தோய்ந்து வியனாய் ஒழுகி வருகிறது; அவ்வாறு வாயாதது மடமை மருள்கள் மண்டிக் கடமைகளை உணராமல் கடையாய் இழிந்து கழிவா யுழந்து இழிவாய் இயங்குகிறது. வாழ்வின் வகைகள் சூழ்வின் தொகைகளாய்த் தோய்ந்து தோன்றி நேர்ந்து நிகழ்கின்றன.

| | |
|---|---|
| புனித வாழ்வு | 1 |
| புண்ணிய வாழ்வு | 2 |
| போலி வாழ்வு | 3 |
| புலை வாழ்வு | 4 |

மனித வாழ்வுகள் இன்னவாறு வகுத்து உணர வந்துள்ளன.

எடுத்த பிறப்பே இறுதியாய் அடுத்த பிறவி அடையாமல் அந்தம் இல் இன்பம் அடைவது புனித வாழ்வாய்த் தனி மகிமை பெற்றது. அரிய புண்ணியங்கள் புரிந்து அமரராய் அதிசய போகங்களை நுகர நேர்வது புண்ணிய வாழ்வாயது யாதொரு பயனும் இல்லாமல் காலியாய்த் திரிந்து ஒழிவது போலி வாழ்வு என வந்தது. பழி பாவங்கள் படிந்து இழி வழிகளில் அழுந்தி ஈனமாய்க் கழிந்து ஒழிந்து போவது புலைவாழ்வு என நின்றது.

ஒத்த உருவினராயினும் சித்த விருத்திகளின் திறங்களால் மனிதருடைய தரங்களும் நிலைகளும் வெளியே தெரிய நின்றன.

உற்ற தேகத்திலேயே முத்தியை அடைய நேர்ந்தவர் சீவன் முத்தர் ஆகின்றார். அவருடைய சித்த விருத்திகள் தத்துவ ஞானங்கள் சுரந்து உத்தம நிலைகளில் ஒளிவீசி எழுகின்றன. சனகன் பெரிய அரசன்; அரிய பல செல்வங்களுடையவன். கருவிலேயே திருவுடைய அவன் அறிவிலே உயர்ந்து ஆன்ம ஞானியாய் மேன்மை மிகப் பெற்றான். ஞால வாழ்வையும் கால நிலையையும் கருதி ஆராய்ந்து மூல தத்துவங்களை அவன் சிந்தித்திருப்பது சீல சமாதியாய்ச் சிறந்து விளங்கியது. புண்ணிய சீலனான அவன் எண்ணியுள்ள எண்ணங்கள் மனித மரபுக்குப் புனித போதனைகளாய் வந்துள்ளன. சில அயலே காண்க.

காலம்ஒரு கால்முடியாது இதனிடைஎண்
நூறாண்டுஓர் கணமும் இல்லை;
சாலஇது தனைமதித்து வன்காதல்
இடைவீழ்ந்து தளர்வதேன்நான்
தூலமதி யால்கெட்ட எனைப்போல
ஈனர்ஆர் சொல்லற் பாற்றோ?
சீலமறு வாழ்வைப் பெரிதாக
நினைவதே சீசீ அந்தோ! [1]

செல்லாத மாயையிருள் இரவிலே
தேகமயத் தியக்க மான
பொல்லாத நீள்கனவாம் சூனியத்தில்
இச்சையிறை பூண்டேன் என்னில்
கல்லாத புல்லியனேன் சீசீநான்
அனவரதம் காணும் நாட்கள்
எல்லாம்போயின போமால் இறவாதுஒன்
றாய்நன்றாம் எழில்நாள் காணேன். [2]

நடுவில்முடி வினில்அடியில் நன்றான
பொருள்ஒன்றும் ஞாலத்து இல்லை;
படுபொருள்எல் லாம்இறப்பாம் மலத்தினாலேபூசப் பட்டது அன்றோ?
கடுவினைகள் நாள்தோறும் காய்துயரம்
நாள்தோறும் கரைஒன் றில்லாக்
கொடுமைகளே நாள்தோறும் செய்கின்றார்
அறிவில்லார் குரம்பைக் கூத்தால். [3]

சுத்தமாய்ச் சொரூபமாம் என்னுருவு
அலால்வேறு தோன்றக் காணேன்;
வத்தியான் வாராத பொருள் நயவேன்;
வந்தபொருள் அனைத்தும் தள்ளேன்;
நித்தமாய்த் தன்னிலையில் நிற்குமெனது
அறிவுருவின் நிலையா நிற்பேன்
ஒத்தவாறு ஏதுவரும் அதுவருக
என்றமுந்தி ஒருமை யானன். (ஞானவாசிட்டம்)

சனக மன்னனுடைய நினைவு நிலைகளையும் ஞான விசாரணைகளையும் இவை இங்கே நன்கு காட்டியுள்ளன. நூறு ஆண்டுகள் சீரோடு வாழும்படியான பூரண வயது அமைந்து, அரிய பெரிய செல்வங்கள் நிறைந்து, நெடிய தேசஆட்சி வாய்ந்து முடிமன்னனாய்ப் புகழ் மிகுந்து இருந்தாலும் கடிது மறைந்து ஒழியும் மாய வாழ்வே; பொய்யான இதனை மெய் எனக் களித்து மகிழ்வது புலைமயக்கமேயாம்; பரமான்மாவே எனது ஆன்மாவாய் இனிது மருவியுளது; இந்த உண்மையை உறுதியாய் உணர்ந்து உய்தி பெற்றேன் என இம்மன்னன் துணிந்துள்ள துணிவு மன்பதைக்குத் தெளிவான மதிநலங்களை இனிது அருளி ஒளி புரிந்துள்ளது.

உயிர்க்கு உறுதி நலங்களைக் கருதி யுணர்பவர் உய்தி பெறுகின்றனர். கருதாதவர் வாழ்வைப் பாழாக் கழித்து வறிதே அழிந்து போகின்றனர். பிறந்தன யாவும் இறந்துபோம் என்பதை யாவரும் அறிந்துள்ளனர். தாமும் சாவோம் என்று எல்லாரும் தெரிந்திருக்கின்றனர். தெரிந்தும் பிறந்த பயனை மறந்து பேதைகளாய் இழிந்து போவது பெரிய மாய மருளாய் மருவியுள்ளது. மடமை வாழ்வில் கொடுமைகள் கூத்தாடுகின்றன.

கொடிய இருளில் குருடு பட்டுக் கிடப்பதுபோல் நெடிய மையலில் மாந்தர் நிலைகுலைந்து வீழ்ந்து புலையா யுழலுகின்றனர். அறிவுடைய பிறப்பில் பிறந்தும் அறியாமை பிரியாமையிருப்பது அதிசய வியப்பாகிறது. நல்ல அறிவு அல்லலை நீக்கியருளுகிறது. பொல்லாத மடமை புலைகளையே எவ்வழியும் விளைத்து வருகிறது.

There is no sin but stupidity. [Wilde]

மடமையினும் கொடுமையான பாவம் வேறு இல்லை என இது குறித்துளது. மூடத்தால் நெடிய பீடைகள் விளைகின்றன.

எல்லாத் துன்பங்களுக்கும் மூலகாரணமாயுள்ளமையால் மடமை கொடிய பாவம் என நின்றது. பிறப்பின் பெருமையை உணர்ந்து சிறப்பான பயனை அடைவதே சீரிய ஞானமாம்.

---

939. உற்ற பிறப்பை உயர்ந்த சிறப்பாக்கி
மற்றோர் பிறப்பை மருவாமல்—எற்றும்
அழியாத பேரின்ப அவ்வாழ் வடையின்
ஒழியாத மேன்மை உனக்கு. (கூ)

இ—ள்.

உரிமையாய் அடைந்த பிறப்பை உயர்ந்த சிறப்பு ஆக்கி வேறு ஒரு பிறவியை அடையாதபடி பேரின்ப வாழ்வைப் பெறுக; அவ்வாறு பெறின் எவ்வழியும் திவ்விய மேன்மையாம்.

பிறந்த பயனைப் பெறுபவன் சிறந்த பரமன் ஆகிறான்.

உற்ற என்றது வினைவயத்தால் விளைந்து வந்துள்ள விளைவினை உணர்ந்து கொள்ள வந்தது. அரிய நல்வினையால் அடைந்த பிறவியைக் கொண்டு பெரிய பயனை அடைவதே பெருஞ் சிறப்பாம். உரிய கருவியால் பெறவுரியதை உரிமையோடு பெறவில்லையானால் உற்ற அது பழுதாய் ஒழிந்து போகிறது. உலகக் கடலைக் கடத்தற்கு மரக்கலம்போல் பிறவிக் கடலைக் கடந்து போதற்கு மனித தேகம் இனிதாய் மருவியுள்ளது. எய்த அரிய தேகம் எய்தியது உயிர் துயர்நீங்கி உயர்வா உய்திபெறவேயாம்.

மனிதன் அறிவுடையவன் ஆதலால் யாக்கையின் நிலையை உணர்ந்து அதன் பயனை அடைய நேர்கின்றான். மனைவி மக்களோடு மருவி எவ்வளவு சுக போகமாய் வாழ்ந்து வந்தாலும் முடிவில் இறந்து போவதையே எவனும் எதிர்ந்து காண்கின்றான். அந்தச் சாவு நேருமுன் தன் ஆவிக்கு இனிய உறுதிநலனை அடைந்திருப்பின் அவனுடைய பிறப்பு சிறப்புடையதாகின்றது. சீவன் நலமுறச் செய்து வருபவன் தேவன் ஆகின்றான்.

இல்லாளோடு கூடி இளமையில் இனிதுவாழும் பொழுதே முதுமைக்கு உரிய நல்ல அறங்களை நாளும் செய்து கொள்ள வேண்டும் என்பது வாழ்க்கையின் குறிக்கோளாய் வகுக்கப் பட்டுள்ளது. நெறிமுறையோடு அவ்வாறு தோய்ந்து வருவது புகழும் புண்ணியமும் பொருந்தி வருகிறது; வரவே அது

சிறந்த வாழ்வாய்ச் செழித்து விளங்குகின்றது. வாழ்வுக்குச் சிறப்பு சீவன் தாழ்வாய் வீழாமல் தகவாய் உயர்வதே யாம்.

காம போகங்களை நுகர்ந்து நேம நியமங்களோடு சேமமாய் ஒழுகி வரினும் முதுமை நேர்ந்ததும் துறவு நீர்மை தோய்ந்து அரிய தவம் வாய்ந்து வீடு பேற்றைக் கருதி விரதம் பூண்டு வாழ்வது மேலோர் இயல்பாய் மேவி நிற்கின்றது.

காமம் சான்ற கடைக்கோட் காலை
ஏமம் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே.
(தொல்காப்பியம், கற்பு 51)

மனை வாழ்க்கையில் மகிழ்ந்து வாழ்ந்து வந்த மனிதன் முதுமையில் வாழவேண்டிய நிலைமையை இலக்கணம் இவ்வாறு விளக்கியிருக்கிறது. இயல் விதி மனித மரபின் முறையினை உயர்வா ஒழுங்கு செய்துள்ளது. இங்கே சிறந்தது என்றது வீடு பேற்றினை. சிற்றின்பங்கள் எல்லாவற்றினும் பேரின்பம் உயர்ந்தது ஆதலால் சிறந்தது என வரைந்து கூறினர். இந்த அரிய சிறப்பை அடைந்த அளவு உரிய பிறப்பு உயர்ந்து ஒளிமிகப் பெறுகின்றது. இகலோக வாழ்வில் முடிவான பயனை அடைவது பரலோக வாழ்வுக்கு வரமான உரமா வழி செய்த படியாம்.

பிறவிகளுள் மனித உருவில் மருவி வருவது மிகவும் அரிது. கூரிய சீரிய அறிவுநலம் அமைந்தது; கண்டதைக் கொண்டு காணாததைக் கருதிக் காண்பது; அண்ட கோடிகளையும் சீவ கோடிகளையும் ஆராய்ந்து அறிய வல்லது; உலகம், உயிர், பரம் என்னும் மூன்று தத்துவங்களையும் உய்த்துணர்ந்து முடிவுகாண வுரியது; இத்தகைய வித்தக விவேகம் தோய்ந்து எத்தகைய நிலைகளையும் எதிர் அறிந்து உய்தி பெற உரியது ஆதலால் மானுடப் பிறவி பெறுதற்கு அரியது எனப் பேர்பெற்று நின்றது.

இந்த அருமையை உணர்ந்தவர் இதனால் பெறவுரிய பயனை விரைந்து பெறுகின்றார். நிலைமையை உணராமல் பொழுதைப் பழுதாக் கழிக்கும் இழுதைகளுக்கு இரங்கிப் பிறப்பின் பெருமையை உணர்த்துகின்றார். பரிவு தோய்ந்த அறிவு மொழிகள் அரிய இன்ப ஒளிகளாய் எவ்வழியும் திவ்விய நிலையில் தேசு வீசி யாவருக்கும் இனிய போதனைகளை அருளி வருகின்றன.

தென்பர வையினுள் கழிவட பரவை
சேர்நுகத் துளையினில் செலல்போல்
ஒன்பதிற் றென்ப தோடுமூ விலக்கம்
உளவியோ னியும் பிழைத்து ஏறிப்
பின்பிறப் பிதுபெற்று அதனினும் பாதி
பிறப்புறு நாளதாக் குநரின்
இன்பம்ஈ தெனமிக்கு உறங்கலர் பிறவிக்கு
அறவெரீஇ உளந்துளங் கிடுவோர். [வைராக்கியதீபம் 86]

தென்கடலில் வீழ்ந்து கிடந்த ஒரு சிறு கழி வடகடலில் அலைந்து கிடந்த ஒரு நுகத்துளையுள் வந்து புகுந்ததுபோல் எண்பத்துநான்கு நூறாயிர பேதமா யுள்ள பிறப்புகளில் தப்பிப் பிழைத்து அரிதான இந்த மானிடப் பிறவியை அடைந்திருக்கிறோம்; இதிலிருந்து விரைந்து உய்ய வேண்டும் என்ற கவலையினால் கண் உறங்காமல் கதிநலம் கருதி மதிநலமுடைய தவசிகள் மறுகியுள்ளனர் என்னும் இது இங்கே நன்கு அறிய வுரியது.

பிறவியில் யாண்டும் துயரங்களே நீண்டு வருதலால் பிறவாத பேரின்ப நிலையை அடைவதே பிறவிப் பெரும் பயனாய் வந்தது. பாசமயல் ஒழியின் ஈசன் ஒளி எதிரே தெளிவாம்.

பிறப்புஇறப்பாம் பூட்டைதனைப் பிணித்துழற்றும்
வாதனையாம் பெரிய பாசம்
அறப்பெரிய முயற்சியினல் அறுத்திடுவாய்
பரமமாம் அறிவின் முன்னே
புறப்படும்பொய் யாம்உள்ளம் புவனவிகற்
பங்கள்எனும் பொய்யைக் காட்டும்
சிறப்புளவின் இலதாயும் இலதான
நீலநிறம் செறிவ தேபோல். [1]

சோகமுறு சங்கற்ப நாசத்தால்
மனம்மாளின் தோன்று தொட்ட
மோகம்எனும் மூடுபனி விட்டகலும்
சரற்காலம் முதிர வந்தால்
மாகம்விளங் குவதென்ன நல்லறிவு
மாத்திரமாய் மாயா தாகி
ஏகமாய் வடிவின்றிப் பிறப்புஇறப்பு
இலாப்பிரமம் இலங்கும் நொய்தாய். [2]
(ஞானவாசிட்டம்)

ஒழியாத பிறப்பு ஒருங்கே நீங்கி அழியாத பேன்ப வீட்டை அடையும் வழியை இவை விழிதெரிய விளக்கியுள்ளன. வீணை எண்ணங்களில் மனதை விரியாமல் அடக்கி மெய்யான பரம் பொருளில் செலுத்திவரின் வெய்ய பிறவி விலகிவிடும். பிறவாத ஒருவனைக் கருதி யுருகிப் பிறவியை அறவே நீக்கிக் கொள்ளுக.

---

940. எவ்வளவோ காலங்கள் இன்ன லிடையிழிந்தாய்
அவ்வளவும் நீந்தி அயலேறி—இவ்வளவில்
மானுடம்பெற் றுள்ளாய் மறுபடியும் மாலாகி
ஊனுடம்பு கொள்ளா தொழி. (ம)

இ-ள்.

அளவில்லாத காலங்கள் அல்லல்களில் ஆழ்ந்து உழந்து அவ்வளவும் நீந்தி வந்து இந்த அரிய மனித உருவை மருவியுள்ளாய்; மறுபடியும் மையலாய் இழிந்து வெய்ய துயர்களுக்கு வழியாக்கழியாமல் பிறவி நீங்கி விழுமிய நிலையில் உய்க என்க.

பெற்றுப் பழகிய பொருள்களில் பிரியம் குறைவதும், பெருத புதிய பொருள்களில் ஆவல் மிகுவதும் மனித இயல்புகளாய் மருவியுள்ளன. பிறவிகளை ஓயாமல் எடுத்து யாண்டும் பெருந்துயரங்களையே அனுபவித்து வந்தும் அவற்றிலிருந்து நீங்கி வேறு உய்திபெற வேண்டும் என்று எண்ணுமல் வீணே களித்து இருப்பது விபரீதமான மாய மயக்கமாய் மருவி நிற்கிறது.

கண் குருடு பட்டுக் காட்சி இழந்தவன் யாதொரு பொருளையும் காண முடியாமல் அவலமாய் அலைந்து திரிகிருன்; அது போல் ஞான ஒளி ஒழிந்து போனமையால் ஆன வழி யாதும் தெரியாமல் ஈனமா யிழிந்து மாந்தர் இறுமாந்து உழல்கின்ருர்.

மாய மருள்களாலேயே தீய பிறவிகள் ஓயாமல் வர நேர்ந்தன. எண் அரிய பிறவிகளில் எல்லையில்லாத அல்லல்களை அடைந்து எப்படியோ தப்பி நீங்கி இந்த நல்ல மனிதப் பிறப்பை அடைந்திருக்கிருேம். அறிவுநலம் உடைய இதிலிருந்து உய்தி பெறவில்லையானல் பின்பு எவ்வழியும் உய்தியில்லாமல் வெவ்விய துயரங்களிலேயே வீழ்ந்து ஆழ்ந்து விளிந்து உழலவே நேரும்.

உயிரின் நிலையை உரிமையோடு உணர நேர்ந்தவன் உயர

நேர்கின்ருன்; உணராதவன் துயரங்களையே தோய்ந்து மாய்கின்ருன். பொறிகளில் வெறியராய்ப் போகங்களையே அவாவி மோகமா அலைபவர் அறிவு நலனை இழந்து அவமே கழிகின்ருர்.

தனது உண்மை நிலையை உணர்ந்தவன் உயர்ந்த ஞானியாய் ஒளிபெற்று நிற்கின்ருன்; உணராதவன் இழிந்த மடையனுய்க் கழிந்து போகிருன். அறிய வுரியதை அறிந்து அடைய வுரியதை அடையாதவன் வெறி கொண்ட கடையன் ஆகின்ருன்.

பிண நிலையில் பிரிந்துபோக நேர்ந்துள்ள உடலைப் பேராசையோடு பேணுகின்ருன்; என்றும் குணமாய் நிலைத்துள்ள தனது இனிய உயிரைப் பேணுமல் பிழைபடுகின்ருன். அழிவை ஆக்கமா வளர்ப்பதும், ஆக்கத்தை அழிவா ஒழிய விடுவதும் கழி மூடமாய்க் கலித்து மனிதனிடம் யாண்டும் நிலைத்து வருகிறது.

உள்ளம் தூய்மையாய் உயர்ந்த குறிக்கோளுடன் ஒழுகி வருபவன் உயிர்க்கு நலம் செய்கிருன். புனிதமான வாழ்வு புண்ணியங்கள் சுரந்து எண்ணரிய மகிமைகளை இனிது விளைத்தருளுகிறது. பிறப்பின் பயனைச் சிறப்பாகப் பெறச் செய்தலால் அது திவ்விய வாழ்வாய்ச் சிறந்து தேசுமிகுந்து திகழ்கிறது.

நிலையான உண்மையை உணர்ந்தவர் புலையான புன்மைகளை அறவே ஒதுங்கிப் புனித நிலையை அடைய விரைகின்ருர். மெய்யறிவு தலை எடுத்தபோது வைய மையல்கள் தெளிவாய்த் தெரிய வருகின்றன; வரவே வெய்ய பிறவியை நீங்கி உய்ய வேண்டும் என்று மேலோர் மேலான பரமனை விழைந்து வேண்டுகின்றனர்.

ஊன்ஏறு செல்வத்து உடற்பிறவி யான்வேண்டேன்
ஆனேறேழ் வென்ருன் அடிமைத் திறம்அல்லால்
கூனேறு சங்கம் இடத்தான்தன் வேங்கடத்து
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே.
(பெருமாள் திருமொழி)

ஊனுலாம் முடைகொள் ஆக்கை உடைகலம் ஆவ தென்றும்
மானுலாம் மழைக்கணூர்தம் வாழ்க்கையை மெய்என்று எண்ணி
நானெலாம் இனைய காலம் நண்ணிலேன் எண்ணம் இல்லேன்
தேனுலாம் பொழில்கள் சூழ்ந்த திருக்கொண்டீச் சரத்துளானே.
(தேவாரம்)

உவமையறு பவசலதி கடத்தியிம்மா
னிடப்பிறப்பில் உதிக்கச் செய்து

நவமருவும் உனதுபதம் நாட வைத்தாய்
அதைமறந்தேன் நாயினேனே
கவலைஎலாம் அற்றுனது திருவடிக்கீழ்
இருக்க இனிக் கருணை செய்யாய்
புவனைகர தலமணியே போரூர்வாழ்
ஆறுமுகப் புனித வேளே.
(திருப்போரூர்ச் சந்நிதிமுறை)

பிறவி தீரவேண்டும் என்று இறைவனை நோக்கிப் பெரியோர்கள் வேண்டியிருத்தலை இவற்றால் ஈண்டு அறிந்து கொள்கிறோம். மீண்டும் உடலை அடையாமல் உயிர் பரனையே அடைய வேண்டும் என்று ஞானிகள் பரிந்து விரைந்துள்ளனர். அவ்வுண்மையை அவருடைய உரைகள் உணர்த்தி நிற்கின்றன. ஞானமொழிகள் வான ஒளிகளாய் வயங்கி மதிநலங்கள் அருளுகின்றன.

எனதுஎனச் சிந்தித்த லால்மற்று இவ்வுடம்பு இன்பத்துக்கு ஆமேல்
தினைப்பெய்த புன்கத்தைப் போலச் சிறியவும் மூத்தவும் ஆகி
நுனைய புழுக்குலம் தம்மால் நுகரவும் வாழவும் பட்ட
இனைய உடம்பினைப் பாவி யான்எனது என்னலும் ஆமோ?
[குண்டலகேசி]

உழந்தாலும் புத்துஅச்சுஒன்று இட்டூர்தல் தேற்றாது
இழந்தார் பலரால் இடும்பைநீர் யாற்றுள்
அழுந்துமால் அப்பண்டி அச்சிறு முன்னே
கொளுஞ்சீலம் கூலியாக் கொண்டூர்மின் பாகீர்.
(சீவகசிந்தாமணி)

பிறந்துநாம் புறஞ்செய்கின்ற பேதையிவ் வுடலம் தானும்
இறந்தநாள் போல்வ தின்றாய் இற்றையின் நாளைவேறாய்ப்
பறந்துநாம் பற்றப் பற்றப் பற்றுவிட்டு அகலும் ஆகின்
சிறந்தனர் பிறர்கள் யாரே சிந்தைநீ சிந்தி என்றான்.
(சூளாமணி)

விதித்தன ஆண்டு நூறு மேவரிது ஆண்டு சில்ல
கதித்திடும் இளமை தின்னும் காமநோய் சில்லதின்னும்
உதிக்கின்நல் லுணர்வு மேலே உறுபிணிநாட ஒட்டா
மதித்தனர் ஒழுக லாறும் வழுவிக்கும் மூப்பு நண்ணில்.
(தணிகைப்புராணம்)

என்பினை நரம்பில் பின்னிக் குடர்வழும்பு இறைச்சி மெத்திப்
புன்புழுப் பொதிந்து செந்நீர்ப் புண்ணசும்பு ஒழுகி நாறித்

துன்பநோய் எவற்றினுக்கும் உறையுளாய்ப் புறந்தோல் மூடும்
வன்புலை உடம்பே ஆவி வருத்திடும் பிணிவேறு இல்லை.
(காஞ்சிப்புராணம்)

கொள்ளிவட்டம் கறங்குதிரை சகடக்கால்வெண்
குறுந்தொடியார் தயிர்மத்து நெடுந்தாள் ஊஞ்சல்
எள்ளிவிட்ட தொழில்பிறவித் தண்டல்போக்கி
இறைவாங்கு நமன்குடிகாள்! இன்றுநீர் தாம்
தெள்ளியிட்ட வெள்ளைநிலாத் தெளித்தல்போலும்
திருவால வாயிறைவன் திருவெண் நீற்றை
அள்ளியிட்டால் புள்ளியிட்ட கணக்கு மாற்றி
அமருலகில் கணக்கன்எழுத்து அழிக்கலாமே.
(மதுரையந்தாதி)

உடம்போடு கூடிவாழும் பிறப்பினை வெறுத்து நொந்து இறப்பினை நினைந்து நின்று மீண்டும் பிறவாத நிலையையே பெற வேண்டும் என்று குறித்து வந்துள்ள இவை ஈண்டு ஊன்றி உணர வுரியன. பேரறிவாளர் பேரின்பம் பெற விரைகின்றார்.

ஞான நாட்டம் நன்கு தெளிவாய் ஒளி வீசியபொழுது ஊன வாழ்க்கையின் ஈன நிலையை மேலோர் நேரே உணர்ந்து கொள்ளுகின்றனர்; கொள்ளவே மறுபடியும் பிறவாத வழியை உறுதியாய் நாடி உயர்கின்றனர்; அவ்வாறு உயர்ந்தவருடைய கருவி கரணங்களும் உரை செயல்களும் உணர்வு நலங்களும் எவ்வாறு இயங்கி வரும் என்பதை அயலே காண வருகின்றோம்.

பேசு வாழி பேசு வாழி
ஆசையொடு மயங்கி மாசுறு மனமே!
கண்டன மறையும் உண்டன மலமாம்
பூசின மாசாம் புணர்ந்தன பிரியும்
நிறைந்தன குறையும் உயர்ந்தன பணியும்
பிறந்தன இறக்கும் பெரியன சிறுக்கும்
ஒன்றொன்று ஒருவழி நில்லா; அன்றியும்
செல்வமோடு பிறந்தோர் தேசொடு திகழ்ந்தோர்
கல்வியில் சிறந்தோர் கடுந்திறல் மிகுந்தோர்
கொடையில் பொலிந்தோர் படையில் பயின்றோர்
குலத்தின் உயர்ந்தோர் நலத்தினின் வந்தோர்
எனையர்எம் குலத்தினர் இறந்தோர் அனையவர்
பேரும் நின்றில போலும் தேரின்

நீயும்அஃது அறிதி அன்றே மாயப்
பேய்த்தேர் போன்றும் நீப்பரும் உறக்கத்துக்
கனவே போன்றும் நனவுப்பெயர் பெற்ற
மாய வாழ்க்கையை மதித்துக் காயத்தைக்
கல்லினும் வலிதாக் கருதிப் பொல்லாத்
தன்மையர் இழிவு சார்ந்தனை நீயும்
நன்மையில் திரிந்த புன்மையை ஆதலின்
நுண்ணூல் நூற்றுத் தன்னகப் படுக்கும்
அறிவில் கீடத்து நுந்துழி போல
ஆசைச் சங்கிலிப் பாசத் தொடர்ப்பட்டு
இடர்கெழு மனத்தினோடு இயற்றுவது அறியாது
குடர்கெழு சிறைஅறைக் குறங்குபு கிடத்தி
கறவை நினைந்த கன்றுஎன இரங்கி
மறவா மனத்து மாசறும் அடியார்க்கு
அருள்சுரந்து அளிக்கும் அற்புதக் கூத்தனை
மறையவர் தில்லை மன்றுள் ஆடும்
இறையவன் என்கிலை என்னினைந் தனையே.

[கோயில்நான்மணி]

அல்லல் வாழ்க்கையின் எல்லைகளை வரைந்து காட்டிக் காயம் நீங்கும் மாயத்தை நினைவுறுத்தி மாயுமுன் தூயபரமனை நினைந்து உய்க எனத் தம் மனதை நோக்கிப் பட்டினத்தார் இப்படிப் பாடியிருக்கிறார். பாட்டின் சுவையைப் பலமுறையும் கூர்ந்து நோக்கி ஓர்ந்து சிந்தித்து ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும்

பிறந்து வந்த நீ இறந்து போக நேர்ந்திருக்கிறாய்; உன் வாழ்வு சாவையே நோக்கியுள்ளது; எவ்வுயிர்க்கும் இரங்கி நல்லவனாய் நடந்து வா; அந்த நன்மை இம்மையும் மறுமையும் உனக்கு இன்பமே தரும்; சாவுக்கு யாதும் நீ அஞ்சவேண்டியதில்லை. நீதியான வாழ்வு நித்திய சுகமாய் நிறைந்து வரும்

"Be of good cheer about death, and know this of a truth, that no evil can happen to a good man, either in life or after death." [Socrates]

வாழும்போதும் இறந்தபின்பும் நல்ல மனிதனுக்கு யாதொரு அல்லலும் நேராது; இந்த உண்மையை உணர்ந்து மரணத்தைக் குறித்து நீ மகிழ்ச்சியாயிரு என்று சாக்ரட்டீஸ்

என்னும் கிரீஸ் தேசத்து மேதை தம் நண்பனுக்கு இவ்வாறு நல்ல அறிவு கூறி அவனது உள்ளத்தைத் தேற்றி யிருக்கிறார்.

இறப்பு நிலை தெளிந்து சிறப்பு நலம் பெறுக.

கருமருவு குகையனைய காயத்தின் நடுவுள்
களிம்புதோய் செம்பு அனையயான்
காண்டக இருக்க நீ ஞான அனல் மூட்டியே
கனிவுபெற உள்ளுருக்கிப்
பருவமது அறிந்துநின் அருளான குளிகை கொடு
பரிசித்து வேதிசெய்து
பத்துமாற்றுத் தங்கம் ஆக்கியே பணிகொண்ட
பட்சத்தை என் சொல்லுவேன்
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்த சித்தாந்தம்
ஆதியாம் அந்தம் மீதும்
அத்துவித நிலையராய் என்னை ஆண்டு உன் அடிமை
ஆனவர்கள் அறிவினோடும்
திருமருவு கல்லால் அடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே (தாயுமானவர்)

சீவன் செம்புபோன்றவன்; ஞானஒளி தோய்ந்தால் செம்பொன் ஆன சிவமாய் அவன் சிறந்து திகழ்கிறான். அந்த ஆத்தும தத்துவத்தை இந்தப் பாசுரம் இனிது விளக்கியுள்ளது.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

அரிய பிறப்பின் பயன் உரிய சிறப்பை உறுவது.
உடம்பு ஒழியுமுன் உயிர்க்கு உய்தி காணுக.
பிறப்பு துன்பம்; பிறவாமை இன்பம்.
புனித வாழ்வு இனிய சுகமாம்.
பிறவி தீர்வதே பேரறிவின் பயன்.
துன்பம் தொடராமல் தூய்மை தொடர்க.
பொறி வெறி புலையே தரும்.
நிலையான கதியை நெறியே பெறுக.
மீண்டும் பிறவாமையே மேலான நிலை.
அந்த நிலையே அந்தமில் இன்பம்.

௯௪—வது சிறப்பு முற்றிற்று.

# தொண்ணூற்றைந்தாம் அதிகாரம்

## ஞானம்.

அஃதாவது உண்மை நிலையை ஓர்ந்து உணர்ந்து கொள்ளும் தெளிவு. பிறந்த பயனை விரைந்து பெறவுரிய உயர்ந்த ஆன்மஒளி ஆகலால் சிறந்த நிலையின் பின் இது வரைந்து வைக்கப்பட்டது.

941. எந்த நிலைஅறிந்தால் எல்லாம் அறிந்ததாய்
அந்தமிலா இன்பம் அருளுமோ—அந்த
அறிவே பரஞானம் ஆகும் அதனின்
நெறியே கதியாம் நினை. (க)

இ-ள்.

எதை அறிந்தால் எல்லாம் அறிந்தது ஆய் எல்லையில்லாத பேரின்ப நிலையை அருளுமோ அதுவே மேலான ஞானம் என்க.

ஞான நெறியே கதி என்றது அந்த வழியே எந்தவகையும் ஒளிமிகுந்து அதிசய ஆனந்த நிலையை அடைதல் கருதி. முத்தி நிலை வித்தக ஒளியால் எளிதே விழி தெரிய எதிரே நின்றது.

அறிவு புத்தி யுத்தி யூகம் விவேகம் உணர்வு என்பன உயர்ந்த மனித நீர்மைகளாய் வந்துள்ளன. விலங்கு பறவை முதலிய பிராணிகளை விட மக்கள் உயர்ந்தவர் எனச் சிறந்து நிற்பது சித்த விருத்திகளின் சீர்மைகளாலேயாம். புத்தி தத்துவத்திலிருந்து போதங்கள் விரிந்து ஏதங்கள் கழிந்து இனிதே பொங்கிஎழுந்தவர்புத்தேளிர் எனப்பொலிந்துவிளங்குகின்றனர்.

பொருள்களை ஆய்ந்து அறிவது அறிவு.
புதுமையாய்ப் புகுந்து தெரிவது புத்தி.
ஒத்த நிலைகளை உய்த்து ஓர்வது யுத்தி.
யூகித்து உணர்ந்து துணிவது யூகம்.
வியனாக வேகித்துத் தெளிவது விவேகம்.
ஊன்றி ஓர்ந்து நுகர்வது உணர்வு.

இன்னவாறான இந்த அறிவு வகைகளால் மனித இனம் மாண்படைந்துள்ளது. கல்வி அறிவு, காரிய அறிவு, கலை அறிவு, தொழில் அறிவு, எழில் அறிவு, இசையறிவு முதலாகப் பலவகையிலும் பரந்து விரிந்து வாழ்வை அறிவு வளம்படுத்தி வருகிறது.

இந்த அறிவுத் துறைகள் எல்லாவற்றிலும் உயர்ந்து பொய்யான மருள்களை ஒதுக்கி மெய்யான பொருளையே கருதிநிற்பது மெய்யுணர்வு என வந்தது. இவ் வித்தக வுணர்வையே தத்துவ ஞானம் என்று வடமொழியாளர் வழங்கி வருகின்றனர்.

உலக நிலைகளை அறிவதினும் உண்மை நிலையை உணர்வது மிகவும் உயர்ந்தது. அந்தத் தெளிந்த உணர்வே இங்கு ஞானம் என வந்தது. அதனையுடையவர் ஞானி என மேன்மையாய் விளங்கி நின்றனர். மாயமயக்கங்கள் நீங்கிய தூய அறிவினர் துயரநிலைகளைக் கடந்து இன்பநிலைக்கு உயர்ந்து போகின்றனர்.

நிலம் நீர் முதலிய ஐவகைக் கலவைகளால் உலகம் அமைந்தது; பலவகையான உயிரினங்களை யுடையது; நிலையில்லாத நிலையது; தோன்றின யாவும் மறையும் இயல்பின; இத் தோற்றங்களுக்கெல்லாம் மூல முதல் ஒன்று உண்டு அது எல்லாம் வல்லது; என்றும் உள்ளது; எங்கும் நிறைந்தது. இன்பமயமான அந்தத் தனி முதலை அடைந்த போதுதான் அல்லல் யாவும் நீங்கி ஆன்மா ஆனந்த நிலையை அடையும். இன்னவாறு ஓர்ந்து உணர்ந்து உண்மை தெளிவதே ஒளிநிறைந்த ஞானமாம்.

ஒளி இருளை நீக்கித் தெளிவா உவகை தருதல்போல் ஞானம் மருளை நீக்கி மாறாத பேரின்ப நிலையை நேரே அருளுகிறது.

இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. (குறள், 352)

மையல் நீங்கிய மெய்யறிவாளர்க்கு வெய்ய துன்பங்கள் நீங்கி மேலான இன்பம் உண்டாம் எனத் தேவர் இங்ஙனம் கூறியிருக்கிறார். பாசப்பற்று அற்ற ஞானிகளை மாசுஅறு காட்சியவர் என்று இங்கே காட்டியிருப்பது கருதியுணரத் தக்கது.

தெளிவான ஒளி விழிபோல் ஞானம் மனிதனுக்குப் புனிதக் காட்சியாய் நின்று அரிய பல மாட்சிகளை அருளி வருகிறது. பொய்யான புலைகளை நீக்கி மெய்யான நிலைகளை நோக்கி மேலான பேரின்ப நலங்களை ஞானம் நல்குதலால் அது வான அமுதம் என மானவர்க்கு மகிமையாய் மருவியுளது.

மெய்வகை தெரிதல் ஞானம்; விளங்கிய பொருள்கள் தம்மைப்
பொய்வகை இன்றித் தேறல் காட்சி; ஐம்பொறியும் வாட்டி

மெய்வகை உயிரைத் தேயாது ஒழுகுதல் ஒழுக்கம்; மூன்றும்
இவ்வகை நிறைந்த போழ்தே இருவினை கழியும் என்றான்.
(சீவகசிந்தாமணி 1436)

உண்மை நிலையை உள்ளபடி உணர்தல் ஞானம்; அங்ஙனம் உணர்ந்ததைத் தெளிந்து பொறிகளை அடக்கி நெறியே ஒழுகினரின் இருவினைத் துயர்களும் ஒருங்கே ஒழிந்துபோம்; விழுமிய உயர்ந்த இன்பம் விளைந்துவரும் என இது உணர்த்தியுள்ளது.

பிறவியில் யாண்டும் ஓயாமல் தொடர்ந்து அடர்ந்து வந்த துன்பங்களை எல்லாம் அடியோடு நீக்கி என்றும் அழியாத பேரின்ப நிலையை ஞானம் அருளும் என்றதனால் உயிர்க்கு அது எவ்வளவு உரிமைத் துணை என்பதை ஈண்டு ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். ஆன்ம சோதி இனிது அறிய வந்தது.

எவ்வழியும் ஞானம் திவ்விய போகங்களை அருளுகிற செவ்விய துணை; அது இனிது உதயமாகும்படி தனது இதயத்தை எவன் புனிதமாக்கிக் கொள்ளுகிறனோ அவன் அதிசய பாக்கியவான் ஆகிறான். உணர்வின் ஒளி உய்தி தருகிறது.

தனது அகத்து அகலாது இருந்துபே ரினபம்
தருதலால் மனைவியும், தன்பால்
இனிதுஉதித்து ஒருதன் வினைஒழித்து அசையாது
இருத்திவீட்டு அமுது அருத்துதலால்
உலரும் சுதனும் ஒருவனுக்கு அவனூடு
உதயமாய் எழுந்தமெய் யுணர்வே
பிலையிஃ தன்றி மனைசுதர் எனயாம்
பேணிநாள் கழிப்பதும் பிழையே.
(வைராக்கிய தீபம் 23)

ஞானம் அருமை மனைவிபோல் இனிய சுகங்களைத் தரும்; உரிமை மகன்போல் அரிய கதிகளை நல்கும்; பெரிய முத்தியை அருளும் எனச் சாந்தலிங்க சுவாமிகள் இவ்வாறு ஞானத்தைக் குறித்து மாந்தர் மதி தெளியும்படி உணர்த்தியிருக்கிறார்.

தூய்மையாய்த் தெளிந்த உணர்வு ஞானம்; தீமையாய் இழிந்த மடமை அஞ்ஞானம். முன்னது இருளை நீக்கி இன்பம் அருளும்; பின்னது மருளில் ஆழ்த்தி எவ்வழியும் துன்பங்களையே கொடுக்கும். ஞானம் உடையவன் நலம் பல அடைகிறான்.

உண்மையை உணர்ந்து உயர்நலம் உறுக.

942 துன்பத் தொடர்பு தொலையத் தொலையாத
இன்பம் பெருகி எதிருற—மன்பதையின்
கண்ணுக நின்று கதிகாட்டும் காட்சியே
எண்ணுகும் ஞானம் இனிது. (உ)

இ-ள்.

பற்றித் தொடர்ந்த துன்பங்கள் முற்றும் அழிந்து ஒழிய என்றும் அழியாத பேரின்பம் நேரே பெருகி வர உயிரின் ஒளியாய் நின்று உயர் வழி காட்டும் காட்சியே மாட்சியான ஞானம்; அதனுல் அதிசய மகிமைகள் உளவாம் என்க.

உண்மை யுணர்வு உயிர் ஒளியாய் ஒளிவீசித் துயர் ஒழியத் துலங்கி உயர் நலங்களை விளக்கியுளது. அறிவு நிலையில் தலை சிறந்து உறுதி நலனை உணர்ந்து உய்தி பெறச் செய்வதே ஞானம் என நயமான பெயர் அமைந்துள்ளது. துயர்களை நீக்கி உயிர்களை உயர்த்துவதால் சீவ ஒளி என மாதவர் இதனை வியந்து புகழ்ந்துள்ளனர். இதன் ஒளிபடிந்த அளவு சீவர்கள் தெளிவடைந்து திவ்விய நிலையைச் செவ்விதா அடையநேர்ந்தனர்.

அஞ்ஞானம் மாந்தரை அவலத் துயர்களில் ஆழ்த்துகிறது.
மெய்ஞ்ஞானம் அவரை மேலான நிலையில் உயர்த்துகிறது.

யாண்டும் தமக்கு இனிய சுகங்களே வேண்டும் என்று சீவர்கள் ஆவலோடு அலைகின்றனர். யாதொரு துயரமும் நேரலாகாதென்று எவ்வழியும் யாவரும் அஞ்சுகின்றனர். இந்த ஆசையும் அச்சமும் உயிரினங்கள் தோறும் மருமமாய் மருவியுள்ளன. உள்ளே கருதி வருவன வெளியே காண வந்தன.

சுகம் எது? துக்கம் எது?

இவற்றிற்குத் தக்க விடையைக் கூற நேருங்கால் விவேகிகளும் மிக்க ஆலோசனைகளை வியனுச் செய்ய நேர்கின்றுர்.

மனிதருடைய வாழ்க்கைகள் விசித்திர மிக வுடையன. தேக அனுபவங்களும் போக நுகர்வுகளும் மோக மயக்கங்களாய் நீண்டு யாண்டும் முடிவு காணுதபடி மூண்டுள்ளன.

மனிதனைப் பசித்துயர் வருத்துகிறது; வருத்தவே உணவை உண்ணுகிருன்; அதனுல் அத்துயர் தீருகிறது; தீரவே ஆறுத

லடைகிருன்; அந்த ஆறுதல் சுகம் என்னும் பேரால் தெரிய வருகிறது. சோகத்தின் நீக்கம் சுகத்தின் ஆக்கமாகிறது.

உழைத்து உளைந்து வருதலால் உடல் களைத்து அயர்கிறது; அந்த அயர்ச்சி நீங்க உறங்குகிருன்; அத்துயிலால் அயர்வு நீங்கி உயர்வுறுகிருன்; அதனைச் சுகம் என்று சொல்லிக் கொள்ளுகிருன். தூங்குவதில் ஒரு சுகம் ஓங்கியுள்ளது.

காமநோய் கடுந்துயர் செய்கிறது; அந்த வேதனை தீர மாதரைச் சேர்கிருன்; ஏதோ இன்பம் அடைந்தது போல் உவந்து கொள்ளுகிருன். இன்னவாறே இன்பங்கள் என மனிதன் மயங்கி வருகின்றன யாவும் துன்பங்கள் நீங்கிய நிலைகளே யாம். துக்கங்கள் பக்கம் சிறிது ஒதுங்குகின்றன; ஒதுங்கவே அவை உவகையான சுகங்களாத் தெரிகின்றன.

For all the happiness mankind can gain
Is not in pleasure, but in rest from pain. (Dryden)

மனிதன் அடைகிற இன்பங்கள் எல்லாம் துன்பங்களிலிருந்து நீங்கிய நீக்கங்களே அன்றி சுகம் என்று வேறு யாதும் இல்லை என ட்ரைடன் என்னும் ஆங்கில அறிஞரும் இங்ஙனம் கூறியிருக்கிருர். துயரங்கள் உயிரினங்களைச் சூழ்ந்துள்ளன.

காலையும் மாலையும் மலங் கழிக்கிருன்; கழிந்த இடத்தை அருவருப்போடு கழுவுகிருன்; சுத்தம் அடைந்ததாக நினைக்கிருன்; உண்மையில் இது சுத்தமா? உய்த்து உணர வேண்டும்.

உண்ணவில்லையானல் பசி உயிரைக் கொல்லும்; உண்டதைக் கழிக்கவில்லையானல் மலம் வதைக்கும். மலவாதனை சலவாதனை முதலாகப் பலவாதனைகளோடு மனிதன் நாளும் வேதனையுழந்து உழல்கின்ருன். யாக்கை அமைந்துள்ள போக்கை நோக்கியுணர்ந்தால் புலைநிலைகள் யாவும் விழி எதிரே புலனும்.

நோக்கதனில் பீளை இரு செவிகளிலும்
குறும்பி அளம நுகர்வாய் எச்சில்
மூக்கதனில் சளி தலையில் பேன்வெயர்வை
மலசலங்கள் மூளும் நாற்றம்
போக்கஒரு நாட்கழுவா விடில்அழுக்கு
மிகத்திரண்டு புழுத்து நாறும்
ஆக்கமிலாத் தேகமிதை அழகுஎன்னைச்
செருக்கல் அறியாமை யாமே. (நீதிநூல்)

இந்த ஊன நிலைகளை ஊன்றி உணர்ந்து உறுநிலம் நாடாமல் உள்ளம் களித்து மானிடம் வாழ்ந்து வருவது ஞானசூனியமாய் ஓங்கியுளது. அசுத்தமும் துக்கமும் அடர்ந்துள்ள மனிதன் சுத்தமும் சுகமும் அடைந்து வருவதாக எண்ணி வருவது எவ்வழியும் வெவ்விய பித்த மயக்காய்ப் பெருகி வருகிறது.

*தமனியக் கடமே ஆயினும் பவ்வீத்*
*தங்குறின் விழைஞரும் பற்றார்;*
*அமிழ்தமே எனினும் துய்ப்புறின் பவ்வீ*
*ஆக்கும்இவ் வுடற்புகர் அறிந்தும்*
*இமிழ்தரப் பற்று மடவருக்கு உரைத்தும்*
*என்பயன் தீர்த்தம் ஆடிடினும்*
*உமிழ்முடை யாக்கை சுசியுறாது இறைவன்*
*உண்மை தேர்ந்து உயிர் சுத்தியுறுமே.*
(தணிகைப்புராணம்)

*பொற்கடத்துள் மலம்பொருந்தில் புல்லியரும் பொருள்நசையால்*
*அக்கடத்தைப் பற்றியிடார் அங்கையினால் அவனிதனில்*
*மக்கள்தமது உடலினைத்தாம் மலபாண்டம் எனஅறிந்தும்*
*எக்கணக்கால் இகழாதே அருவருப்பற்று இருக்கின்றார்.*
[சிவதருமோத்தரம்]

*ஊற்றைச் சரீரத்தை ஆபாசக் கொட்டிலை ஊன்பொதிந்த*
*பீற்றல் துருத்தியைச் சோறிடும் தோற்பையைப் பேசரிய*
*காற்றில் பொதிந்த நிலையற்ற பாண்டத்தைக் காதல் செய்தே*
*ஏற்றுத் திரிந்து விட்டேன் இறைவா கச்சி ஏகம்பனே.*
(பட்டினத்தார்)

*சுக்கிலமும் நீரும் சொரிமலமும் நாறும்உடல்*
*புக்குழலும் வாஞ்சையினிப் போதும்என்பது எந்நாளோ?*
*ஆழ்ந்து நினைக்கின் அரோசிகமாம் இவ்வுடலில்*
*வாழ்ந்துபெறும் பேற்றை மதிக்குநாள் எந்நாளோ?*
[தாயுமானவர்]

மெய்யுணர்வு தோன்றியபொழுது பொய்யான புலைநிலைகளை இவ்வாறு உணர்ந்து கொள்ளுகின்றனர். இங்ஙனம் உணர்ந்து தெளிந்தவர்களையே ஞானிகள் என்று வியந்து வையம் வணங்கி வாழ்த்தி வருகிறது. சத்தை அறிவதே தத்துவ ஞானமாம்.

உண்மை நிலையைக் காட்டி உயிர்களுக்கு உய்தி தருதலால் ஞானம் கண் என வந்தது. உடலில் உள்ள ஊனக் கண்ணினும்

உயிரில் உள்ள இந்த ஞானக் கண் அதிசய சோதியாய்த் துதி செய்ய நின்றது. இதனை யுடையவரே உயர்கதி அடைகிறார்.

கதி காட்டும் காட்சி என்றதனால் இதன் மாட்சியைக் கண்டு தெளியலாம். மதி ஒரு வேளை சதி காட்டுமாயினும் ஞானம் என்றும் கதியே காட்டி இன்பம் ஊட்டி யருளும்.

எவ்வழியும் இருள் மூடி மருளாய் உழன்று வந்த சீவன் ஞானவிழி திறந்ததும் வான ஒளிபோல் வயங்கி வரம்பில் இன்பம் பெறுகிறது. தேக பந்தமான பொருள்களையே சொந்தம் என்று நம்பி மருண்டு கிடந்தவர் ஞானம் அடைந்ததும் ஆன்மா பரமான்மாவினது உறவு என்று தெளிந்து பரமானந்தம் உறுகின்றனர். மெய்யுணர்வு மேலான இன்பங்களை அருளுகிறது.

ஒன்றே தன்மை உனக்கும்மற்று எமக்கும்
அன்றென மொழியினும் ஆம்எனப் படுமே;
அங்ஙனம் கூறியது எங்ஙனம் பிற எனின்
எஞ்ஞான்று உளைஉளம் அஞ்ஞான்று யாமே;
அழியா நிலைமையை அணையம் யாமே;
வியாபகம் நினக்குளது யாமும்அஃ துளமே;
அறிவெனப் பெயரிய பெயரினை அப்பெயர்
பிறிவரும் பெயராப் பெற்றனம் யாமே;
இச்சா ஞானக் கிரியைஎன்று இசைக்கும்
சத்திகள உளைஉளது அத்திறம் எமக்கே;
இந்நிலை முழுவதூஉம் எமக்கும் உண்டாகலின்
அந்நியம் அலம்நினக்கு அநநியம் யாமே;
கருவிகட்கு இறைமை காட்டுபு நிற்றலின்
புருட நாமம் புனைந்தனம் ஆயினும்
அத்தநிற் குறிப்பின் சத்திகள் யாமே;
புருடனைச் சத்தியிற் புணர்த்தனை அன்னதற்கு
ஒருகாட்டு என்ப புருடோத் தமனே;
உன்னுடன் எம்மையும் ஒப்புஎனப் படுத்து
முன்னர்க் கூறிய முறைமையில் சிற்சில
முழுவதும் ஒவ்வாது ஒழியினும் ஒழிக
உயர்ந்தோன் தலைவன் ஒத்தோட் புணரினும்
இழிந்தோட் புணரினும் இழிபுஎனப் படாதே;
ஆதலின யாம்உனைக் காதலித் தனமால்
காதலின் எமையருட் கைப்பிடித்து அருளி

ஒருவரும் உணராப் பரம வீட்டில்
இருளறை திறந்த பெருவெளி மண்டபத்து
உயர்நாதாந்தத் திருமலர் அமளியில்
புளகமெய் போர்ப்ப மொழிதடு மாற
உள்ஒலி நாதப் புள்ஒலி முழங்க
ஞானஆரமுத பானமது ஆர்ந்து
கருவிகள் கழன்று பரவசம் ஆகிப்
பரமானந்தப் பரவையுள் படிந்து
பேரா இயற்கை பெற்றினிது இருப்ப
ஆரா இன்பம் அளித்தருள் எமக்கே. [பண்டாரமும்மணி]

இந்தப் பாசுரத்தைப் பலமுறையும் கூர்ந்து நோக்கி ஓர்ந்து உணர வேண்டும். சீவனுக்கும் சிவனுக்கும் உள்ள உறவுரிமைகளை நயமா எடுத்துக் காட்டி அவனுடைய பேரானந்த போகம் முழுவதும் பெறவுரிய தகுதி இயல்பாகவுடையவன் என இவனது நீர்மை சீர்மைகளை இது இனிது விளக்கியுள்ளது. தத்துவ நிலைகள் உய்த்து உணரத்தக்கன. சிறந்த தலைவனும் தலைவியும் கலந்து உவந்து களித்துத் திளைக்கும் சிற்றின்ப போக நிலைகளைக் குறிப்பித்துப் பேரின்ப நிலையைத் துலக்கியிருக்கிறார். பாலோடு பால் கலந்ததுபோல் பரனோடு உயிர் கலந்து பேரின்பம் உறுகிறது. ஞான ஆர் அமுத பானம் என்றது இறைவனோடு தோய்ந்து மகிழுங்கால் இனிமை சுரந்து வருவது தெரிய வந்தது.

மாய இருள் நீங்கித் தூய பரம்பொருளைத் தோய ஞானம் நேய உறவாய் நேர்ந்துள்ளது; அவ்வுண்மையை இங்கே ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகிறோம். அல்லல் நீக்கி ஆனந்தம் அருளும் நல்ல சோதியை எய்தியபோது எல்லையில்லாத இன்ப நலங்கள் ஒல்லையில் பெருகி உரிமையோடு எதிரே வருகின்றன.

பிறவி யாண்டும் துன்பத் தொடர்புகள் தோய்ந்தது; வழிமுறையே தொடர்ந்து வந்துள்ளது; எவ்வழியும் மையல் இருள் மருவி வெய்ய மருளாய் விரிந்து நின்றது; நீண்டகாலம் இருள் நிறைந்திருந்தாலும் ஒளி புகுந்தவுடனே ஒழிந்துபோதல் போல் ஈன மருள் ஞான ஒளி தோன்றியபோதே ஒருங்கே தொலைந்து போகிறது; போகவே ஏகநாயகனான பரமான்வோடு சீவான்மா சேர்ந்து என்றும் நிலையான பேரானந்தத்தில் யாதும் பேராமல் ஆர்ந்து மகிழ்கிறது. அந்த இன்ப நிலையை இனிது எய்துக.

943. தூய பரத்தின் தொடர்புடைய உன்னைநீ
ஆயாமல் அந்தோ அவலமாய்—மாயப்
படுகுழியில் வீழ்ந்து பதைக்கின்றாய் இன்றே
நடுநின் றுணர்க நயந்து. (௩)

இ-ள்.

நீ தூய பரம்பொருளின் நேயமான உறவினன்; உன் உண்மை நிலையை உணராமையால் புன்மை அடைந்து புலையாய் இழிந்துள்ளாய்; விரைந்து தெளிந்து உயர்ந்து கொள்ளுக.

பொய்யான மருளில் மயங்காமல் மெய்யான தெருளைத் தெரியும் தெளிவு மெய்ஞ்ஞானம் என மேவி நின்றது. உயிரின் உண்மை தெரிய உயர்பரனின் தன்மையும் ஒருங்கே உணர வருகிறது. அறிவு அதிசய ஆற்றல் உடையது; மனிதனை எவ் வழியும் மகிமைப்படுத்தி வருகிறது; எதையும் கூர்ந்து ஓர்ந்து தேர்ந்து தெளிந்து கொள்கிறது; கால தேசங்களைக் கடந்தும் கருதி உணர்ந்து முடிவு காண்கிறது; உலக நிலைகளையும் வான வெளிகளையும் அண்ட கோடிகளையும் ஆராய்ந்து கொண்டு இவற்றிற்கெல்லாம் ஒரு மூலமுதல் உண்டு என்று காரண காரியங்களோடு சாலவும் உறுதியாய்த் துணிந்து கொள்ளுகிறது.

இத்தகைய அறிவு மானிடனிடம் வித்தகமாய் விளங்கியுள்ளமையால் எத்தகைய துறைகளையும் எத்துணைய நிலைகளையும் உய்த்து உணர்ந்து யூகித்து முடிவு காணுகிறான்; தான் கருதிக் கண்ட காட்சிகளை உறுதியான மொழிகளால் கலையின் ஒளிகளோடு உலகம் அறிய நலமா வெளியிடுகிறான்.

நிலவலையங்களையும், மலை வகைகளையும், கடல் நிலைகளையும், சூரிய மண்டலங்களையும், சந்திர கோளங்களையும், விண்மீன்களையும், வேறு பல கிரகங்களையும் விழைந்து நோக்கி வரைந்து முடிவுகாண நெடிது மூண்டு கடிது நீண்டு வருகிற மனிதன் தனது நிலையை ஒரு சிறிதும் உணர்ந்து பாராமல் யாதும் கருதாமல் மருளாய்க் குருடுபட்டிருப்பது பெரிய வியப்பாயுள்ளது.

விஞ்ஞானம் என இஞ்ஞான்று வியந்து புகழ்ந்து பேசப்படுவதை யாண்டும் கேட்டு வருகிறோம். இது இந்நாட்டுக்குப் புதிது அன்று; பண்டு தொட்டே பாரத நாடு யாரும் அறிய முடியாத அதிசய நிலைகளை அறிந்துள்ளது. உலக நிலைகளையும்

உயிர்த் தொகைகளையும் தாவர வகைகளையும் தாது மூலங்களையும் ஆதிமூல நிலைகளையும் நன்கு தெரிந்த யோகிகளும் சித்தர்களும் ஞானிகளும் எவ்வழியும் தத்துவ ஒளிகளோடு தழைத்திருந்துள்ளனர். உலகநிலை யாவும் அநித்தியம் என்று தெளிந்து கொண்டமையால் அவற்றை விரித்து விளக்கிப் பொறித்து வையாமல் புனிதநிலையில் பொருந்தி இனியசீலங்களில்நின்றனர்.

இந்த உலகத்திலிருந்து சூரியன் இருக்கும் தூரத்தை நேரே சரியா அளந்து பார்த்ததுபோல் அளவுகள் கூறப்படும் உளவுகளைக் காணுகிறோம். ஒன்பது கோடியே இருபத்தேழு லட்சத்து நாற்பத்தெண்ணாயிரத்து நானூற்று எண்பத்தொன்பது மைலில் சூரியன் உள்ளான் என்று சொல்லுவதால் நல்ல எல்லை தெரிந்த அறிஞர் என விஞ்ஞானியரை வியந்து ஏமாந்து போகலாகாது.

விஞ்ஞானம் முதலிய எஞ்ஞானங்களுள்ளும் அஞ்ஞானம் ஊடுருவி நின்று அதிகாரங்கள் புரிகின்றது. விசேட ஞானம், வியஞ்ஞ ஞானம், விபரீத ஞானம், விருதா ஞானம், விளிவு ஞானம் என்னும் பொருள்களை விஞ்ஞானம் என்னும் சொல் மருவியுளது. காக்கையின் கறுப்பையும் கரடியின் மயிரையும் கருதி நோக்கிக் கருமை அளவுகள் காண்பதும் விஞ்ஞானமேயாம். பகுத்து அறிவதில்நிலையானபலன் நலமாயிருக்கவேண்டும்.

பஞ்சபூத பரிணமங்களைப் பகுத்து நோக்கிச் சடதத்துவங்களையே ஆராய்ந்து அலமந்து நிற்கும் விஞ்ஞானத்தினும் என்றும் அழியாத ஆத்தும தத்துவங்களை ஆராய்ந்து தெளிந்து அல்லல்களை நீக்கி யருளும் மெய்ஞ்ஞானம் எஞ்ஞான்றும் மேலானதாய் விழுமிய நிலையில் விளங்கியுள்ளது. இந்த உண்மை ஞானத்தின் எதிரே வேறுவகையான விஞ்ஞானங்கள் எண்மையாகவே இழிந்து நிற்கும். தத்துவ ஞானம் சதாசிவ சத்தியாம்.

விஞ்ஞானத் தோர்க்கு ஆணவமே மிகுதனு
தஞ்ஞானத் தோர்க்குத் தனுமாயை தானென்ப
அஞ்ஞானத் தோர்க்குக் கன்மம் தனுவாகும்
மெய்ஞ்ஞானத் தோர்க்குச் சிவதனு மேவுமே. (1)

விஞ்ஞான கன்மத்தால் மெய்யகம் கூடிய
அஞ்ஞான கன்மத்தி னல்சுவர் யோனிபுக்கு
எஞ்ஞான மெய்தீண்டி யேயிடை இட்டுப்போய்
மெய்ஞ்ஞான ராகிச் சிவமேவல் உண்மையே. (திருமந்திரம்)

அஞ்ஞானம் விஞ்ஞானம் மெய்ஞ்ஞானம் குறித்து வந்துள்ள இந்த மந்திரக் கவிகள் இங்கே நன்கு சிந்திக்கத்தக்கன.

தன்னை மறந்திருக்கின்ற மருள் நிலையை நீக்கி எது தெளிவாக்கி யருளுகிறதோ அந்த ஒளியே உண்மையான ஞானமாம்.

இன்ன சாதி, இன்ன மதம், இன்னான் மகன் என இன்னவாறே மனிதன் பன்னித்திரிகிறான். தேகத்தையே தான் என்று கருதி மோகத்தை அடைந்து விவேகத்தை இழந்து வீணே உழலுகின்றான். உள்ளே இருக்கின்ற ஆன்ம ஒளியே தான் என்பதை அறவே மறந்துள்ளான். அந்த மறப்பு வழியே பிறப்புகளும் இறப்புகளும் பெருகிப் பெருந் துயர்களா வந்துள்ளன.

மாய மருளாய் மருவி யுள்ள இந்த அஞ்ஞான இருளைத் தூய ஞானஒளியே தொலைத்தருளுகிறது. இந்த மெய்ஞ்ஞானம் எளிதில் அமையாது; உள்ளம் புனிதமாய் ஒழுகி வருகிற நல்லோரிடமே இது மெல்ல வெளியாகிறது. இனிமேல் இவனுக்குப் பிறவி இல்லை என்று சொல்லுமாறு எவன் படியேறி மேலே வருகிறானோ அவனுக்கே ஞானம் தனியுரிமையாய் இனிமை தருகிறது. ஆன்ம ஞானம் அதிசய மேன்மையா யுள்ளது.

புண்ணிய பரிபாகத்தால் வருவது ஆதலால் அதனையுடையவர் எண்ணரிய மகிமைகளை எய்தி விளங்குகின்றனர். அரசர் முதல் யாவரும் தலைவணங்கித் தொழுமாறு ஞானிகள் நிலையுயர்ந்து திகழ்கின்றனர். உணர்வு புனிதமாய் உயர்ந்து உரிமையோடு தோய்ந்து உண்மையைத் தெளிவது ஞானம் ஆகிறது.

இது வெளியே யிருந்து வருவதில்லை; மனிதன் உள்ளேயே மருவியுளது. இதனை எளிதே பெறுவதற்கு வழி யாது? என்று ஒரு ஞான முனிவரிடம் ஓர் இளந்துறவி வந்து உளம் கனிந்து வினவினான். அப்போது அப் பெரியவர் கூறியது அரிய போதனையாய் இனிமை சுரந்து வந்தது. அயலே வருவது காணுக.

ஒன்றுகேள் மகனே! புமான் முயற்சியால்
உறைத்து மானுடர்க்கு ஈசன்
நன்றுசெய்யவே காட்டிய நூல்வழி
நடந்து நல்லவர் பின்னே
சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச்
செனித்த மாயையைத் தள்ளி

நின்று ஞானத்தை அடைந்தவர் பவங்கள்
போம் நிச்சயம் இதுதானே. [1]

இந்த ஞானந்தான் வருவது எப்படி? எனில்
இடைவிடா விசாரத்தால்
வந்தடைந்திடும்; விசாரம்தான் ஏதுஎனின்
மறுதியாம் சரீரத்தில்
இந்த நான்எவன் சித்துஎது சடம்எது
இரண்டும் ஒன்ருய்க் கூடும்
பந்தம்ஏது வீடுஏதுஎன உசாவுதல்
பகர் விசாரமதாகும். (கைவல்லியம்) [2]

ஞானம் உதயம் ஆகும் வழியையும் அதன் நிலையையும் இவை தெளிவா விளக்கியுள்ளன. கெட்ட இயல்புகள் நீங்கி உள்ளம் தூயராய் நல்ல வழியில் ஒழுகி வருபவரிடம் ஞானம் வெளிவருகிறது. அந்த ஞானம் விசாரத்தால் விரிந்து விவேக ஒளிவீசி வியனுத் தெளிவடைந்து திகழ்கிறது. விசாரம் ஆவது விசேடமாய் ஆராய்ந்து சிந்தித்து உண்மை தெரிவது.

நான் யார்? எண்சாண் அளவாய்த் தோன்றியுள்ள இந்த உடம்பா? அல்லது இதனுள் உயிர்ப்பாய் இருக்கும் உயிரா? உடல் உயிர் என நிலவியுள்ள இந்த இரண்டும் ஒன்ருய்க் கூடியது என்? எப்பொழுது சேர்ந்தது? எதற்காக நேர்ந்தது? இறந்து இறந்து பிறந்து மீண்டும் மீண்டும் வந்து நீண்ட துயரோடு ஈண்டு உழந்து திரிவது எதனுல்? துன்பமயமான இந்தக் கூட்டைவிட்டுப் பிரிந்து பேரின்பமயமான அந்த வீட்டை அடைவது எப்படி? என இன்னவாறு விசாரணை புரிந்து விடுதலைபெற விரைந்து நிற்கும் நிலையே ஞானத்தின் கலையாம். உற்றதுக்கங்களை ஒழித்தருளுவதே உண்மைஞானமாம்.

ஞானத்தை அடைந்தவர் பவங்கள் போம்; இது நிச்சயம். என்றது அதன் நீர்மையை உச்ச நிலையில் உணர்த்தி நின்றது. பிறவித் துன்பங்களை எல்லாம் ஒருங்கே நீக்கிப் பேரின்ப நிலையை நேரே அருளும் பேரமுதம் என ஞானம் இங்கே தேற வந்தது. ஞாயிறு போல் ஞானம் உயிர் உயர உதயமாகிறது.

ஒளியால் அன்றி இருள் ஒழியாது; மருளால் நேர்ந்த பிறவி ஞானத்தினுல் அன்றி வேறு ஒன்றுனும் நீங்காது. தெளி

வான இந்த ஞானம் எவனிடம் ஒளி வீசி நிற்குமோ அவனை வானமும் வையமும் உரிமை கூர்ந்து உவந்து வணங்கி வரும்.

அல்லல்கள் யாவும் ஒல்லையில் நீக்கி அருளும் நல்ல அமுதம் ஆதலால் பேரின்ப எல்லைக்கு ஓரின்ப ஒளியாய் ஞானம் யாண்டும் ஒளி வீசியுள்ளது. இந்த ஒன்றை யுடையவன் எல்லாம் உடையவனாய் ஒளிபெற்று உவகை யுற்று நிற்கின்றான்.

ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை;
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று;
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா;
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே. (ஞானம்)

ஞானத்தைக் குறித்துத் திருமூலர் இவ்வாறு பெருமகிமையாக் கூறியுள்ளார். நாச நிலைகளில் உழந்து நீசமாய்த் திரிந்து வந்த சீவனை ஞானம் ஈசன் ஆக்குகிறது; ஆகவே அது திவ்விய சோதியாய்த் தேசு மிகுந்துளது. நீண்ட காலமாய் மூண்டுவந்துள்ள இடரிலிருந்து மீண்டு உய்ய வேண்டுமானால் மேலான மெய்யறிவும் தெய்வத் திருவருளும் சால்போடு சேர்ந்து வர வேண்டும். அல்லல் களைந்து ஆனந்தம் அருள்வது நல்லஞானமே.

எந்த வழியால் பந்தபாசங்கள் விளைந்து வந்தனவோ அந்த வழியை அடைத்தபொழுதுதான் அவலத்துயர்கள் ஒழிகின்றன.

மையல் மருள்களால் வெய்ய பிறவிகள் விரிந்து வந்துள்ளன. அந்த மாய இருள் தூய ஞான ஒளியால் தொலைகிறது; தொலையவே நிலையான தலைமை நேரே தெரிய வருகிறது. ஒளியால் அன்றி இருள் ஒழியாது; ஞானத்தால் அன்றிப் பிறவி மருள் அழியாது. பிறவி நீங்கவே பேரின்பம் ஓங்குகிறது.

இச்சிறைப் பவங்கள்நீங்கி இணையிலா முத்திஎய்தல்
மெய்ச்சிவ ஞானத்தன்றி வேறுள கருமத் தாகாது;
அச்சிவ ஞானம் பெற்றோர் அயனது கற்ப ஈற்றின்
சச்சிதா னந்த முத்தி சார்குவர் என்ப மாதோ.
(திருக்கூவப்புராணம்)

பிறவிச் சிறையை நீக்கிப் பேரின்ப முத்தி தர வல்லது ஞானமே; அதனால் அன்றி வேறு எதனாலும் அதனை எய்த இயலாது என்னும் இது இங்கே அறியவுரியது. மாய இருள் நீங்கி என்றும் மாயாத பேரானந்த நிலையைச் சீவன் அடைய

வேண்டுமானல் தூய ஞான ஒளியை அது அடைந்து கொள்ள வேண்டும் என்பது இங்கே தெளிந்து கொள்ள வந்தது. துயர் ஒழிந்த உயர்நிலையை அடைவதால் ஞானி ஒருவனே உத்தம புத்திமானாய் ஒளிமிகுந்து நிற்கின்றான்; மற்றவர் யாவரும் பிற வித் துயரை வளர்த்துக் கொள்வதால் பேதைப் பித்தர்களாய்ப் பிழைபட்டு உழல்கின்றார். பயன் இழந்தவர் பயித்தியராயினர்.

All are mad except the man who is wise. (Stoic)

ஞானம் உடையவனைத் தவிர மற்ற எல்லாரும் பித்தரே என்னும் இது இங்கே உய்த்து உணரத்தக்கது. மூடப் பித்தனாயிழிந்து ஒழிந்து போகாமல் ஞானச் சித்தனாய் நன்கு உயர்ந்து கொள்க.

---

944. உன்னி உனைநேர் உணர்ந்தாயேல் ஊழியாய்த்
துன்னி யிருந்த துயர்எல்லாம்—மன்னும்
ஒளிமுன் இருள்போல் ஒழியும் ஒழியாத்
தெளிவின் படைவாய் சிறந்து. (௪)

இ-ள்.

உன்னை உண்மையாக நீ உணர்ந்தால் ஊழி காலமாத் தொடர்ந்துள்ள துன்பங்கள் எல்லாம் ஒளி முன் இருள் போல் ஒருங்கே ஒழிந்துபோம்; உயர்ந்த பேரின்பமாய்ச் சிறந்து விளங்குவாய்; அந்தச் சிறப்பே பிறப்பின் பயனும் என்க.

அறிவு மனிதனுக்கு உறுதியாய் அமைந்திருக்கிறது; இருந்தும் அது அயலே திரிந்து மயலையே உணர்ந்து மறுகி யுழலுகின்றது. எதை அறிய வேண்டுமோ அதை அறிந்த போதுதான் ஞானம் என்னும் மேன்மையான நிலையை அறிவு மருவி மிளிர்கிறது. உரிமையை உணர்வது பெருமை யுறுகிறது.

பல பிறவிகளிலும் தொடர்ந்து வந்த துன்பங்கள் அடியோடு தொலைந்து போகும்படி எந்தப் பிறவி விரைந்து முயலுகிறதோ அது ஞானப் பிறவியாய் உயர்ந்து திகழ்கிறது. அல்லல் யாவும் நீக்கி அதிசய ஆனந்தம் அருள வல்ல இந்த ஞானம் எளிதில் அமையாது. அரிய புண்ணியத்தின் பயனாய் அருமையா அமையும். தருமத்தின் சோதியே ஞானமா மருவியுள்ளது.

நலமான இனிய கருமங்களைப் பலனை எதிர் பாராமல் பிற

வுயிர்களுக்கு இதமா ஒருவன் செய்துவரின் அவன் உயிரில் ஏறி யிருந்த மாசுகள் கழிகின்றன; தேசுகள் வளர்கின்றன; வளர வே உள்ளம் புனிதம் ஆகிறது; அந்தச் சித்த சுத்தியால் ஞானம் தெளிவாய் ஒளிவீசி எவ்வழியும் திவ்விய இன்பம் அருளுகிறது.

பலன்விழை வுருதுகரு மம்பல இயற்றின்
அலகறு பவத்தினுள பாவம்அறும்; அற்ருல்
நிலவிய மனம்புனிதம் ஆவது நிகழ்ந்தால்
மலைவிலுயர் ஞானம்வரும்; வரில்அடைவன் வீடே.
(கூர்மபுராணம்)

புனித கருமத்தின் புண்ணியத்தால் ஞானம் விளைகிறது; அது பேரின்ப வீட்டைத் தருகிறது என இது குறித்துள்ளது. தத்துவக் குறிப்புகள் கூர்ந்து ஓர்ந்து சிந்திக்கத் தக்கன.

தரும நீர்மைகள் தழுவி வரும் அளவு அறிவு தெளிவாய் விழுமிய நிலையில் விளங்கி வருகிறது. சித்த சுத்தியும் தத்துவ ஞானமும் ஒத்த நிலையில் நித்திய சோதிகளாய் நிலவியுள்ளன. எந்த உள்ளம் புனிதமாய் இனிமை தோய்ந்து வருகிறதோ அந்த மனிதனிடம் அதிசய மகிமைகள் வெள்ளமாய் வந்து குவிகின்றன. சித்த சுத்தி முத்தியின் நிலையமாகிறது.

உயர்ந்த மனிதனுடைய சிறந்த அறிவுக்குப் பயன் தன்னை அறிந்து இன்னல் நீங்குவதே. உடல் உயிர் என மருவியுள்ள இருவகை நிலைகளிலும் தனது உண்மை நிலையை உரிமையோடு ஊன்றி உணர்ந்தவன் உயர்ந்த ஞானியாய் உய்தி பெறுகிருன். அவ்வாறு உணராதவன் அஞ்ஞானியாய் இழிந்து அவலம் அடைகிருன். மடமை இருள் ஒழியின் மகிமை ஒளி வெளியாம்.

தனது உண்மையான ஆன்ம நிலையை உணராமல் வேறு எவ்வளவு மேன்மைகளை வெளியே பெற்றிருந்தாலும் அவ்வள வும் மாய மருள்களேயாம். மடமையால் நேர்ந்த பிறவியில் எவ் வழியும் வெவ்விய மையல் இருள்களே மண்டியுள்ளன. இருள் நிறைந்த இடம் யாண்டும் பயங்கரமாய் நீண்ட துயரங்களே நிறைந்திருக்கும்; அதுபோல் மருள் மலிந்த பிறப்பு எவ்வழியும் குருடுபட்டுத் துன்பங்களே தொடர்ந்து படர்ந்து அடர்ந் திருக்கும் ஆதலால் அது ஒழிந்தபோதுதான் பேரின்பம் நேரும்.

நீண்ட காலமாய் இருள் மூண்டு இருந்தாலும் ஒளிவந்தவுடனே அந்தக் கொடிய இருட்டு அடியோடு நீங்கிப் போம்; அதுபோல் ஊழியும் நீங்காமல் தொடர்ந்து வந்த மாய மருள் ஞான ஒளி வீசியபோது ஒருங்கே நாசமாய் ஒழிந்து போய்விடும்.

பிறவித் துயர்கள் பெருகி அறியாமையில் மறுகி அவலமாய் அலைந்து திரிந்து கவலைகளோடு தொடர்ந்து வந்த சீவன் ஞானம் அடைந்தவுடனே அல்லல்கள் யாவும் நீங்கி எல்லையில்லாத பேரின்ப நிலையை நேரே எய்தி நெடிது மகிழ்கின்றது.

தன்னை அறிந்தவன் சாமியாய் வாழ்கின்றான்:
பின்னை அறிந்தவன் பேயாய் அலைகின்றான்.

என்பது பழமொழியாய் வந்துள்ளது. ஞானயோகிகளின் நிலைகளையும் ஈன மோகிகளின் புலைகளையும் இம் முதுமொழி அதிசயமா விளக்கி மதிநலம் அருளியுளது. அறிய வுரியதை அறிக என அறிவு கூறியதில் கூரிய அறிவு நலம் குலாவி மிளிர்கிறது.

பொறிபுலன்கள் மருவியுள்ள உடல் பிணமாய் விழுந்து விடும்; புலையான இந்தப் பிணத்தை நிலைஎன்று நம்பிப் பேதையாய் இழிந்து போகாதே; என்றும் அழியாத உயிரையே நீ என்று உணர்ந்து மேதையாய் உயர்ந்து மேலான கதியைக் காணுக என இது காட்டியிருக்கிறது. இந்த ஞானக் காட்சியை நாடிக் கண்டு ஆன்ம ஆட்சியை அடைந்து கொள்ளவேண்டும்.

சீவனை உண்மையா அறிந்தபோது அங்கே சிவனையும் எண்மையாத் தெரிந்து கொள்ளுகிறான்; கொள்ளவே பேரின்ப வெள்ளம் பெருகக் காணுகிறான். தன்னை அறியவே தலைவனும் தெரிதலால் நிலையான ஆனந்த வாரி நேரே பெருகி வருகிறது.

தன்னை அறிந்து சிவனுடன் தானாக
மன்னு மலம்குணம் மாளும்; பிறப்பறும்;
பின்னது சன்முத்தி சன்மார்க்கப் பேரொளி
நன்னது ஞானத்து முத்திரை நண்ணுமே. (1)

தன்னை அறியத் தனக்குஒரு கேடுஇல்லை;
தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்;
தனனை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தான்இருந் தானே. (2)

(திருமந்திரம்)

ஞான ஒளியால் தன்னை அறிந்த பொழுது மனிதன் அடையும் மகிமைகளைத் திருமூலர் இவ்வாறு தெளிவா விளக்கியிருக்கிறார். வெய்ய துயர்களை நீக்கி மெய்யுணர்வு மேன்மை தருகிறது.

அறிவுடைய அரிய மனிதப் பிறவியை அடைந்த மனிதன் உரிமையோடு விரைந்து அறிய வரியதை அறிந்து அடையத் தருந்ததை அடைந்துகொள்ள வேண்டும். அங்ஙனம் கொண்ட போதுதான் தான் கண்ட பிறவியைக் கண்ணியப் படுத்தி எவ்வழியும் திவ்விய நிலையில் உயர்ந்த புண்ணியவான் ஆகிறான்.

யாண்டும் விடாமல் நீண்டு தொடர்ந்து அடர்ந்து தன்னைப் பற்றி வந்த அல்லல்களை முற்றும் ஒழித்தவனே வெற்றி வீரனாய் விளங்கி நிற்கிறான். தனது சீவன் சிவம் ஆக நேர்ந்தவனைத் தேவர் யாவரும் வியந்து நோக்கி உவந்து புகழ்கின்றார்.

துன்ப இருளை நீக்கி யருளும் இன்ப ஒளியாய் ஞானம் எழில் மிகுந்துள்ளது. விழுமிய அதனால் வியன் நிலை யுறுக.

915. உலகுயிராய் ஓங்கி உயர்ந்து பரந்து
நிலவு நிலையில் நிலையாய்—இலகுமொரு
மெய்ப்பொருளை மெய்யுணர்வால் மேவி உணரினே
பொய்ப்பொருள்கள் போகும் புறம். (ரு)

இ-ள்.

உலகம் உயிர் இனங்களை யுடையது; இந்த உலகிற்கும் உயிர்களுக்கும் உயிராதாரமாய் ஒரு பொருள் நிலைத்து உள்ளது; மெய்யான அப் பொருளை மெய்யுணர்வால் மேவி யுணரின் பொய்யான புலைப்பொருள்களின் தொடர்பு அடியோடு ஒழிந்து போம்; போகவே ஏகமான இன்பம் இனிது விளையும் எனக.

கண் எதிரே காணுகின்ற உலக நிலைகளைக் கொண்டு காணாத ஒரு தலைமைப் பொருள் உண்டு என்று யூகமாய்க் கருதி யுணர்ந்து கொள்வது விவேகமா விளங்கி நின்றது. சீவகோடிகள் ஆண்மை பெண்மை என இருவகையில் அமைந்து பலவகை நிலைகளில் பரந்து விரிந்து இயங்கி வருகின்றன. இயற்கை நியமங்கள் எங்கணும் நன்கு நிகழ்கின்றன. கதிரவன் எழுதல் கலைமதி ஒளிர்தல் மழை பொழிதல் வளி வழங்கல் முதலிய

தொழில்கள் யாவும் யாண்டும் இறையும் தவறாமல் முறையே நடந்து திகழ்கின்றன. இவ்வாறு எல்லாம் நெறியே நிகழ்ந்து வருதலால் இவற்றிற்கு மூலகாரணம் ஒன்று மேலான நிலையில் உள்ளது என ஓர்ந்து தெளிந்து கொள்கிறோம். மெய்யான இந்தத் தெளிவு தெய்வ ஞானமாய்ச் சிறந்து விரிந்து வருகிறது.

காட்சியால் கண்டு கருத்தால் கருதி அனுபவத்தால் உறுதி செய்து ஆதிமூல நிலைகளை மனிதன் தேர்ந்து வந்துள்ளான். தான் ஓர்ந்து உணர்ந்ததை உலகம் அறிய உணர்த்தி உய்தி புரிகிறான். கடவுள் உண்டு என்று காட்டுவதில் உலக அனுபவங்களை எடுத்துக் காட்டி உள்ளம் தெளிய ஒளி செய்து அருள்கின்றான்.

உடலின் தொழிலால் உயிர்உண்மை உணர்வாய்
நாற்றம் நுகர்ந்து நறுமலர் காண்பாய்
ஆற்றும் அசைவால் காற்றினை அறிவாய்
பொங்குதீ யுண்மை புகையால் தெரிவாய்
மண்டபம் கண்டு மயனுளன் துணிவாய்
பிள்ளையை நோக்கிப் பெற்றவள் உண்டுஎன
உள்ளம் துணிந்தே உறுதிமீக் கொள்வாய்
கண்ட மட்கலம் காணாக் குலாலனை
உண்டெனக் காட்ட உணர்வுகொண் டுறுவாய்
வெளியே தெரிந்த வெம்புகை நோக்கி
உள்ளே ஒருதீ உளதுஎனத் தெளிவாய்
விளைபயிர் நிலையை விழியால் அறிந்து
உழவன் ஒருவன் உளன்என ஓர்வாய்
இன்ன நிலைகளை இன்னவா றுணர்தல்போல்
உலக இயக்கம் ஒருமுதல் உண்மையை
நலனுற உணர்த்தும் நயம்நீ தெளிந்து
கலக மயக்கம் களைந்து
அலகில் இன்ப அமைதியை அடைக.

எல்லாம் வல்ல இறைவன் ஒருவன் உளன் என்று நம்புவதால் மனிதனுடைய உள்ளம் உறுதி நலங்களை நாடி உயர்ந்து கொள்கிறது. சார்ந்த சார்புகளின் வண்ணமாய் மனிதன் நேர்ந்து வருகிறான். நல்லாரைச் சார்ந்தால் நல்லவனாய் உயர்ந்து நலம் பல பெறுகிறான்; தீயாரைச் சேர்ந்தால் தீயவனா யிழிந்து தீமைகளையே அடைகிறான். எதை அடுத்தானோ அதன்படியே

மனிதன் ஆகி விடுதலால் சேரும் இனங்களைக் குறித்து மனம் ஓர்ந்து ஓர்ந்து அவன் மிக்க எச்சரிக்கையா யிருக்க வேண்டும்.

நல்இனத்தின் ஊங்கும் துணையில்லை; தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல். (குறள், 460)

நல்லவர் சேர்க்கை நலம் பல தரும்; தீயவர் தொடர்பு அல்லலே விளைக்கும் எனத் தேவர் இவ்வாறு கூறியுள்ளார். நல்ல அறிவைக் கெடுத்து பொல்லாத புலைகளைப் புகுத்தித் தீயவர் கெடுத்து விடுவர் ஆதலால் அந்த இனத்தைத் தீயினும் தீயதாக வெறுத்து அயலே விலகி நயமா ஒதுங்கி விட வேண்டும்.

தீயாரைக் காண்பதுவும் தீது என்று ஔவையார் இவ்வாறு அறிவுறுத்தியிருக்கிறார். தீயவர் தொடர்பு துயரங்களையே விளைக்கும் ஆதலால் அவரை யாதும் எவ்வகையும் அணுகலாகாது.

**Villainous company hath been the ruin of me.**
**(Shakespeare)**

கெட்டவர் தொடர்பு என்னை அழித்துக் கொண்டிருக்கிறது என இது குறித்துளது. நீச இனம் நாசமே செய்யும்; அதனை அறவே விலகி ஈசனை எண்ணுக; அதனால் புண்ணியங்கள் பொங்கி எண்ணரிய இன்பங்கள் நன்கு விளைந்து வரும்.

இறைவன் ஒருவனே மெய்ப்பொருள். வேறு நிலைகள் யாவும் பொய்ப்புலைகளே எனத் தெளிந்து கொள்வதே சிறந்த ஞானமாம். இத்தகைய ஞானத்தை அடைந்தவர் உத்தம ஞானிகளாய் ஒளி பெற்றுச் சித்த சாந்தியோடு திகழ்ந்து நிற்கின்றார்.

உலக நிலைகளை விலகிப் பரனையே கருதி உருகி யுள்ளவருடைய உரைகளும் செயல்களும் உணர்வு நலங்களை உதவி உயிர்க்கு இனிய அமுதங்களாய்ப் பெருகி வருகின்றன.

மெய்யில் வாழ்க்கையை மெய்எனக் கொள்ளுமிவ்
வையம் தன்னொடும் கூடுவது இல்லையான்
ஐயனே! அரங்கா! என்று அழைக்கின்றேன்
மையல் கொண்டொழிந் தேன்என் தன் மாலுக்கே. [1]

எத்திறத்திலும் யாரொடும் கூடும்அச்
சித்தம் தன்னைத் தவிர்த்தனன் செங்கண்மால்
அத்தனே! அரங்கா! என்று அழைக்கின்றேன்
பித்தனாய் ஒழிந்தேன் எம்பிரானுக்கே. [2]
(பெருமாள் திருமொழி)

குலசேகரப் பெருமாள் என்னும் இவர் சேரநாட்டு மன்னன். உலகு உயிர்களுக்கெல்லாம் ஓர் இறைவன் உண்டு என்று தெளிந்து திருமாலிடம் பெருமால் கொண்டு இவர் உருகியுள்ள நிலைகளை இவ்வுரைகளால் உணர்ந்து கொள்கிறோம். மெய்யறிவு மிகுந்தபோது வையமையல்கள் ஒழிந்து போகின்றன; அவ்வுண்மையை இவருடைய வாய்மொழிகள் இங்கே தெளிவா விளக்கி நிற்கின்றன. அரிய பெரிய அரச செல்வங்களையும் இனிய சுகபோகங்களையும் வெறுத்துத் தனி முதலை நாடியுள்ள மையால் இவருடைய சித்தத்தின் பரிபக்குவத்தையும் தத்துவ ஞானத்தையும் உய்த்துணர்ந்து உவந்து வியந்து கொள்கிறோம்.

மெய்யுணர்வு தெய்வ ஒளியாய்த் திகழ்கிறது.

---

946. உரையுணர்வுக் கெட்டா ஒருபொருள் உண்டு
கரையறுபே ரின்பமது கண்டாய்—திரைமறைவில்
உள்ளபொருள் காணும் உறுதிபோல் உற்றவிப்
பொள்ளலுடல் காண்க புகுந்து. (௬)

இ—ள்.

உரைக்கும் உணர்வுக்கும் எட்டாத ஒரு தனியான தலைமைப் பொருள் பேரின்ப நிலையமாய் எங்கும் பெருகியுள்ளது; திரை மறைவில் இருப்பதைக் காண்பது போல் தெளிவான உணர்வால் உன் உடலகத்தே அதனைக் கண்டு மகிழ்களன்பதாம்.

கண்ணால் உலகப் பொருள்களைக் காண்கின்றோம்; காதால் ஒலிகளைக் கேட்கின்றோம்; மூக்கால் வாசனைகளை அறிகின்றோம்; இவ்வாறு பொறிகளால் நனவில் உணர்ந்ததையே நினைவுகூர்ந்து வருகின்றோம். விழுமிய நிலையில் தெளிவாக எதையும் சிந்தனை செய்வதில்லை. கண்டதையே கண்டு உண்டதையே உண்டு கொண்டதையே கொண்டு குருடுபட்டு வாழ்வதே முருடுபட்ட வாழ்வாய் யாண்டும் நீண்டு அவல நிலையில் பெருகி வருகிறது.

அரிய மனித அறிவுக்கு உரிய பெரிய பயன் அறிவானந்தமாயுள்ள ஆதிமூலப் பொருளை அறிந்து கொள்வதேயாம். இறைவன் அருவமாய் எங்கும் நிறைந்துள்ளான்; பொறிபுலன்களால் அவனை யாதும் அறியமுடியாது; உரை உணர்வுகளுக்கு

எட்டாமல் ஒளி மயமாய் ஓங்கியுள்ள பரமனை வெளியே தெளிவாக் காண இயலாது ஆயினும் ஞானிகள் அவனைக் கண்டு மகிழ்கின்றார். உணர்வின் ஒளி உரியவனைத் தெரிகிறது.

பசுவின் உடல் முழுதும் பால் சுரந்திருந்தாலும் முலை வழியே அது வெளி வருகிறது; சூரியன் ஒளி எங்கும் பரவி நின்றாலும் பளிங்கு முதலிய கண்ணாடிகளிலேயே தெரிய நேர்கிறது; அழுக்குப்படிந்திருந்தால் கண்ணாடியிலும் கதிர் ஒளியைக் காண முடியாது. அழுக்கு இல்லாத இடத்தே தான் கதிர் ஒளி எதிர் வீசுகிறது. மனம் மாசுபடிந்திருந்தால் ஈசன் ஒளி அங்கே யாதும் தெரியாது; மாசு படியாத மனத்திலேதான் பரஞ்சோதியின் தேசு வீசுகிறது. சித்த சுத்தி யில்லாதவன் ஈசனைக் குறித்து எத்தனை வகையாய்ப் பேசினாலும் பித்தன் பிதற்றுவது போல்வதே யாம். பிழையான வழியில் அவனைக் காண இயலாது.

உரை அற்றது ஒன்றை உரைசெய்யும் ஊமர்காள்!
கரை அற்றது ஒன்றைக் கரைகாணல் ஆகுமோ?
திரை அற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரை அற்று இருந்தான் புரிசடை ஈசனே. [திருமந்திரம்]

வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத பொருளைக் குறித்து வீணே பேசி வெறியராய்க் கழியாதீர்கள்; உங்கள் உள்ளத்தைத் தூய்மை செய்து வையுங்கள்; வைத்தால் பரம பரிசுத்தமான அந்தப் பேரின்பப் பொருள் தெளிவாய்த் தெரிய வரும் எனத் திருமூலர் இவ்வாறு குறித்திருக்கிறார். இதயம் சுத்தமானால் ஈசன் அங்கே உதயமாய் உவந்து இருப்பன் என்பது உணர வந்தது. புனித மனம் புனிதனது இனம்.

அகன்அமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று
ஐம்புலனும் அடக்கி ஞானப்
புகலுடையோர் தம்உள்ளப் புண்டரிகத்
துள் இருக்கும் புராணர். (தேவாரம்)

தூய ஞானிகளுடைய இதய கமலத்தில் இருக்கும் பரமன் என ஞானசம்பந்தர் இங்ஙனம் ஈசன் நிலையைக் குறித்திருக்கிறார். பாசம் நீங்கியபோது பசு பதியாய் வருதலால் ஈசனுக்குப் பசுபதி என்று ஒரு இனிய பெயரும் தனியே வந்தது.

பாரறியும் அறிவினுமிப் பார்மேல் நின்ற
பசுஞானத் தானும் எட்டிப் பார்க்கொணுத
பேரறிவே! சிற்றறிவேற்கு இருளைநீக்கும்
பேரொளியே அங்கயற்கண் பிரியா தானே
யாரறிவார் தமிழருமை என்கின் றேன்என்
அறிவீனம் அன்றேவுன் மதுரை மூதூர்
நீர்அறியும் நெருப்பறியும் அறிவுண்டாக்கி
நீ அறிவித்தால் அறியும் நிலமும்தானே- (மதுரைப்பத்து)

சீவ போதத்தால் சிவனை அறிய முடியாது; அவன் அருள் பெருகி வரும்படி மனம் புனிதமாக வேண்டும்; அவ்வாருனல் தெய்வ நிலை யாவும் தெளிவாய் விளங்கும் எனப் பரஞ்சோதி முனிவர் இங்ஙனம் பரஞ்சோதி வழியை விளக்கியிருக்கிருர்.

தனக்கும் இறைவனுக்கும் உள்ள உறவுரிமையை உணர்ந்த போது பிரிந்து நின்ற தாயை நினைந்து பிள்ளை அழுவது போல உள்ளம் உருகி ஞானிகள் அழுகின்றனர். உருக்கமான இந்த அன்பு நிலையில் பரமன் உரிமையோடு விரைந்து அருள் புரிகின் ருன். தாய்க்கும் பிள்ளைக்கும் உள்ள உறவு உள்ளியுணரவுரியது.

பால்நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியேன் உடைய
ஊனினை உருக்கி உள்ஒளி பெருக்கி
உலப்பிலா ஆனந்தம் ஆய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவது இனியே. [திருவாசகம்]

பெற்ற தாயினும் பேரன்போடு வந்து தனக்குச் சிவபெரு மான் அருள் புரிந்துள்ளதை மாணிக்கவாசகர் இவ்வாறு குறித் திருக்கிருர். பத்தியும் ஞானமும் பெருகிவரின் சீவன் சிவனுய் மருவி வருகிறது. ஞான ஒளி அவனை நேரே காட்டுகிறது; அன்பு அவனது இன்ப நலனை இனிது ஊட்டுகிறது.

முன்னை ஞான முதல்தனி வித்தினைப்
பின்னை ஞானப் பிறங்கு சடையனை
என்னை ஞானத்து இருளறுத்து ஆண்டவன்
தன்னை ஞானத் தளையிட்டு வைப்பனே. [தேவாரம்]

மெய்ஞ்ஞான ஒளியால் அஞ்ஞான இருள் நீங்கி அருள் நிலையில் நின்ற அப்பர் ஞான முதல்வனுன பரமனை ஞானத் தனையிட்டு வைத்திருப்பதை இதனுல் அறிந்து கொள்கிறோம்.

ஞானமே வடிவாய்த் தேடுவார் தேடும்
நாட்டமே நாட்டத்துள் நிறைந்த
வானமே எனக்கு வந்துவந்து ஒங்கு
யார்க்கமே மருளர் தாம் அறியா
மோனமே முதலே முத்திநல் வித்தே
முடிவிலா இன்பமே செய்யும்
தானமே தவமே நின்னைநான் நினைந்தேன்
தமியனேன் தனைமறப் பதற்கே. [தாயுமானவர்]

ஞானமே வடிவமான மோன யோகிகள் மோகமாய் நாடித் தேடுகின்ற தேட்டம் எனப் பரமனைக் குறித்துக் காட்டித் தாயுமானவர் இங்ஙனம் உறவு கொண்டாடி யுள்ளார்.

தாயும்என் ஒருமைத் தந்தையும் ஞான
சபையிலே தனிநடம் புரியும்
தூயநின் பாதம் துணைஎனப் பிடித்தேன்
தூக்கமும் சோம்பலும் துயரும்
மாயையும் வினையும் மறைப்பும் ஆணவமும்
வளைத்துஎனைப் பிடித்திடல் வழக்கோ
நாயினேன் இனிஓர் கணம்தரிப் பறியேன்
நல்லருட் சோதிதந் தருளே. (அருட்பா)

தாய் தந்தையரிடம் மைந்தன் உரிமைகளை வேண்டுதல்போல் சிவபெருமானிடம் இராமலிங்க அடிகள் இங்ஙனம் அருளை வேண்டி யிருக்கிறுர். உன் உடலினுள்ள சீவனே நீ; தேகம் முதலிய மோக மயல்களை நீக்கி உனது ஏக நிலையை உணர்க; அவ்வாறு உணரின் இறைவன் உறவு என உனது உயர் தலைமை தெரிய வரும். ஞான விழி திறந்து உன் தானம் காணுக.

தன்னைநேர் காணின் தலைவனும் அப்பொழுதே
இன்னமுதம் ஆக எதிர்எழுவன்—உன்னை
உணர உணர உயரின்பம் ஓங்கிப்
புணரப் புணரும் புறம்.

இதனை உணர்ந்து உண்மை தெளிக.

947. உன்னை மறந்தாய் உலகமெலாம் ஓடியே
என்னமோ தேடி இளைகின்றாய்—உன்னைநீ
ஓர்ந்து தெளிந்தால் உலவாத பேரின்பம்
நேர்ந்து நிறையும் நினை. (எ)

இ-ள்.

உனது உண்மை நிலையை உணர்ந்து கொள்ளாமல் மறந்து விட்டு உலகம் எங்கும் பறந்து திரிந்து பலவும் தேடி வருந்தி யுழலுகின்றாய்; உன்னை நீ ஓர்ந்து தெளிந்தால் பேரின்பம் உன் எதிரே பெருகி வரும்; அதனை மருவி மகிழ்க என்பதாம்.

நான் நீ அவன் என்பன முறையே தன்மை முன்னிலை படர்க்கைகளை உணர்த்தி வருகின்றன. தன்னைக் குறிக்கும் போது தனி மனிதன் நான் என்று சொல்லி வருவது இயல்பா யுள்ளது. நான் என்பது எதை? கை கால் முதலிய அவயவங் களையோ, உடலையோ அது குறிக்கவில்லை என்று தெரிகின்றது. உடலுள் இருக்கும் உயிரே நான் என்னும் சொல்லுக்குப் பொரு ளாயது. யான் எனது என வருவன அகமும் புறமும் மருவின.

உயிர் என்றும் அழிவில்லாதது; அறிவு மிக வுடையது; ஆனந்த நிலையது. ஆகவே சத்து சித்து ஆனந்தம் என யாண்டும் நிறைந்திருக்கும் அந்த ஆதிமூலப் பொருளின் ஞாதி என்பது நன்கு தெரிய வந்தது. பரப்பிரமமாகிய பெரிய சோதியிலிருந்து பிரிந்த சிறிய ஒளித் துளியே சீவன் என வெளிப்பட்டுளது. அணு முதலிய சில பெயர்களால் பேசப்படுகிறது. யாவும் காரணக் குறிகளாய்ப் பூரண நிலையில் அமைந்துள்ளன.

| | | |
|---|---|---|
| உயிர் | -- | உயிர்த்தலையுடையது. |
| சீவன் | -- | சீவித்து வருவது. |
| சேதனன் | -- | அறிவு நலம் அமைந்தது. |
| பசு | -- | பாசத்தால் பற்றப்படுவது. |
| புற்கலன் | -- | மேன்மை மிக்கது. |
| அணு | -- | நுண்ணிய நிலையது. |
| ஆன்மா | -- | வியாபகமானது. |
| கூத்தன் | -- | கூத்தாடிபோல்வது. |

உடல் இயங்கி வருவதைக் கண்டுதான் உள்ளே ஒரு உயிர் உண்டு என்று உணர்ந்து கொள்கிறோம். நேரே கண்ணுக்குத்

தெரியாமையால் இல்லை என்றும், உடலின் செயல்களை நோக்கி உயிர் ஒன்று உள்ளது என்றும் கடவுளைப் போலவே ஆன்மாவும் வாதிக்கப் படுகிறது. சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, அந்தக்கரணான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமூகான்மவாதி என ஆன்மவாதிகள் இவ்வாறு வெவ்வேறு வகையில் நேர்ந்துள்ளனர். உலகநோக்கை விலகி அறிவு நோக்கில் நின்று ஆன்ம விசாரணை செய்ய நேர்ந்த மேன்மையான அறிவாளரும் இங்ஙனம் மாறுபாடாய் வேறுபட்டிருக்கின்றனர்.

உளது இலது என்றலின் எனதுஉடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படின்
உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா.
(சிவஞானபோதம், 3)

உயிரின் நிலைமை தலைமைகளை இது இனிது விளக்கியுள்ளது.

உயிர்எனப் படுவது இந்த உடலின்வேறு உளதாய் உற்றுச்
செயிருறும் இச்சா ஞானச் செய்திகள் உடைய தாகிப்
பயில்வுறும் இன்பத்துன்பப் பலங்களும் நுகரும் பார்க்கின்
துயிலொடும் அஞ்சவத்தைப் படும் உண்மை துரியா தீதம்.
(சிவஞானசித்தியார்)

ஆன்மாவின் உண்மையை இது இங்ஙனம் உணர்த்தியுளது.

வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை
வேங்கடத் துள்ளே விளையாடும் நந்தியை
வேங்கடம் என்றே விரகறி யாதவர்
தாங்கவல் லார்உயிர் தாமறி யாரே. (திருமந்திரம்)

சீவனது நிலையை இது இவ்வாறு குறித்திருக்கிறது. வேங்கடம்=வேகின்றகடம். என்றது உடலை. சீவன் உடலுள் நின்று கூத்தாடுதலால் கூத்தன் என நேர்ந்தான். சிவன் உலகக் கூத்தன்; சீவன் உடல் கூத்தன். அண்டக் கூத்தனும் பிண்டக் கூத்தனும் அறிய வந்தனர். வரவே உரிய உறவு தெரிய நின்றது.

கடத்துள் காற்று நிறைந்துள்ளது; அது உடைந்தால் வாயு வானோடு கலந்து கொள்ளும். உடலுள் ஆவி உள்ளது; அது உடைந்தால் இவ்வுயிர் பரனோடு உறவாய் உறைந்து கொள்ளும்.

அசுத்த வாயு நல்ல ஆகாயத்தை அடையாது; வேறு வாயு மண்டலங்களையே விரவி அலையும். சுத்தமான ஆன்மாதான் பரிசுத்தனை பரமனை மருவும்; அசுத்தமுடையது அயலே மயலான பிறவிகளிலேயே வீழ்ந்து திரியும். மனம் தூய்மை தோய்ந்த போதுதான் மனிதன் தெய்வமாய் உயர்ந்து உய்தி பெறுகிறான்.

உன்னை மறந்தாய்! என்றது உண்மையான ஆன்மநிலையை மறந்து புன்மையான தேகம் முதலியவற்றைத் தான் என்று நம்பி மோகமடைந்து திரியும் மூடநிலையை. இந்த மூடமே பீடைகளுக்கெல்லாம் காரணமாய்ப் பிறவிகளை விளைத்து வருகிறது.

*தன்னை அறியாது உடலைமுன் தான்என்றான்*
*தன்னைமுன் கண்டான் துரியம்தனைக் கண்டான்*
*உன்னும் துரியமும் ஈசனோடு ஒன்றாக்கால்*
*பின்னையும் வந்து பிறந்திடும் தானே.* (1)

*உன்னை அறியாது உடலைமுன் நான்என்றாய்*
*உன்னை அறிந்து துரியத் துறநின்றாய்*
*தன்னை அறிந்தும் பிறவி தணவாதால்*
*அன்ன வியர்த்தன் அமலன்என்று அறிதியே.* [திருமூலர்]

தன்னை அறியாமையால் நேரும் அவல நிலையினைத் திருமூலர் இவ்வாறு பரிவோடு கூறியிருக்கிறார். வேறு பல கலைகளையும் ஆராய்ந்து உண்மையை அறிய முயலுகிற மனிதன் தன்னை அறிவதில் பின்னமாய்த் தாழ்ந்து நிற்பது ஆழ்ந்த மாய மயக்கமாய்ச் சூழ்ந்து நிற்கிறது. மருளும் இருளும் பொருளறியாது நின்றன.

இந்த மாய மோகங்கள் பலவகை நிலைகளில் புலைபடிந்துள்ளன. இருள், மருள், மயக்கம், மையல் என அஞ்ஞான நிலைகள் அமைந்து நிற்கின்றன. அறிவு, தெளிவு, துன்ப நீக்கம், இன்பப் பேறு என ஞான நிலைகள் நண்ணி யிருக்கின்றன.

தனது உண்மை நிலையை உணராதிருப்பது இருள்;
தன்னை மாறாக எண்ணி நிற்பது மருள்;
மயங்கி மண்டி அலைவது மயக்கம்;
மயலோடு மறுகி யுழலுவது மையல்.
உரிய உயிரைக் கருதி எழுவது அறிவு;
அறிந்ததைத் தெளிந்து கொள்வது தெளிவு;
அத்தெளிவால் அல்லல் ஒழிவது துன்ப நீக்கம்;

**அங்கீக்கத்தால் நேர்ந்த ஆனந்தம் இன்பப் பேறு.**

ஆன்ம நிலையை மறந்து அவலமா யிழிந்து அலைவது அஞ்ஞானம்; அந்த ஈன மூடம் ஒழிந்த அளவு ஞானம் விளைந்து வருகிறது. அது வரவே துன்பங்கள் ஒருங்கே நீங்கிப் போகின்றன; அவை போகவே இன்பங்கள் ஓங்கி வருகின்றன.

பிரமமாம் தனைமறந்த பேதைமை யேஅஞ்ஞானம்;
பரனிலை காணும் என்று பகர்தல் ஆவரண மூடல்;
நரன்ஒரு கருத்தால் சீவன் நான்என முளைத்தல் தோற்றம்;
குரவன்வாக் கியத்தால் தன்னைக்குறிக்கொளல் பரோட்சஞானம்

தத்துவ விசாரம் செய்து சகலசந் தேக மும்போய்
அத்துவி தம்தான் ஆதல் அபரோட்சஞானம் ஆகும்;
கர்த்தனும் சீவ பேதம் கழிவதே துக்கம் போகல்;
முத்தனாய் எல்லாம் செய்து முடிந்தது ஆனந்தம் ஆமே. [2]
(கைவல்லியம்)

அஞ்ஞானம் முதல் ஆனந்தம் ஈருகவுள்ள நிலைகளை இவை தெளிவாக் குறித்துள்ளன. குறிப்புகளைக் கூர்ந்து நோக்கித் தத்துவ விளைவுகளை உய்த்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

பொய்யான புலைகளை அறிய யாவரும் அவாவி அலைகின்றார்; மெய்யான நிலையை எவரும் உணருவதில்லை. இந்த வெய்யநிலைவைய மையலாய் மருவி வழிவழியே அழிதுயராய்ப் பெருகியது.

உலகப் பொருள்களை எல்லாம் கண் நேரே காண்கிறது; எதையும் கண்டு களிக்கும் இயல்புடைய அது தன்னைக் காணுவதில்லை; ஒரு கண்ணாடியைக் காண நேர்ந்தால் அப்பொழுது தன்னை எதிரே அது கண்டு மகிழ்கிறது. அதுபோல் எல்லாவற்றையும் அறிகிற அறிவு தனது உண்மை நிலையை உணர்வதில்லை; தெளிந்த ஞானம் ஆகிய கண்ணாடியை அடைந்தபொழுதுதான் தன்னை அறிந்து அது பேரானந்த மடைகிறது. இருளை நீக்கி ஒளி இன்பம் தருதல்போல் மருளை நீக்கி ஞானம் பேரின்பத்தை அருளுகிறது. ஊன நிலைகள் யாவும் அதனால் ஒழிகின்றன.

அரிய இனிய இந்த ஞானம் உதயம் ஆகவில்லையானால் பாசபந்தங்களில் வீழ்ந்து மனிதன் ஈனமாயுழல்கின்றான்; அந்த ஈனப்புலையை ஒழித்துப் பேரின்ப நிலையை அருளுதலால் ஞானம் சிவ அமுதம் எனவும் தேவஒளி எனவும்புகழ்ந்துபோற்றவந்தது.

ஸம்ஸார பீஜம்அஞ்ஞாநம் ஸம்ஸார்யகு; புமாந்யத:
ஞாநாத்தஸ்ய நிவிர்த்தி; ஸ்யாத்ப்ரகாசாத் தமஸோ யதா.
(சூதகீதை)

அஞ்ஞானம் பிறவிக்கு வித்து; அஞ்ஞனை மனிதன் அவலமாயிழிந்தலேகிருன்; இருள் ஒளியால் ஒழிவதுபோல் மருள் ஞானத்தால் ஒழிகிறது என்னும் இது இங்கே அறிய வுரியது.

மெய்யான ஆன்ம நிலையை ஒருவன் தெளிவா உணர்ந்த பொழுது அவன் மெய்ஞ்ஞானி ஆகின்ருன்; ஆகவே பாச மோகங்கள் யாவும் நீங்கி அதிசய ஆனந்தமாய்த் திகழ்கின்ருன்.

அகம்அகம்என்று அனைத்துயிரின் இடத்தும் இருந்து
அனவரதம் உரைப்ப தாகி
நிகழ்ஒளியாய் ஆன்மதத் துவமான
சொரூபத்தை நினைத்தல் செய்வாம்;
திகழ்இதய குகையுறையும் தேவதையை
விட்டயலே தெய்வம் தேடல்
மிகஅரிய கவுத்துவத்தை எறிந்துசிறு
மணிதேடும் வேட்கை போலாம். [1]

இத்தனைநாள் மனமுத்தைத் துளைத்திலேன்
இன்றுதுளைத்து இயைந்த நூலால்
சித்திரமாய்க் கோத்தணிவன் முழுதுணர்ந்த
தேசிகரால் தெளிந்தேன் எல்லாம்
சுத்தபர மானந்தம் தோற்றுவிக்கும்
நல்லறிவாம் சோதி பெற்றேன்
மெத்தஇவன் நான்எனது இங்கு இவை எனும்பொய்
உள்ஒழித்தேன் மீண்டு நாடேன். [2]

இலங்கியசிந் தாமணியாம் இதயம்எனும்
சரக்கறையில் இருக்கும் போதம்
கலங்கலிலா விவேகியர்க்குக் கருதுபொருள்
கற்பகம்போல் கணத்தின் நல்கும்
துலங்குவிசா ரம்படைத்துப் பேதைமைபோய்
நல்லறிவு தோன்றி னோரை
விலங்குகவ சத்தோரை அம்புகள்போல்
காமாதி விகற்பம் தாக்கா. (ஞானவாசிட்டம்) [3]

ஞானம் அடைந்தபோது சனக மன்னனுடைய ஆன்ம அனுபவங்களை இவ்வாறு மேன்மையா வெளியிட்டிருக்கிருன்.

தெளிந்த ஞானியின் வாய்மொழிகள் திவ்விய ஒளிகளாய் விளங்கி நிற்கின்றன. கூறியுள்ள சீவ சொரூபங்களின் உண்மைகளை நுண்மையாக் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். கருதிய அளவு உறுதி நலங்கள் காண வருகின்றன

பரம்பொருளின் அரும்பொருளான ஆன்மா ஆகத்துள் உறைந்துள்ளது. மாய மோகங்கள் நீங்கித் தூய அதனை விவேகமாய்த் தெரிந்து கொண்டால் சோகம் எல்லாம் அடியோடு ஒழிந்துபோம்; ஏகமான பரமானந்தமே எதிரே பொங்கி எழும். உனது சொந்தமான அந்த இன்ப வெள்ளத்தில் தோய்ந்து சுகமாய் வாழுக அவ் வாழ்வே ஆனந்த அதிசய வாழ்வாம்.

---

948. பேரின்ப மான பெரும்பொருள் உன்னிடமே
ஓரின்ப மாக உறைந்திருந்தும்—நேரின்பம்
காணுமல் வீணே கழிதல் இழிவான
மாணு மயக்கே மதி. (அ)

இ-ள்.

அதிசயமான பேரின்பம் நிறைந்த பெரிய பரம்பொருள் உன்னிடமே இன்பமாய் உறைந்துள்ளது; இருந்தும் அதனை நீ உரிமையோடு உணராமல் வறிதே கழிந்து ஒழிவது இழிந்த மதி மயக்கமே; அந்த மருள் ஒழிந்து தெருள் நிலை தெளிந்து கொள்க.

உயிர் வாழ்வு துயரச் சுழல்களோடு தோய்ந்து வருகிறது. எவ்வழியும் அச்சமும் திகில்களுமே நிறைந்துள்ளமையால் சீவர்கள் யாண்டும் எச்சரிக்கையா வாழ்ந்து வர நேர்ந்துள்ளனர். புறநோக்கு அகநோக்கு என இருவகைக் காட்சிகள் வாழ்வில் மருவி எவ்வகையும் செவ்வையாய்ப் பரவியுள்ளன.

பொறிவழிகளிலேயே வெறிகொண்டு வெளியுலகை நோக்கி அலைந்து திரிபவர் தமது உயிர் வாழ்வின் உயர்ந்த குறிக்கோளை இழந்து விடுகின்றனர். அந்த வாழ்வு வைய மையல்களோடு வளர்ந்து வருதலால் வெய்ய துயரங்களே விரிந்து வருகின்றன.

நெறி நியமங்களோடு ஒழுகி அகநோக்குடையராய் ஆன்ம நிலையைக் கருதி வருபவர் மேன்மையான மகிமைகளை மேவி வருகின்றனர். முன்னது மடமை வாழ்வாய் இழிந்து கழி

கிறது; பின்னது ஞான வாழ்வாய் உயர்ந்து திகழ்கிறது.

உண்மை உணர்வு உதயம் ஆயபோது உயிருக்கும் பரத்துக்கும் உள்ள உறவுரிமைகள் தெரிய வருகின்றன; தெரியவே அந்தப் பரம்பொருளை நினைந்து உருகி ஞானிகள் நெஞ்சம் கரைகின்றனர். தேக சம்பந்தமான பாசபந்தங்கள் நீங்கி ஈசனோடு சம்பந்தமாய் எதிரே உரிமையா வாசி பேச நேர்கின்றனர்.

குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறு நீர்போல் சிந்தைவாய்ப் பாயும்
திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீஎன் உடலிடம்கொண்டாய்
இனியுன்னை என்இரக் கேனே? (1)

தந்ததுஉன் தன்னைக் கொண்டது என்றன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்?
அந்தம்ஒன் றில்லா ஆனந்தம் பெற்றேன்;
யாதுநீ பெற்றதுஒன் று என்பால்?
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே!
எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்
யானிதற்கு இலனொர்கைம் மாறே. (திருவாசகம்)

சீவன் சிவமாய்த் திகழ்ந்துள்ள நிலையை இவை சுவையா உணர்த்தியுள்ளன. பேரன்பு சுரந்து பேரின்ப நிலையில் பெருகி வந்துள்ள மொழிகளில் ஞான ஒளிகள் வீசி நிற்கின்றன. "ஈசா! நீயும் நானும் ஒரு ஒப்பந்த வியாபாரம் செய்தோம்; அந்தப் பண்டமாற்றில் நான் அரிய பெரிய அதிசய செல்வத்தை எய்தி ஆனந்தம் அடைந்துள்ளேன்; நீ யாதொரு ஊதியமும் பெறுமல் ஏமாந்து போனுய்!" என்று உல்லாச வினேதமா மாணிக்க வாசகர் ஈசனேடு பேசியிருக்கும் வாசகங்களை யோசனையோடு ஈண்டு ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

தந்தது உன்னை; கொண்டது என்னை, சங்கரா! ஆர் சதுரர்?

இந்தக் கேள்வி எவ்வளவு விநயம்! எத்தனை நுட்பம்! எத்தனை விசித்திரம்! எனது சிவபோதத்தை எடுத்துக் கொண்டு

உனது சிவ போகத்தை எனக்குக் கொடுத்தருளினாய்! நான் ஆனந்தக் கடலில் மூழ்கினேன்; என்னால் நீ என்ன அடைந்தாய்? என்று இறைவனை நோக்கி உள்ளம் உருகி யிருக்கிறார்.

சீவாத்துமாவும் பரமாத்துமாவும் ஒன்றாய்க் கலந்து மகிழும் காட்சியை இங்கே கண்டு மகிழ்கின்றோம். மனம் புனிதமாய் உருகினால் மனிதன் தெய்வமாகிறான். அது மாசு படிந்து மலினம் அடைந்தால் அவன் நீசனாய் இழிந்து ஒழிகிறான்.

சித்தசுத்தி வாய்ந்த அளவு மெய்யுணர்வு மேன்மையாய்த் தோன்றுகிறது; தோன்றவே பொய்ப்பொருள்களை அருவருத்து வெறுத்து மெய்ப்பொருளை நினைந்து உருகுகின்றார்; அந்த உருக்கத்தில் உரைகள் உணர்ச்சிப் பெருக்கோடு ஓடி வருகின்றன.

படமுடியாது இனித்துயரம் படமுடியாது அரசே!
பட்டதெல்லாம் போதும்இந்தப் பயம்தீர்த்து இப்பொழுதுஎன்
உடலுயிர் ஆதியஎல்லாம் நீஎடுத்துக் கொண்டுஉன்
உடல்உயிர் ஆதியஎல்லாம் உவந்துஎனக்கே அளிப்பாய்!
வடலுறுசிற் றம்பலத்தே வாழ்வாய்என் கண்ணுள்
மணியேஎன் குருமணியே மாணிக்க மணியே
நடனசிகா மணியேஎன் நவமணியே ஞான
நன்மணியே பொன்மணியே நடராச மணியே. [அருட்பா]

என்னுடைய உடல் பொருள் ஆவி யாவும் நீ எடுத்துக் கொண்டு உன்னுடைய நீர்மைகளை எனக்கு அளித்தருள் என்று இறைவனை நோக்கி இராமலிங்க அடிகள் இவ்வாறு வேண்டியிருக்கிறார். பரமனோடு சீவனுக்கு உள்ள தொடர்புகளை உணர்ந்தவர் ஞானிகள் ஆகின்றார்; ஆகவே அவனோடு ஏகமாய்க் கலந்து எவ்வழியும் திவ்விய சுகமா அவர் இன்புறுகின்றார்.

யானும் தானாய் ஒழிந்தானை யாதும் யவர்க்கும் முன்னோனை
தானும் சிவனும் பிரமனும் ஆகிப் பணைத்த தனிமுதலை
தேனும் பாலும் கன்னலும் அமுதும் ஆகித் தித்தித்துஎன்
ஊனில்உயிரில் உணர்வினில் நின்றஒன்றை உணர்ந்தேனே.
(திருவாய்மொழி)

நம்மாழ்வார் இறைவனோடு தோய்ந்து பேரின்ப நிலையில் திளைத்துள்ளமையை இது உணர்த்தியுள்ளது. மருள் நீங்கித் தெருள் அடைந்த பொழுது உயிர் பரமாய் உயர்ந்து உய்தி பெறுகிறது. பெறவே பேரானந்த நிலையில் பெருகி மகிழ்கிறது.

வான்பொருள் ஆகி எங்கும்நீ இருப்ப
வந்துஎனைக் கொடுத்துநீ ஆகாது
ஏன்பொருள் போலக் கிடக்கின்றேன் முன்னை
இருவினை வாதனை அன்றோ?
தீன்பொரு ளான அமிர்தமே! நின்னைச்
சிந்தையில் பாவனை செய்யும்
நான்பொரு ளானேன் நல்லநல் அரசே!
நான்இறந் திருப்பது நாட்டம். (1)

என்னுடை உயிரே! என்உளத்து அறிவே!
என்னுடை அன்பெனும் நெறியாய்
கன்னல்முக் கனிதேன் கண்டமிர்து என்னக்
கலந்துஎனை மேவிடக் கருணை
மன்னிய உறவே! உன்னைநான் பிரியா
வண்ணம்என் மனம்எனும் கருவி
தன்னது வழியற்று என்னுழைக் கிடப்பத்
தண்ணருள் வரமது வேண்டும். (தாயுமானவர்)

சீவ போதம் ஒழிந்த பொழுது சிவ போகம் சுரந்து வரும் என்பதை இதனால் உணர்ந்து கொள்கிறோம். பாச மயல்கள் நீங்கி ஈசனை அருள் எய்தி என்றும் அழியாத விழுமிய இன்ப நலம் பெறுக. சொந்தமான அந்தப்பேறு அந்தமிலா ஆனந்தமாம்.

---

949. மதியாய் வருவதே மாறி உனது
கதியாய் வருதல் கருதி—விதியாக
மேலான சிந்தனையே மேவுக முத்தியுன்
பாலான தாகும் பதிந்து. (௯)

இ-ள்.

மதிநலம் கனிந்த தெளிந்த ஞானமே கதிநலமாய் விளைந்து வருகிறது; மேலான அந்த இன்ப விளைவை விதி முறையே சிந்தனை செய்துவரின் பேரின்ப முத்தி உன்பால் அன்பாய் வரும்; அத்தகைய நித்திய நிலையில் நிலைத்து வாழுக என்பதாம்.

பொருள்களைப் பகுத்து நோக்கித் தகுதிகளை மதித்து உணரும் திறம் மதி என வந்தது. இந்த மதி நுட்பம் அதிசய மகிமைகளை ஆக்கி உயர்ந்த கதி நலங்களை நேரே காட்டி அருளுகிறது.

பிறப்பையும் இருப்பையும் வாழ்வையும் சாவையும் நேரே அறிந்துவரினும் அவற்றின் புலைகளையும் நிலைகளையும் பலர் உணர்ந்து உறுதி காணுமல் ஊனமாயுழலுகின்றனர். தம்முடைய இனிய உயிர்க்கு இதத்தை நாடாதவர் மதிகேடராகின்றனர். ஈன இடர்களுக்கெல்லாம் ஞான சூனியமே மூலகாரணமாய் முடிகிறது. மெய்யறிவு குறைய வெய்யதுயர் விரிகிறது.

உண்மை நிலையை ஊன்றி உணராமல் புன்மையான வழிகளில் மனம் போனபடியெல்லாம் மருண்டு திரிவது மதிகெட்டபடியாம். மதிகேட்டான் கதிகேட்டான் என்பது முதுமொழி. நாயமதி இழிந்த அளவு தீய விதி விளைந்து விரிந்து வருகிறது.

மதி உயர்ந்தது ஆனுல் மனத்தை நல்ல நெறிகளில் நடத்தி நலம் பல காணுகிறது; அது இழிந்ததாளுல் ஒளி இழந்த கண் போல் குருடுபட்டு யாண்டும் அல்லல்களையே அடைகிறது.

மெய்தேர்ந்த விவேகம் கைதேர்ந்த பாகன்போல் வாழ்க்கைத் தேரை வசமா நடத்துகிறது; பாகன் சரியாய் இல்லையாளுல் தேர் நேரே நடவாது; சிதைந்து வீழும்; விவேகம் தெளிவாயில்லையாளுல் வாழ்வு ஒழுங்கா நடவாது; ஊனமடைந்து தாழ்ந்து போம். விழியின் ஒளி போல் அறிவு வழி தெரிகிறது.

தேகம் தேர்; பொறிகள் குதிரைகள்; மனம் கடிவாளம்; மதி பாகன்; சீவன் அரசன். சீவியத்தை இவ்வாறு ஓவியமா உபநிடதம் உருவகம் செய்து ஒழுங்கு காட்டியுள்ளது.

அறிவாகிய பாகன் சரியாயில்லையாயின் மனம் மதம் மீறி அலையும்; பொறிகள் வெறிகொண்டு திரியும்; வாழ்வு பாழாம்; சீவன் நாசமாம். மதிநலம் குன்றிய அளவு மனிதன் குன்றிக் கதிநலம் யாதும் காணுமல் கழிந்து இழிந்து ஒழிந்து போகிருன். மனமும் மதியும் இதமாய் இனிது அமையின் அந்த மனிதன் புனிதனுய் உயர்ந்து தனியே அதிசய நலங்களை அடைகிருன்.

மனம்எனும் தோணி பற்றி மதிஎனும் கோலை ஊன்றிச்
சினம்எனும் சரக்கை ஏற்றிச் செறிகடல் ஓடும் போது
மதன்எனும் பாறை தாக்கி மறியும்போது அறிய ஒண்ணுது
உனையுனும் உணர்வை நல்காய் ஒற்றியூர் உடைய கோவே!

(தேவாரம்)

பிறவிக் கடலைக் கடத்தற்கு மனமும் மதியும் முறையே

தோணியும் கோலும் ஆய்த் துணை புரிகின்றன என்பதை இதனால் அறிந்து கொள்கிறோம். அல்லல்கள் யாவும் நீங்கி நல்ல பேரின்ப நிலையை அடைய வேண்டுமானால் மனம் புனிதமாக வேண்டும். மதி தெளிவாக வேண்டும். தூயசிந்தையும் தெளிந்த விவேகமும் திவ்விய நீர்மைகள் ஆகலால் அவை சிறந்த கதிகளை விரைந்து அருளுகின்றன. மனநலம் மன்னிய பாக்கியமா மருவி வருகிறது.

கீழான இழிவுகளை அறவே விட்டு மேலான பர நிலையை நிலையாக அறிய நேர்ந்தபோதுதான் மதி ஞானம் ஆய் வருகின்றது. சித்தம் தெளிந்த இந்த ஞானம் முத்திக்கு வழியை எத்திக்கிலும் எளிதே காட்டி யருளுகிறது. ஞான விழி வான ஒளியாய் மோன சோதியை வீசி வருதலால் அதனையுடையவர் பரஞ்சோதியாய்த் தேசு மிகுந்து சிறந்து திகழ்கின்றார்.

ஞானம் விளைந்தெழு கின்றதோர் சிந்தையுள்
ஏனம் விளைந்தெதி ரேகாண் வழிதொறும்
கூனல் மதிமண் டலத்தெதிர் நீர்கண்டு
ஊனம் அறுத்துநின் றொண்சுடர் ஆகுமே. (1)

நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவம் கடந்த பிணக் கற்றோன்;
கண்ணிய நேயம் கரைஞானம் கண்டுளோன்
திண்ணியன் சுத்தன் சிவன்முத்தன் சித்தனே. (2)
(திருமந்திரம்)

தன் உள்ளத்தில் ஞானம் விளைந்தபோது உலகத்தில் அந்த மனிதன் அடைந்துவரும் நிலைமைகளைத் திருமூலர் இவ்வாறு செவ்வையா விளக்கியிருக்கிறார். சித்தன், முத்தன், சுத்தன், சிவன் என ஞானியைக் குறித்திருக்கும் குறிப்புகள் கூர்ந்து சிந்திக்கத்தக்கன ஞான ஒளி தோய்ந்த பொழுது சீவன் சிவனாய்ச் சிறந்து திகழ்கிறான். அந்தச் சிறப்பு நிலை தெரிய வந்தது.

ஒளியால் அன்றி இருள் வேறு வழியால் ஒழியாது; அது போல் ஞானத்தால் அன்றி மருள் நீங்காது; ஆகவே பிறவி நீங்கிப் பேரின்ப நிலையை அடைய நேர்ந்தவர் ஞானம் ஆகிய திவ்விய இரதத்தில் ஏறியே மேலே போகின்றனர்.

ஞானம் கொண்டு நணுகும் சிவபதம்
ஊனம் கொண்ட கருமத்து உறுவது

வானம் கொண்டு வளர்த்தல் புகைஅநு
மானம் கொண்டு வளர்த்தலை ஒக்குமால். (பிரபுலிங்கலீலை)

மேகம் பொழியும் மழையால் அன்றிப் புகைப்படலத்தால் பயிர் வளராது; அதுபோல் சீவப்பயிர் ஞான ஒளியாலேயே செழித்து வளர்ந்து சிவ கதியை அடையும் என இது உணர்த்தியுள்ளது. வான நீரும் ஞான நீர்மையும் நேராய் நின்றன.

சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் இந்நான்கும் முத்தித்தலத்தை அடையவுரிய நெறிகளாம். முதலிலுள்ள மூன்றும் கீழ்ப் படிகள்; ஞானம் மேலான நிலையில் மேவியுள்ளது.

கன்மநெறி தப்பின் கடுநரகுஎன்று எந்நாளும்
நன்மைதரு ஞானநெறி நாம்அணைவது எந்நாளோ?
ஞானநெறி தானே நழுவிடினும் முப்பதத்துள்
ஆனமுத்தி நல்கும்என அன்புறுவது எந்நாளோ?
(தாயுமானவர்)

முத்திக்கு இனிய வழி ஞானமே எனத் தாயுமானவர் கருதியுள்ளதை இது உறுதியாக் காட்டியுள்ளது. உள்ளதை உள்ளபடி தெளிவாய் அறிவதே ஞானம் ஆதலால் அந்த ஒளி விழியின் எதிரே திவ்விய நிலை எவ்வழியும் செவ்வையா விளங்குகிறது. அறிவுக் காட்சி ஆனந்த நீட்சியாய் விரிகிறது.

சரம் அசரமாய்ப் பரந்து விரிந்துள்ள உலகங்கள் எங்கணும் பாலுள் நெய்போல் இறைவன் பரவியிருக்கிறான் என ஞானிகள் உணர்ந்து கொள்வதால் யாண்டும் ஈசனையே கண்டு எவ்வழியும் திவ்விய நிலையில் அவர் இன்புற்று வருகின்றனர்.

நிலம் நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோடு எண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்
உலகேழெனத் திசை பத்துஎனத் தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோள்நோக்கம் ஆடாமோ. (திருவாசகம்)

திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவை மிசை
படர்பொருள் முழுவதுமாய் அவையவை தொறும்
உடல்மிசை உயிர்எனக் கரந்துஎங்கும் பரந்துஉளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே. [திருவாய்மொழி]

மண் ஆகி விண் ஆகி மலையும் ஆகி
வயிரமுமாய் மாணிக்கம் தானே ஆகிக்

கண் ஆகிக் கண்ணுக்குஓர் மணியும் ஆகிக்
கலை ஆகிக் கலைஞானம் தானே ஆகிப்
பெண் ஆகிப் பெண்ணுக்குஓர் ஆணும் ஆகிப்
பிரளயத்துக்கு அப்பாலோர் அண்டம் ஆகி
எண் ஆகி எண்ணுக்குஓர் எழுத்தும் ஆகி
எழுஞ்சுடராய் எம்அடிகள் நின்றவாறே. (தேவாரம்)

பார்த்தஇடம் எல்லாம் பரமன்காண் அம்மானை
பாராமல் இந்நாளும் பாழ்பட்டேன் அம்மானை. [திருவம்மானை

எங்கும் சிவம்ஒழிய இல்லை அவன் தன்ஆணை
அங்கம் திரள்கருவி ஆணவமாம்—பொங்குமிருள்
மைசெய்த மாமாயை மாயைவினை மற்றனைத்தும்
பொய்பொய்பொய் பொய்பொய்பொய் பொய்.
(சிவானந்தமாலை)

ஞானக் காட்சியுடையவர் கடவுளைக் கண்டு களிக்கும் மாட்சிகளை முன்னதாக இவை காட்டியுள்ளன. இவ்வாறு தன்னைக் காணும் ஞானிகளை இறைவன் முறையே கண்டு களிக்கிருன்.

யோமாம் பச்யதி சர்வத்ர ஸர்வம் ச மயி பச்யதி
தஸ்யாஹம் ந ப்ரணச்யாமி ஸ ச மே ந ப்ரணச்யதி.
(பகவற்கீதை 6-30)

எவன் என்னை எங்கும் காண்கிருனே, எல்லாப் பொருள்களையும் என்னிடத்தே எவன் பார்க்கிருனே, அவனுக்கு நான் இனியவனுகிறேன்; எனக்கு அவன் உரியவனுகிருன் எனக் கண்ணன் கூறியுள்ள இது இங்கே எண்ணியுணர வுரியது.

இவ்வாறு தெளிவான ஞானக் காட்சியுடையவர் எவ்வழியும் சீவன் முத்தராய்த் திவ்விய நிலையில் சிறந்து திகழ்கின்றுர்.

யஸ்மிந் ஸர்வாணி பூதானி ஆத்மைவாபூத் விஜாநத:
தத்ர கோ மோஹ: க: சோக ஏகத்வம் அநுபச்யத:
(ஈசாவாஸ்யம். 7)

எல்லாச் சீவ கோடிகளும் பரமாத்துவிலிருந்தே தோன்றியுள்ளன என்று ஒருவன் அறிந்தபொழுது ஏகமான ஒரே உண்மை நிலையையே தெரிகிருன்; தெரியவே சோக மோகங்கள் ஒளி முன் இருள்போல் அவன் எதிரே ஒழிந்து போகின்றன என ஈசாவாசிய உபநிடதம் ஏழாவது மந்திரம் இவ்வாறு குறித்துள்ளது. அறிய வுரியதை அறியவே ஆனந்தம் வருகிறது.

ஏகவுரு வாய்உயிர்கள் எங்கணும் நிறைந்தே
ஓகைஒழி யாதுறையும் ஞானஒளி ஓதும்
சோகமொடு மோகம்எறி தொன்முனிவர் ஆகும்
யோகியர் உளத்தினிடை அன்றியுறை யாதால்.
(கூர்மபுராணம், மாயா, 11)

உண்மை தெளியும் ஞான ஒளி தூய முனிவர் இடமே இனிது தோன்றும் என்னும் இது ஈண்டு நுணுகி உணரவுரியது.

உள்ளத்தைத் தூய்மை செய்; எல்லா உயிர்களும் இறைவன் உருவங்கள் என்று கருதுக; அவ்வாறு கருதிவரின் பிறவித் துயரங்கள் நீங்கிவிடும்; பேரின்ப முத்தி நேரே ஓங்கி வரும்.

---

950. உன்னைநீ முன்னம் உணர்க உணரினே
பின்னைவே றின்னல் பிறவாதே—மன்னியபேர்
இன்ப வுருவனாய் எவ்வுலகும் அன்பூர்ந்து
முன்புதொழ நிற்பாய் முதல். (ம)

இ—ள்.

முன்னதாக உன்னை நீ நன்கு உணருக; அவ்வாறு உணரின் பின்பு யாதொரு துன்பமும் உனக்கு நேராது; என்றும் நிலையான இன்ப உருவனாய் எவ்வுலகும் உவந்து தொழ நீ உயர்ந்து விளங்குவாய்; அந்த நிலையை அடைந்து கொள்க என்பதாம்.

உணர்வுநலம் நன்கு நிறைந்த மனிதப் பிறவியை அடைந்தது உயர்ந்த கதியை அடையவேயாம். அவ்வாறு எய்தியவன் பரம பாக்கியவான் ஆகின்றான்; எய்தாதவன் ஆக்கம் இழந்தவனாய் அவல நிலையில் தாழ்ந்து அவமே கழிந்து போகின்றான்.

மடையன் மூடன் பேதை என்பன இழிநிலையரைக் குறித்து வந்துள்ளன; அறிவாளி மேதை ஞானி என்பன உயர் நிலையாளரை உணர்த்தி வருகின்றன. அறிவைவிட மேதை என்னும் சொல் நூறுமடங்கு உயர்ந்தது; மேதையைவிட ஞானி என்பது ஆயிரம் பங்கு உயர்ந்தது. ஞானம் ஆன்மாவின் மேன்மையான ஒளி. இதனையுடையவர் ஓதாமலே எல்லாக் கலைகளையும் எளிதே உணர்ந்து கொள்ளுகின்றனர். உள்ளத் தூய்மையால் உறுவது ஆதலால் பேரின்ப வெள்ளத்தை நேரே இது அருளுகின்றது.

கல்வியறிவு கைவிளக்கைப்போல் சிறிதுதான் காண உதவுகிறது; ஞானம் கதிர் ஒளிபோல் அரிய பல பொருள்களை எளிதே தெரியச் செய்கிறது. இதனை இயல்பாக வுடையவன் உயர் ஞானியாய் ஒளிமிகப் பெறுகிருன்; இழந்தவன் கழிமடையனுய் இழிந்து அழி துயரங்களில் யாண்டும் நீண்டு உழல்கின்ருன்.

A man's wisdom is his best friend; folly his worst enemy.
(W. Temple)

ஒரு மனிதனுடைய ஞானம் அவனுக்கு நல்ல நண்பன்; அஞ்ஞானம் கொடிய பகைவன் என இது குறித்துள்ளது.

True wisdom is to know what is best worth knowing, and to do what is best worth doing. [Humphrey]

அறியத் தகுந்ததை விரைந்து அறிந்து செய்யவுரியதை நன்கு புரியும்படி செய்வதே உண்மையான ஞானமாம் என இது உணர்த்தியுள்ளது. உற்றதை உணரின் உரியது உறுகிறது.

எதை அறிந்தால் எல்லா அல்லல்களும் ஒருங்கே ஒழியுமோ அதை அறிந்து அவ்வழியே ஒழுகுவதே திவ்விய ஞானமாய்த் தெளிய நின்றது. ஈனம் படியாமல் ஞானம் படிந்தவர் வானம் படிந்து வரம்பில் இன்பங்களை அடைந்து மகிழ்கின்றனர்.

ஈனம் தொடராமல் எவ்வழியும் பேரின்ப
வானம் தொடர வருவதே---ஞானமென
வந்த ததுவே வருபே ரொளியான
அந்தமிலா ஆனந்தம் ஆம்

ஞானத்தின் நயனையும் பயனையும் இது நன்கு உணர்த்தி அதனைத் தோய்ந்து உய்யுமாறு இங்கு ஊக்கியிருக்கிறது.

வான ஒளி எதிரே வைய இருள் ஒழிதல்போல் ஞானி ஒளி முன் வெய்ய மருள் ஒழிகிறது. ஒழியவே மெய்யான பேரின்பம் மேவுகிறது. அறிவும் இன்பமும் அமுதும் சுவையுமாயுள்ளன.

சத்தியம் ஞானம் ஆனந்தம் என்னும் இம்மூன்றும் கடவுளுக்குத் தூல சூக்கும காரண சரீரங்களாய் மருவியுள்ளன. ஞானனந்தமயம்பிரமம் என்பது வேத மந்திரம்.

உண்மையறிவு ஆனந்த வுருவாகி
எவ்வுயிர்க்கும் உயிராய் நீரின்

தண்மைஅனல் வெம்மைஎனத் தனைய கலா
திருந்துசரா சரங்கள் ஈன்ற
பெண்மையுரு வாகியதன் ஆனந்தக்
கொடி மகிழ்ச்சி பெருக யார்க்கும்
அண்மையதாய் அம்பலத்துள் ஆடியருள்
பேரொளியை அகத்துள் வைப்பாம்.
(திருவிளையாடல்)

சத்து சித்து ஆனந்தமாய் எங்கும் பரந்து விரிந்துள்ள பரமன் நிலையை இது வரைந்து காட்டியுள்ளது. மெய்ஞ்ஞானம் இறைவனுக்கு வடிவம் ஆதலால் அதனையுடைய மெஞ்ஞானிகளிடம் அவன் ஆனந்தமயமாய் என்றும் மேவியிருக்கிருன்.

உணர்பொருளும் உணர்வானும் உணர்வும்எனும்
பகுப்புஒழியாது ஒழிந்து பானுப்
புணர்விழியும் நீர்நிழலும் தீயிரும்பும்
புனல்உவரும் பரிதி மீனும்
துணையஇரண் டறுகலப்பின் எம்முடனுய்ப்
பேரின்பம் துய்த்து வாழ்வார்
இணர்விரைத்த மலர்க் கோதாய்! அவர்வடிவே
எமக்கினிய கோயி லாமால். (காஞ்சிப்புராணம்)

ஞானிகள் எம்முடன் பேரின்பம் துய்த்து வாழ்வார்; அவர் வடிவமே எனக்கு இனிய கோயில் என இறைவியிடம் இறைவன் இவ்வாறு உரிமையோடு உவந்து கூறியிருக்கிருன்.

எண்டருமெய்ஞ் ஞானிகள்தாம் நன்மைதீமை
இயற்றினுமப் பலனுகரார் இவர்தம் மேனி
கண்டுதொழு வார்இகழ்வார் தம்பால் எய்தும்
கருமுகிலின் செயல்போலக் கருதார் ஒன்றும்
பண்டிகலும் வினையுடலின் பலிப்பி ஞலே
பகர்காலம் திசைகளருந்தவங்கள் சீலம்
கொண்டதியா னம்செபங்கள் பூசையாவும் குறித்திடினும்
ஒழித்திடினும் அவர்க்கு அமலன் பணியே.
(சிவஞானதீபம்)

மேலான ஞானிகளுடைய நிலையை இது விளக்கியுளது.

நிலம் நீர் முதலிய பஞ்ச பூதங்களின் தோற்றங்களையும் அகில லோக காரணனுய் இறைவன் இருக்கும் இயல்பையும் பூரணமா அறிந்தவர்கள் ஆதலால் ஞானவான்கள் வான ஒளி போல் எவ்வழியும் திவ்விய நோக்கோடு சிறந்து திகழ்கின்ருர்.

யஸ்து ஸர்வாணி பூதாநி ஆத்மந்யேவாநு பச்யதி
ஸர்வ பூதேஷு சாத்மாநம் ததோ ந விஜு குப்ஸதே.
(ஈசாவாஸ்யம்)

அகில சராசரங்களை ஆத்துமாவிலும் அந்த ஆன்மாவைச் சகல சீவராசிகளிலும் எவன் பார்க்கிறானோ அவனே ஞானி; எங்கும் சமமான அமைதியாய் அவன் அமர்ந்திருப்பான் என இந்த வேத மந்திரம் போதனையோடு குறித்துள்ளது.

ஸர்வ பூதஸ்தம் ஆத்மாநம் ஸர்வபூதாநி சாத்மநி
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்சந:
(பகவற்கீதை; 6-29)

ஆத்துமாவில் அகிலத்தையும், ஆத்துமாவை எல்லா உயிர்களிலும் ஞான யோகி காண்கிறான்; காணவே எங்கும் அவன் சமமாயிருக்கிறான் எனக் கீதை இங்ஙனம் குறித்திருக்கிறது.

அரிய பரமனை ஞானிகள் உரிமையோடு தெளிவாய்க் காணுகின்றனர்; அந்தக் காட்சிகளை இங்கே நாம் கண்டு மகிழ்கின்றோம். ஆன்ம நோக்கம் ஆனந்தமாய் வருகிறது.

உலக பாசங்களைக் கடந்தபொழுது உண்மை ஞானம் தேசு வீசி வருகிறது; வரவே ஈசனைக் கண்டு இன்பம் மீதூர்கின்றனர். மாய மோகம் ஒருவிய பொழுது தூய பரம் தெரிகிறது.

மைத்தகு மாயை என்னும் மதுநுகர்ந்து அறிவிலோர்கள்
மொய்த்தரும் பிரபஞ்சத்தை வேறுவேறாகக் காண்பர்;
சுத்தராய் ஞானனந்தச் செழுங்கடலதனில் தோய்ந்து
தத்துவம் அறிந்தோர் ஒன்றாய்த் தம்முளே சகத்தைக் காண்பார்.

எண்ணுறும் எண்ணெய்போல எங்கணும் நிரம்பி நிற்கும்
நண்ணரும் பிரமம் தன்னில் நண்ணிய சீவன் முத்தர்
விண்முதல் ஆய பூதம் எவற்றினும் மேவி என்போல்
பண்ணருந் திருட்டியாதி பண்ணினும் பண்ணுவாரால். (2)

நித்தியானந்தம் ஆகி நிமலமாம் பிரமம் தன்னை
தத்துவ வித்தாய் உள்ளோர் பிரணவம் தன்னால் என்றும்
உத்தம தியானம் செய்யா உளமுவந்து எனது தாளில்
பத்திசெய்து என்பால் பாலில்பால்கலந்து என்னச் சேர்வார்.
(கூர்மபுராணம், தத்துவதரிசனம்)

தத்துவ ஞானிகளுடைய நிலைகளையும் காட்சிகளையும் இவை நன்கு காட்டியுள்ளன. பாலில் பால் கலந்ததுபோல் பரமனோடு

அவர் கலந்து கொள்வார் என்றதனால் அவரது தலைமையையும் அதிசய ஆனந்த நிலைமையையும் ஈங்கு அறிந்து கொள்கிறோம்.

தூய ஞானம் தோய்ந்த பொழுது தீய மருள்கள் ஒழிந்து போகின்றன; அரியபல இனிய நீர்மைகள் பெருகி உயிர் புனித நிலையில் உயர்கின்றது; உயரவே உயர் பரனோடு கலந்து மகிழ்கிறது. புனித ஞானம் மனிதனைப் புண்ணியன் ஆக்குகிறது.

**The wise man is also the just, the pious, the upright, the man who walks in the way of truth. [Zochler]**

ஞானவான் நீதியும் நேர்மையும் தெய்வபத்தியும் நிறைந்து உண்மை நெறியில் ஒழுகும் உத்தமனாய் உயர்ந்துள்ளான் என உணர்த்தியுள்ளது. மெய்யறிவு தெய்வ நீர்மைகளை அருளுகிறது.

உண்மை ஞானம் இதயத்தில் உதயம் ஆயபோது அந்த மனிதன் உலகத்தில் ஒளி வீசி நிற்கிறான்; அந்த நிலைமையும் நீர்மையும் எவ்வழியும் தலைமை தோய்ந்து திவ்விய மகிமையில் சிறந்து திகழ்கின்றன ஞானம் வர வானம் வருகிறது.

மெய்யுணர்வு மெய்ப் பொருளை நன்கு தெரிதலால் பொய்ப் புலைகள் புகைந்து போகின்றன; போகவே பேரின்ப நிலையை ஞானி நேரே அடைகிறான். பிறவித் துயர்களையெல்லாம் அடியோடு நீக்கிப் பேரானந்தம் தருதலால் ஞானம் ஆரா அமுதம் என அமைந்து நின்றது. பிறவித் துயர்களை அது களைகின்றது.

ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு. (குறள், 357)

உணர வேண்டிய உண்மையை உணர்பவன் ஞானி; அவ்வாறு உணர்ந்தால் பின்பு அவனுக்குப் பிறப்பு இல்லை என இது உணர்த்தியுள்ளது. பிறவாமைக்கு எல்லையைக் காட்டியிருக்கும் காட்சி கருதியுணரவுரியது. உள்ளது என்றது என்றும் உண்மையாயுள்ள பரம்பொருளை. உள்ளதை உள்ளி உய்தி யுறுக.

ஆன்ம ஞானத்துக்கும் பரமான்மாவுக்கும் உள்ள உறவுரிமைகள் இங்கே தெளிவாக வெளியாயுள்ளன. மெய்யான பொருளை மேவி நின்ற அளவு உயிர் உயர்ந்து உய்தி பெறுகிறது; பொய்யான மருளை மருவின் புலைத்துயர்களையே அடைகிறது.

காணப் படுகிற இவ்வுலகம் பல கோடி சீவராசிகளை யுடையது; செய்த வினைகளுக்கு ஈடாகவே தேகங்களை எடுத்து அலைகின்றன; எல்லாம் வெய்ய துயரங்களை யுடையன; பொய்யான மாய மயல்களால் விளைந்தன; இந்தத் தீய புலைகள் தோயாமல் உள்ளம் தூயராய் உயர்ந்து உண்மைப் பொருளை உணர் பவர் ஞானிகள் ஆகின்றார்; ஆகவே ஞானனந்த மயமான ஈசனை அடைந்து என்றும் குன்றாத இன்பம் மிகப் பெறுகின்றார்.

உலகு எது? நாம் ஆர்? என்ன உற்று நின்றுணரு மட்டும்
கலகமார் பிறவி மோகம் கங்குல்போல் மூடி நிற்கும்;
அலகறும் உலகும் தாமும் அழிவில்சிற் சோதி என்றே
சலனமில் கண்ணால் கண்டோர் தத்துவ நிலைமை கண்டோர்.
(வாசிட்டம்)

தன்னைச் சரியாக அறியும் வரையும் பிறவி இருள் நீங்காது; ஆன்ம நிலையை உண்மையாக அறிந்தவரே நித்திய முத்தராய் நிலவி நிற்கின்றார்; அந்தத் தத்துவ நலனை இது உணர்த்தியுளது.

தன்னைத் தான்இனிது அறிவதே தத்துவ அறிவாம்;
பின்னை வேறுள அறிவெலாம் பித்தறி வாகும்;
முன்ன தாகிய அறிவினை யுடையவர் முதன்மை
மன்னி மாண்புயர் இன்பினை மருவியுள் மகிழ்வார்.
(வீரபாண்டியம்)

உள்ளதை உணர்ந்து மெய்ஞ்ஞானியாய் நீ உய்தி பெறுக.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மெய்யான பொருளை அறிவதே ஞானம்.
அது துன்பங்களை நீக்கி இன்பங்களை அருளும்.
தூய பரத்தை நேரே காட்டும்.
ஆன்ம ஒளியாய் மேன்மை புரியும்.
ஒளிமுன் இருள்போல் அதன் முன் மருள்போம்.
கடவுள் நிலையைக் கண்டு தெளிக.
உன்னை உணரின் இன்னல் ஒழியும்
இன்ப உருவாய் இருக்க நேரும்.
சித்த சுத்தி முத்திக்கு வித்து.
பேரின்ப வெள்ளம் அதன் எதிரே பெருகி வரும்.

கூ௫—வது ஞானம் முற்றிற்று.

# தொண்ணூற்றாறம் அதிகாரம்.

## துறவு.

அஃதாவது உலக ஆசைகள் யாவும் துறந்து நிற்கும் சிறந்த உறுதி நிலை. தெளிந்த ஞானத்தின் பயனாய் விளைந்து வருகின்ற உயர்ந்த தகைமை ஆதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

951 மண்ணாசை எல்லாம் மறந்து துறந்தவனை
விண்ணாசை யோடு விரும்புமால்—எண்ணாசை
இல்லாத மேதையை ஈசனுமே ஆசையாய்
உல்லாச மாடும் உவந்து. (க)

இ-ள்.

மண் பெண் பொன் என மருவியுள்ள உலக ஆசைகள் யாவும் துறந்துள்ள துறவியை விண்ணவரும் ஆசை யோடு வியந்து புகழ்வார்; ஈசனும் அவனை உவந்து காணுவன் என்க.

ஈசனை அடைவதே சீவனுடைய இறுதியான உறுதி முடிவு. அவ்வாறு அடைந்த போதுதான் அதிக ஆனந்த மயமாய் அது அலமந்து திகழும் அந்தப் பேரின்பப்பேற்றைப் பெறமுடியாத படி சிற்றின்பஆசைகள் இடையேபுகுந்து தடைகளாய் நீண்டு எவ்வழியும் வெவ்விய துயரங்களை விளைத்து வருகின்றன. இழிந்த நீசத் தொடர்புகள் உள்ள அளவும் உயர்ந்த ஈசனை அணுக முடியாது. பாசம் அற்றவழி ஈசன் உற்ற துணை ஆகிறான்.

உயிரைத் துயர் உறுத்தி வருகிற அவல ஆசைகள் அளவிடலரியன; ஆயினும் அவை மூவகையுள் அடங்கியுள்ளன.

மண் ஆசை, பெண் ஆசை, பொன் ஆசை என்னும் இந்த மூன்றனுள் பொல்லாத ஆசைகள் எல்லாம் அடங்கி நிற்கின்றன. ஆசைத் தீ இந்த மூன்று வகையான விறகுப் பொதிகளிலிருந்தே என்றும் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருக்கின்றன. விறகு சேரச் சேர தீ வீறு கொண்டு விரிந்து பரவும்; பொருள் சேரச் சேர ஆசை மருளோடு ஓங்கி வளர்ந்து நீளும்.

ஆசை வளர்ந்த அளவு மனிதன் நீச நிலையில் அழுந்தி யுழல்கிறான்; அது ஒழிந்த அளவு ஈசன் அருளை அடைந்து உயர்கிறான். எவ்வழியும் வெவ்விய துயரமே விளைப்பது ஆதலால் மயலான ஆசையை ஒழிப்பதே உயிர்க்கு உயர்வான உய்தி செய்வதாம்.

ஆசை அறுதல் வீட்டின்பம் நேரே அடையக் காரணமாம்;
ஆசை அறுதல் அலது இல்லைப் பலநூல் அனைத்தும் ஆய்ந்திடினும்;
ஆசை அறுவோன் சிவன் ஆதல் திண்ணம் என நன்று அறிந்திருந்தும்
ஆசை யுறுதல் என்கொண்டோ அந்தோ மனிதர் அறியேமே.
(பிரபுலிங்கலீலை, மனோ, 13)

ஆசை அற்ற போது சீவன் பேரின்ப நிலையைப் பெறுகிறது; அறாது நின்றால் அது அவல நிலையில் இழிந்து வருகிறது. ஆசை அறுவோன் சிவன் ஆதல் திண்ணம் என உணர்த்தியுள்ள இதன் உண்மையை உரிமையோடு ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். ஆசை நீங்கினவன் நீசம் நீங்கி ஈசனு ஓங்குகிறான்.

பாச பந்தங்கள் உயிரை நீசப்படுத்தித் துயர் உறுத்தும் ஆதலால் உண்மையை உணர்ந்த ஞானிகள் அவற்றை அறவே துறந்து உய்தி பெறுகின்றார். பிறவித் துயரங்களை நீக்கி யருளுதலால் துறவு இறைவன் அருள் போல் உயிர்க்கு உறவாய் உதவி புரிகிறது. இருள் நீக்கும் இரவி போல் துறவு மருள் நீக்கும்.

பிறவித் துயர் அற ஞானத்துள் நின்று
துறவிச் சுடர்விளக்கம தலைப்பெய்வார்
அறவனை ஆழிப்படை அந்தணனை
மறவியை இன்றி மனத்துள் வைப்பாரே.
(திருவாய்மொழி)

பற்றுக்களைத் துறந்தவர் துறவியர்; அவர் பிறவித்துயர் ஒருவி இறைவனை மருவி யிருப்பர் என நம்மாழ்வார் இவ்வாறு அருளியுள்ளார். உலகபந்தங்களைவிட்டவர் அலகிலின்பமுடைய அமலனை ஒட்டி அதிசய நிலையில் நிலவுகின்றார். ஞானமும் துறவும் ஈன இனங்களை நீக்கி இன்பநலன்களை அருளுகின்றன; அந்த உண்மை நிலைகள் ஈண்டு நுண்மையா எண்ணியுணர வந்தன.

மண்ணினும் தனத்தினும் மனைக்கு வாய்த்தநற்
பெண்ணினும் மகவினும பெரிய பேரினும்
துண்ணென விழைவினைத் துறந்த தூயரே
விண்ணினும் இன்புடன் விளங்கி மேவுவார்.
(சிவதருமோத்தரம்)

இழிந்த சிற்றின்ப ஆசைகளைத் துறந்தவரே உயர்ந்த பேரின்ப நிலையை அடைந்து விளங்குவர் என இது விளக்கி யுள்ளது.

தன்னை அறியத் தனதுஅருளால் தான் உணர்த்தும்
மன்னைப் பொருள்எனவே வாழாமல் பாழ்நெஞ்சே!
பொன்னைப் புவியைமடப் பூவையரை மெய்எனவே
என்னைக் கவர்ந்திழுத்திட்டு என்னபலன் கண்டாயே?
(தாயுமானவர்)

நிலையான மெய்ப் பொருளை மேவி வாழாமல் புலையான பொய்ப் பொருள்களில் அழுந்திப் பொல்லாத துயரங்களை விளைக்கின்றாயே! இது நல்லதா? ஒல்லையில் உணர்ந்து உய்க! என்று தன் நெஞ்சை நோக்கித் தாயுமானவர் இங்ஙனம் இரங்கியிருக்கிறார்.

இல்லம் துறந்து பசிவந்தபோது அங்கு இரந்து நின்று
பல்லும் கறையற்று வெள்வாயுமாய் ஒன்றில் பற்றுமின்றிச்
சொல்லும் பொருளும் இழந்து சுகானந்தத் தூக்கத்திலே
அல்லும் பகலும் இருப்பது என்றோ கயிலாயத்தனே. (1)

சுரப்பற்று வல்வினை சுற்றமும் அற்றுத் தொழில்கள் அற்றுக்
கரப்பற்று மங்கையர் கையிணக்கு அற்றுக் கவலையற்று
வரப்பற்று நாதனை வாயார வாழ்த்தி மனம் அடங்கப்
பரப்பற்று இருப்பதன்றோ பரமா! பரமானந்தமே.
(பட்டினத்தார்)

பாசப் பற்றுக்கள் யாவும் துறந்து மனம் அமைதியாய் அடங்கியிருக்கும் துறவிகளே ஈசனது இன்பப் பேறுகளை இனிது எய்துகின்றார் எனப் பட்டினத்தார் தமது அனுபவத்தை இப்படிப் பரிவோடு உலகம் அறிய வெளியிட்டிருக்கிறார்.

பெண் பொன் முதலிய பாசப்பசைகள் அற்றபோதுதான் ஈசனைப் பற்றமுடியும் என்றதனால் அந்த நீசநிலைகளின் புலைகள் நேரே தெரிய வந்தன. துக்கங்களுக்கெல்லாம் ஆசை மூலவித்து ஆதலால் அதனை அடியோடு துறந்தவரே ஆனந்தவீட்டில் குடியேறுகின்றார். நித்திய முத்திக்கு நேரான வழி நிராசையே.

ஆசைஒன்று இலன்எனின் அகில லோகமும்
பூசைசெய் புனிதனாய்ப் பொலிந்து இலங்குவன்;
ஆசைஒன்று உளன்எனின் அவலப் பேயனாய்
நீசவெந் துயர்களை நெடிது நேருமே.

பாச பந்தங்களில் இழிந்து துயர் உறாமல் யாவும் துறந்து தேவின் உயர்ந்து தேசு பெறுக. பிறவித் துயர்களை நீக்கி அரு

ளும் அரிய பேரமுதம் துறவே; துறவு தோய இறைமை தோய்கிறது; அதனை உறவா மருவி இறவாத இன்ப நிலையை எய்துக.

---

952. பொய்யும் புலைகளும் புன்மையும் எவ்வழியும்
வெய்ய நிலையில் விரிந்துளவால்—வையமய்யல்
நீங்கி எழுந்தான் நிறைவான பேரின்பம்
ஓங்கி எழுந்தான் உயர்ந்து. (உ)

இ—ள்.

பொய் புலை புன்மை முதலிய வெய்ய தீமைகளே எவ்வழியும் விரிந்து பரந்து உள்ளன; பொல்லாத இந்த உலக மையல்களை விலகி எழுந்தவன் நிலையான பேரின்ப நிலையை அடைந்து என்றும் குன்றாத தலைமையோடு உயர்ந்து உவந்தான் என்க

அனுபவ அறிவு அரிய பல தெளிவுகளை அருளுகிறது. வாழ்வின் நிலைகளை மனிதன் நாளும் கண்டு வருகிறான்; கருதியுணராமையால் உறுதி நலங்களை அடைய முயலாமல் மடமையாய் மயங்கி யுழலுகின்றான். மையல் மயக்கங்களே வையக வாழ்வுகளாய் வளர்ந்து வெய்ய துயரங்களை விரித்து விளைத்து வருகின்றன.

நேற்று இருந்தவர் இன்று இல்லை; இன்று உள்ளவர் நாளை இல்லாது ஒழிகின்றார்; நாளை இருப்பவர் அதற்கு மறுநாள் இருப்பர் என உறுதி கூற முடியாது. இன்னவாறு நிலையில்லாத நிலைகளிலேயே புலையா யுழன்று சீவர்கள் பொன்றி முடிகின்றனர். அழிவும் அவலமும் அழுகையும் புலம்பலும் எவ்வழியும் அடர்ந்து படர்ந்து தொடர்ந்து பரந்து விரிந்துள்ளன.

பொய்யான இந்த மாய வாழ்வின் புலைகளை உணர்ந்தவர் மெய்யறிவாளராய் மேலான நிலைகளை எய்த விரைகின்றார்.

இல்லம் இளமை எழில்வனப்பு மீக்கூற்றம்
செல்வம் வலிஎன்று இவை எல்லாம்—மெல்ல
நிலையாமை கண்டு நெடியார் துறப்பர்
தலையாயார் தாமுய்யக் கொண்டு. (நாலடி)

உலக வாழ்வின் அழிவு நிலைகளை உணர்ந்த விழுமியோர் துறவு நிலையைக் கைக் கொண்டு உய்தி பெறுவர் என இது உணர்த்தி யுள்ளது. தலையாயார் துறப்பர் என்றதனால் துறவார் நிலை தெரிய வந்தது. தலைமையான அறிவு துறவாய் வருகிறது

சிறந்த புண்ணிய பரிபாகத்தால் தெளிந்த மெய் யுணர்வு அமைகிறது; அதனால் நித்திய அநித்தியங்கள் தெரிய வருகின்றன; வரவே பாச பந்தங்கள் நீங்கி என்றும் நிலையான பரம பதத்தை விழுமியோர் உரிமையோடு அடைய நேர்கின்றனர்.

தசரதன் பெரிய சக்கர வர்த்தி; திருவயோத்தியி லிருந்து அரசு புரிந்தவன்; அதிசய ஆற்றலுடையவன்; பருவம் முதிர்ந்ததும் தனது அருமை மகனை இராமனிடம் அரச பதவியைக் கொடுத்து விட்டுத் துறவியாக விரும்பினன். அப்பொழுது துறவு நிலையைக் குறித்து இராசசபையில் அவன் பேசிய உரைகள் பெருமகிமைகள் உடையன. ஞானஒளிகளை வீசி வந்துள்ள அம்மொழிகளுள் சில இங்கே காண வருகின்றன. கருதி உணரும் அளவு உறுதி நலங்களைத் தெளிவா உணர்ந்து கொள்ளலாம்.

இறப்பு எனும் மெய்ம்மையை இம்மை யாவர்க்கும்
மறப்பு எனும் அதனின்மேல் கேடு மற்று உண்டோ?
துறப்பு எனும் தெப்பமே துணைசெ யாவிடின்
பிறப்பு எனும் பெருங்கடல் பிழைக்க லாகுமோ? (1)

அருஞ்சிறப்பு அமைவரும் துறவும் அவ்வழி
தெரிஞ்சுற வென மிகும் தெளிவும் ஆய்வரும்
பெருஞ்சிறகு உளஎனின் பிறவி என்னும் இவ்
இருஞ்சிறை கடத்தலின் இனியது யாவதே? (2)

இனியது போலும்இவ் அரசை எண்ணுமோ
துனிவரு நலன்எனத் தொடர்ந்து தோற்கலா
நனிவரும் பெரும்பகை நவையின் நீங்கி அத்
தனிஅர சாட்சியில் தாழும் உள்ள மே. (3)

இழைத்ததீ வினையையும் கடக்க எண்ணுதல்
தழைத்த பேரருளுடைத் தவத்தின் ஆகுமேல்
குழைத்தது ஓர் அமுதுடைக் கோரம் நீக்கிவேறு
அழைத்ததீ விடத்தினை அருந்தல் ஆகுமோ? (4)

கச்சையங் கடகரிக் கழுத்தின் கண்ணுறப்
பிச்சமும் கவிகையும் பெய்யும் இன்னிழல்
நிச்சயம் அன்றெனின் நெடிது நாள்உண்ட
எச்சிலை நுகருவது இன்பம் ஆகுமோ? (5)

இறந்திலன் செருக்களத்து இராமன் தாதைதான்
அறந்தலை நிரம்பமூப்பு அடைந்த பின்னரும்
துறந்திலன் என்பது ஓர் சொல் உண்டானபின்
பிறந்திலன் என்பதின் பிறிது உண்டாகுமோ? (இராமாயணம்)

அரச போகங்களில் ஆழ்ந்திருந்த வேந்தன் தேர்ந்த மெய் யுணர்வு தோன்றவே உயிர்க்கு உய்தி கருதி ஓர்ந்து சிந்தனை செய்து உரிமையான மந்திரிகளிடம் இவ்வாறு தன் உள்ளத்தைத் திறந்து உரையாடியிருக்கிறான். துறவு நிலை தோய்ந்த உரைகள் உலக போதனைகளாய் உயர்ந்து ஒளி செய்துள்ளன.

பிறந்தன யாவும் இறந்து படுவது உறுதி; இந்த உண்மையை உணர்ந்து விரைந்து உயிர்க்கு உய்தி பெற வேண்டும்; இறந்து போவதை மறந்து விடுவது தான் பிறந்த பயனை அடைந்து கொள்ளாமல் அடியோடு ஒருவன் அழிந்த படியாம்; இறத்தலை மறத்தல் போல் கொடிய கேடு வேறு யாதும் இல்லை; நெடிய பிறவிப் பெருங்கடலைக் கடத்தற்குத் துறவே உறுதியான தோணியாம். உரிய மிதவையான அந்தக் கப்பலில் ஏறினால் அவலக் கவலைகளும் அல்லல் களும் நீங்கிப் பேரின்ப மான நல்ல நகரைக் காணலாம். பறவைகளுக்கு இரு சிறகுகள் உள்ளன; அவற்றால் அவை எளிதே உயரப் பறந்து செல்லுகின்றன; அது போல் துறவு ஞானம் என்னும் இரண்டு சிறகுகள் சீவப் பறவைக்கு அமைந்தால் மேலே முத்தி உலகுக்கு இது விரைந்து பறந்து போம்; என்றும் அழியாத பேரானந்தப் பெருவாழ்வை அடையாமல் பொன்றி ஒழிகின்ற உலக போகங்களிலேயே உழன்று கிடப்பது இனிய அமுதத்தை இகழ்ந்து விட்டுக் கொடிய விடத்தை நுகர்ந்து நிற்பது போல் நெடிய மடமையாம்; மான வீரனாய் வாழ்ந்து வந்த நான் இனிமேல் ஞான வாழ்வு வாழாது ஒழியின் அது ஈனமே யாம்; துறந்து தவம் புரிவதே சிறந்த பிறவிப் பேறாம்; துறவியாய் நான் அரிய தவம் புரிய வேண்டும் என அரசன் இவ்வாறு முடிவு செய்துள்ளான்.

துறவிற் சுகம்போல்ஓர் சுகம்இல்லை என்றே
பெறலுற்ற வாழ்வைப் பிறர்க்குக் கொடுத்துஅப்
புறமுற்ற கானில் புகுந்து இன்பம் உற்றார்
அறமுற்ற பார்வேந்தர் அளவற்ற பேரால்.
(மெய்ஞ்ஞானவிளக்கம்)

தம் அரச செல்வங்களைத் துறந்து துறவு நிலையை அடைந்த அரசர்கள் பலர் என்பதை இதனால் அறிந்து கொள்கின்றோம்.

குணவாயில் கோட்டத்து அரசு துறந்து இருந்த
குடக்கோச் சேரல் இளங்கோ வடிகள். (சிலப்பதிகாரம்)

சேரமன்னன் துறவியான நிலையை இது குறித்துள்ளது.

மன்னிய துறவறங்கள் வழங்கியும் வங்கம் ஆதி
உன்னிய தேயத்து ஊமர் உணர்விலாப் பெயரே போலத்
துன்னியும் உலகு ளோர்க்குத் தொலைவில்பேர் வீடு சேரும்
நன்னெறி தெரித்தும் முத்தி நண்ணினன் இடபன் மாதோ.
(பாகவதம்)

இடபன் என்னும் மன்னன் துறவியாய் அரிய தவம் புரிந்து முத்தி பெற்றுள்ள நிலைமையை இது தலைமையா உணர்த்தியுளது.

ஏமநீர் உலகம்ஓர் இம்மிப் பாலென
நாமவேல் நரபதி நீக்கி நன்கலம
தாமமார் மாலையும் துறக்கின் றானரோ
காமனார் கலம்கழிக் கின்றது ஒத்ததே.
[சீவகசிந்தாமணி]

உலக வாழ்வு ஓர் இம்மி என இகழ்ந்து அரசைத் துறந்து சீவகன் அதிசய முத்தி நிலையை அடைய நேர்ந்ததை இதனால் அறிந்து கொள்கிறோம். அரிய துறவுகள் தெரிய வந்தன.

வைய மையல் நீங்கினவர் உய்தி பெறுகின்றார்.

953 பிறவிச் சிறையின் பெருந்துயரம் எல்லாம்
அறவிச்சை கொண்ட அவனே—துறவிச்சை
கொண்டு துணிந்து துறந்து பெருமகிமை
கண்டு மகிழ்ந்தான் கனிந்து. (ந)

இ-ள்.

பிறவி என்னும் பெரிய சிறையில் மருவியுள்ள கொடிய துயரங்கள் யாவும் அடியோடு ஒழிய வேண்டும் என்று தெளிவு கொண்ட ஞானியே துறவியாய் உயர் மகிமை கண்டான் என்க.

துறவு பேரின்ப வீட்டின் திறவுகோல்.

நெறிகேடராய்ப் பிழைகள் புரிபவர் குற்றவாளிகள் ஆகின்றார்; ஆகவே அரச தண்டனைகளை அடைகின்றனர்; அடையவே சிறைச்சாலைகளில் அடைபட்டுத் துயரங்களை அனுபவிக்கின்றனர். அதுபோல் தீவினைகளைச் செய்த சீவர்கள் பிறவிச் சிறையை யடைந்து இறைவன் ஆணையின்படி கரும பலன்களை நுகர்

கின்றனர். குறித்த காலம் முடிந்தவுடன் கைதியை விடுதலை செய்து சிறை அதிகாரி வெளியே அனுப்பி விடுகிருன்; வினைப் போகம் கழிந்தவுடன் தேகச் சிறையிலிருந்து நீக்கிச் சீவனைக் காலன் வெளியே போக்கி மேலே வழிகாட்டி விடுகின்ருன்.

இப்படிப் பிரிந்துபோன சீவன் மறுபடியும் பழக்க வாசனையால் ஆசை வசப்பட்டு இழிவினைகளைச் செய்கின்றன; செய்யவே அழிதுயரங்களை அடைகின்றன. துன்பத் தொடர்புகள் இவ்வாறு படர்ந்து தொடர்ந்து எல்லையின்றி விரிந்து வருதலால் பிறவிகள் பெருங்கடல்கள் என நேர்ந்தன. வினையும் நுகர்வும் வித்தும் விளைவும் போல் விடாமல் விளைந்து விரிந்து வருகின்றன.

உடற்செயல் கன்மம் இந்தஉடல்வந்த வாறுஏது என்னின்
விடப்படு முன்உடம்பின் வினை இந்த உடல் விளைக்கும்
தொடர்ச்சியால் ஒன்றுக்குஒன்று தொன்றுதொட்டு அநாதிவித்தின்
இடத்தினில் மரம் மரத்தின் வித்தும் வந்து இயையு மாபோல். (1)

முற்செயல் விதியை இந்த முயற்சியோடு அனுபவித்தான்
இச்செயல் பலிக்கு மாறென் இதம்அகிதங்கள் முன்னர்
அச்செயல் ஆனல் இங்கும்அவை செயின் மேலைக்கு ஆகும்
பிற்செயாது அனுபவிப் பதுஇன்று பின்தொடரும் செய்தி. (2)

மேலைக்கு வித்தும்ஆகி விளைந்தவை உணவும் ஆகி
ஞாலத்து வருமா போல நாம்செயும் வினைகள் எல்லாம்
மேலத்தான் பலமாச் செய்யும் இதம்அகிதங்கட்கு எல்லாம்
மூலத்த தாகி என்றும் வந்திடும் முறைமை யோடே. (3)

(சிவஞானசித்தியார்)

கருமங்களின் விளைவுகளையும் பிறவித் தொடர்புகளையும் இவை தெளிவாக் காட்டியுள்ளன. பொருள் நிலைகளைக் கருதியுணர்ந்து பிறவி மூலங்களைத் தெளிந்து கொள்ள வேண்டும்.

பாசபந்தங்கள் படிந்து மயலோடு செய்த செயல்கள் வினைகளாய் விரிந்து பிறவிகளை விளைத்துப் பெருந்துயர்களை இழைத்து வருகின்றன. தொல்லையாய்த் தொடர்ந்து வந்த அல்லல்கள் எல்லாம் அடியோடு தொலைய வேண்டுமானல் பற்றி நின்ற பற்றுகள் யாவும் முற்றும் ஒழிய வேண்டும். அந்த ஒழிவுதான் துறவு என ஒளிபெற்று உயிர்க்கு உறவாய் வந்துள்ளது.

பிறவித் துயரங்களை அறவே நீக்கிப் பேரின்பம் தரவல்லது துறவே ஆகலால் அதனையே ஞானிகள் உறவாகப் பற்றி உய்தி பெறுகின்றனர். மெய்யுணர்வு தோன்றியவுடனே மேவியிருந்த செல்வங்களை யெல்லாம் ஒருங்கே துறந்து துறவு நிலையின் அரிய பெருமையை உலகம் அறிய உணர்த்தி யருளிய பட்டினத்தார் பிறவிச் சிறையை நீக்கியருளும்படி இறைவனை நோக்கி வேண்டியிருக்கிறார் வேண்டுகோளில்நீண்ட ஞானம்நிலவியுளது.

பரமனை நினைந்து உருகி அவர் பாடியுள்ள பாடல்கள் அரிய பல தத்துவங்களை மருவியுள்ளன. வித்தக நிலையில் விளைந்து வந்துள்ள விழுமிய பாசுரம் ஒன்று அயலே வருகின்றது.

அடிசார்ந் தவர்க்கு முடியா இன்பம்
நிறையக் கொடுப்பினும் குறையாச் செல்வ!
மூலமும் நடுவும் முடிவும் இகந்து
காலம் மூன்றையும் கடந்த கடவுள்;
உளக்கணுக்கு அல்லாது ஊன்கணுக்கு ஒளித்துத்
துளக்கற நிமிர்ந்த சோதித் தனிச்சுடர்;
எறும்புத் துளையின் இருசெவிக்கு எட்டாது
உறுப்பினின்று எழுதரும் உள்ளத்து ஓசை;
வைத்த நாவின் வழிமறுத்து அகத்தே
தித்தித்து ஊறும் தெய்வத் தேறல்
துண்டத் துளையின் பண்டைவழி அன்றி
அறிவில் நாறும் நறிய நாற்றம்;
ஏனைய தன்மையும் எய்தாது எவற்றையும்
தானே ஆகி நின்ற தற்பர!
தோற்றுவது எல்லாம் தன்னிடைத் தோற்றித்
தோற்றம் பிறிதில் தோற்றாச் சுடர்முளை
விரிசடை மீமிசை வெண்மதி கிடப்பினும்
இருள்புரை கண்டத்து ஏக நாயக!
சுருதியும் இருவரும் தொடர்ந்துநின்று அலமர
மருதிடம் கொண்ட மருத மாணிக்க!
உமையாள் கொழுந! ஒருமூன்று ஆகிய
இமையா நாட்டத்து என்தனி நாயக!
அடியேன் உறுகுறை முனியாது கேள்மதி!
நின்னடி பணியாக் கல்மனக் கயவரொடு
நெடுநாட் பழகிய கொடுவினை ஈர்ப்பக்

கருப்பா சயம்எனும் இருட்சிறை அறையில்
குடர்என் சங்கிலி பூண்டு தொடர் பட்டுக்
கூட்டுச்சிறைப் புழுவின் ஈட்டுமலத்து அழுந்தி
உடனே வருந்தி நெடுநாட் கிடந்து
பல்பிணி பெயர்பெற்று அல்லற் படுத்தும்
தண்ட லாளர் மிண்டிவந்து அலைப்ப
உதர நெருப்பில் பதைபதை பதைத்தும்
வாத மத்திகையின் மோதமொத் துண்டும்
கிடத்தல் நிற்றல் நடத்தல் செல்லாது
இடம்குறை வாயிலின் முடங்கி யிருந்துழிப்
பாவப் பகுதியில் இட்டுக் காவல்
கொடியோர் ஐவரை ஏவி நெடிய
ஆசைத் தளையில் என்னையும் உடலையும்
பாசப் படுத்திப் பைஎன விட்டபின்
யானும் போந்து தீதினுக்கு உழன்றும்
பெரியோர்ப் பிழைத்தும் பிறர்பொருள் வெளவியும்
பரியாது ஒழிந்தும் பல்லுயிர் செகுத்தும்
வேற்றோர் மனைவியர் தோற்றம் புகழ்ந்தும்
பொய்பல கூறியும் புல்லினம் புல்லியும்
ஐவரும் கடுப்ப அவா வதுகூட்டி
ஈண்டின கொண்டும் மீண்டு வந்துழி
இட்டுழி இடாது பட்டுழிப் படாஅது
இந்நாள் இடுக்கண் எய்திப் பன்னாள்
வாடுபு கிடப்பேன் வீடுநெறி காணேன்
நின்னை அடைந்த அடியார் அடியார்க்கு
என்னையும் அடிமை ஆகக் கொண்டே
இட்டபச் சிலைகொண்டு ஒட்டி அறிவித்து
இச்சிறை பிழைப்பித்து இனிச்சிறை புகாமல்
காத்தருள் செய்ய வேண்டும்
தீத்திரண்டு அன்ன செஞ்சடை யோனே. (மும்மணி, 22)

வினை விளைவுகளை விளக்கிப் பிறவித் துயரங்களைக் குறித்துக் காட்டிக் கொடிய அந்தத் துன்பங்களிலிருந்து நீக்கித் தன்னைக் காத்தருளும்படி இறைவனை நோக்கிப் பட்டினத்தார் இங்ஙனம் முறையிட்டிருக்கிறார். சீவிய நிலைகளின் புரைகளையும் புலைகளையும் ஓவிய உருவமா உணர்த்தி உயர்பரனைக் கருதி யுருகி உய்திபெற விரைந்துள்ளமையை உரைகளில் உணர்ந்து கொள்கிறோம்.

இச்சிறை பிழைப்பித்து இனிச்சிறை புகாமல் காத்து அருள் செய்! என்று கடவுளிடம் இவர் கனிந்து வேண்டியிருத்தலால் உடலின் பிறவியை இவர் அஞ்சி வெறுத்திருக்கும் அவநிலை அறிய வந்தது. அல்லல்வழி நீங்கியதால் ஆனந்த ஒளி ஓங்கி எழுந்தது.

பிறவிச் சிறை துறவித்துறையால் ஒழியும் என்பதை விழி தெரிய விளக்கியுள்ள இவரைத் துறவிகள் யாவரும் உழுவலன் போடு தொழுது வருகின்றனர். முற்றத் துறந்த இவர் பிறவி அறவே நீங்கிப் பேரானந்த நிலையை உறவாப் பெற்றிருப்பதை இவருடைய வாய்மொழிகளே தெளிவா உணர்த்தி யுள்ளன.

விட்டேன் உலகம் விரும்பேன் இருவினை வீணருடன்
கிட்டேன் அவர்உரை கேட்டும் இரேன்மெய் கெடாதநிலை
தொட்டேன் சுகதுக்கம் அற்று விட்டேன்தொல்லை நான்மறைக்கும்
எட்டேன் எனும்பரம் என்னிடத் தேவந்திங்கு எய்தியதே.
[பட்டினத்தார்]

பாசபந்தங்களை விட்டுப் பரமனோடு தோய்ந்து இவர் பேரின்பம் பெற்றுள்ள நிலையை இதனால் இனிது அறிந்துகொள்கிறோம்.

உற்ற பற்று அற்று உய்தி பெறுக.

---

954. பாசத் தொடர்பு படுதுயர மாய்வளர்ந்து
நீசம் புரியும் நிலைதெரியின்—நாசம்
படியாமல் தன்னைப் பரிந்தினிது காத்துத்
துடியாமல் நிற்பர் துறந்து. (௪)

இ—ள்.

பந்த பாசங்களின் தொடர்பு எந்த வழியும் துயரமாய் நீண்டு யாண்டும் அவல இழிவுகளே புரியும் ஆதலால் அந்த நிலைகளை உணர்ந்து விரைந்து விலகிய துறவிகள் உயர்ந்த ஆனந்த நிலையில் ஒளி மிகுந்து தெளிவமைந்து உள்ளனர் என்க.

துயர் நீங்கி உயிர் உயரும் வழியை இது விழி தெரிய விளக்கியுளது. மருவிய பற்று விடின் பிறவி அற்று விடும்.

பாசம் என்னும் சொல் கட்டு கயிறு அழுக்கு முதலிய பொருள்களை உணர்த்தி வரும். இங்கே பாசம் என்றது உயிர் வாசனையாய் ஒட்டி நிற்கும் பற்றினை. நீசமான துயரங்கள்

எல்லாம் இந்தப் பாசத்தாலேயே படர்ந்து தொடர்ந்து வருகின்றன. ஆசையே அல்லல்களுக்கு ஆதி மூலமாயுள்ளது.

பாச நாசன் என்பது ஈசனுக்கு ஒரு பெயர். தன்னை நேசித்துப் பூசித்து வருவாரது பாசத்தை ஒழிப்பவன், தனக்கு யாதொரு பாசமும் எவ்வழியும் இல்லாதவன் என்னும் பொருளை அப் பெயர் மருவியுளது. அநாதி மலமுத்தன், பற்று அற்றான், பரிசுத்தன், நித்திய நிருமலன் எனப் பரமன் நிலவி யுள்ளமையால் அவனது தலைமையும் தகைமையும் அறியலாகும்.

பாசம் படிந்துள்ளமையால் சீவனுக்குப் பசு என்று ஒரு பெயரும் வந்தது. ஈசனை நேரே அடைய ஒட்டாமல் உயிரைப் பிணித்து நீசப்படுத்தி யிருத்தலால் பாசம் மோசமான நீசம் என நேர்ந்தது. பாசம் பற்றி யிருக்கும் வரையும் பிறவித் துயரங்களில் அழுந்தி உயிர் ஊனமாய் உழந்து சுழல்கிறது; அது அற்று விடின் அப்பொழுதே ஈசனை அடைந்து இன்புற்றிருக்கின்றது.

பொல்லாத தீயரைச் சேரின் மனிதன் தீயனாய் அல்லலே அடைகிறான். நல்ல தூயரைக் கூடின் நல்லவனாய் நலம் பல பெறுகிறான். சேர்ந்த படியே யாவும் நேர்ந்து வருகின்றன.

பாசம் நீங்காத வரையும் நீசமும் நாசமும் சீவனை நிலை குலைத்து வருகின்றன; அது நீங்கி ஒழிந்தால் ஈசனைப் பேரானந்தத்தில் திளைக்கிறது. ஆன்மா என்னும் சொல் பரமான்மாவின் தொடர் பினையுடையது. கடவுளை எவனும் கண்டதில்லை; ஆயினும் தன்னைக் கொண்டு மனிதன் அதனை உண்டு என்று உறுதி செய்து உரிமை பூண்டு உழுவலன்போடு கருதி வருகிறான்.

உடலோடு கூடி வாழுகின்ற தன்னை மனிதன் முதலில் அறிகின்றான்; அதன்பின் தன்னைத் தாங்கியுள்ள நிலத்தைத் தெரிகிறான்; முடிவில் தன்னையும் உலகத்தையும் இயக்கி அருள்கின்ற இறைவன் ஒருவன் இருக்க வேண்டும் என்று அனுமானமாய்த் துணிந்து கொண்டான். மனிதன் இவ்வாறு துணிந்ததை மதிநலமுடைய முனிவர்கள் விதி முறையா வகுத்து மூன்று பொருள்களுக்கும் ஏன்ற பேரை இசைத்து ஆன்ற நூல்களா அருளியுள்ளனர். மூவகை நிலைகள் முதன்மையா வந்தன.

உலகம், உயிர், பரம் என வேதாந்திகள் கூறுகின்றனர்.

பாசம், பசு, பதி எனச் சித்தாந்திகள் மொழிகின்றனர். Matter soul God என்று மேல்நாட்டார் சொல்லுகின்றனர்.

நடுவில் உள்ள உயிர் எதைத் தோய்ந்ததோ அதன் வண்ணமாய் வாய்ந்து வருகிறது. சத்தைச் சார்ந்தால் சத்து ஆகிறது; அசத்தைச் சேர்ந்தால் அசத்து ஆகிறது; ஆகவே சதசத்து என ஒரு பெயர் சீவனுக்கு நேர்ந்தது. பாசம் முற்றும் அற்றபோது தான் உயிர் ஈசனைச் சேர்ந்து உயர் இன்பம் நுகர்கிறது.

பாசம் கழன்ருல் பசுவுக்கு இடம்பதியாம்;
ஊசல் வடம்கழன்றது ஒவ்வாதோ—நேசித்த
பற்றுஅற்ற கண்ணே பிறப்பறுக்கும் பாட்டுமக்கோ
மற்றைச் சமயமெங்கும் ஆம். (ஒழிவிலொடுக்கம்)

ஊசல் கயிற்றில் சிக்குண்டு அலைந்தவன் அந்தக் கயிறு அறுந்துவிடின் நிலத்தைச் சேர்கின்ருன்; அதுபோல் பாசம் அற்றவுடனே சீவன் பதியை அடைந்து கொள்ளுகிருன் என ஓர் உவமையை இணைத்துக்காட்டி இது நயமா விளக்கியுள்ளது. நிலையற்ற ஊஞ்சலில் அகப்பட்டு நிலைகுலைந்து சுழன்று உழன்று வந்தவன் அதை விட்டதும் நிலையான இடத்தை அடைந்து சுகமாயிருப்பதுபோல் பாசத்தில் சிக்கிப் பிறவிச் சுழலில் உழந்த பெருந்துயரங்களை அடைந்து வந்த உயிர் அது ஒழிந்தவுடனே நித்தியமான நிமலனைச் சேர்ந்து பேரானந்தம் நுகர்ந்துள்ளமையை இந்த உவமையால் நுணுகி உணர்ந்து கொள்ளுகிருேம்.

சீவன் ஈசனை அடையமுடியாதபடி இடையே தடையாய்ப் பாசம் மிடைந்து நிற்றலால் அது உயிர்ப்பிணி துயர்ப்பகை என நேர்ந்தது. தீராத நோய் தீரின் சேராத சுகம் சேர வரும்.

தாயோடு பிள்ளை தலைக்கூட ஒட்டாமல்
பேயோடிச் செய்கின்ற பீழைபோல்---நோயோடு
பாசம் உயிரைப் பரமனிடம் சேராமல்
நீசமே செய்யும் நிலைத்து.

பேய் வாயில் அகப்பட்ட பிள்ளைபோல் பாசத்தின் வாயில் அகப்பட்டு சீவன் பரதவிக்கும் நிலையை இது நயமாக் காட்டியுள்ளது. ஈசன் தாய், பாசம் பேய், சீவன் சேய். மூன்றும் பின்னும் உள்ள உறவுரிமைகளையும் இடையே தடையாய்நிற்கும் இழிபகையையும் தெளிவா யுணர்பவர் நேரே வழி காண நேர்வர். உறவு தெரிந்து துறவு தோய்ந்து உய்வு கொள்ளுக.

ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்;
ஆய பசுவும் அடலேறு எனநிற்கும்;
ஆய பலிபீடம் ஆகுநற் பாசம் ஆம்;
ஆய அரன்நிலை ஆய்ந்துகொள் வார்கட்கே. (திருமந்திரம்)

உன் பாசப் பற்று அடியோடு ஒழிய வேண்டுமானால் யாதொரு பற்றும் இல்லாத ஈசனை நன்கு பற்றிக் கொள்ள வேண்டும்.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. (குறள், 350)

விடாது பற்றி வந்த பாசம் விட்டு நீங்க விரும்பினால் ஈசனை விடாமல் பற்றிக் கொள்ளுக எனத் தேவர் இங்ஙனம் சீவர்களுக்குப் புத்தி போதித்திருக்கிறார். பற்றுஅற்றான் என ஈசனுக்கு ஒரு பேரிட்டது அதனை அருதவாது நீசம் தெரிய வந்தது.

ஊருண் கேணி உண்துறை தொக்க
பாசி அற்றே பசலை; காதலர்
தொடுவுழித் தொடுவுழி நீங்கி
விடுவுழி விடுவுழிப் பரத்த லானே.
(குறுந்தொகை, 399)

தன் தலைவன் தன்னைத் தழுவிய பொழுது பசலை நீங்கி விடுகிறது; நழுவியவுடன் அது உடலில் பரந்து கொள்கிறது என ஒரு தலைவி இங்ஙனம் மறுகி மொழிந்துள்ளாள். பதியைக் கூடியுள்ள பொழுது பாசம் ஓடி விடுகிறது; விலகிய வுடனே அது ஒட்டிக் கொள்கிறது எனப் பசு ஆகிய தலைவி பரிந்து வருந்திய படியாய் இது ஈண்டு அறிந்து கொள்ள வந்தது.

பாசிபடு குட்டத்தில் கல்லினைவிட்டு எறியப்
படும்பொழுது நீங்கிஅது விடும்பொழுதில் பரக்கும்;
ஆசுபடு மலமாயை அருங்கன்மம் அனைத்தும்
அரனடியை உணரும் போது அகலும்பின் அணுகும்;
நேசமொடுந் திருவடிக்கிழ் நீங்காதே தாங்கும்
நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே ஆகி
ஆசையொடும் அங்கும்இங்கும் ஆகியல மருவோர்
அரும்பாசம் அறுக்கும் வகை அருளின்வழி யுரைப்பாம்
(சிவஞானசித்தியார்)

ஈசனை நினைந்து உருகி வரும் அறவோரே பாசம் நீங்கிப் பரமானந்த நிலையை அடைவர் என இது உணர்த்தியுள்ளது.

பாசவேர் அறுக்கும் பழம்பொருள். (திருவாசகம்)

ஈசனை மாணிக்க வாசகர் இவ்வாறு குறித்திருக்கிறார்.

பாசங்கள் நீக்கி என்னை உனக்கே அறக்கொண்டு.
(திருவாய்மொழி)

தன் பாசத்தை நீக்கித் தன்னைத் தனக்கே உரிமையாக்கிக் கொள்ளும்படி திருமாலை நோக்கி நம்மாழ்வார் இங்ஙனம் வேண்டியிருக்கிறார். பாசம் ஒருவி ஈசனை மருவுக.

பாசத்தைப் பற்றறுக்க லாகு நெஞ்சே!
பரஞ்சோதி பாண்டரங்கா பாவ நாசா
தேசத்து ஒளிவிளக்கே தேவ தேவே
திருவாரூர்த் திருமூலட்டானா என்றும்
நேசத்தை நீபெருக்கி நேர்நின் றுள்கி
நித்தலும் சென்றடிமேல் வீழ்ந்து நின்று
ஏசற்று நின்றிமையோர் ஏறே என்றும்
எம்பெருமான் என்றென்றே ஏத்தா நில்லே.

பாசப்பற்று அறும் வகையை அப்பர் இப்படி அறிவித்துள்ளார். ஈசனைக் கருதி உருகின் பாசங்கள் நாசமாகின்றன.

பாசமான களைவார் பரிவார்க்கு அமுதம் அனையார்
ஆசைதீரக் கொடுப்பார் அலங்கல் விடைமேல் வருவார்
காசை மலர்போல் மிடற்றார் கடவூர் மயானம் அமர்ந்தார்
பேச வருவார் ஒருவர் அவர்எம் பெருமான் அடிகளே. (1)

பாசம் அறுப்பீர்காள்! ஈசன் அணியாரூர்
வாசமலர் தூவ நேசம் ஆகுமே. (தேவாரம்) (2)

பாசம் நீங்க நேர்ந்தவர் ஈசன் பால் நேசம் ஓங்கி நிற்பர் என ஞானசம்பந்தர் இவ்வண்ணம் நயமா அருளியுள்ளார்.

பாராசை அற்றுஇறையைப் பற்றுஅறநான் பற்றி நின்ற
பூராயம எல்லாம் புகன்றுவா பைங்கிளியே!
(தாயுமானவர்)

விரும்புற்ற தவம் விரதம் சீலம் எல்லாம்
மேல்விளைவுஎன்று அறிந்து எவையும் விமலன் கூத்துஎன்று
இரும்புற்ற மனம்அழலின் மெழுகாய் என்றும்
யான்செய்தேன் பிறர்செய்தார் எனும் கோள்நீக்கி
அரும்புற்றங்கு எண்ணுதியான் என்னும் பாசத்து
அவாமருவும் புறப்பற்றோடு அகப்பற்றான

பெரும்பற்றை அகன்று அருளைப் பெறுவோர் ஞானப்
பெரும்பற்றப் புலியூரைப் பிரியார் தாமே.
(சிவஞானதீபம்)

பாசத் தளையறுத்துப் பாவக் கடல்கலக்கி
நேசத் தளைப்பட்டு நிற்குமே---மாசற்ற
காரார் வரையீன்ற கன்னிப் பிடிஅளித்த
ஓராணை வந்தென் உளத்து. (காசிக்கலம்பகம்)

பாச இருள் துரந்து பல்கதிரில் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமும். (கந்தர்கவி)

உயிர்களை நீசப் படுத்தித் துயர் உறுத்துகிற பாசஇருள் ஈசன் அருளை அடையவே அடியோடு உடைந்து அயலே ஒழிந்து போம் என்பதை இவற்றால் உணர்ந்து கொள்கிறோம்.

புலையாய் நேர்ந்துள்ள உலக பாசங்கள் யாண்டும் உனக்குத் தொலையாத துன்பங்களே தரும்; எவ்வழியும் நாசப் படுத்துகின்ற அந்த வெவ்விய நீசத் தொடர்புகளை நீங்கி ஈசனைத் தொடர்ந்து நின்று என்றும் நிலையான பேரின்ப நிலையைப் பெறுக.

---

955. எண்ணாத பேரின்பம் எய்தநேர் எண்ணினார்
மண்ணாசை யாவும் மறப்பரே—விண்ணார்
பறவைக்கு வேந்தன்முன் பார்மசகம் என்னும்
துறவிக்கு வேந்தன் துரும்பு. (ரு)

இ-ள்.

பாரில் யாரும் எண்ணாத பேரின்ப நிலையை நேரே பெற நேர்ந்தவர் இழிந்த மண் ஆசைகள் யாவும் மறந்து விடுவார்; வான வீதியில் பறந்து செல்லும் கருடன் எதிரே கொசுவைப் போல் ஞான வீரர்களான துறவிகள் எதிரே அரசர்கள் துரும்பாவர்; அதிசயநிலையினரான அவரைஎவரும் துதிசெய்வர்என்க.

அழியும் இயல்பினவான அவல நிலைகளிலிருந்து நீங்கி என்றும் அழியாத விழுமிய பேரின்ப நிலையை அடைய நேர்ந்தவர் அதற்கு உரிய தகுதியை உடையராகின்றார். மனம் புனிதமாய் உயர மனிதன் மகானாய்த் தனி நிலையில் உயர்கின்றான். ஞான ஒளி யுடையவர் ஈன இழிவுகளை விலகி வானஒளி போல் வையம் தொழ மிளிர்கின்றார். அவரது நிலை தெய்வ நிலையமாயுளது.

நசை வசைகளையே வளர்த்து வரும் ஆதலால் அதனை ஒழித்தவர்களிடம் இசைகள் செழித்து வளர்ந்து வருகின்றன. ஆசையை விட்டவன் அகிலமும் வென்றவனாய் அதிசய நிலையில் உயர்ந்து யாவராலும் துதி செய்யப் பெறுகிறான். அதனை விடாதவன் ஈன அடிமையா யிழிந்து எங்கும் ஊனமா யுழல்கின்றான்.

உள்ளத்தில் நசை ஒழிந்த போதே பேரின்ப வெள்ளத்தில் அவன் மிதந்து உலாவுகிறான். பற்று முற்றும் அற்ற பட்டினத்தார் துறவியாய் வெளியேறிய பொழுது உலகம் முழுவதும் அவரை உவந்து தொழுது புகழ்ந்து போற்றின. அவரது துறவு நிலையைக் கேள்விப் பட்டதும் அந்த நாட்டு வேந்தன் அதிசயம் அடைந்து அவரை நேரே காண வந்தான். அப்பொழுது அவர் ஒரு குப்பை மேட்டில் சாய்ந்து கால் மேல் காலைப் போட்டுக் கொண்டு ஆன்ம சிந்தனையோடு அமைதியாயிருந்தார். தான் ஏறி வந்த இரதத்தை விட்டு இறங்கி அரசன் இவரது அருகே வந்து நின்றான். இவர் யாதும் பேசாமல் மிகவும் மவுனமாயிருந்தார்.

முடி மன்னரினும் பெருந் திருவுடையனா யிருந்தவர் யாவும் ஒருங்கே துறந்து கோவண தாரியாய் அமர்ந்திருப்பதை நோக்கி நோக்கி வியந்த அவ்வேந்தன் மிக்க பணிவோடு இவரிடம் வார்த்தையாடினான். உரைகள் பரிவு தோய்ந்து வந்தன.

"குபேர சம்பத்தோடு இருந்த தாங்கள் எல்லா வற்றையும் விட்டு இப்படிக் கந்தைத் துணியைக் கட்டிக் கொண்டிருப்பது எனக்கு மிகவும் விந்தையா யிருக்கிறது. இதில் என்ன சுகத்தை நீங்கள் கண்டீர்கள்? "என்று அவன் ஆவலோடு கேட்டான்.

அம்மன்னன் வினவியதற்கு இவர் என்ன பதில் சொன்னார்? பின்னே வருவது காணுக: "நீ நிற்க; யாம் இருக்க" என்று இன்னவாறு இனிது கூறினர். சுருக்கமாக் குறித்த இதில் பெருக்க மான பொருள்கள் விசித்திர மாப் பெருகி யுள்ளன.

முன்னம் போல் நான் செல்வம் உடையனாயிருந்தால் நீ வந்ததும் விரைந்து எழுந்து எதிர் கொண்டு அழைத்து மரியாதைகளோடு உபசரித்து உன்னை அரியாசனத்தில் இருத்தி நான் வணங்கி நிற்க வேண்டும். எல்லாச் செல்வங்களையும் நேற்றுத் துறந்தேன்; இன்று நீ வந்து என் காலடியில் வணங்கி நிற்கின்றாய்; நான் இறுமாந்து வீற்றிருக்கின்றேன்; துறவின் மகிமை

யை உன் நிலைமை தெளிவா விளக்கியுளது என்னும் குறிப்புகள் பலவும் இதில் கூர்ந்து சிந்திக்கவுள்ளன. துறவாத நீ பிறவித் துயரில் நிற்கின்றாய்; துறந்த நான் பிறவாத பேரின்ப நிலையில் இருக்கிறேன் என்பதும் மருமமா இங்கே தெரிய வந்தது

ஆசையற்ற துறவி விண்ணில் பறக்கின்ற கருடன் போல் வீறுகொண்டு திரிகிறான்; அவன் எதிரே அரசர் முதல் யாவரும் சிறியராய் அடங்கி எவ்வழியும் ஒடுங்கி வணங்கி நிற்கின்றனர். துறவிக்கு வேந்தன் துரும்பு என்பது பழமொழியாய் வந்தளது.

அலெக்சாண்டர் (Alexander) என்பவன் கிரீஸ் தேசத்து சக்கரவர்த்தி; பெரிய போர் வீரன்; மேல் நாடுகளில் பல தேசங்களை வென்று கைக்கொண்டான்; பின்பு நம் இந்தியா மீது படை எடுத்து வந்தான்; அவ்வாறு வந்தபோது சிந்து நதிக்கரை அருகே ஒருகாட்டில் கூடாரம் அமைத்துச் சேனைகளோடு தங்கி யிருந்தான்; மறுநாள் மாலையில் தளபதி களோடு உலாவி வரும் போது ஒரு துறவியைக் கண்டான். யாதொரு துணையும் இன்றி யாவும் துறந்து தன்னந் தனியே இருந்த அவரைக் கண்டதும் மன்னன் பெரிதும் வியந்தான்; கிட்ட நெருங்கிச் சிறிது நேரம் உற்று நோக்கினான்; யாதும் பேசாமல் அவர் மவுனமா யிருந்தார்; நீண்ட வேல்கள் ஏந்திய சில போர் வீரர்கள் சூழ மன்னன் வந்து நிற்பதைக் கண்டும் சிறிதும் மதியாமல் உறுதி பூண்டிருக்கும் துறவி மீது அவனுக்குப் பிரியம் நீண்டது: "நான் பெரிய சக்கரவர்த்தி; என் தேசத்துக்கு நீர்வர வேண்டும்; உம்மை அழைத்துப் போகிறேன்; பொன்னும் பொருளும் நிறையத் தருகிறேன்; சிறந்த அரண்மனையில் அமர்ந்து சுகமாய் வாழலாம்" என்று அவன் உவகையோடு சொன்னான். "எனக்கு யாதும் வேண்டாம்; நீ ஒதுங்கிப் போ; அதுவே எனக்குப் போதும்" என்று துறவி சாதுவாய் உரைத்தார். என் வார்த்தைக்கு மாறு கூறுவதா என்று அவன் சீறிச்சினந்தான்; தனது கூரிய வாளை நேரே நீட்டிக் காட்டி "இதனால் உன் தலையைத் துணித்து எறிவேன் என்று கொதித்து நின்றான்; கொலை நோக்கோடு உருத்து நின்ற அவனைப் பார்த்து இவர் அமைதியாய்ச் சிரித்தார்; சிரிக்கவே அம்மன்னன் வியந்தான்; மனம் தெளிந்தான்; வணங்கி வாழ்த்தினான். இந்த நிகழ்ச்சி அவனுடைய சரித்திரத்தில் அதிசயமான ஒரு புகழ்ச்சியாய் வந்துள்ளது.

"I will kill you, if you do not come." (Emperor)

"நீ வரவில்லை யானால் உன்னை நான் கொல்லுவேன்" என்று நான் சொன்ன போது அத்துறவி "என்னை யாராலும் கொல்ல முடியாது; நான் பிறப்பு இறப்பு இல்லாத பேரானந்த நிலையினன்" என்று சிரிப்போடு சொன்னார். அது இன்னமும் என் கண்முன் உள்ளது என அம்மன்னன் தன் நாட்டவர்க்கு இந்நாட்டின் ஞான நிலையையும், துறவின் தீரத்தையும் வியந்து கூறியிருக்கிறான். ஞான தீரர்களால் இத் தேசம் தேசு மிகுந்துள்ளது.

துறவு எவ்வளவு பெருமை யுடையது! அதனை மருவி நின்றவர் எத்தனைத் திவ்விய நிலைகளை அடைந்துள்ளனர் என்பதை இங்கே நிகழ்ந்துள்ள நிகழ்ச்சியால் உய்த்து உணர்கின்றோம்.

உலக பாசங்களை துறந்து ஈசனையே உறவாக் கருதி யுருகி யிருத்தலால் துறவிகள் வேறு யாரையும் மதியாமல் வீறு கொண்டு நிற்கின்றார். தன்னை வந்து காணும் படி அரசன் அழைத்த பொழுது திருநாவுக்கரசர் அதனை மறுத்து விட்டார். "நீ வெறும் பொருளுடையவன்; நான் பரம் பொருளுடையவன்; நீ இத்தேசத்துக்கு மட்டும் இன்று அரசன்; நான் எத் தேசங்களுக்கும் என்றும் நித்திய சக்கரவர்த்தி" என நாவரசர் நாவீறோடு அன்று பேசி விடுத்தது அவரது துறவு நிலையை உலகம் அறிய நன்கு உணர்த்தி நின்றது. எல்லாம் வல்ல இறைவனை உறவாக் கொண்டமையால் துறவிகள் யாண்டும் யாதும் அஞ்சாமல் அதிசய வைராக்கிய சீலரா உறுதி பூண்டு நிற்கின்றனர்.

துறந்தார்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னைத்
துன்பம் துடைத்தாள வல்லான் தன்னை
இறந்தார்கள் என்பே அணிந்தான் தன்னை
எல்லி நடமாட வல்லான் தன்னை
மறந்தார் மதில்மூன்றும் மாய்த்தான் தன்னை
மற்றுஒரு பற்று இல்லா அடியேற்கு என்றும்
சிறந்தானைத் தென்கூடல் திருவாலவாய்ச்
சிவன்அடியே சிந்திக்கப் பெற்றேன் நானே. (1)

துறவாதே யாக்கை துறந்தான் தன்னைச்
சோதி முழுமுதலாய் நின்றான் தன்னைப்
பிறவாதே எவ்வுயிர்க்கும் தானே ஆகிப்
பெண்ணினோடு ஆணுருவாய் நின்றான் தன்னை

மறவாதே தன்திறமே வாழ்த்தும் தொண்டர்
மனத்தகத்தே அனவரதம் மன்னி நின்ற
திறலானைத் திருமுதுகுன் றுடையான் தன்னைத்
தீவினையேன் அறியாதே திகைத்த வாறே. (2)

நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை இல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை;
தாமார்க்கும் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதில்
கோமாற்கே நாம்என்றும் மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே. (3)

என்றும்நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம்;
இருநிலத்தில் எமக்குஎதி ராவாரும் இல்லை;
சென்றுநாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம்;
சிவபெருமான் திருவடியே சேரப் பெற்றோம்:
ஒன்றினல் குறையுடையோம் அல்லோம் அன்றே
உறுபிணியார் செறல்ஒழிந்திட்டு ஓடிப் போனார்
பொன்றினார் தலைமாலை அணிந்த சென்னிப்
புண்ணியனை நண்ணியபுண்ணி யத்து ளோமே. (4)
(தேவாரம்)

பற்றுக்கள் யாவும் துறந்து பரமனையே பற்றி நின்ற அப் பரது துறவு நிலையையும் மன வுறுதியையும் விரத சீலங்களையும் இவ் வுரைகளால் உணர்ந்து கொள்கிறோம். துறந்தான் எனச் சிவபெருமானுக்கு ஒரு பெயரிட்டிருக்கிறார். துறவின் நோக்கம் பிறவியை நீக்குவதே என இவர் துணிந்து மொழிந்துள்ளார்.

துறவி நெஞ்சினர் ஆகிய தொண்டர்காள்!
பிறவி நீங்கப் பிதற்றுமின் பித்தராய்
மறவன் ஆய்ப் பார்த்தன் மேல்கணை தொட்டஎம்
குறவ னார்உறை யுமகுட மூக்கிலே. [தேவாரம்]

துறவிகளுக்கு இவ்வாறு இவர் புத்தி போதித்திருக்கிறார்.

பொய்யான வைய மையல் அற்றவுடன் மெய்யான பொருளையே யாவரும் மேவி நிற்கின்றனர். அந் நிலை இயற்கை நியமமாய் இயைந்துள்ளது. மாய மருள் நீங்கிய பொழுது தூய வுரிமைப் பொருள் நேரே தெரிய வருகிறது; வரவே தேகம் நீங்

கும் வரையும் அதனையே நினைந்து நெஞ்சம் கரைந்து நேசம் கனிந்து துறவியர் உருகி உறுதிபூண்டு நிற்கின்றார். அவருடைய நிலை உயிர் பரங்களின் உறவுரிமைகளை உணர்த்தியருளுகிறது.

சிந்தைத் துயர்என்று ஒருபாவி
சினந்து சினந்து போர் முயங்க
நிந்தைக்கு இடமாய்ச் சகவாழ்வை
நிலை என்றுணர்ந்தே நிற்கின்றேன்
எந்தப் படியுன் அருள்வாய்க்கும்
எனக்கு எப்படிநீ அருள் செய்வாய்?
பந்தத் துயர்அற் றவர்க்கு எளிய
பரமானந்தப் பழம் பொருளே. (1)

பொருளைப் பூவைப் பூவையரைப்
பொருள் என்று எண்ணும் ஒருபாவி
இருளைத் துரந்திட்டு ஒளிநெறியை
என்னுட் பதிப்பது என்று கொலோ?
தெருளத் தெருள அன்பர் நெஞ்சம்
தித்தித்து உருகத் தெவிட்டாத
அருளைப் பொழியும் குணமுகிலே
அறிவா னந்தத்து ஆரமுதே! (தாயுமானவர்)

இறைவனை நினைந்து தாயுமானவர் இவ்வாறு உருகி உரையாடி யிருக்கிறார். பொன், மண், பெண், என்னும் இந்தப் பொய்ப் பொருள் களில் ஆசை வைத்திருப்பவர் மெய்ப் பொருளான ஈசனை அடைய இயலாது; பாச பந்தம் அற்றவர்க்கே அவன் பரமானந்தமாய் எளிதே காட்சி யருளுகின்றான் என இங்கே இவர் காட்டியுள்ள உண்மை கருதி யுணர வுரியது.

ஆசை அற்ற துறவி ஈசன் ஒளியாய் இலங்குகிறான்.

---

956. அல்லல் பிறர்க்கோர் அணுவளவும் ஆற்றாது
நல்ல புரிந்த நசைஓரீஇ—எல்லாம்
பரமன் திருவுருவாப் பார்த்திருப்ப தன்றோ
வரமார் துறவோர் வழி. (௬)

இ—ள்

பிறவுயிர்களுக்கு யாதொரு அல்லலும் புரியாமல், எவ்வழியும் நல்ல நீர்மைகளே நிறைந்து, நசைகள் யாவும் நீங்கி எங்கும்

எல்லாம் பரமன் உருவமாப்பார்த் திருப்பதே மேலான துறவிகள் இயல் பாம்; அந்த நீர்மை அளவு சீர்மை விளையும் என்க.

உயிரினங்கள் உடல்களை மருவி வாழும் வாழ்வுகளில் துயரங்களே பெருகியுள்ளன. அவ்வாறு பெருகி வருதற்குக் காரணம் அவை மருவி வந்துள்ள வினைகளேயாம். மனம் மொழி மெய்களால் செய்து வந்த இத அகிதங்களே மனித இனத்தில் சுக துக்கங்களாய்த் தொடர்ந்து படர்ந்து எவ்வழியும் அடர்ந்து நிற்கின்றன. இந்த வெய்ய துன்பவிளைவுகளை மெய்யுணர்வாளர் நன்கு தெரிந்து கொள்வர் ஆதலால் அல்லலான செயலை யாதும் தீண்டாமல் யாண்டும் எவ்வுயிர்க்கும் இதமே கருதி ஒழுகுவர்.

பிறவித் துயர்களை அறவே ஒழிக்கத் துணிந்து துறவு நிலையை அடைந்த பெரியோர்கள் எவ்வழியும் செவ்விய தண்ணளியே புரிந்து வருவது இயல்பாய் அமைந்துள்ளது. ஓரறிவுயிர்க்கும் ஊறு செய்யாமல் ஒழுகுவதே பேரறிவின் விழுமிய பயன் ஆம். பசும் புல்லும் நோக மிதியார் எனத் துறவு வாழ்வுடைய முனிவர்களை இவ்வாறு கூறி வருவது மரபாயுள்ளது.

எறும்பு முதலாக எவ்வுயிரும் ஈசன்
உறும்பல் உடம்பா உணர்ந்து---வெறும்புல்
எனினும் இடர்கள் எதிரா தியலல்
இனிய முனிவர் இயல்.

துறவிகளுடைய உணர்வு நலனையும் உறுதி நிலையையும் அருள் ஒழுக்கங்களையும் இது இனிது விளக்கியுளது.. கருணை வழி கடவுள் ஒளியாய் மிளிர்தலால் அந் நெறியே செல்வோர் அரிய பல நலங்களை எளிதே அடைந்து இன்பம் நுகர்கின்றனர்

பிறவுயிர்களைத் தன் உயிர் போல் கருதி எவன் உரிமையோடு இனிது ஒழுகி வருகிறானே அவன் பெரிய தவசி ஆகிறான்; புண்ணியங்கள் அவனிடம் பெருகி வருகின்றன; சீவ தயாபரனை சிவனும் அவனை உவகையோடு நோக்கி உறவு புரிகிறான்.

தெளிந்த அறிவு ஒருவனிடம் நிறைந்துள்ளமைக்கு அடையாளம் எவ்வுயிர்க்கும் இதமாய் இரங்கி ஒழுகுவதேயாம்.

பிறிதுநோய் தன்நோய் போன்றுபோற் றானேல்
பெரிதுநூல் அரிதின்ஓர்ந்து உணர்ந்த

அறிவினன் உண்டோ ஆவதுஎன் றமையான்
அறைதரு சராசரம் எவைக்கும்
சிறிதும்ஓர் துயரம் மறவியுற் றேனும்
செய்யுமே மெய்யுணர் வடைவான்
மறுவறு துறவைப் பொன்செய்வா ணிகர்போல்
வருந்திநாள் தொறும்வளர்ப் பவனே.

(வைராக்கிய தீபம் 56)

துறவு பூண்டவர் உறவு பூண்டு ஒழுகும் கருணை நீர்மையை இது காட்டியுள்ளது. சராசரம் எவைக்கும் யாதொரு துயரமும் மறந்தும் புரியார் என்றதனல் துறந்தவருடைய சிறந்த செந்தண்மை நிலையைத் தெரிந்து கொள்கிறோம். பொன் செய் வாணிகர்போல் துறவை அவர் போற்றி வருவர் என்றது உன்னி யுணரவுரியது. அரிய பொன்னை உவமை காட்டியது துறவின் பெருமை தெரிய. பொருளைப் போற்றி வருபவர் செல்வராய் உலக நிலையில் உயர்கின்றூர்; அருளைப் போற்றும் துறவர் அரிய பெரிய திருவராய் முத்தி யுலகில் உயர்ந்து முதன்மை பெறுகின்றூர்.

பிற உயிர்களுக்கு இரங்கி எவன் அளி புரிந்து வருகிருனே அவன் உயிர் ஒளி மிகுந்து உயர்ந்து வருகிறது. சீவதயை சிவனது நீர்மை ஆதலால் அதனை உரிமையாக உடையவன் அவனை நேரே அடைய நேர்கிருன். அருள் கனிய ஆனந்தம் கனிகிறது.

துறவிகள் மெய்யறிவுடையவர்; இயல்பாகவே உள்ளம் தூயராய் உலக பாசங்களைத் துறந்தவர் எவ்வழியும் எவ்வுயிரினும் ஈசனையே காணும் தேசினர் ஆதலால் யாண்டும் எந்தப் பிராணியையும் அன்போடு போற்றி அருள் புரிந்து வருவது அவரது பண்பாய் அமைந்தது. தண்ணளி தவ ஒளியாய் நின்றது.

இருந்தாலும் நின்றூலும் இடம்பெயர்ந்து நடந்தாலும்
வருந்தாமல் எவ்வுயிரும் வண்கருணை யுடன்வருவார்;
குருந்தான புல்பூடு கொடிசெடிகள் வாடினுமே
பொருந்தாமல் நயனங்கள் புலம்பியுளம் உருகுவரால்.

துறவிகள் இவ்வாறு தண்ணளி யுடையவராய்த் தவம் புரிந்து வருகிறூர். புண்ணிய நீர்மைகள் அவர் பால் பொலிந்து திகழ்கின்றன. கருணைப் பண்பு கடவுள் நிலையமாயுள்ளது.

கடல் கலங்கினும் மலை குலுங்கினும் நிலம் நடுங்கினும் விண் துளங்கினும் யாதும் கலங்காமல் அமைதியாயிருக்கும் துறவியர்

ஒரு புல் வாடினும் அல்லலாய் உள்ளம் இரங்கியருளுவது உலக விசித்திரமாயுள்ளது. அருள் நிலை அதிசய நலனை அருளுகிறது.

வைராக்கியத்தில் வைரமலை போல் துறவிகள் உறுதியாய் நிற்கின்றனர்; உயிர் இரக்கமான தண்ணளியில் வெண்ணெய் போல் உருகி விடுகின்றனர். சிறிய ஒரு ஈசல் துயர் உறினும் பெரிதும் மறுகி ஈசனை எண்ணி அவர் கண்ணீர் சொரிகின்றனர்.

அரச போகங்கள் யாவும் துறந்து காடு புகுந்து கவுதமர் கடுந்தவம் புரிந்திருந்தார்; அப்பொழுது அவருக்கு வயது முப்பது; அருந்தல் பொருந்தல்களில் திருந்திய சுவைகளை நுகர்ந்து சிறந்த சுகபோகியாயிருந்தவர் ஆகலால் துறவி ஆனாலும் அவரது மன நிலையை எளிதே கலைத்து விடலாம் என்று கருதி மன்மதன் மாய வஞ்சங்கள் புரிந்தான். பேரழகுடைய தருண மங்கையரை மருமமா ஏவி மையல் மோகங்களை விளைத்தான். தையலார் செய்த வெய்ய காமக் காட்சிகளில் எல்லாம் யாதும் கலங்காமல் மெய்ஞ்ஞான வீறோடு அவர் விளங்கியிருந்தார். புல்லுக்கும் புதலுக்கும் இரங்கியருளுகிற உள்ளம் பொல்லாத காமன் வில்லுக்கு யாதும் அசையாமல் கருங்கல்லாய் நின்றதைக் கண்டு தேவர் எல்லாரும் அவரது துறவு நிலையை வியந்து புகழ்ந்தார்.

"வாடாப் போதி மரகதப் பாசடை
மரநிழல் அமர்ந்தோன நெஞ்சம் யார்க்கும்
அருளின் தீந்தேன் நிறைந்து நனி ஞெகிழ்ந்து
மலரினும மெல்லிது எனப; அதனைக்
காமர் செவ்வி மாரன் மகளிர்
நெடுமா மழைக்கண் விலங்கி நிமிர்ந்தெடுத்த
வாளும் போழ்ந்தில வாயின
யாதோ மற்றது மெல்லிய வாறே? "

உத்தமத் துறவியான புத்தருடைய அருள் நிலையையும் மருள் நீங்கி மாசற்றுள்ள சித்த சுத்தியையும் இது தெளிவாக விளக்கியுள்ளது. அரிய துறவும் பெரிய அறிவும் பெருங்கருணையும் ஒருங்கே நிறைந்துள்ள இவர் உலக சோதியாய் நிலவி நிற்கின்றார்.

பொறி புலன்களை வென்று நல்ல அறிவு நலன்கள் அமைந்து எல்லா வுயிர்களிடத்தும் கருணை புரிந்து எங்கும் இறைவன் உண்மையை இனிது கண்டு புனித நிலையில் ஒழுகிப் புண்ணிய நீரராய்ப் பெருகி வருவதே முற்றத் துறந்த முனிவர் முறையாம்.

957. உள்ளத்தே ஆசை உறுமளவும் வன்பிறவி
வெள்ளத்தே மீள விழுவரால்—உள்ளத்துள்
பற்றற்ற போதே பவமும் அறும்வித்து
முற்றற்ருல் ஆமோ முளே. (எ)

இ—ள்

ஆசை உள்ளத்தில் இருக்கும் வரையும் யாவரும் பிறவிக் கடலில் வீழ்ந்து பெருந்துயரங்களேயே அடைவர்; விதை அழியின் முளே ஒழிதல் போல் பாசப் பற்றுகள் அடியோடு அற்றபோது தான் நீசப் பிறவிகள் வேரோடு அழிந்து ஒழியும் என்க.

பிறவி எவ்வழியும் வெவ்விய துயரங்களுடையது; அதனை அறவே விட்டு நீங்குவதே உயிர்க்கு மெய்யான உய்தியாம்; ஆசை அடியோடு அற்ருல் அன்றிப் பிறவி வேரோடு அருது; ஆகவே பற்றுக்களே முற்றும் துறந்த துறவியே பிறவிக் கடலேக் கடந்து என்றும் பேராத பேரின்ப நிலையைப் பெறுகின்ருன்.

இந்த உண்மையை எத்தனை வகையாக விரித்துத் தெளிவாக உரைத்தாலும், எவ்வளவு நூல்கள் எழுதி விளக்கினுலும் யாரும் உள்ளம் துணிந்து துறந்து போக மாட்டார். வழிவழியே பழகி வந்த வாசனையின் படியே உயிரினங்கள் ஒரு முகமாய் உழந்து வருகின்றன. தான் தோய்ந்த பழக்கத்தின் படியே வாழ்வுகள் வாய்ந்து வருதலால் எந்த மனிதனும் அந்த வகையிலேயே வாழ்ந்து மாய்ந்து போகிருன். மாய மருளோடு மடிந்து மடிந்து மீளவும் பிறந்து பிறந்து மீளாத பிறவியிலேயே மீண்டும் மீண்டும் சுழன்று வருகிருன். இந்த இயற்கை நியதியைக் கடந்து ஒருவனுக்கு மெய்ஞ்ஞான ஒளி தோன்றுமாளுல் அது மிகவும் வியக்கத் தக்கதாம். அரிய தவமும் பெரிய புண்ணியமும் ஊடுருவி வந்தவர்க்கே இந்தவாறு எளிதே மெய்யுணர்வு வெளியாகிறது. இத்தகைய தத்துவ ஒளி வீசியவுடனே எவனும் முற்றத்துறந்த முனிவன் ஆகிருன். ஞானமும் துறவும் வானஒளிகளாகின்றன.

சீவக மன்னன் ஒருநாள் மாலையில் எழில் நிறைந்த பொழில் ஒன்றில் உலாவி வந்தான். அங்கே ஒரு ஆண் குரங்கு பலாப் பழச்சுளேகளேத் தன் பெட்டைக்கு ஊட்டிக் கொண்டிருந்தது. அக் காவின் காவல்காரன் அக்கடுவனே விரட்டி விட்டு அக்கனியை எடுத்து உண்டான்; அதனைச் சீவகன் கண்டான். உடனே

உலக வாழ்வை வெறுத்தான்; அரசசெல்வங்கள் யாவும் துறந்து துறவியாக நேர்ந்தான். அவன் கண்டதும், கருதி நின்றதும், உறுதிபூண்டதும் துறவுகொண்டதும் அதிசயங்களாய்விளங்கின.

### சீவகன் சிந்தனை செய்தது.

இன்கனி கவரு மந்தி கடுவனோடு இரிய வாட்டி
நன்கனி சிலதன உண்ண நச்சுவேல் மன்னன் நோக்கி
என்பொடு மிடைந்த காமம் இழிபொடு வெறுத்து நின்றான்
அன்புடை அரிவை கூட்டம் பிறனுழைக் கண்டது ஒத்தே. (1)

கைப்பழம் இழந்த மந்தி கட்டியங் காரன் ஒத்தது;
இப்பழம் துரந்து கொண்ட சிலதனும் என்னை ஒத்தான்;
இப்பழம் இன்று போகத்து இன்பமே போலும் என்று
மெய்ப்பட உணர்வு தோன்றி மீட்டிது கூறினானே: (2)

மெலியவர் பெற்ற செல்வம் வேரொடும் கீழ்ந்து வௌவி
வலியவர் கொண்டு மேலை வரம்பிகந்து அரம்பு செய்யும்
கலியது பிறவி கண்டாம் காலத்தால் அடங்கி நோற்று
நலிவிலா உலகம் எய்தல் நல்லதே போலும் என்றான். (3)

வேட்கைமை என்னும் நாவில் காமவெந் தேறல் மாந்தி
மாட்சிஒன் றானுமின்றி மயங்கி னேற்கு இருளை நீங்கக்
காட்டினார் தேவர் ஆவர் கைவிளக் கதனை என்று
தோட்டியால் தொடக்கப் பட்டசொரிமதக் களிற்றின் மீண்டான்.
(சீவகசிந்தாமணி) (4)

தன் தந்தையைக் கொன்று விட்டு கட்டியங்காரன் என்னும் அமைச்சன் அரசைக் கவர்ந்து கொண்டான்; அவனை வென்று தொலைத்து ஆட்சியை மீட்டிச் சீவகன் ஆண்டு வருகின்றான். கடுவன் கையில் இருந்த கனியைச் சிலதன் கவர்ந்து கொண்டது தனது செயலை ஒத்துள்ளது என்று இக்குல மகன் கருதினான்; கருதவே சீ! இது என்ன உலக வாழ்வு! யாதும் நிலையில்லாதது; புலையாட்டமானது என்று வாழ்வை வெறுத்தான்; என்றும் நிலையான நித்திய முத்தியைப் பெறுவதே பேரறிவின் பயன் என்று உறுதிபூண்டு தெளிந்து உடனே துறவுபூண்டான்.

இந்த மன்னனுடைய துறவு நிலையை அறிந்ததும் நாடு முழுவதும் நைந்து நொந்தது. மனைவிமாரும் மக்களும் மறுகி அலறினர். அவர் யாவருக்கும் அறிவு கூறித் தேற்றினான். அரச பதவியைத் தலை மகனிடம் தந்துவிட்டுத் தனி நிலையில் ஒதுங்கினான்.

முற்றத் துறந்த முனிவர்களும் தவசிகளும் யோகிகளும் ஞானிகளும் இக் கொற்ற குரிசிலின் பற்றற்ற துறவின் அருமையை வியந்து புகழ்ந்தனர். பெரிய சுக போகங்களில் மூழ்கி யிருந்தவன் துறவி யானவுடனே யாவும் அடியோடு மறந்து உள்ளத்தை ஒரு நிலையில் நிறுத்தி யோக சமாதியில் அமர்ந்தான்; பரமனோடு ஒருமையாய் மருவி நெடிய யோகத்தில் நெடிது நிலைத்து இருந்தவன் முடிவில் பேரின்ப நிலையை அடைந்தான்.

கேவல மடந்தை என்னும் கேழ்கிளர் நெடிய வாட்கண்
பூவலர் முல்லைக் கண்ணிப் பொன்ஒரு பாகம் ஆகக்
காவலன் தானோர் கூறாக் கண்ணிமை யாது புல்லி
மூவுலகு உச்சி யின்பக் கடலினுள் மூழ்கி னானே. (1)

பிரிதலும் பிணியும் மூப்பும் சாதலும் பிறப்பும் இல்லா
அரிவையைப் புல்லி அம்பொன் அணிகிளர் மாடத்தின்தேன்
சொரிமது மாலை சாந்தம் குங்குமம் சுண்ணம் தேம்பாய்
விரிபுரை விளக்கு விண்ணோர் ஏந்தமற்று உறையுமன்றே.
(முத்தியிலம்பகம்) (2)

நித்திய நிரதிசய ஆனந்தத்தை இவன் பெற்றிருத்தலை இவற்றால் அறிந்து கொள்கிறோம். கேவல மடந்தை முத்தித்திரு.

———

958 வஞ்சப் புலன்செய் வகைஅறிந்து மாறுமல்
அஞ்சும் செறிய அடக்கினால்—தஞ்சமென
வானுமிந்த மண்ணுமே வந்தடங்கும் மெய்யின்பம்
தானெழுந்து நிற்கும் தழைத்து. (அ)

இ-ள்.

புலன்களால் விளையும் புலைகளை உணர்ந்து ஐம்பொறிகளையும் நெறியே அடக்குக; அவ்வாறு அடக்கினால் வானகமும் வையகமும் உன்பால் வந்து அடங்கி நிற்கும்; மெய்யான பேரின்பம் மேலோங்கி வரும்; அவ்வழியைத்தெளிந்துகொள்க.

பொறிகளின் வாயிலா வெறி கொண்டு திரிந்து தேக போகங்களை அவாவி அலைவதே மோக வாழ்வாய் யாண்டும் மூண்டுள்ளது. கொச்சையான இச்சை கொடிய கேடுகளாய் வருகிறது. எல்லா அல்லல்களுக்கும் மூல காரணம் ஆசையே. அது நெஞ்சுள் புகுந்தபோதே மனிதன் பஞ்சு படாதபாடு பட

நேர்ந்தான். பேய்வாய்ப் பிள்ளையாய் நாய் வாய்ச் சேலையாய் ஆசைவாய்ப்பட்டவர் அல்லலடைந்து அலமந்து உழல்கின்றார்.

ஆசை நீங்கிய அளவு ஈசன் ஒளி அங்கே ஓங்கி எழுகிறது. நிராசை திவ்விய நீர்மையாய்ப் பேரின்பங்களை அருளுகிறது; துராசை வெவ்விய தீமையாய் வெந்துயரங்களையே விளைக்கிறது.

பிறவித் துன்பங்களை ஒழிக்க நேர்ந்தவர் ஆதலால் பொறிகளை அடக்கி அமர்வது துறவிகளின் இயல்பாய் அமைந்தது.

ஐவகைப் பொறியும் வாட்டி ஆமையின் அடங்கி ஐந்தின்
மெய்வகை தெரியும் சிந்தை விளக்குநின் றெரியவிட்டுப்
பொய்கொலை களவு காமம் அவாஇருள் புகாது போற்றிச்
செய்தவம் நுனித்த சீலக் கனைகதிர்த் திங்கள் ஒப்பார்.
(சீவக சிந்தாமணி)

ஐம்பொறிகளையும் அடக்கி உள்ளே மெய்யுணர்வு ஒளிவீச வெய்ய மருள் இருள் வெளியே விலகி ஒழியத் தவ ஒழுக்கங்களாகிய கிரணங்கள் கிளர்ந்து விளங்கப் பூரண சந்திரன்போல் ஞான முனிவர் பொலிந்து திகழ்வர் என இது உணர்த்தியுளது.

புலன்களை வென்றபோது மனிதன் அதிசய சோதியாய்த் துலங்கி நிற்கிறான். அந்த ஞான வீரனை வானமும் வையமும் வணங்கி மகிழ்ந்து வாழ்த்தி வருகின்றன. மண்ணோரும் விண்ணோரும் தேக போகங்களையே அவாவி அலைகின்றனர் ஆதலால் அவற்றை வெறுத்து ஆசை அற்றுள்ள துறவிகளை அவர் வியந்து மதித்து விழைந்து புகழ்ந்து மகிழ்ந்து துதிக்க நேர்ந்தனர்

பிறவித் துன்பங்கள் ஆசையால் விளைந்தன என்று துறவி தெரிகின்றான்; தெரியவே அந்த அவாவை அறவே நீக்கி விடுகிறான்; விடவே துன்பங்கள் யாவும் நீங்கிப் போகின்றன; போகவே பேரின்ப நிலையை நேரே அவன் பெறுகின்றான்.

அவாஇல்லார்க்கு இல்லாகும் துன்பம்; அஃது உண்டேல்
தவாஅது மேன்மேல் வரும். (குறள், 368)

தனக்கு யாதொரு துன்பமும் நேரலாகாது என்று எண்ணுகின்றவன் முன்னதாக என்ன செய்யவேண்டும்? என்பதை இது இனிது விளக்கியுள்ளது. முன்னம் ஆசை கொண்டிருந்தமையால் இப்பொழுது இந்தப் பிறவித்துயர்கள் மூண்டுள்ளன;

இன்னும் அதைக் கொண்டால் மேலும் துன்பங்களே நீளும்; ஆதலால் உடனே அவாவை ஒழித்து விடு; விடின் அல்லல் யாவும் நீங்கி எல்லையில்லாத பேரின்பங்களை நீ அடைவாய் எனத் தேவர் இவ்வாறு சீவர்களுக்கு உரிமையோடு போதித்திருக்கிறார்.

பயாபதி என்பவன் சுரமை நாட்டு மன்னன். சிறந்த அரச போகங்களை அனுபவித்து வந்தான்; வயது முதிர்ந்ததும் ஆட்சியை மக்களிடம் கொடுத்து விட்டுத் துக்கத் தொகுதிகளை ஒழித்து உய்ய வேண்டும் என்று உறுதி மீக்கொண்டு துறவு பூண்டான் நிறைந்த திருவுடன் வேந்தனாயிருந்தவன் துறந்ததை அறிந்ததும் உலகம் வியந்து நின்றது. அரிய துறவினை அடைந்தவன் பெரிய முனிவர்களோடு கூடி ஆத்தும தத்துவங்களை ஆராய்ந்திருந்தான். அந்த ஆன்ம ஆய்வு ஆனந்தம் ஆயது.

*பிறந்தவன் பொறிப்புலக் கிவரும் அப்புலம்*
*சிறந்தபின் விழைவொடு செற்றம் செய்திடும்;*
*அறைந்தவை வாயிலா வினைகள் ஈட்டினன*
*இறந்தவன் பின்னுமவ் இயற்கை எய்துமே.* (1)

*பிறவிச்சக் கரம்இது பெரிதும் அஞ்சினன்*
*துறவிக்கண் துணிகுவன் துணிந்து தூயனாய்*
*உறவிக்கண் அருளுடை ஒழுக்கம் ஓம்பினன்*
*மறவிக்கண் இலாததோர் மாட்சி எய்துமே* (2)

*காட்சியும் ஞானமும் கதிர்த்துத் தன்பொறி*
*மாட்சியை வெலீஇமனம் தூயன் ஆயபின்*
*நாட்செய்து நவிற்றிய தியான வீதியான்*
*மீட்சியில் வீட்டுலகு எய்தும் வீரனே.* [சூளாமணி]

பிறவி கொடிய துயரங்களை யுடையது; பிழையான ஆசைகளால் அது விளைந்து விரிந்து வந்துள்ளது; பற்றுக்களை அறவே விட்ட துறவுதான் பிறவியை நீக்கிப் பேரின்பம் அருளுகிறது என முனிவர்கள் இனிது கூறியிருப்பதை இம் மன்னன் கேட்டு மகிழ்ந்திருக்கிறான். உறுதியான துறவால் உய்தி பெற்றுள்ள இவனை ஞான வேந்து என வானவரும் புகழ்ந்து வந்தனர்.

மருளான மாய மையல்கள் மருவியுள்ள உலகக் காட்சிகளை ஒருவித் துறவிகள் உள்ளே நோக்குகின்றனர்; அது சுயமான தூய ஆன்மக் காட்சி ஆகிறது; ஆகவே அதில் பேரின்

பம் பெருகி வருகிறது. அமைதியான அகநோக்கு அதிசய ஆனந்தங்களை ஆக்கி உலகம் துதி செய்ய அருளுகின்றது.

Inwardness, mildness and self-renouncement do make for man's happiness. (Arnold)

உள்ளத்துறவு, அமைதி, அகநோக்கு ஆகிய இவை மனித னுக்கு இனிய இன்பத்தைச் செய்தருளுகின்றன என்னும் இது இங்கே நன்கு அறிய வுரியது. அரிய இன்பம் அகத்திலுள்ளது.

உனது உண்மையான ஆன்ம நிலையை உள்ளே ஊன்றி நோக்கு; பேரின்ப வெள்ளம் பெருகி எழுவதை அறியலாகும்.

---

959. மண்ணைத் திருத்தி வருபயிரைப் பேணிவரின்
உண்ணற் கினிய உணவூட்டும்—எண்ணும்
மனத்தைத் திருத்திஞே மாருத இன்பம்
உனக்கினி தாகி யுறும். (கூ)

இ—ள்.

நிலத்தை உழுது திருத்திப் பண்படுத்திப் பயிரை வளர்த்து வரின் உணவுகளை வளமா அது உதவி வரும்; மனத்தைப் புனித மாப் பண்படுத்திஞல், நிலையான பேரின்பங்கள் நேரே விளைந்து வரும்; இனிய வரவை எய்துவது அரிய பிறவிப் பேரும் என்க.

மண்ணும் மனமும் இங்கே இனமா எண்ண வந்தன. ஞால வாழ்வையும் ஞான வாழ்வையும் முறையே கருதிபுணர இவை உறுதியா நேர்ந்தன. சுவரை வைத்துச் சித்திரம் எழுது என்பது முதுமொழியாய் வந்துள்ளது. உடலைப் பேணி உயிரை அழகா உயர்த்தியருள் என்பதை இந்தப் பழமொழி கிழமையோடு உணர்த்தி விழுமிய உண்மையை விளக்கியது.

விலங்கு பறவைகளினும் மேலான மனித தேகம் பெற்றது வியனை பயனை நயனு அடையவேயாம். உரிய பயனை உணரா மல் ஒழிவது பெரிய பிழையாம். பார் அளவா வாழ்ந்து போவது பேரிழவாய் நேர்ந்து பெருந் துயரங்களை விளைத்து வருகிறது.

எவ்வழியும் உலக நாட்டமாய் ஓடிப் பொருளை நாடி ஈட் டிச் சுகபோகங்களையே அவாவி உழல்வதே மானிட வாழ்வாய் மருவியுளது. ஊனமான வழிகளில் உள்ளம் களித்து ஞான

சூனியமாய் வாழ்ந்து ஈனமா அழிந்து போவதே இகலோக நிலையாய் யாண்டும் புலையோடு மூண்டு நீண்டு நிலவுகின்றது.

செல்வ வளங்கள் நிறைந்து பல்வகை இன்பங்களும் சுரந்து எல்லா நிலைகளிலும் உயர்ந்த பெரிய அரச வாழ்வே எனினும் உயிர்க்கு ஊதியமான உய்தியைச் செய்யாமல் ஒழியுமானால் அது கொடிய பழியான நெடிய இழிவுடையதே. ஆன்மா மேன்மையுறச் செய்வது ஞானவாழ்வு; அங்ஙனம் செய்யாதது ஈன வாழ்வே. புனித நிலையில் வாழ்வதே புண்ணிய வாழ்வாம்.

வாழ்ந்தனம் என்று தாழ்ந்தவர்க்கு உதவாது
தன்உயிர்க்கு இரங்கி மன்னுயிர்க்கு இரங்காது
உண்டிப் பொருட்டால் கண்டன வெஃகி
அவிஅடுநர்க்குச் சுவைபகர்ந்து ஏவி
ஆரா உண்டி அயின்றனர் ஆகித்
தூராக் குழியைத் தூர்த்துப் பாரா
விழுப்பமும் குலனும் ஒழுக்கமும் கல்வியும்
தன்னில் சிறந்த நல்மூ தாளரைக்
கூஉய்முன் நின்றுதன் ஏவல் கேட்கும்
சிறுஅர்த் தொகுதியின் உறுஅப் பேசியும்
பொய்யொடு புன்மைதன் புல்லர்க்குப் புகன்றும்
மெய்யும் மானமும் மேன்மையும் ஒரீஇத்
தன்னைத் தேறி முன்னையோர் கொடுத்த
நன்மனைக் கிழத்தி ஆகிய அந்நிலைச்
சாவுழிச் சாஅம் தகைமையள் ஆயினும்
மேவுழி மேவல் செல்லாது காவலொடு
கொண்டோள் ஒருத்தி உண்டிவேட்டு இருப்ப
எள்ளுக்கு எண்ணெய் போலத் தள்ளாது
பொருளின் அளவைக்குப் போகம்விற்று உண்ணும்
அருளில் மடந்தையர் ஆகம் தோய்ந்தும்
ஆற்றல் செல்லாது வேற்றோர் மனைவயின்
கற்புடை மடந்தையர் பொற்புநனி வேட்டுப்
பிழைவழி பாராது நுழைவழி நோக்கியும்,
நச்சி வந்த நல்கூர் மாந்தர்தம்
விச்சையிற் படைத்த வெவ்வேறு காட்சியின்
அகமலர்ந்து ஈவார் போல முகமலர்ந்து
இனிது மொழிந்தாங்கு உதவுதல் இன்றி

நாளும் நாளும் நாள்பல குறித்துஅவர்
தாளின் ஆற்றலும் தவிர்த்துக் கேள்இகழ்ந்து
இகமும் பரமும் இல்லை என்று
பயமின்று ஒழுகிப் பட்டிமை பயிற்றி
மின்னின் அனைய தன் செல்வத்தை விரும்பித்
தன்னையும் ஒருவர் ஆக உன்னும்
ஏனையோர் வாழும் வாழ்க்கையும்; நனைமலர்ந்து
யோசனை கமழும் உற்பல வாவியில்
பாசடைப் பரப்பில் பால்நிற அன்னம்
பார்ப்புடன் வெருவப் பகுவாய் வாளைகள்
போர்த்தொழில் புரியும் பொருகா விரியும்
மருதமும் சூழ்ந்த மருத வாண!
சுருதியும் தொடராச் சுருதி நாயக!
பத்தருக்கு எய்ப்பினில் வைப்புஎன உதவும்
முத்தித் தாளா மூவா முதல்வநின்
திருவடி பிடித்து வெருவரல் விட்டு
மக்களும் மனைவியும் ஒக்கலும் திருவும்
பொருள்என நினையாது உன்அருளினை நினைந்து
இந்திரச் செல்வமும் எட்டுச் சித்தியும்
வந்துழி வந்துழி மறுத்தனர் ஒதுங்கிச்
சின்னச் சீரை துன்னக் கோவணம்
அறுதற் கீளொடு பெறுவது புனைந்து
சிதவல்ஓடு ஒன்று உதவுழி எடுத்தாங்கு
இடுவோர் உளர்எனின் நிலையில்நின்று அயின்று
படுதரைப் பாயலில் பள்ளிமேவி ஓவாத்
தகவுஎனும் அரிவையைத் தழீஇ மகவுஎனப்
பல்லுயிர் அனைத்தையும் ஒக்கப் பார்க்கும்நின்
செல்வக் கடவுள் தொண்டர் வாழ்வும்,
பற்றிப் பார்க்கின் உற்றநா யேற்குக்
குளப்படி நீரும் அளப்பரும் தன்மைப்
பிரளய சலதியும் இருவகைப் பொருளும்
ஒப்பினும் ஒவ்வாத் துப்பிற்று ஆதலின்
நின்சீர் அடியார் தம்சீர் அடியார்க்கு
அடிமை பூண்டு நெடுநாட் பழகி
முடலை யாக்கையொடு புடைபட்டு ஒழுகிஅவர்
கால்தலை ஏவல்என் நாய்த்தலை ஏற்றுக்

கண்டது காணின் அல்லது ஒன்று
உண்டோ மற்றெனக்கு உள்ளது பிறிதே.

(மருதூர்மும்மணி)

இந்தப் பாடலை ஊன்றிப் படியுங்கள். பொருள்களைக் கூர்ந்து ஓர்ந்து பாருங்கள்; செல்வக் களிப்பில் எல்லை மீறி இறுமாந்து பொறி வெறிகளில் ஆழ்ந்து நெறிகேடராய் நீண்டு வாழ்கிற புலை வாழ்வையும், எல்லாவற்றையும் துறந்து எவ்வுயிர்க்கும் இரங்கி யாண்டும் இறைவனையே எண்ணி யுருகி வருகிற துறவிகளுடைய புனித வாழ்வையும் இரு தலையில் வைத்து நேரே நிறுத்து நோக்கி நிலைமை தலைமைகளைப் பட்டினத்தார் இதில் விளக்கியிருக்கிறார். குறித்த வாழ்வுகள் கூர்ந்து சிந்திக்கவுரியன.

முன்னது ஊன வாழ்வு;
பின்னது ஞான வாழ்வு.

அது துன்பத் திடல்;
இது இன்பக் கடல்.

புனிதமான இந்த ஞானவாழ்வில் மோனமாய் வாழ்கிற துறவிகளின் திருவடிகளை எனது தலைமேல் தாங்கி முழு முதல் தலைவனை உன்னை உழுவலன்போடு என் உள்ளத்தில் கண்டு வாழும் வாழ்வையே அடியேன் பேரின்பப் பேறாக் கொண்டிருக்கிறேன் என்று குறித்திருப்பது இப்பெரியாரது அரிய துறவு நிலையையும் பெரிய தவ ஞானங்களையும் விளக்கி நிற்கிறது. மருதவாண! சுருதி நாயக! முத்தித் தாளா! மூவா முதல்வ! என்று ஆரா ஆவலோடு ஈசனை விளித்து நேரே பேசியிருக்கிறார். துறவும் ஞானமும் வைராக்கியமும் தோய்ந்த இவருடைய அனுபவ மொழிகள் மனித சமுதாயத்துக்கு இனிய அமுத தாரைகளாய் என்றும் சுவை சுரந்து உணர்வுநலங்களை அருளி ஒளி புரிகின்றன.

வினைப்போக மேஒரு தேகம்கண் டாய்வினை தான்ஒழிந்தால்
தினைப்போ தளவும் நில்லாதுகண் டாய்சிவன் பாதம் நினை
நினைப்போரை மேவு நினையாரை நீங்குஇந் நெறியில் நின்றால்
உனைப்போல் ஒருவர் உண்டோமனமே எனக்கு உற்றவரே. (1)

நாட்டம்என் றேயிரு சற்குரு பாதத்தை நம்பு பொம்மல்
ஆட்டம்என் றேயிரு பொல்லா வுடலை அடர்ந்த சந்தைக்

கூட்டம்என்றேயிரு சுற்றத்தை வாழ்வைக் குடம்கவிழ்நீர்
ஓட்டம்என் றேயிரு நெஞ்சே உனக்குப தேசமிதே. (3)

பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்திட்ட பிச்சை எல்லாம்
நாய்போல் அருந்தி நரிபோல் உழன்று நன்மங்கையரைத்
தாய்போல் கருதித் தமர்போல் அனைவர்க்கும் தாழ்ச்சிசொல்லிச்
சேய்போல் இருப்பர்கண் டீர் உண்மைஞானம் தெளிந்தவரே.

என்பெற்ற தாயரும் என்னைப் பிணம்என்று இகழ்ந்துவிட்டார்;
பொன்பெற்ற மாதரும் போவென்றுசொல்லிப் புலம்பிவிட்டார்;
கொன்பெற்ற மைந்தரும் பின்வலம்வந்து குடம் உடைத்தார்;
உன்பற்று ஒழிய ஒருபற்றும் இல்லை உடையவனே! (4)
(பட்டினத்தார்)

உலக நிலைகளையும் உண்மை முடிவுகளையும் எளிய மொழிகளில் இவ்வாறு இவர் வெளியிட்டிருக்கிறார். பாசபந்தங்கள் யாவும் அற்று ஈசனையே பற்றித் தேசுமிகுந்திருந்த இவரது செயல் இயல்களைக் கண்டு வியந்தே பத்திரகிரி என்னும் அரசனும் எல்லாம் ஒல்லையில் துறந்து உறுதிமீதூர்ந்து துறவியானான்.

புல்லாய் விலங்காய்ப் புழுவாய் நரவடிவாய்
எல்லாப் பிறப்பின் இருள்அகல்வது எக்காலம்? (1)

சோற்றுத் துருத்திதனைச் சுமந்தலைந்து வாடாமல்
ஊற்றைச் சடம்போட்டு உனை அடைவது எக்காலம்? (2)

பேய்போல் திரிந்து பிணம்போல் கிடந்து பெண்ணைத்
தாய்போல் நினைந்து தவம்முடிப்பது எக்காலம்? (3)
(பத்திரகிரியார்)

துறவியான பத்திரகிரியார் பிறவி நீக்கம் கருதி இறைவனை நோக்கி இங்ஙனம் ஏங்கி முறையிட்டிருக்கிறார். துறவு நிலைக்கு இந்த இருவரும் எவ்வழியும் உறுதியாய்த் தலைமைதாங்கி நிற்கிறார்.

பாரனைத்தும் பொய்எனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
ஆரும் துறக்கை அரிதரிது—நேரே
மனத்துறவும் அப்படியே மாணா இவற்றில்
உனக்கிசைந்த வாறென்றே ஓர். (தாயுமானவர்)

பட்டினத்துப் பிள்ளையினைப் பத்ரகிரி யைப்பரவி
விட்டுவிட மாட்டார் வெறுவீடர்—வெட்ட
வெறுளலும்பை நாய்கறண்ட வேந்தர்வர நாய்பார்த்து
உறுமுவதைக் காட்டுவோ மோ. (கண்ணுடைய வள்ளல்)

துறவு நெறிக்கு உலகம் அறிந்த தலைமையாய் இவர் ஒளி பெற்றிருப்பதை இவற்றால் உணர்ந்து கொள்கிறோம். பற்று அற நேர்ந்தவர் எவரும் இவரை உரிமையா நினைந்து உயர்ந்துள்ளனர்.

உள்ளம் தெளிந்து துறந்தவர் பேரின்ப வெள்ளம் படிந்து விளங்குகின்றார். உண்மையை உணர்ந்து உறுதி நலம் பெறுக.

---

960. மனமொழிமெய் மாசு மருவார் மதிசால்
இனமொழிய வேறுதுணை எண்ணார்—கனவெனவிம்
மண்வாழ்வை நாளும் மதித்துநிற்பர் மாதவமே
பண்வாழ் வுடையார் பரிந்து. (ώ)

இ-ள்.

அரிய மாதவமே உரிய வாழ்வாகவுடைய பெரியோர்கள் உளம் உரை செயல்களில் யாதொரு மாசும் நேராமல் புனிதமாயிருப்பர்; மதிநலமுடைய ஞானசீலர்களையே உறுதித் துணையாக் கருதி உண்மை நிலையையே உணர்ந்து அவர் ஒழுகுவர் என்க.

மூவகையான தொகைகள் மனித வுடலில் மருவியுள்ளன. நனவு கனவு உறக்கம் என நிலைகள் மூன்று; சத்துவம் இராசதம் தாமதம் எனக் குணங்கள் மூன்று; காமம் வெகுளி மயக்கம் எனக் குற்றங்கள் மூன்று; மனம் வாக்கு காயம் எனக் கரணங்கள் மூன்று; இன்னவாறே இன்னும் சில முக்கூட்டுகள் சேர்ந்து இப் பொய்க் கூட்டில் தொழில் புரிந்து வருகின்றன.

எல்லா நிலைமைகளுக்கும் மனம் தலைமையாயுள்ளது. அது மாசுபடியாமல் தேசுமிகுந்திருந்தால் மனிதன் புனிதனாய் மகிமை மிகப் பெறுகிறான். துறவி தவசி யோகி ஞானி சித்தன் எனச் சிறந்துள்ள முத்தர்கள் எல்லாரும் சித்த பரிபாகத்தினாலேயே உயர்ந்து திவ்விய நிலையில் விளங்கி யிருக்கின்றனர்.

பரம முத்தி பதம்பெறும் ஏதுவுள்
கரண சுத்தி அதனது காரணம;
அரண்எரித்த அமலற் குறித்தநற்
கிரியை இத்திறம் வேதம் கிளக்குமால். [1]

அறவினைக்கும் அரும்பொருள் இன்பொடு
பெறுவதற்கும் பெருங்கல்வி கற்றுயர்

விறலி னுக்கும்நல் வீரம்தனக்கும் ஒண்
துறவினுக்கும் துணைமனம் என்பவே. [2]
(பிரபுலிங்கலீலை)

மனத்தின் மகிமை மாண்புகளை இவை உணர்த்தியுள்ளன. சித்த சுத்தியே முத்திக்கு மூலகாரணம் என்று விளக்கியிருத்தலால் சீவன்முத்தர்கட்கும் தூயமனத்துக்கும் உள்ள உறவுரிமை விளங்கி நின்றது. உள்ளம் தூய்மையுற உயிர் பரம் ஆகிறது.

புலன்வழி இழிந்து வெளிமுகமாய் விரிந்து மனம் அலையாத படி துறவிகள் பழகி வருதலால் அது புனித நிலையை மருவி வருகிறது. சகமுகமாய் ஓடாமல் அகமுகமாய் மனம் நாடிவரின் ஆன்ம ஒளி மிகுந்து அதிசய மேன்மைகள் நிறைந்து வருகின்றன. சிந்தை ஒடுங்கிய அளவு சீவன் சிவனாய் விரிகிறது.

ஆசை அறுதலும், உண்மை தெளிதலும், உறுதியான வைராக்கியமும் துறவியின் இயல்புகளா யிருத்தலால் அந்த முனிவனிடம் பரமனுடைய ஒளி பரவி மிளிர்கிறது. நிராசையும் ஞானமும் விராகமும் எவரிடமும் எளிதில் காண முடியாத அதிசய நீர்மைகள். அவை உறவா மருவியபொழுது அத்துறவியை இறைவன் என எத்திசையும் உரிமையோடு துதி செய்து தொழுகிறது. உலக பாசங்களை ஒருவி உள்ளம் ஈசனை மருவி இருத்தலால் துறவியர் வேறு எதையும் மதியாமல் எவ்வழியும் திவ்விய நீர்மை தோய்ந்து அதிசய ஆனந்தமா யிருக்கின்றனர்.

ஆசை யிலானுக்கு அகிலமெலாம் ஓர் துரும்பு;
தேசுமிகு ஞானிக்குச் சேண் துரும்பு;---பேசும்
பிறவிக்குள் வந்து பெரியவராய் நின்ற
துறவிக்கு வேந்தன் துரும்பு.

ஆசை யின்மையும் ஞானமும் துறவும் உடையவர் எப்படி யிருப்பர்? என்பதை இது இனிது விளக்கியுள்ளது. இந்திர பதவியையும் ஞானி விரும்பான்; அது இவனுக்கு ஒரு துரும்பாம் என்றதனால் அந்தச் சிந்தையின் தெளிவையும் ஒளியையும் உறுதியையும் நாம் உணர்ந்து வியந்து உவந்து கொள்கிறோம்.

உயர்ந்த புண்ணியத்தால் சித்த சுத்தி தோய்ந்து உண்மை தெளிந்து உய்தி பெறுதலால் முத்தரை வியந்து எத்தேவரும்

புகழ்ந்து போற்றுகின்றனர். பற்று அற்றவன் பரமன் ஆகிறுன் என்பது பழமொழி. மாசு கழிய ஈசன் வெளியாகிறுன்.

கருநட தேசத்தில் அரசனுயிருந்த ஒருவன் துறவி ஆனுன். காளைப் பருவத்திலேயே யாவும் துறந்து அருந்தவ முனிவனுய் அப்பெருந்தகை மேவியிருந்தான்; உலக பந்தங்கள் ஒழிந்து நிலவி நின்ற அவனது நிலைமையை அறிந்து மேதினி வியந்து புகழ்ந்தது.

பூவணை ஆகி வானம் பொருந்து மேற்கட்டி யாகித்
தீவம தாகி இந்து செங்கதிர் வீசும் காற்று
மேவுசா மரமதாகி விடுதலை மனைவி ஆகிக்
கேவலம் இன்பம் ஆகிக் கிளர்ச்சியாய் நின்றுன் வேந்தன்.
(மகாராச துறவு)

பூமி பஞ்சணை, வானம் விதானம், சூரிய சந்திரர் விளக்குகள், காற்று வெண்சாமரை, துறவு மனைவி, தனியிடம் இனிய இன்பம் என அம்முனிவன் அனுபவித்துள்ள சுகபோகங்களை இதில் நயமா அறிந்து கொள்கிறேம். அரச துறவி ஆதலால் அந்த வரிசைக்கு ஏற்ப இந்த உருவகம் இனிது இசைந்து நின்றது. யாதொரு பற்றுமின்றி எங்கும் ஏகமாய் அமர்ந்து எவ்வழியும் பேராத பேரானந்தத்தை நேரே அனுபவித்திருக்கிறுன்.

அரியது துறவறம் அல்லது இல்லை; யான்
மருவிய துறவறம் ஒருவி மன்னனுய்
உருகெழு முடிகவித்து உலகம் ஆள்வது
பெருவிலை மணியினைப் பிண்டிக்கு ஈதலே.

மந்திரிகள் வந்து இந்த அரசனை அடைந்து இன்னும் சில நாள் ஆட்சி புரிந்துவிட்டு அதன் பின் துறவி ஆகலாம் என்று வேண்டியபோது அவரை நோக்கி இவன் இவ்வாறு கூறியிருக்கிறுன். அரிய மணியை வறிய தினைமாவுக்கு விற்றதுபோல் மேலான துறவு நிலையைவிட்டுக் கீழான அரச புலைக்கு வருவது என உவமை கூறியிருப்பது இம்முனிவனது உறுதியுணர்வையும் துறவின் சுவையையும் ஒருங்கே தெளிவா உணர்த்தி நின்றது.

துயரத்தை எவரும் விரும்பார்; சுகத்தையே உயிரினங்கள் எவ்வழியும் இயல்பாய் விரும்பி வருகின்றன; பிறப்பு, இறப்பை யுடையதாய் யாண்டும் துன்பங்களே நிறைந்திருக்கின்றது; ஆகவே பிறவியை நீக்குவதே பேரின்ப நிலை என ஞானிகள்

தெளிந்து கொண்டனர்; கொள்ளவே பிறப்புக்கு மூலகாரண மாயுள்ள ஆசைகளை அறவே நீக்க நேர்ந்தனர். அந்த நீக்கமே துறவு என நோக்க வந்தது. பிறவியை வேரோடு ஒழிக்க மூண்டவரே துறவிகள் ஆதலால் பற்றுக்கள் யாவும் அற்று யாண்டும் அவர் பரமாய் நீண்டு நிற்கின்றார்.

மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் பிறப்பறுக்கல்
உற்றார்க்கு உடம்பும் மிகை (குறள், 345)

உண்மைத்துறவியின் உறுதியான நிலையை இது உணர்த்தியுள்ளது. பிறப்பு அறுக்கல் உற்றார் எனத் துறவிகளுக்கு ஒரு பெயரை இதில் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது. உயர்ந்த பேரின்பப் பேற்றை உடனே அடைய ஒட்டாத படி உயிரைத் தடைப் படுத்தியிருத்தலால் உடம்பும் துறவிக்குப் பகை என நேர்ந்தது. உயிரின் தனியான புனித நிலை உணர நின்றது.

பிறவியை அறவே அறுக்க நேர்ந்த துறவி உலக உறவுகள் யாவும் ஒருங்கே ஒழித்து விடுவான் என்பது இங்கு அறியவந்தது.

மக்களைக் குருக்கள் தம்மை மாதரை மற்றுளோரை
ஒக்குமின் உயிரன் னாரை உதவிசெய் தாரோடு ஒன்றத்
துக்கமித் தொடர்ச்சி என்று துறப்பரால் துணிவு பூண்டோர்
மிக்கது நலனே ஆகி வீடுபேறு அளிக்கு மன்றே.
(இராமாயணம்)

நாடுநகர் வீடுடையாள் தாய்தந்தை நட்புக்கள்
மாடுகுலம் பொன்னுடம்பின் வாதனைகள்—கூடத்
தொடுத்தவலைக் கண்ணித் தொடக்கிதனை இப்போ
விடப்பெறுவார் என்பிறப்பார் மேல். (ஒழிவிலொடுக்கம்)

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

ஆசைகளை அறவே துறந்தவன் துறவி
துன்பம் நீங்க இன்பம் ஓங்கும்.
பிறவி அறுவதே துறவின் துணிபாம்.
பாசம் ஒழிய ஈசன் வெளியாம்.
எல்லாம் துறந்தவன் எவரினும் உயர்ந்தான்.
பரமனை நேரே பார்த்து மகிழ்வான்.
பந்தம் ஒழியின் அந்தமில் இன்பமாம்.
ஐம்புலன் அடங்கின் அமரரும் அடங்குவார்.
உள்ளம் திருந்திவரின் உவகை சுரந்துவரும்.
துறவும் தவமும் உறவாய் உறையும்.

௯௬—வது துறவு முற்றிற்று.

# தொண்ணூற்றேழாம் அதிகாரம்.

## தவம்.

அஃதாவது பொறிகளை அடக்கி நெறி நியமங்களோடு விரதம் பூண்டு ஒழுகும் விழுமிய நிலை பாச பந்தங்களைத் துறந்தவர் உவந்து செய்வது ஆதலால் துறவின் பின் இது வைக்கப்பட்டது. துறவும் தவமும் ஞானத்தின் உறவான தூய துணைகள்.

961. மாய உலக மருள்நீங்கி எவ்வழியும்
தூய அருள்நிலையைத் தோய்ந்துவரின்—ஆயதுவே
செய்ய தவமாகும் தெய்வீக இன்பமெலாம்
உய்ய உதவும் ஒருங்கு. (க)

இ-ள்.

உலக மயக்கங்களின் மருள்களை நீங்கி எவ்வழியும் தூய அருள் நிலையைத் தோய்ந்து வருக; அவ்வாறு வரின் அதுவே செவ்விய தவமாம்; தெய்வீகமான பேரின்ப நலன்களை எல்லாம் ஒருங்கே நல்கி அது உயர்கதி யருளும் என்க.

பொய்யான நிலைகள் மெய்யாகத் தோன்றி மயக்கத்தை விளைத்து வருவது மாயம் என வந்தது. வையக வாழ்வுகள் யாவும் வெய்யமாயக் கூத்துகளாய் விரிந்து பரந்து யாண்டும் நீண்டு நிகழ்ந்து நிலவுகின்றன. மருண்ட மயக்கங்கள் தெளிந்து உண்மை நிலைகளை உணர்ந்து உயிர்க்கு உறுதிகாண்பவர் மிகவும் அரியர். அரிய அந்த நிலையிலிருந்து அருமையாய் வெளியேறி ஒளி மிகுந்துவரும் பெரியரே துறவி தவசி எனத் தோன்றுகின்றனர்.

பொறிவெறிகள் ஒருவிப் புலன்களை அடக்கி நெறிநியமங்கள் அமைந்து விரதங்கள் பூண்டு விழுமிய நிலையில் தழுவி வருவதே தவம் எனவந்தது. தன்னைச் சார்ந்தவரைத் தனிமுதல் தலைமையில் சாரச் செய்வது என்னும் காரணக்குறி இப்பேரில் பூரணமாப் பொருந்தித் தவத்தின் சீர்மை நீர்மைகளை விளக்கியுளது.

சீவனைச் சிவமாச் செய்வது தவம் என நேர்ந்தது.

சிவத்தைப் பேணின் தவத்திற்கு அழகு.

தவத்திற்கும் சிவத்திற்கும் உள்ள உறவுரிமைகளை ஔவையார் இவ்வாறு விளக்கியிருக்கிறார். தவம் பெருகச் சிவம்பெருகும்

என்பது முதுமொழி. சகநோக்கம் ஒழிந்து அகநோக்கமாய்க் கருதி வருவது தவம் ஆதலால் அந்த வரவில் அதிசய வரவுகள் பெருகி அரிய ஆனந்த நிலைகள் மருவி வருகின்றன.

ஒருவன் தவம் புரிய நேர்ந்த போதே அவங்கள் ஒழிகின்றன; அறங்கள் விளைகின்றன. பசி முதலிய துயர்களைப் பொறுத்து உயர் அருளோடு ஒழுகிவருதலால் பரன் அருள் இவனிடம் இயல்பாய் நிறைகிறது. மனம் தவம் மருவ மகிமை மருவுகிறது.

உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு. (குறள், 261)

தவத்தின் வடிவத்தைத் தேவர் இவ்வாறு வடித்துக் காட்டியிருக்கிறார். பொறுமையும் கருணையும் தவ உருவங்களாய் மருவியுள்ளன. தவம் செய்பவர் எவ்வாறு இருப்பர் என்பதைக் குறிப்பா இங்கே கூர்ந்து ஓர்ந்து குணம் தெரிந்து கொள்கிறோம்.

உயிர்நோய்செய் யாமை உறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கண்செய் யாமை—செயிர்நோய்
விழைவு வெகுளி இவைவிடுவான் ஆயின்
இழிவன்று இனிது தவம். (சிறுபஞ்சமூலம்)

தவத்தின் மேலுறை தவத்திறை தனக்கலது அரிதே
மயக்கு நீங்குதல் மனமொழி மெய்யோடு செறிதல்
உவத்தல் காய்தலொ டிலாதுபல் வகையுயிர்க்கு அருளை
நயத்து நீங்குதல் பொருள்தனை அனையதும் அறிநீ.
(வளையாபதி)

நீஇர் ஆடல் நிலக்கிடை கோடல்
தோஒல் உடுத்தல் தொல்எரி ஓம்பல்
ஊரடை யாமை உறுசடை புனைதல்
காட்டில் உணவு கடவுட் பூசை
ஏற்ற தவத்தின் இயல்புஎன மொழிப. (தாபதம்)

தவத்தின் இயல்புகளைக் குறித்து வந்துள்ள இவை இங்கே சிந்திக்கத் தக்கன. தவம் புரிவது எவ்வளவு அரியசெயல்! எத்துணை நெறி நியமங்கள்! என்பன இவற்றால் அறியலாகும்.

உண்ணும் உணவும் பருகும் நீரும் துறந்து கண்ணனையே கருதித் துருவன் அரிய தவம் செய்தான். அவன் ஆற்றிய நிலையை நோக்கி அமரரும் போற்றினர். அகிலமும் அவனை வியந்து புகழ்ந்தது. அயலே வருவன ஈண்டு எண்ண உரியன.

விண்ணுலாம் பரிதி ஈன்ற விரிதிரை நதிநீர் ஆடி
மண்ணலாம் அளந்த பொற்ரு மரைமலர் அன்னபொற்ருட்
கண்ணனைக் கண்ணுள் வைத்துக் களியளி சிலம்ப விள்ளும்
தண்ணனை கமழ்பூங் காவில் தவம்செயத் தொடங்கி ஞைல்.(1)

ஒருமதி இரண்டு வைகல் ஒழிந்துதீங் கனிநுகர்ந்தான்;
ஒருமதி ஆறு வைகல் ஒழிந்துவீழ் சருகு தின்ருன்;
ஒருமதி வைகல் ஒன்பான்ஒழிந்து தண் துறைநீர் உண்டான்;
ஒருமதி வைகல் ஈராறு ஒழிந்துகால் பருகி ஞைல். (2)

திங்கள் நானகு இவ்வாறு ஏகத் திங்களில் திகழாநின்ற
அங்கலுழ் முகத்தான் ஒன்றும் அருந்தலன்; ஐந்தாம் திங்கள்
பொங்குமூச்சு அடக்கி மென்பூப் பொருவுதாள் விரல்ஒன்று ஊன்றிக்
கங்கைசூழ் கழற்பெம் மானைக் கருதினன் தவம்புரிந்தான். (3)

ஊழிவெம் பரிதி யுட்க ஒளிசெய்செங் கதிரால் ஒற்றை
ஆழியங் தடக்கை அம்மான் அகமிசை அமர்ந்த வாற்ருல்
தாழிருந் தடக்கை நம்பி தவக்கனல் தவாது பொங்கி
ஏழிரும் பரவை வேலி இருநிலம் கனன்ற தாமால். (4)
(பாகவதம், துருவன்பதம்)

திருமாலைக் கருதி நின்று துருவன் புரிந்துள்ள அரிய தவ நிலைகளை இவை சுவையாக விளக்கியுள்ளன. பொருள்களைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும். இவ்வாறு இவன் அருந் தவம் புரிந்தமையால் இவ்வுலக வேந்தர்கள் எவரினும் சிறந்து தலைமையான புகழோடு நிலவியிருந்து இறுதியில் என்றும் அழி யாத பெரும்பதவியை அடைந்தான். இன்றும்நின்றுநிலவுகிருன்.

அரிய மகிமைகளை உரிமையாஉதவிப் பெரிய பேரின்பங் களை அருள வல்லது ஆதலால் தவம் சீவர்களுக்குத் தேவதருவி னும் திவ்விய திருவாய் மருவி நின்று எவ்வழியும் அதிசய ஆனந் தங்களை அருளுகிறது. அதனை இனிது பேணி இன்பநலம் காணுக.

---

962\. கருதிய மேன்மையெலாம் கண்எதிரே வந்து
பருதி ஒளிபோல் பரந்து—தருநிதியும்
கண்டு வியப்பக் கனிந்து திகழுமே
மண்டு தவத்தால் மலிந்து. (உ)

இ—ள்.

மனிதன் வியந்து எண்ணுகிற மகிமைகள் யாவும் கண்

எதிரே வந்த கதிர் ஒளிபோல் எளிதே தெளிவா விளங்கி நிற்கும்; விண்ணுலகிலுள்ள கற்பகமும் அற்புத நிதிகளும் அவாவி அடைந்து யாவரும் அதிசயிக்கும்படி தவத்தால் அமைந்து நிற்கும்; அதனால்வினையும் விழுமிய விளைவுகள் அளவிடலரியன என்க.

பெரிய செல்வங்களையும் அரிய புகழ்களையும் நல்ல சுகங்களையுமே யாவரும் யாண்டும் விரும்புகின்றனர். உயர்ந்த மேன்மைகளும் சிறந்த சுகபோகங்களும் புண்ணியத்தால் வருகின்றன. இகபர இன்பங்கள் யாவும் அதனால் இனிது விளைகின்றன.

> தருமமே இன்பம் எல்லாம் தரும்; அதை ஒருவி நின்றார்
> இருமையும் சிறுமை யாகி எங்குமே துன்பம் கண்டார்.

என்றமையால் சிறுமையும் துன்பமும் பாவத்தால் வரும்; பெருமையும் இன்பமும் தருமத்தால் விளையும் என்பது தெரிய வந்தது. மனிதர் அனுபவிக்கின்ற சுக துக்கங்கள் அவரவர் செய்த வினைகளின் அளவே விளைந்து வந்துள்ளன. நல்வினை, தருமம், புண்ணியம் என்பன இன்ப நலங்கள் விளையும் இனிய புனித நிலையங்களா யுள்ளமையால் அந்த மொழிகளைக் கேட்டதும் யாவரும் கண்ணியமா எண்ணி யாண்டும் மகிழ்கின்றார்.

தருமம் முதலிய எவற்றினும் தவம் அரிய பொருளுடையது. அதிசய மேன்மைகள் யாவும் எளிதே அருளவல்லது. உலகத்தை ஆள நேர்ந்த அரசர் எவரும் இதன் ஒளியைச்சார்ந்தே உயர்ந்து வந்துள்ளனர். தவத்தை இழந்தவர் அவத்தராய் நின்றுள்ளார். அதனைப் போற்றி வந்தவர் ஏற்றம் மிகப் பெற்றிருக்கின்றார்.

> ஆற்றிய மக்கள் என்னும் அருந்தவம் இலார்கள் ஆகின்
> போற்றிய மணியும் பொன்னும் பின்செலாபொன்னனீரே!
> வேற்றுவர் என்று நில்லா விழுப்பொருள் பரவை ஞாலம்;
> நோற்பவர்க்கு உரிய வாகும் நோன்மின நீரும் என்றான்.
> (சீவகசிந்தாமணி2986)

விழுமிய பொருளும் உலக ஆட்சியும் தவம் உடையவர்க்கே உரியனவாம். தவம் இல்லாதவர் யாதொரு நலமும் இலராய் அவமே நிற்பர் எனச் சீவகமன்னன் இன்னவாறு கூறியிருக்கிறான். ஞாலம்நோற்பவற்கு உரியது என்பதை நூனித்துநோக்குக.

சூரபன்மன் இளமையா யிருக்கும் பொழுது ஒருநாள் கா

சிப முனிவரை அணுகி உயர் வாழ்வைக் குறித்து உரையாடிக் கொண்டிருந்தான். தானவர் தலைவனைத் தோன்றியுள்ள அவன் வானவர் எவரினும் உயர்ந்த பதவியை அடைந்து வாழ வேண்டும் என்று நினைந்து இனிய போதனைகளை அவனுக்கு முனிவர் இனிது கூறினர். கருதிய மகிமைகள் யாவும் தவமே தரும்; அதனைச் செய்து உயர்க என உறுதியான பெருமித நிலைகளைத் தெளிவா அவர் உரைத்தருளினர். அவ்வுரைகளுள் சில அயலே வருகின்றன.

ஆற்றலை யுளது மாதவம் அது அன்றியே
வீற்றும்ஒன்று உளது என விளம்ப லாகுமோ?
சாற்றரும் சிவகதி தனையும் நல்குமால்
போற்றிடின் அனையதே போற்றல் வேண்டுமால். [1]

அத்தவம் பிறவியை அகற்றி மேதகு
முத்தியை நல்கியே முதன்மை ஆக்குறும்;
இத்துணை அன்றியே இம்மை இன்பமும்
உய்த்திடும் உளந்தனில் உன்னும் தன்மையே. [2]

ஆதலின் பற்பகல் அருமை யாற்புரி
மாதவம் இம்மையும் மறுமையும் தரும்
ஏதுவது ஆகுமால் இருமையும் பெறல்
ஆதியம் பகவனது அருளின் வண்ணமே. [3]

தவம்தனில் மிக்கது ஒன்றில்லை; தாவில்சீர்த்
தவம்தனை நேர்வது தானும் இல்லையால்;
தவம்தனின் அரியதுஒன்று இல்லை; சாற்றிடின்
தவம்தனக்கு ஒப்பது தவமது ஆகுமே. [4]

[கந்தபுராணம், காசிபன்உபதேசம்)

தவத்தின் மகிமை மாண்புகளைக் குறித்து ஒரு பெரிய தவசி இவ்வாறு விரித்து உரைத்திருக்கிறார். இம்மையும் மறுமையும் இனிமையா எம்மையும் இன்பம் தரும்; எத்தகைய மேன்மைகளையும் எளிதே நல்கி முத்தியும் அருளும் என்றதனால் தவம் எவ்வளவு அதிசய ஆற்றல்களை யுடையது! எத்துணை மகிமை வாய்ந்தது என்பதை ஈண்டு உய்த்து உணர்ந்து கொள்கிறோம்.

அனுமான் இராம தூதனாய் இலங்கை புகுந்தபோது அந் நகரின் செல்வவளங்களையும் பல்வகை நிலைகளையும் அரிய காட்சிகளையும் பெரிய மாட்சிகளையும் கண்டு மகிழ்ந்தான். அழகிய தேவமங்கையர் அரக்கர் குல மகளிர்க்கு ஊழியக் காரிகளாய்

நின்று ஆவலோடு ஏவல்புரிந்து நீராட்டிப் பாராட்டிச் சீராட்டி வருவதை நேரே கண்டான்; நெஞ்சம் திகைத்து நெடிது வியந்தான்; இராவணன் செய்த தவம் அல்லவா அவன் குலத்தில் உதித்த மாதர்க்கும் இவ்வாறு மகிமைகளை அருளியுள்ளது என்று அதிசயம் அடைந்தான். அப்பொழுது தவத்தின் பெருமையை வியந்து தனக்குள்ளேயே சிந்தித்துக் கொண்டு சிறிது நேரம் அந் நீர் நிலைகளின் அருகே யாரும் அறியாவகை அமைதியாய் நின்றான். அவன் கருதி நின்றது அரிய ஒரு இனிய பாட்டு வடிவமாய் மருவி வந்தது. அயலே வருவது காண்க.

ஈட்டுவார் தவம்அலால் மற்றுஈட்டினால் இயைவது இன்மை
காட்டினார் விதியார்; அஃது காண்கிற்பார் காண்மின் அம்மா!
பூட்டுவார் முலைபொருத பொய்யிடை நையப் பூநீர்
ஆட்டுவார் அமரர் மாதர் ஆடுவார் அரக்கர் மாதர்.

(இராமா, சுந்தர, ஊர், 104)

உலக மக்களே! நீங்கள் மேலான இன்ப நிலையில் வாழ வேண்டுமானால் தவத்தைச் செய்யுங்கள்; அதைச் செய்தவர் தேவரும் ஏவல் புரிய இனிது வாழ்வதை இலங்கையில் வந்து பாருங்கள் என்று பிரமா நேரே காட்டியதுபோல் அக்காட்சி தோன்றி நின்றது. இந்தப் பாட்டின் சுவையைக் கூர்ந்து நோக்கித் தவத்தின் மகிமையை ஓர்ந்து கொள்ள வேண்டும்.

---

963. தன்னை அறிதல் தவமாம் தனைமறந்து
பின்னை அறிதல் பிழையாகி—இன்னல்
பலவும் தருமால் படுதுயரம் நீங்கி
நிலவுக நின்னை நினைந்து. (௩)

இ—ள்.

தனது உண்மையான ஆன்ம நிலையை உணர்வது உயர் தவமாம்; அதனை மறந்து அயலே அறிவன யாவும் மயலான பிழைகளேயாம்; துயரமான அப்புலைகளை நீங்கி உன்னையே உரிமையா ஓர்ந்து நோக்கி உயர் பேரின்பம் பெறுக என்பதாம்.

மனிதர் பலவகை நிலைகளில் பரவியிருந்தாலும் இருவகையில் அடங்கி நிற்கின்றனர். அவநிலை தவநிலை என இரண்டு பிரிவுகளாய் மாந்தர் நிலைகள் யாண்டும் நிலையாய் மருவியுள்ளன.

நாளை அவமாக் கழிப்பவர் அவத்தராய் அவல நிலையில் இழிகின்றார்; அதனைத் தவமாச் செய்பவர் தவத்தராய் உவகை நிலையில் உயர்கின்றார். தன் உயிரை உன்னத நிலையில் உயர்த்தியருளுவது தவம் என வந்தது; அவ்வாறு செய்யாமல் அயலாய் இழிவது அவம் என நேர்ந்தது.

தவம்செய்வார் தம்கருமம் செய்வார்மற் றல்லார்
அவம்செய்வார் ஆசையுள் பட்டு. [குறள், 266]

தவம் செய்பவர் தம் உயிர்க்கு உறுதியான நல்ல புண்ணியத்தைச் செய்கின்றார்; அல்லாதவர் எல்லாரும் ஆசையுள் அகப்பட்டு அவமே செய்கின்றார் எனத் தேவர் இவ்வாறு இருவகை யாரையும் ஒரு தொகையாநேரே தெரியவிளக்கியிருக்கிறார்.

பேராசை மிகுந்து எவ்வழியும் ஓடி அலைந்து பொருளை மருளோடு மனிதர் தேடுகின்றார்; செல்வர் எனச் செழித்து நிற்கின்றார்; செருக்கும் சினமும் சிறுமையும் அங்கே பெருக்கமாய்ப் பெருகி வளர்கின்றன; தேக போகங்களை ஏகமா நுகர்கின்றனர்; முடிவில் மோகமாய் மடிந்து மாய்கின்றனர்; சாகும் போது சிந்தையில் எந்த நினைவு இருந்ததோ அந்த வகையே மீண்டும் வந்து பிறப்பது பிறவியின் நியமம் ஆதலால் அவ்வாறே மாயமருளோடு தோன்றி வைய மையல்களில் ஆழ்ந்து வெய்ய துயரங்களை விளைத்து விளிந்து தொலைகின்றார். ஓயாமல் இறந்து ஒழியாமல் பிறந்து பேயாய்த் திரிந்து நாயாய் அலைந்து நைந்து உளைந்து பிழையாய் உழல்வதே மனித வாழ்வாய் மருவியுளது.

அவகேடான இந்த அல்லல் வாழ்விலிருந்து நீங்கி உய்ய வேண்டுமானால் நல்ல தவமே செய்ய வேண்டும். அது செய்ய மூண்டபோதே ஆசை அடியோடு மாண்டு போகிறது; போகவே விவேக ஒளி வீசி ஆன்ம சோதி மேன்மையாய் விளங்குகிறது; விளங்கவே அது பரமான்வாய்த் துலங்குகின்றது.

தம் கருமம் என்ற சொல்லில் அரிய பல பொருள்கள் மருமமா மருவி யுள்ளன. தான், நான் என்னும் உரைகள் உயிரையே குறித்து வரும். தன் உயிர் துயர் நீங்கி உயர்வாய் வாழச் செய்பவன் எவன்? அவனே தவம் செய்யும் தவன். இவன் அல்லாத பிறர் எல்லாரும் தம் உயிரை அல்லல்களில் ஆழ்த்தி எல்லையில்லாத காலம் ஏங்கித் தவிக்கும்படி அழிதுயர்கள் செய்

யும் அவகேடரே. நிலைமை தெளிந்தவர் தலைமை யுறுகின்றார்.

நிலையாமை நோய்மூப்புச் சாக்காடுஎன்று எண்ணித்
தலையாயார் தம்கருமம் செய்வார்—தொலைவில்லாச்
சத்தமும் சோதிடமும் என்றாங் கிவைபிதற்றும்
பித்தரிற் பேதையார் இல். [நாலடி, 52]

உலக வாழ்வின் மாயங்களை உணர்ந்து தம் உயிர்க்கு உறுதியாத் தவம் செய்வோரே தம்கருமம் செய்யும் தத்துவ ஞானிகள்; அல்லாதவர் எல்லாரும் பேதைப் பித்தர்களே என்னும் இது இங்கே உய்த்து உணரத்தக்கது. இலக்கணங்களையும், கணிதங்களையும் கற்றுத் தேர்ந்து பெரிய பண்டிதர், அரிய சோதிட கலா நிபுணர் எனப் புகழ் பெற்றிருந்தாலும் ஆன்ம மேன்மையை இழந்துவிடின் அவர் மடையரே; பித்தரே; பேதைகளே என்று இப்படி இந்தக் கவிஞர் வைது இகழ்ந்திருக்கின்றார்.

எண்ணும் எழுத்தும் கண்; எண் எழுத்து இகழேல்! என்ற மதிமொழிகளை எல்லாம் மதியாமல் இவ்வாறு அதிவேகமா வைதது உயிர்க்கு உய்தியை இழந்து துயர்க்கே இடமாய்த் தொலைந்து போதலை நினைந்து நொந்து வந்துள்ளது. தலையர் தம் கருமம் செய்வர் என்றதனால் அங்ஙனம் செய்யாதார் கடையர் என்பது காண நின்றது. கருத்தைக் கருதி உணர வேண்டும்.

நீசமான ஆசைகளையெல்லாம் அறவே விட்டு விலகித் தனது ஆன்ம சொரூபத்தையே அல்லும் பகலும் அனவரதமும் நோக்கித் தவசி மவுனமாய் மாதவம் மருவி வருகிறான்; வரவே சீவனைத் தவம் சிவனோடு சேரச் செய்கிறது.

தவத்தைச் செய்கின்றவன் பிறவித் துன்பங்கள் அறவே நீங்கிப் பேரின்பம் பெறுதலால் சீவன் முத்தன் எனத் தேவரும் வியந்து புகழத் தேசுமிகுந்து யாண்டும் சிறந்து நின்றுள்ளான்.

பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்
சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்;
மறப்பிலர் ஆகிய மாதவம் செய்வார்
பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே. [1]

இருந்து வருந்தி எழில்தவம் செய்யும்
பெருந்தன்மை யாளரைப் பேதிக்க வென்றே
வருந்துஇந்திரனே எவரே வரினும்
திருந்துதம் சிந்தை சிவனவன் பாலே. [2

கரந்தும் கரந்திலன் கண்ணுக்கும் தோன்ருன்
பரந்த சடையன் பசும்பொன் நிறத்தன்
அருந்தவர்க்கு அல்லால் அணுகலும் ஆகான்
விரைந்து தொழப்படும் வெண்மதி யானே. [3] (திருமந்திரம்)

அருந்தவம் புரிவோர் பிறவியை நீக்கும் பெருந்தகையாளர்; அவரது சிந்தையுள் சிவன் உவந்துள்ளான்; அவரே அவனை எளிதில் காண வுரியவர்; இன்ப நிலையினர் எனத் திருமூலர் இவ்வாறு தவசிகளின் மகிமையை விளக்கி யிருக்கிருர்.

வெளியே உலக நாட்டமாய் ஓடி உழல்வது உடலை வளர்க்க நேர்ந்த ஊன நிலை; உள்ளே ஞான நாட்டமாய் நாடி நிற்பது உயிரை உயர்த்த வாய்ந்த தவநிலை. உறுதிநிலை கருதி உயர்க.

தன்னை அறிதல் தவம் என்றது தவத்தின் பயனையும் நயனையும் விளக்கி நின்றது. தனது சீவனை நேரே தெரிசிக்க நேர்ந்தவன் நித்திய முத்தன் ஆகிருன். ஆகவே ஆனந்த யோகமாம்.

வெளி விடயங்களில் மனம் விரிந்து செல்லும் அளவும் மனிதன் இளிவடைகின்ருன். சகமுகமாய் அங்ஙனம் செல்லாமல் அகமுகமா அது குவிந்துவரின் சுக சொரூபமாய் உயர்ந்து விளங்குகிருன். உயர்வும் தாழ்வும் உளத்தால் உளவாகின்றன.

விரிந்த நெஞ்சம் கருவியாம் விடயம் உணர, விரியாமல்
ஒருங்கு நெஞ்சம் கருவியாம் தன்னை உணர, ஒருங்காமல்
விரிந்தநெஞ்சம் உடையவனை விடாது பிறவி என்று உணர்க;
ஒருங்குநெஞ்சம் உடையானை உருது பிறப்புஎன்று உணர்கவே.
(பிரபுலிங்கலீலை, மஞேலயம் 11)

பிறவி ஒழியும் வழியை இது விழி தெரிய விளக்கியுள்ளது.

பொருளை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். அவ்நிலையில் விரிந்து ஓடாமல் தவநிலையில் ஒடுங்கி நிற்கும் உள்ளமே தன்னை அறிய வல்லது. அவ்வாறு அறியின் வெவ்விய பிறவி நீங்கித் திவ்விய ஆனந்தம் ஓங்கித் தேசு மிகுந்து நிற்கும் என்க.

எல்லையிலா இன்பம் எதிர்வருமே இன்னுயிரை
ஒல்லை யுணர வுறின்

உன்னை உணர்ந்து உய்தி காணுக.

964. பொன்னை நெருப்பில் புடமிட் டதுபோல
உன்னைத் தவத்தில் உறுத்திஞல்—பின்னையிந்த
வையகமும் வானகமும் வாழ்த்த உயர்ந்துநீ
மெய்யின்பம் காண்பாய் விரைந்து. (சு)

இ—ள்.

தங்கத்தை நெருப்பின் இடையே வைத்துப் புடம் இடுதல் போல் உன்னைத் தவத்தின் நடுவே வைத்து வந்தால் உனது சீவ ஒளி எங்கும் பரவி எவ்வழியும் திவ்விய சோதியாய் விளங்கும்; விளங்கவே வானும் வையகமும் உன்னை வந்து வணங்கும்; மெய் யான பேரின்பத்தை மேவி நீ மகிமையாய் மகிழ்வாய் என்க.

ஆன்மா இயல்பாகவே மேன்மை யுடையது ஆதலால் அது உயர்வான பொன் என நேர்ந்தது. இரும்பு பித்தளை ஈயம் செம்பு வெண்கலம் முதலிய இழிந்த உலோகங்கள் எவற்றினும் உயர்ந்து பொன் பொலிவடைந்துள்ளது; அது போல் விலங்கு பறவை முதலிய தாழ்ந்த பிராணிகள் யாவினும் சிறந்து மனிதன் மகி மை அடைந்துள்ளான். அரிய மாட்சி பெரிய காட்சியாயது.

பொன்னைப் போல் இன்னவாறு உன்னத நிலையில் வந் திருந்தாலும் பழகிவந்த வாசனைகளின்படி பழுது அடைந்து கழி கிருன். அந்த இழிவுகள் விழுமிய எண்ணங்களாலும் மேலான செயல்களாலும் விலகி ஒழிகின்றன; ஒழியவே அவன் பழைய நிலையில் உயர்ந்து திகழ்கிருன். அழுக்கை நீக்கி ஒழுக்கம் உயர் வை அருளுதலால் அது உயிரினும் ஓம்ப வுரியது என ஒளி மிகப் பெற்றது. தழுவிய சீலம் எழுமையும் இன்பம் தருகிறது.

விழுமிய விரத சீலங்களை இனிது மருவிவரும் புனித நிலையே தவம் என வந்தது. அது மனிதனைத் தெய்வம் ஆக்கும் மகிமை வாய்ந்தது. தவம் தழுவி வருகிறவன் சிவம் தழுவி வருகிருன்.

நீசமாய் படிந்த மாசுகளை எல்லாம் அறவே நீக்கித் தேசு படியச் செய்து சீவனை ஈசன் ஆக்கியருளுதலால் தவம் தெய்வ வேதி எனச் சீர்மிகுந்து நின்றது. தவம் படியச் சிவம் படிந்து தனி நிலையில் இனிது அமர்ந்தான் என ஒரு தவசி பிறவிநீங்கிப் பேரின் பம் பெற்ற படியை இது இப்படி இனிது விளக்கியுள்ளது.

பாவத்தின் பயனுய்ச் சீவனை வருத்துகிற நோய் துன்பம்

என வந்தது. அது வருத்த வருத்தப் பாவ அழுக்குநீங்கிச் சிவன் தேசு மிகப் பெறும்; அதற்கும் தவத்தான் நேரும் துன்பத்துக் கும் வேறுபாடு உண்டு. தானுகவே தவசி தன்னை வருத்திக் கொள்ளுகிறுன்: பட்டினி கிடந்தும், பனி மழை வெயில் களைப் பொறுத்தும், நெருப்பிடையே இருந்தும் நெடுந்தவம் புரிகிறுன். இவ்வாறு அரியதவம் புரியவே அவன் பெரிய மகானுய் உயர்ந்து பேரின்ப நிலையை அடைகிறுன். தீயில் தோய்ந்த பொன் ஒளி யும் மாற்றும் பெருகி வெளியே வியனு மதிக்கப் பெறுகிறது; தூய தவநோயில் தோய்ந்தவன் பரமபரிசுத்தன் ஆகிறுன்: ஆக வே தேவரும் யாவரும் போற்ற அவன் திவ்விய நிலையைப்பெறு கிறுன்.பண்ணும்தவம்விண்ணும் வியப்பவியன்பயன் தருகிறது.

தூய தவநிலையில் தோய்ந்தான் துயருறினும்
தீயிலுறு பொன்போலத் தேசேறிச்—சேய
ஒளியோ டுயர்ந்திவ் வுலகமெலாம் போற்றத்
தெளிவோடு நிற்பன் சிறந்து.

இதனை விழியூன்றி நோக்கினுல் வியன் பொருளை உணர்ந்து கொள்ளலாம். தவத்தில் தோய்ந்த துங்கனும் தீயில் தோய்ந்த தங்கமும் ஒருங்கே இங்கு பார்வைக்கு வந்துள்ளன. சுடு தீயை ஒப்புக் கூறியதனுல் தவத்தின் கடுமை நேரே தெரிய நின்றது.

தபாக்கினி என்பது முதுமொழியாயுள்ளது. தவத்தின் அரு மையையும் அதனை யுடையவரது பெருமையையும் இத்தொடர் மொழி தெளிவா விளக்கி நிலைமையைத் துலக்கி நிற்கின்றது.

சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு. (குறள், 267)

கடுந்துயர் சுடுந்தோறும் திருந்திய ஒளியோடு அருந்தவர் சிறந்து விளங்குவர் எனத் தேவர் இங்ஙனம் விளக்கியிருக்கிறுர். தவம் புரிவது அரிய செயல். பெரிய மனவுறுதியும் அரிய ஞானத் திண்மையும் பேராண்மையும் உடைய மேலோரே சால்போடு அதனை ஆற்ற வல்லவர் என்பது நோற்கிற்பவர் என்ற குறிப்பு மொழியால் கூர்ந்து உணர வந்தது.

தீ இரும்பைச் சுட்டால் அது கரிந்து போம்; துரு வீசி துன்னிவரும். இரும்பும் துரும்பும் போன்ற கொடியரும் சிறிய ரும் தவம்புரிய நேரார்; துயர் தோய உயிர் மாய்வர். பொன்னைப் போல் உயர்ந்த புனிதம் உடையவரே இன்னலை எதிர்தாங்கி

அரிய தவம் புரந்து பெரிய கதியைப் பெறுவர் என்பது இங்கே தெரியவந்தது. உயர்ந்த உத்தமர் நிலை உய்த்துணர நின்றது.

சிறந்த பொன் போன்றவரிடமே தெளிந்த ஞானமும் உயர்ந்த மானமும் உரிமையா நிறைந்துவரும். அவருடைய செயல் இயல்களில் தருமமும் தவமும் மருமமா மருவி மிளிர்கின்றன.

தங்கத்தைப் பணி செய்கின்ற பொற்கொல்லர் நிலையைக் கவிஞர் ஒருவர் கருதி நோக்கினர்: அதனைத் தீயில் இட்டு உருக்கி நெருக்கித் தட்டி வளைத்து அணிகள் செய்வதை வியந்து வந்தவர் இறுதியில் குன்றி மணியோடு நேரே தராசில் வைத்து நிறுத்து மதிப்பிடுவதைப் பார்த்தார்; நெஞ்சம் வருந்தினர்; அந்தோ! இந்த உயர்ந்த தங்கத்தையா அந்த இழிந்த குன்றியோடு நேர்வைத்துச் சீர் காண்பது என்று உள்ளம் உருகினர்; பொன் போன்ற அந்த உள்ளம் உடையவர் தனது இரக்கத்தை அதன் மேல் ஏற்றி ஒருபாட்டுப் பாடினர். அக் கவி அயலே வருகிறது.

பொன்புலம்பியது.

சுட்டுப் பொசுக்கிச் சுளித்தடித்து நீட்டிமேல்
வெட்டிய போதும் வெறுக்கிலேன்---கிட்டவைத்துக்
குன்றியை நேராகக் கொண்ட பொழுதுதான்
குன்றி யுளைந்தேன் குலைந்து.

தங்கம் தவித்துள்ள நிலையை இங்ஙனம் இது குறித்துள்ளது.

நல்ல காரியங்களைச் செய்வதில் தமக்கு எவ்வளவு அல்லல்கள் நேர்ந்தாலும் மேலோர் உள்ளம் கலங்கார்; தமது தகுதியை உணராமல் சிறுமையாய்ச் சிலர் அவமானம் செய்ய நேர்ந்தால் அவர் மிகவும் மறுகி வருந்துவர் என்பது இதனால் மருமமா அறிய வந்தது. பேசாத பொன்னையும் பேசச் செய்து உலகிற்கு உறுதி நலனைக் கவிகள் உணர்த்தி வருவது உவகையை விளைத்து வருகிறது. அறிவின் ஒளிகள் அவர் மொழிகளில் மிளிர்கின்றன.

பொன்னும் தீயும் தவத்தின் மாட்சியைக் காட்சியா ஈண்டுக் காட்டியுள்ளன. துன்பத்துக்கு அஞ்சாமல் துணிந்து தவம் செய்வோரே பிறவித் துன்பங்கள் நீங்கிப் பேரின்பம் பெறுகின்ருர். தீ பொன்னைத் தூய்மை செய்வதுபோல் துயர் உயிரைத் தூய்மை செய்கிறது. உயர்தவம் ஒளிசெய்து உய்தி அருளுகிறது.

பொன்னைத் தீயிடைப் பெய்தல்அப் பொன்னுடைத் தூய்மை
தன்னைக் காட்டுதற்கு என்பது மனக்கொளல் தகுதி
உன்னைக் காட்டினன் கற்பினுக்கு அரசிஎன்று உலகில்
பின்னைக் காட்டுதற்கு அரியதுஎன்று எண்ணியிப் பெரியோன்.
(இராமா, மீட்சி 123)

தன் நாயகன் ஏவியபடி மூண்ட தீயுள் மூழ்கி மீண்டு தூயளாய் வந்த சீதையைத் தசரதன் இவ்வாறு தேறுதல் கூறி ஆறுதல் செய்துள்ளான். பொன்னைத் தீயிடைப் பெய்வது அதனைத் தூய்மை செய்யவே; அதுபோல் உன்னைத் தீயிடையிட்டு மகாபதிவிரதையான உனது தூய்மையை உலகம் அறியக் காட்டி உன் கணவன் உவகை மீக் கூர்ந்தான் என மாமன் உரைத்த மதிமொழியைக் கேட்டு அக் கோமகள் பேருவகை கொண்டாள். பொன் என்பது இலட்சுமிக்கு ஒரு பெயர்; அது அவளது அவதாரமான சீதைக்கு இங்கே உவமையாய் வந்திருப்பது உவகையை விளைத்து உரிமையை உணர்த்தியுள்ளது.

தவத்தால் பாவம் நீங்கி ஒழிகிறது; புண்ணியம் ஓங்கி விளைகிறது; தவமுடையவன் எண்ணியன யாவும் எளிதே எய்தி மகிழ்கிறான். அது அதிசய சோதியாய் ஆனந்தம் அருளுகிறது.

விளக்குப் புகஇருள் மாய்ந்தாங்கு ஒருவன்
தவத்தின்முன் நில்லாதாம் பாவம்—விளக்குநெய்
தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை
தீர்விடத்து நிற்குமாம் தீது. (நாலடி, 51)

ஒளி மிகுந்த விளக்கு எனத் தவத்தை இது விளக்கி யுள்ளது.

மாயமருளான தீய இருளை நீக்கிப் பேரின்ப நிலையை அருளுவது ஆதலால் அரும் பாடுபட்டுக் கடுந்துன்பங்களைச் சகித்துப் பெரியோர்கள் இதனைப் பேணி உய்கின்றனர். சுக போகங்களை யெல்லாம் ஒருங்கே வெறுத்துப் பொறிகளை அடக்கித் தனியே இருந்து அரிய தவம் புரிவது எவ்வளவு அருமை என்பதைச் சிறிது சிந்தித்தாலும் எளிதே உணர்ந்து கொள்ளலாம். செய்யும் தவத்தில் தெய்வத் தேசுகள் வீசுகின்றன.

தனக்குத் தவவாழ்வு வேண்டும் என்று இறைவனை நோக்கி ஒரு பெரியவர் வேண்டியிருக்கிறார்; அந்த வேண்டுகோள் நிலையை [illegible] அவசியம் நாம் அறிய வேண்டும். அயலே காணுக.

மல்லலம் பொழில்சூழ் தில்லை வாண!
வரம்ஒன்று இங்குஎனக்கு அருளல்வேண்டும்: அதுவே,
பெருங்குளிர்க் குடைந்த காலைக் கருந்துணி
பலதொடுத்து இசைத்த ஒருதுணி அல்லது
பிறிதுஒன்று கிடையா தாக, வறுமனைக்
கடைப்புறத் திண்ணை அல்லது கிடக்கைக்கு
இடம்பிறிது இல்லை ஆக, கடும்பசிக்கு
உப்புஇன்று அட்ட புற்கையூண் அல்லது
மற்றுஓர் உண்டி வாய்விட்டு அரற்றினும்
ஈகுநர் இல்லை யாக, நாள் நாளும்
ஒழுக்கம் நிறைந்த விழுப்பெருங் கேள்வி
மெய்த்தவர் குழாத்தொடும் வைக இத்திறம்
உடல்நீங்கு அளவும் உதவிக் கடவுள்நின்
பெரும்பதம் அன்றி யான் பிறிது ஒன்று
இரந்தனன் வேண்டினும் ஈந்திடாததுவே.

(சிதம்பரமும்மணி)

கடுங்குளிர்க்குக் கந்தைத் துணியும், அரும்பசிக்கு உப்பு இல்லாத கூழும் கிடைத்தாலும் கிடையாது போனாலும் நாளும் தவசிகளோடு கூடிவாழும் பாக்கியத்தை அருளவேண்டும் என ஆண்டவனிடம் குமரகுருபரர் இவ்வாறு வேண்டியிருக்கிறார். இவருடைய துறவு நிலையையும் தவ நீர்மையையும் கருதியுணர் வார் எவரும் உள்ளம் உருகி உயர்கதி தெளிந்து கொள்வர்.

புலப்பகைஞர் எனத் தவசிகளுக்கு ஒருபெயரை இவர் சூட்டியிருக்கிறார். புலன்களை வென்ற புனித முனிவரே அரிய தவங்களை ஆற்றவல்லவர் ஆதலால் இப்பெயர்க்கு அவர் உரியவ ராயினர். பொறி நுகர்வில் ஆழ்ந்தவர் இழிந்த காமிகளாய் அவ நிலையில் தாழ்ந்து போதலால் உயர்ந்த தவநிலையை அணுகவும் முடியாமல் அவலமாய் அவர் ஒழிந்து போகின்றார்.

காமபோகம் உயிரைப் பாழ்படுத்தும் ஆதலால் அது பழி யுடையது எனத் தெளிவுடையார் விலகி ஒளி பெறுகின்றனர்; தெளிவில்லாதார் அந்த இழிவில் வீழ்ந்து அழிவுறுகின்றனர்.

When the cup of any sensual pleasure is drained to the bottom, there is always poison in the dregs. (Jane Porter)

சிற்றின்ப போகம் எவ்வளவு சுகமாயிருப்பினும் இழிந்த

கழிசாக்கடையே; அந்த இழிகுப்பையில் எப்பொழுதும் நஞ்சு உள்ளது என ஜேன்போர்ட்டர் என்பவர் இவ்வாறு கூறியிருக்கிறார். புலன் நசை புலையே புரிகிறது; விலகினார் வீடுபெறுகிறார்.

அவத்தில் வீழாமல் தவத்தில் உயர்க.

---

965. வாரி குடித்து மலையடக்கி மாலரனா
நேரில் உறச்செய்து நீண்டபுகழ்—பாரிலுறக்
கொண்டார் குறுமுனிவர் கொள்ளாரோ மாதவம்கைக்
கொண்டார் குறித்தவெலாம் கூர்ந்து. (ரு)

இ-ள்.

விரிந்த கடல் நீரைக் குடித்து உயர்ந்த மலையை அடக்கித் திருமாலைச் சிவன் ஆக்கி இசைகள் திசைகள்தோறும் பரவ அகத்திய முனிவர் மகத்துவம் புரிந்திருந்தார்; பெரிய தவம் உடையவர் கருதிய யாவும் எளிதே செய்துஒளிபெறுவர் என்க.

செல்வம் கல்வி அறிவுகள் மனிதனை மகிமைப்படுத்தி வியனுதிக்கச் செய்யும் ஆயினும் தவம் செய்வதுபோல் அதிசயற்புதங்களை விளைத்து எவரும் துதி செய்து தொழும்படி அவை செய்யா. செல்வன் கலைஞன் அறிஞன் என்பதைவிடத் தவசி என்பது மிகவும் உயர்தரம் உடையது; உத்தம நிலையது.

தவம் தோய்ந்தபோது சீவனிடம் தெய்வீக ஒளி தேசோடு வீசுகிறது. பஞ்ச பூதங்களும் தவசி எதிரே அஞ்சி அடங்கி அமைதியா ஏவல் செய்கின்றன. எல்லையில்லாத ஆற்றல்கள் அவனிடம் ஒல்லையில் வந்து உரிமையா அடைகின்றன. அடையவே எத்தகைய தடைகளையும் எளிதே கடந்து அதிசய சத்தனாய் அற்புதங்களைச் செய்து யாண்டும் அவன் துதிகொண்டுநிற்கிறான்.

கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. (குறள், 269)

தவ வலியுடையவர் எமனையும் கடந்து இனிது வாழ்வர் எனத் தேவர் இவ்வாறு தவத்தின் மகிமையை விளக்கியிருக்கிறார். நோற்றல் என்றது அரிய விரத நெறிகளை யுடையது எனத் தவத்தின் தோற்றம் தெரிய வந்தது. யாரும் கடக்க முடியாத கூற்றுவனைத் தவம் உடையான் கடந்து விடுவான் என்றமை

யால் அதன் அற்புதநிலையை உணர்ந்து தெளிந்து கொள்ளலாம்.

ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை; நமனும்அங் கில்லை;
இடும்பையும் இல்லை; இராப்பகல் இல்லை:
படும்பயன் இல்லை; பற்றுவிட் டோர்க்கே. (1)

எம்மா ருயிரும் இருநிலத் தோற்றமும்
செம்மா தவத்தின் செயலின் பெருமையும்
அம்மான் திருவருட் பெற்றவர்க்கு அல்லாது
இம்மா தவத்தின் இயல்பறி யாரே. (2) [திருமந்திரம்]

தவத்தின் பெருமையைத் திருமூலர் இவ்வாறு விளக்கி யிருக்கிறார். வரமான தவம் பரமன் அருளாய் வருகிறது.

தவமே மேலா நெறியாகும்;
தவமே சிவனார் தமைக் காட்டும்;
தவமே துறக்கம் அடைவிக்கும்;
தவமே நரனைத் தேவாக்கும்;
தவமே வலாரி திசைக்கிறைவர்
சார்ங்கன் அயனும் ஆக்குவிக்கும்;
தவமே கிடைப்பின் கிடையாதது
உண்டோ? என்று சாற்றினனால். (காஞ்சிப்புராணம்)

தவத்தினில் அமர்புரி சமனை வெல்லலாம்;
தவத்தினில் எழுகடல் தமையும் உண்ணலாம்;
தவத்தினில் வடவரை களைந்து தாங்கலாம்;
தவத்தினில் அனலமும் தரிக்க லாகுமே.
(திருக்கூவப்புராணம்)

இவை இங்கே சிந்திக்கத் தக்கன. தவத்தின் ஆற்றலையும் அது ஆற்றுகின்ற அற்புதங்களையும் இவற்றுள் கூர்ந்து ஓர்ந்து கொள்கிறோம். தவ வலியில் சிவ ஒளி சிறந்து திகழ்கிறது.

அகத்திய முனிவர் மகத்துவம் மிகவுடையவர். தான் செய்த தவத்தால் வானும் வையமும் வணங்கத் தெய்வ முனி எனச் சிறந்து எவ்வழியும் திவ்விய நீர்மைகளோடு விளங்கி யுள்ளார். அமர மாதவன் என அமரரும் இவரைத் துதித்துளார்.

வாரிகுடித்தது.

விருத்திரன் என்னும் அசுரவேந்தன் விசித்திர சித்திகள்

உடையவன்; பெரிய போர்வீரன்; இந்திரனோடு நேரே போராடினான்; முடிவில் முடியாமல் ஓடிக் கடலில் ஒளிந்து கொண்டான். வானவர் கோன் இம்முனிவரிடம் வந்து உதவி செய்ய வேண்டினான். அவன் மறைந்துள்ள கடலை இவர் விரைந்து அடைந்தார்; அதனை நினைந்து வாரியுள் இறங்கினார்; ஆழி நீர் யாவும் ஒருதுளி அளவாக் கருதினார்; கருதியபடியே ஆயது; ஆகவே முழுதும் பருகினார். இவர் செய்த செயல் தெய்வீக அதிசயமாயது.

கைதவன் கரந்து வைகும் கடலை வெற்புஅடக்கும் கையால்
பெய்துஉழுந்து எல்லைத்து ஆக்கிப் பருகினன் பிறைசேர் சென்னி
ஐயனது அருளைப் பெற்றார்க்கு அதிசயம் இது என்கொல் மூன்று
வையம் முத்தொழிலும் செய்ய வல்லவர் அவரே அன்றோ.

(திருவிளையாடல்)

மலை அடக்கியது.

இமயமலையிலிருந்து புறப்பட்டு தென்திசை நோக்கி அகத்தியர் வருங்கால் இடையே விந்தமலை தடையாய் நீண்டு நின்றது. மேருகிரியோடு மாறுபட்டு வீண் செருக்காய் வீறுகொண்டு நின்றது ஆதலால் அதன் செருக்கை அடக்கி ஒடுக்கத் தமது குறிய கையை நெடிது நீட்டி மேலேவைத்துக் கீழே அழுத்தினார்; அழுத்தவே மலை நிலைகுலைந்து நிலம்புகுந்து தணிந்தது.

அற்புதம் அமரர்கொள்ள ஆற்றவும் குறியோன் விந்த
வெற்பினது உம்பர் தன்னில் மீயுயர் குடங்கை சேர்த்தி
வற்புற ஊன்ற வல்லே மற்றது புவிக்கண் தாழ்ந்து
சொற்பிலம் புகுந்து சேடன் தொன்னிலை அடைந்ததன்றே. (1)

அதுபொழுது அலரி ஆதி அமரர்கள் அகத்தியன்பால்
கதுமென அடைந்து போற்றிக் கைதொழுது எந்தை செய்த
உதவியார் புரிவர் நின்னால் உம்பராறு ஒழுகப் பெற்றோம்
பொதியமேல் இனிநீ நண்ணி இருத்தி எம்பொருட்டால் என்றார். (2)

(கந்தபுராணம், விந்தம்)

விந்தமலையை இவர் அடக்கியிருக்கும் விந்தையை ஈண்டு வியந்து காண்கின்றோம். அதிசயம் மிகுந்து தேவரும் யாவரும் உவந்து வந்து துதிசெய்து தொழ இம் முனிவர் செயலாற்றியுள்ளமை தவத்தின் மகிமையை உயர்வா விளக்கிநின்றது.

திருமாலைச் சிவம் ஆக்கியது.

இவர் பொதிய மலையை நோக்கி வருங்கால் திருக்குற்று

லத்தை அணுகினர். அத்தலத்திலிருந்த வைணவர்கள் இம்முனிவரைச் சைவர் என்று இகழ்ந்து பெருமாள் கோவிலுள் புகலாகாது எனத் தடைசெய்தனர்; இவர் உடனே வெளியேறி மாலடியார்போல் வேடம் பூண்டு மீண்டும் போய் உள்ளேபுகுந்தார். திருமாலாய் நின்ற உருவச்சிலையை உருவ நோக்கிச் சிவலிங்கமாகக் கருதினர். கருதவே அவ்வாறே உருமாறி நின்றது. அந்த நிலையைக் கண்டதும் யாவரும் அஞ்சி இவரது அருந்தவ வலியை வியந்து புகழ்ந்தனர். வியப்புகள் வியனாய் விளைந்தன.

கிளையேந்து மணிநிலவு விரிகூடத்
திரிகூடக் கிரிக்கே யாவும்
விளையேந்து புனல்கரகம் தண்டுஏந்திப்
படைத்தபிரான் விடுத்து நேமி
வளையேந்தும் கரத்துமழு மான்ஏந்திப்
பசுந்துளவ மவுலிக் காடு
முளையேந்து மதிஏந்தத் துதிஏந்தும்
தமிழ்முனிதாள் முடிமேல் கொள்வாம்.

(திருக்குற்றாலப்புராணம்)

மாலை அரன் ஆக்கிய மாதவன் என இம்முனிவரை இவ்வாறு இது இனிது கூறியுள்ளது. இவருடைய அருந்தவத்தையும் அதிசய நிலைகளையும் நூல்கள் பலவும் வியந்து துதி செய்துள்ளன. தேவர் முதல் யாவரும் வணங்கி வாழ்த்தியுள்ளனர்.

பண்டவுணர் மூழ்கினர் படார்கள்என வானோர்
எண்தவ! எமக்கருள் கெனக்குறை இரந்தார்;
கண்டுஒருகை வாரினன் முகந்துகடல் எல்லாம்
உண்டுஅவர்கள் பின் உமிழ்க என்றலும் உமிழ்ந்தான். [1]

யோகமுறு பேருயிர்கள் தாம்உலை வுறுமல்
ஏகுநெறி யாதுஎன மிதித்தடியின் ஏறி
மேகநெடு மாலைதவழ் விந்தம்எனும் விண்தோய்
நாகமது நாகமுற நாகம்என நின்றான். [2]

மூசரவு சூடுமுத லோன்உரையின் மூவா
மாசில்தவ! ஏகென வாடாதுதிசை மேனாள்
நீசமுற வானின்நெடு மாமலயம் நேரா
ஈசன்நிக ராய்உலகு சீர்பெற இருந்தான். [3]

[இராமா, அகத்தியப்படலம்]

கடல்நீர் பருகி, மலையை அடக்கி, உலகம் நலமுற வட திசை மலையில் இருக்கும் ஈசனைப் போல் இவர் தென்திசை மலை யில் இருந்தருளினர் என இவை குறித்துள்ளன. குறிப்புகளைக் கூர்ந்து நோக்கின் இவருடையசிறப்புகளை ஓர்ந்துகொள்ளலாம்.

பாம்துளைத்த கணையானும் சோவெறிந்த
 திறலானும் மதிக்கும் தோறும்
சிரம்துளக்க அலைகடலும் சேணிகந்த
 பெருவரையும் திறத்தில் குன்றக்
கரம்துளக்கும் குறிமுனிக்கும் கருத்தில்மயல்
 பூட்டியகை தவம்சால் வெற்பின்
உரம்துளைத்த சேயிலைவேல் வலன்உயர்த்த
 இளையவனை உளத்துள் வைப்பாம்.

(விநாயகபுராணம்)

விரிந்த அலைகடலும், நிமிர்ந்த நிலைமலையும் நிலைகுலைந்து தா ழத் தன் கையை மெல்ல அசைத்த குறுமுனி என இவரது தவத் தின் மகிமையை இது இப்படி விசித்திரமா விளக்கியிருக்கிறது.

தவம் அதிசய மேன்மைகள் யாவும் அருளும்; அதனை உரி மையா மருவி அரிய மகிமைகள் எய்தி உயர்கதி பெறுக.

---

966. ஆன்ம வுணர்வில் அழுந்தி அகமகிழ்வார்
 மேன்மை வரும்வழியைப் பார்த்திருப்பார்—நூன்முறையை
ஞாலங்கண் டுய்ய நயந்தருள்வார் நற்றவத்தின்
சீலங்கொண் டுய்வார் தெளி. (௬)

இ-ள்.

நல்ல தவ ஒழுக்கம் உடையவர் ஆன்ம தியானத்தில் ஆழ்ந்து அகம் மிக மகிழ்வார்; மேன்மையான குணநீர்மைகள் மேவி வரக் காண்பார்; உயிரினங்கள் உய்ய உயர் போதனைகளை அருளோடு புரிவார்; எவ்வழியும் தெருளுடன் திகழ்வர் என்க.

அருந்தல் பொருந்தல்கள் ஆகிய புலன் நுகர்ச்சிகளிலேயே மக்கள் ஆசையாய் மகிழ்ச்சி அடைகின்றனர்; மெய்யறிவுடைய மகான்கள் ஆன்ம சிந்தனையிலேயே ஆனந்தம் அனுபவிக்கின்ற னர். புனித நிலையில் விளைவது தனியே இனிய மகிமை ஆகிறது.

பொறிகளின் வழியே வெறியராய் நுகர்வன சுகங்கள் போல் தோன்றினும் அவை கொடிய துக்கங்களையே விளைக்கின்றன; துயர விளைவுகளை உணராமல் மயலாய் மாந்தர் மறுகி யுழலுகின்றனர். தேக போகங்களையே அவாவி அலைபவர் ஆன்மாவின் மேன்மையான ஆனந்தத்தை இழந்து விடுகின்றனர்.

அகமுகமாய்த் தன் உயிரை எவன் நாடுகிருனோ அவன் உயர்தவனாய் ஒளிமிகப் பெறுகிருன். தனது சீவனை ஆவலோடு தெரிசிக்கிறவன் தேவ தேவனை நேரே காணுகிருன். அந்தக் காட்சியில் பேரொளியும் பேரானந்தமும் பெருகி வருகின்றன. அந்த இன்ப சாகரத்தை அடைந்தவன் உடலோடு இருந்தாலும் உயர்பரம் ஆகிருன். அவனுடைய மகிமைகள் அளவிடலரியன.

அரிய தவசிகள், பெரிய ஞானிகள், மகா யோகிகள் என மகிமை தோய்ந்துள்ளவர்கள் எல்லாரும் இந்த ஆத்துமானந்தத்தை அடைந்தவர்களே. மானுட வடிவில் மருவி வாழினும் இவர் பரமான்வினுடைய இனிய ஒளிகளே. இவருடைய சிந்தனையும் செயல்களும் எந்த வேலையும் அந்த ஆதிமூல சோதியினிடமே உறவுரிமைகளாய் உலாவி ஒளி மிகுந்து வருகின்றன.

தன் உயிருள் உயிராய் உறைந்துள்ள இறைவனை நினைந்து உள்ளம் உருகிய அளவு பேரின்பம் வெள்ளம் பொங்கி எழுகின்றது. அந்த இன்பநிலை பரிபக்குவமுடைய தூய தவயோகிகளுக்கே நேயமாய் அமைகிறது. ஆனந்த மயமான பொருளைக் கருதி உருகி வருபவர் அதன் மயமாகவே மருவி மகிழ்கின்ருர்.

இன் அமுது கனிபாகு கற்கண்டு சீனிதேன்
 எனருசித் திடவலிய வந்து
இன்பம் கொடுத்தநினை எந்நேரம் நின் அன்பர்
 இடையருது உருகி நாடி
உன்னிய கருத்து அவிழ உரைகுளறி உடல்எங்கும்
 ஓய்ந்து அயர்ந்து அவசம் ஆகி
உணர்வரிய பேரின்ப அநுபூதி உணர்விலே
 உணர்வார்கள் உள்ள படிகாண்;
கன்னிகை ஒருத்திசிற் றின்பம் வேம்பு என்னினும்
 கைக்கொள்வள் பக்குவத்தில்
கணவன் அருள் பெறின்முனே சொன்னவாறு என்எனக்
 கருதிநகை யாவள் அதுபோல்

சொன்னபடி கேட்கும்இப் பேதைக்கும் நின்கருணை
தோற்றின் சுகாரம்பமாம்
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரம்
சோதியே சுகவாரியே. (தாயுமானவர்)

ஆன்ம உணர்வில் தோய்ந்துள்ள மேன்மையாளரது மேலான நிலைமை நீர்மைகளை இது தலைமையா விளக்கியுள்ளது.

சித்த சுத்தி வாய்ந்து சீவன் பரிபக்குவமானபோது தேவ தேவன் பேரின்பமாய் நேரே பெருகி வருகிறான். கனி தேன் அமுதம் முதலிய இனிய சுவைகளினும் பெரிய மதுரமாய் அரிய பரனுடைய தோய்வு அதிசய ஆனந்தங்களை அருளுகிறது.

உயிர் பரமனை நாடி உருகி வருந்தோறும் அங்கே பெருகி வருகிற பேரின்ப நிலைகளைத் தாயுமானவர் இதில் உணர்த்தியுள்ளார். அரிய பேரின்ப அநுபூதி என்று அவர் குறித்துள்ள அனுபவசாரங்கள் நுணுகிய அனுபவங்களால் நுகரவுரியன.

பேதைநிலை நீங்கி மங்கைப்பருவம் மருவியபொழுது உரிய ஒரு கணவனைத் தோய்ந்து மணமகள் இனிய சுகபோகங்களை அனுபவிக்கிறாள். மடமை ஒழிந்து தெளிவான மதிநலம் மருவிய போது பரமபதியை மணந்து மனிதன் மாதவனாய்ப் பேரின்பங்களை நுகர்கிறான். இருவகை இன்ப நுகர்வுகள் கருதியுணரவந்தன.

என்றும் தனக்கு உரிமையான ஒருவனை இழிமடமையால் மறந்து அழிதுயரங்களில் சீவன் அழுந்திக் கிடந்தான்; விழுமிய ஞானம் உதயம் ஆகவே உளம்மிக உருகி முழு முதலைத் தழுவி அளவிடலரிய அதிசய ஆனந்தங்களைச் சுகித்துக் களித்து எவ்வழியும் செவ்வி சுரந்து திவ்விய நிலையில் இனிது திளைக்கின்றான்.

பொறிபுலன்களை அடக்கி உள்ளத்தை நெறியே ஒடுக்கி வரின் அது நல்ல தவம் ஆய் வருகிறது; வரவே பரமான்மா நேரே தெரிகிறது; தெரியவே சீவான்மா அதனை ஆவலோடு மருவி அதிசய சுகியாய்ப் பெருகிஆனந்த பரவசம்அடைகிறது.

நீண்ட காலம் பிரிந்து போயிருந்த தனது அழகிய நாயகனை எதிரே கண்ட இனிய நாயகிபோல் பரமபதியைக் காணவே உயிர் பரவசமாய் உருகிப் பாய்ந்து பாலொடு பால் கலந்தது போல் இன்பமாய் இணைந்து திகழ்கிறது. சீவநாயகி திவ்வியசுகி.

அன்புள் உருகி அழுவன் அரற்றுவன்;
என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்;
என்பொன் மணியை இறைவனை ஈசனைத்
தின்பன்; கடிப்பன்; திருத்துவன்; தானே.
(திருமந்திரம் 2980)

மாசு நீங்கிய மாதவர்கள் ஈசனைத் தோய்ந்து இன்பமாய்த் திளைக்கும் நிலைகளைத் திருமூலர் இவ்வாறு விளக்கி யிருக்கிறார். உரிய பரனை மருவி அரிய போகியாய்ப் பெரிய உயர்நிலை யுறுக.

---

967. வீரம் கொடையில்லா வேந்தனும் மெய்யுணர்வின்
சாரம் உறாத தவசியும்—நேரொழுக்கம்
பூணாது நின்ற புலவனும் இம்மூவர்
வீணாவர் காணார் விறல். (எ)

இ-ள்.

வீரமும் கொடையும் மேவாத அரசனும், மெய்யறிவின் சாரம் உறாத தவசியும், நேர்மையான நல்ல ஒழுக்கம் இல்லாத புலவனும் விழுமிய மகிமைகளைக் காணார்; வீணாய் விளிவர்; அவ்வாறு விளிந்து போகாமல் உயர்ந்த தலைமையை அடைந்து கொள்ளுக; அதுவே பிறந்த சிறந்த பயன் என்பதாம்.

தவசியின் நிலைமை தலைமை நீர்மைகளைத் தெளிவாக விளக்குவதற்கு வேந்தனும் புலவனும் ஆர்ந்த துணைகளாய் நேர்ந்து வந்தனர். இணையான பிணைகளாய் இணைந்தவருடைய இயல்புகளை நினைந்து கொள்ளவே உயர்ந்த தகைமைகள் எளிதே உணர்ந்து கொள்ள வரும். குணங்கள் இனங்களை இனிது விளக்குகின்றன.

தனக்கு உரிய தன்மையைத் தழுவியுள்ள அளவே எந்தப் பொருளும் இனிய நன்மையாய் உயர்ந்து விளங்கும். தனது நீர்மையை இழந்த எதுவும் சீர்மை அழிந்து சிறுமையேயுறும்.

வீரம் என்பது நேர்மையான தலைமையில் நிலைகுலையாத மன வுறுதி. ஆண்மை ஊக்கம் திண்மை தீரம் தைரியம் என வருவன வீரத்தின் கிளைகளே. அரசனுக்கு இது உயிராதாரமான உயர் குணம். சிறந்த தகுதியான இந்த வீரம் சரியாக அமையவில்லையானல் அவன் பரிதாபமாய் இழிந்து கழிவான்

வீரமும் கொடையும் மேவி யிருந்தால் அவன் மேலான

மகிமைகளை எய்தி வியனு விளங்குகிருன். அவை இலையேல் பேடி, உலோபி எனப் பிழை படிந்து இழிவாய் ஒழிகிருன்.

புலவன் என்பவன் தலைமையான கலையறிவை யுடையவன். அந்த அறிவு சீலத்தோடு தோய்ந்துவரின் அவன் சாலச் சிறந்த வனுய் உயர்ந்து திகழ்வான்; ஞாலமும் அவனை உவந்து புகழ்ந்து வரும். ஒழுக்கம் இல்லையேல் இழுக்கமா அவனை எவரும் இகழ்ந்து விடுவர் விழுமிய சீலம் நழுவிய அளவு புலவன் புல்லன் ஆகிருன்.

புலமையாளன் ஒழுக்கத்தால் ஒளி பெறுகிருன்.

தலைமையான அரசன் வீரத்தால் விழுப்பம் உறுகிருன்.

தவசி மெய்யுணர்வினுல் மேன்மை அடைகிருன்.

என்றும் நிலையாய் நிலவும் மெய்ப்பொருள் ஒன்று உள்ளது; எல்லாம் வல்ல அது அதிசய ஆனந்தமாய் யாண்டும் நிறைந்திருக்கிறது. அந்த உண்மைப் பொருளை உணர்ந்து தெளிவதே தத்துவ ஞானம் என விளங்கியுளது. மெய்யான இந்த ஞானம் தோய்ந்து வரும் வழியே தவம் வானம் தோய்ந்த ஒளியாய் வயங்கி மிளிர்கிறது. சிவம் மேவிய நவமே தவம் ஆகிறது.

தானம் தழுவிய தருமம்போல் ஞானம் மருவிய தவம் நயமாய் வியன் உறுகிறது. அரிய தவசி பெரிய ஞானியாய்ப் பெருகி வருகிருன். தவம் திண்மையுடையது ஆயினும் உண்மை யுணர்வோடு ஒன்றிய போதுதான் உறுதியாய் உயர்கிறது. ஞானம் தவத்தின் சீவநிலையமாய் அதற்கு இனிமை சுரந்து தனி மகிமையை அருளுகிறது. அது இல்லையேல் இது இளிவுறுகிறது.

ஞானம்இல் லாதவை ராக்கியம் நன்றல்ல
கானவர்க்கும் நோயினர்க்கும் கள்ளர்க்கும்---ஆனதுவென்
எந்நிலைக்கே நின்ருலென் எவ்விடயத்து ஏய்ந்தாலென்
தன்னிழப்பே இன்பாம் தலம். (ஒழிவிலொடுக்கம்)

கடுமையான விரதங்களைக் கைக்கொண்டு கானகத்தில் இருந்தாலும் ஞானம் இல்லாதவன் நல்ல தவம் உடையவன் ஆகான் என்பதை உதாரணங்களோடு இது விளக்கியுள்ளது. காட்டில் வாழுகின்ற வேடன் கனி காய் கிழங்குகளைத் தின்னுகின்ருன்; பனி வெயில் மழை முதலியவற்றைச் சகித்துக்

கொள்ளுகிருன்; நாட்டு மக்களோடு கூடாமல் தனியே ஒதுங்கி வாழுகின்ருன்; ஆயினும் அவன் தவசி ஆகான்.

ஞானம் தழுவிய அளவுதான் விரத ஒழுக்கங்களும் வைராக்கியங்களும் மேலான தவங்களாய்மேவி வியன்பயன் தருகின்றன.

மருளான ஆசைகளை ஒழித்து அருள் நிலையில் அமர்ந்து ஆன்ம சிந்தனை செய்து வரும் பான்மை மேன்மையான தவம் ஆகிறது. தனது சுய நிலையில் தோய நேர்ந்தபோது அயலான மாய மயல்கள் அறவே ஒழிந்து போகின்றன.

பொறி வெறிகள் நீங்கி நெறிநியமங்கள் ஓங்கிவரும் அளவு மனிதன் மகானுய் உயர்ந்து திகழ்கிருன். அந்தப் புனிதநிலையால் அரிய பல மகிமைகள் பெருகிஆனந்தங்கள் மருவி வருகின்றன.

ஒன்ருய ஊக்கஏர் பூட்டி யாக்கைச் செறு உழுது
நன்ருய நல்விரதச் செந்நெல் வித்தி ஒழுக்கநீர்
குன்ருமல் தாம்கொடுத்துஐம் பொறியின் வேலி காத்துஓம்பின்
வென்ருர்தம் வீட்டின்பம் விளைக்கும் விண்ணேர் உலகின்றே.
(சீவகசிந்தாமணி)

சுவர்க்க போகத்தையும், பேரின்ப வீட்டையும் அடையத் தக்க வழியை இது விழி தெரிய விளக்கியுள்ளது. உருவக உரைகள் கருதியுணர வுரியன. தவநிலை இங்கே நன்கு தெரியநின்றது.

ஊக்கம், விரதம், ஒழுக்கம், புலன் அடக்கம் ஆகிய இவை தவத்தின் நீர்மைகள். இத்தகைய தன்மைகள் எவ்வழியும் செவ்வையாய்த் தோய்ந்துவரின் அது திவ்விய தவமாய்ச் சிறந்து வரும். அதனுல் முதலில் விண் உலக வாழ்வும், பின்பு மோட்சமும் கிடைக்கும் எனச் சீவக மன்னன் இவ்வாறு உணர்த்தியிருக்கிருன். உணர்வு நலம் ஓர்ந்து கூர்ந்துசிந்திக்கத் தக்கது.

சிறந்த அறிவுடைய பிறப்பில் மனிதன் தோன்றியிருக்கிருன்; மேலான இந்த நிலையில் வந்தவன் கீழான புலைகளைத் தெளிந்து விலகி என்றும் நிலையான இன்ப வாழ்வை அடைந்து கொள்ள வேண்டும். அந்த அடைவே வந்த பிறவியின் பயனும்.

அவநிலைகளை விலகித் தவநிலைகளைத் தழுவி ஒழுகுக; அதனுல் விழுமிய மகிமைகளும் மெய்யான இன்பங்களும் விரைந்து விளைந்து வரும்.வந்த பிறவியே அந்தமாய் அந்தமிலின்பம் அடைக.

968. உள்ளம் பரத்தோ டுறைய உயிருறைந்து
கள்ளப் புலன்கள் கடிந்துமே—எள்ளும்
பழிநிலைகள் யாதும் படியாமல் காக்கும்
வழியே தவம்கை வரும். (அ)

இ-ள்.

கள்ளமான பொறி புலன்களைக் கடிந்து நீக்கி, எள்ளலான இழிபழிகள் ஏருமல் காத்துத் தன் உள்ளமும் உயிரும் பரம் பொருளோடு உறைந்து மகிழும்படி புரிந்துவரின் அது சிறந்த தவமாய் நிறைந்து உயர்ந்த பேரின்பம் சுரந்து வரும் என்க.

உயிர் இனங்களுள் மனிதன் உயர்ந்தவன் எனச் சிறந்து வந்துள்ளான். இந்தச் சிறப்பு எதனுல் அமைந்தது? மன உணர்வினுல். தன் மனத்தை நல்ல வழிகளில் பழக்கிப் புனித மாப் பண்படுத்தி வருபவன் தனி நிலையில் உயர்ந்து திகழ்கிருன். இனிய மனம் அரிய பல மகிமைகளை அருளி வருகிறது.

எந்த மனிதனுடைய அந்தக்கரணம் தூய்மை தோய்ந்து உள்ளதோ அந்த மனிதன் அதிசய நிலையில் எவராலும் துதி செய்யப்பெறுகிருன். மனம் புனிதமாய் வர அவன் மாதவனுய் வருகிருன். அதனுல் அளவிடலரிய மகிமைகள் விளைகின்றன.

எண்ணங்களும் மொழிகளும் செயல்களும் புண்ணிய நிலை களில் பொருந்திவரின் அது தவமாய்ப் பொலிந்து வருகிறது. தவம் பெருகிவர அவம் அருகி ஒழிகிறது; சுகம் மருவி எழுகிறது.

உள்ளம் தவத்தில் தோய்ந்துவரின் உயிர் பரத்தில் தோய் கிறது; தோயவே பேரின்ப வெள்ளம் பாய்ந்து வருகிறது. அரிய பேறுகளை எல்லாம் தவம் எளிதே அருளுகிறது.

வேண்டிய வேண்டியாங்கு எய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப் படும். (குறள், 265)

தான் விரும்பிய இன்பநலங்களை எல்லாம் விரும்பியபடியே ஒருவன் அடைய வேண்டுமானுல் அவன் தவத்தைச் செய்ய வேண்டும் எனத் தேவர் இங்ஙனம் தெளிவாக் குறித்திருக்கிருர்.

கருதிய யாவும் தரும் அற்புதக் கற்பகமாய்த் தவம் அமைந்துள்ளமையை இதனுல் நன்கு அறிந்து கொள்ளுகிருேம்.

தனக்கு வேண்டும் என்று மனிதன் யாண்டும் வேண்டி நிற்பது இன்பத்தை; வேண்டாம் என்று வெறுத்து விலகுவது துன்பத்தை. அல்லலான துன்பங்கள் யாவும் நீங்கி நல்ல இன்பங்களை அடைய வுரிய வழி இங்கே விழி தெரிய வந்தது.

தவத்தால் மாசுகள் ஒழிகின்றன; தேசுகள் விளைகின்றன; விளையவே ஈசன் அருளைத் தவசி எளிதே பெறுகின்றான். அல்லல்களை ஒழித்து நல்ல சுகங்களை நல்கி எல்லா நிலைகளிலும் உயர்த்தி வருதலால் தவம் ஆன்ம அமுதமாய் அமைந்து நின்றது.

அடங்கருந் தோற்றத்து அருந்தவம் முயன்றோர்தம்
உடம்பு ஒழித்து உயர்உலகம் இனிது பெற்றாங்கே. (கலி, 138)

அரிய தவத்தை முயன்றவர் உயர்ந்த கதியை அடைவர் என நல்லந்துவனார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் குறித்திருக்கிறார். தன்னைத் தழுவி நின்ற மனிதனைத் தெய்வம் ஆக்கி மேலான விண்ணுலக போகத்தைத் தவம் சால்போடு அருளும் என்பதை இதனால் அறிந்து கொள்ளுகிறோம்.

இல்லியலார் நல்லறமும் ஏனைத் துறவறமும்
நல்லியலின் நாடி உரைக்குங்கால்---நல்லியல்
தானத்தால் போகம்; தவத்தால் சுவர்க்கமாம்;
ஞானத்தால் வீடாக நாட்டு. (சிறுபஞ்சமூலம் 36)

இல்லறம் துறவறம் தானம் தவம் ஞானம் ஆகிய ஐவகை நிலைகளை இது காட்டியுள்ளது. தவத்தால் சுவர்க்க போகம் கிடைக்கும் எனக் காரியாசான் இவ்வாறு கூறி யிருக்கிறார்.

ஒருமைகொள் மாதவம் உழந்து பின்முறை
அருமைகொள் வீடுபேறு அடைந்து ளோர்சிலர்;
திருமை கொள் இன்பினில் சேர்கினறோர் சிலர்;
இருமையும் ஒருவரே எய்தினோர் சிலர். (1)

ஆற்றலின் தம்உடல் அலசப் பற்பகல்
நோற்றவர் அல்லரோ நுவலல் வேண்டுமோ
தேற்றுகி லீர்கொலோ தேவர் ஆகியே
மேற்றிகழ் பதம்தொறும் மேவுற் றோரெலாம். (2)
[கந்தபுராணம்]

எவ்வகைப் பொருள்களும் ஈய வல்லது
செவ்விய தவமதே தெரியின் வேறிலை;

இவ்வுலகத்தில் அஃது இயற்றுகின்றதே
உவ்வுடல் எடுத்தபேர் உறுதி என்பவே.
(திருக்கூவப்புராணம்)

தவத்தின் மகிமை மாண்புகளை இவை சுவையா விளக்கி யிருக்கின்றன. இம்மையில் இனிய அரச போகங்களையும், மறுமையில் அரிய பெரிய சுவர்க்க போகங்களையும் தவம் ஒருங்கே கொடுக்கும் என மேலோர் பலரும் இங்ஙனம் உணர்த்தியுள்ளனர். உயிரின் உயர்வான உறுதி நிலை உணர வந்தது.

அறிவு நலம் பெருகி வந்துள்ள மனிதன் தனது உயிர்க்கு உயர்ந்த உறுதி நலனை அருளுகிற தவத்தை உரிமையோடு விரைந்து செய்து கொள்ள வேண்டும். அவ்வாறு செய்தவன் தெய்வீக நிலையை எய்தித் திவ்விய போகங்களை நுகர்கின்றான்.

---

969. மேய தவவாழ்வில் வெங்காமம் ஓரணுவுள்
ஆய தெனினும் அழியுமே—தூயவான்
பாலில் பிரைசிறிது பட்டாலும் பாழாமே
பாலித் தொழுக பரிந்து. (கூ)

இ—ள்.

நல்ல பாலில் சிறிய ஒரு மோர்த்துளி விழுந்தால் அவ்வளவும் நிலை குலைந்துபோம்; அதுபோல் தூயதவத்தில் தீய காமம் அணு அளவு தோய்ந்தாலும் அத்தனையும் அவமாம் என்க.

உலக நிலைகளை ஒருவித் தவ நிலையில் புகுந்தவர் தனியான புனித நிலையில் வாழ வுரியவர். கடுமையான விரத ஒழுக்கங்களை மேற்கொண்டு நெறி நியமங்களோடு வாழும் நியதியுடையவர் ஆதலால் அவரது வாசம் மாசறு காட்சியாய் மகிமை தோய்ந்துள்ளது. மாசு ஒழியத் தேசு வெளியாய் ஈசனை எய்துகிறார்.

பாலை உவமை கூறியது, அவர்தம் சீலமும் செம்மையும் சீர்மையும் நீர்மையும் கூர்மையா அறிய. வெண்மை இனிமை நன்மை பாலின் பால் பரவியுள்ளன. தண்மை தகைமை தூய்மை தவசிகள் பால் தழுவியுள்ளன. பால் அனையார்பரன்பாலுறுகிறார்.

உலகம் உவந்து பேணும் நிலைமையில் தலைமையாய் உயர்ந்து சிறந்துள்ள மாதவர் ஏதேனும் சிறிது பிழைபட நேரின் உயர் நலம் எல்லாம் ஒருங்கே இழந்து அவமாய் இழிந்து போவர்.

தன் இனமான மோர்த்துளியைச் சிறிது தழுவினும் பால் நிலைகுலைந்து போம்; பழைய உறவு என்று எளிமையாய் மகளிரொடு பழகிவரின் பழி படிந்து தவசி இழிவடைந்து விடுவான்.

எவ்வழியும் யாதொரு இழிவும் நேராமல் தன்னைச் செவ்வையாய்க் காத்து வருபவனே திவ்விய நிலையில் சிறந்து வருகிறான். புலையான தொடர்புகள் ஒழிந்த அளவே தவம் ஒளி மிகுந்து உயர்ந்து விளங்கும். அவமாய் அவம் படியாமல் தவம் படிக.

காமம் என்றது பெண் ஆசை பொன் ஆசை முதலிய நசைகளை எல்லாம் குறித்து நின்றது. அவகேடான இழிவிழைவுகளை அடியோடு ஒழித்தவரே தவயோகிகளாய்த் தழைத்து வருகின்றார். மாசான ஆசைகள் படியின் நீசங்கள் நெடிது படிகின்றன.

பெண்விழைவார்க்கு இல்லை பெருந்தூய்மை; பேணுதூஉன்
உண்விழைவார்க்கு இல்லை உயிர்ஓம்பல்—எப்பொழுதும்
மண்விழைவார்க்கு இல்லை மறமின்மை; மாணுது
தம்விழைவார்க்கு இல்லை தவம். (அறநெறிச்சாரம்)

தேக போகங்களை விழைபவர் தவயோகிகளாய் விளைய முடியாது என இது விளக்கியுள்ளது. நெறியான கட்டுப்பாடே தவத்தைச் சரியாக வளர்த்து மகிமையை விளைத்து வருகிறது.

வரிக்கடை நெடுங்கண் விளங்க மேதக
மணித்தோடு பெய்து வாண்முகம் திருத்தி
நானிலம் வளர்த்த பாவையொடு கெழீஇய
கான்யாற்று வருபுனல் ஆடலும், தேமலர்
வல்லிப் பந்தர் வண்டுவாழ் ஒருசிறை
நிலமகட் புணரும் சேக்கையும், மரமுதல்
மெல்லுரி வெண்துகில் உடையும், தொல்வகைப்
படையுழா விளையுளின் உணவும், மந்திரத்துச்
சுடர்முதல் குலமுறை வளர்த்தலும், வரையாது
வருவிருந்து ஓம்பும் செல்வமும், வரைமுதல்
காடுகைக் கொள்ளும் உறையுளும், என்றிவ்
எண்வகை மரபின் இசைந்த வாழ்க்கை
ஐம்பொறிச் சேனை காக்கும் ஆற்றலொடு
வென்றுவிளங்கு தவத்தின் அரசியல் பெருமை
மாக்கடல் உடுத்த வரைப்பின்
யார்க்குஇனிது அன்று அஃது அறியுநர்ப்பெறினே.
(ஆசிரியமாலை)

காட்டு ஆறுகளில் நீர் ஆடி, மரவுரி தரித்து, கனி காய்களைத் தின்று, தரையில் படுத்து, உயிர்களுக்கு இரங்கி, பொறிகளை அடக்கி, நெறிநியமங்களோடு தியானம் புரிந்து, பரமான்மாவுடன் மருவி வாழும் தவ வாழ்வை இது நயமா வரைந்துகாட்டியுள்ளது. குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து கொள்ள வேண்டும்.

தத்தமக்குக் கொண்ட குறியே தவம்அல்ல
செத்துக சாந்து படுக்கமனன்---ஒத்துச்
சமத்தனாய் நின்றுஒழுகும் சால்பு தவமே
நுகத்துப் பகலாணி போன்று. (பழமொழி 95)

பிறர் வைதாலும் வாழ்த்தினாலும் சமமாக் கருதி அமைதியாயிருக்கும் சித்த சாந்தியே தவம் ஆம் என இதுகுறித்துளது. தவம் புரிவது மிகவும் அரிய செயல். அதனை உறுதியாகச் சாதித்த பொழுது அந்த மாதவனை வானவரும் வியந்து புகழ்ந்து போற்றுகின்றனர்;மேலானமகிமைகள் அவனிடம்வருகின்றன.

மாசற்ற தவசி ஈசன் போல் தேசுற்று நிலவுகிறான்.

---

970. செய்ய தவமுடையார் தெய்வமென நின்றிந்த
வையமெலாம் வாழ்த்த வயங்கியே—மெய்யான
பேரின்பம் எய்திப் பெருவாழ் வுறுகின்றார்
யாரெதிர் நேர்வர் அவர்க்கு. (ல)

இ—ள்.

செய்ய தவத்தைச் செய்பவர் தெய்வமாய்ச் சிறந்து திகழ்கின்றார்; உலகம் எல்லாம் அவரை உவந்து தொழுது வணங்கி வாழ்த்துகின்றன; மெய்யான பேரின்ப வுலகை அடைந்து மேலான நிலையில் உயர்ந்து அவர் விளங்குகின்றார் என்க.

உயிரும் பரமும் வேறு வேறு நிலையில் பிரிவு கொண்டிருப்பினும் இயல்பான உறவுரிமைகள் என்றும் தொடர்பாய்த் தோய்ந்து நிற்கின்றன. நீச ஆசைகள் நீங்கி மாசு கழியும்தோறும் இது ஈசனாய் எழில் மிகுந்து ஒளி நிறைந்து வருகிறது. தவம் தழுவிவரச் சீவன் சிவமாய்க் கெழுமி எழுகிறது. பரனுக்கும் சீவனுக்கும் உரிய விழுமிய கிழமைகள் பரம தத்துவங்களாய் மருவி எவ்வழியும் இணைபிரியாது இணங்கி யுள்ளன.

மாய மையல்கள் மாய்ந்து உள்ளம் தூய்மை தோயின் உயிர் பரமாய் உயர்கிறது. அத்தகைய சித்த சுத்தியில் நித்திய சுத்தனான நித்தன் நேரே பேரின்பமாய் நிலவி நிற்கிறான்.

அத்துவித அனுபவத்தை அனந்தமறை
இன்னம் இன்னம் அறியேம் என்னும்
நித்தியத்தை நிராமயத்தை நிர்க்குணத்தைத்
தன்னருளாம் நினைவுக்குள்ளே
வைத்துவைத்துப் பார்ப்பவரைத் தானாக
எந்நாளும் வளர்த்துக் காக்கும்
சித்தினைமா தூவெளியைத் தன்மயமாம்
ஆனந்தத் தெய்வம் தன்னை. (1)

தன்னிலே தானாக நினைந்து கனிந்து
அவிழ்ந்துசுக சமாதி ஆகப்
பொன்னிலே பணிபோலும் மாயைதரு
மனமே உன் புரைகள் தீர்ந்தாய்
என்னினோ யான்பிழைப்பேன் எனக்கினியார்
உன்போல்வார் இல்லைஇல்லை
உன்னிலோ திருவருளுக்கு ஒப்பாவாய்
என் உயிர்க்குஓர் உறவும் ஆவாய். (தாயுமானவர்)

தன் மனத்தை நோக்கித் தாயுமானவர் இவ்வாறு கூறியிருக்கிறார். பாசபந்தங்கள் படியாமல் அது பரிசுத்தம் ஆனால் ஈசனுடைய சம்பந்தம் தனக்கு எளிதே எய்திவிடும் என அவர் உருகி உரையாடியுள்ள நிலை நுணுகி உணரவுரியது. தன்னை நினைவுக்குள் வைப்பவரைத் தான்ஆக வளர்த்துக் காக்கும் சித்து என ஈசனைத் துதித்திருப்பது சீவ தத்துவத்தைத் தெளிவா வெளிப்படுத்தியுளது. இருள் ஒழிந்தபொழுது ஒளி பரந்து வருகிறது; மருள் மடிந்தவுடன் உயிர் பரமாய் ஒளிவீசி மிளிர்கிறது.

மாய இருளும் மருளும் மடிந்தொழியின்
தூய பரஞ்சோதி தோன்றுமே--- ஆய்வுயர்
இன்ப நிலையினை எய்தாதான் எய்துமே
துன்பப் புலைகள் தொடர்ந்து.

மனிதன் இன்ப சோதியாய் உயர்வதையும் துன்ப இருளாய் இழிவதையும் இது வழி தெரியத் தெளிவா விளக்கியுள்ளது.

தனது சுயமான ஆன்ம நிலையைக் கருதி வருவது தவமாய் வருகிறது; ஆன்மா ஒளியும் இன்பமும் உடையது; பரமான்மாவின் இனமான இதனை அணுகி நிற்பவன் உயர்வான தவசி ஆகிருன்; ஆகவே அதிசய நிலைகளை அடைகிருன்; அடையவே உலகம் அவனைத் தொழுது வழிமுறையே வாழ்த்தி வருகிறது.

தவநிலையில் எவன் புக நேர்ந்தானே அப்பொழுதே அவனை விட்டு அவநிலைகள் யாவும் அடியோடு விலகி விடுகின்றன; உயர் நிலைகள் எல்லாம் அவனிடம் உரிமையா ஒளிசெய்து மிளிர்கின்றன. அவனுடைய கருத்தும் காட்சியும் பரத்தை நோக்கியே விருத்தியடைந்து நிற்றலால் பரமானந்தங்களை எளிதே அடைந்து மகிழ்கிருன். தவம் கூடத் தனிமுதல் கூடுகிறது.

கூடித் தவம்செய்து கண்டேன் குரைகழல்;
தேடித் தவம்செய்து கண்டேன் சிவகதி;
வாடித் தவம்செய்வ தேதவம்; இவைகளைந்து
ஊடின் பலவுல கோர்எத் தவரே? (1)

மனத்திடை நின்ற மதிவாள் உருவி
இனத்திடை நீக்கி இரண்டற ஈர்த்துப்
புனத்திடை அஞ்சும் போகாமல் மறித்தால்
தவத்திடை யாறுஒளி தன்ஒளி யாமே. (திருமந்திரம்) (2)

தவத்தின் நிலையையும் அதனல் அடையும் பலன்களையும் இவை தெளிவா விளக்கியுள்ளன. குறித்துள்ள விளக்கங்கள் நுனித்து உணரத்தக்கன. இதயம் குவியத் தவம் உதயமாகிறது.

மனமும் மதியும் புனிதமாய்த் தெளிந்தவரின் அவர் முனிவர் ஆகின்ருர்; ஆகவே உலகப் புலைகளை நீங்கி உயர் நிலையில் மூங்கி எழுகின்ருர். சீரிய தவம் திவ்விய நெறியே மேவுகிறது.

"சீரை தைஇய உடுக்கையர்; சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்;
மாசற இமைக்கும் உருவினர்; மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பெழுந்து இயங்கும் யாக்கையர்; நன்பகல்
பலவுடன் கழிந்த உண்டியர்; இகல்ஒடு
செற்றம் நீங்கிய மனத்தினர்; யாவதும்
கற்ருேர் அறியா அறிவினர்; கற்ருேர்க்குத்

தாம்வரம்பு ஆகிய தலைமையர்; காமமொடு
கடுஞ்சினம் கடிந்த காட்சியர்; இடும்பை
யாவதும் அறியா இயல்பினர்; மேவரத்
துனியில் காட்சி முனிவர்." (திருமுருகு)

தவம் புரிந்து வாழுகின்ற முனிவர் நிலைகளை நக்கீரர் இவ்வாறு செவ்வையா வரைந்து காட்டியுள்ளார். அரிய தவசியர் காட்சிகளால் பெரிய மாட்சிகள் தெரிய வருகின்றன.

தவத்தைத் தழுவுகின்றவர் சிவத்தைத் தழுவுகின்றார்; தழுவவே விழுமிய மகிமைகள் விளைகின்றன; அதிசய ஆற்றல்கள் அவரிடம் உளவாகின்றன; ஆகவே உலகம் வியந்து காணும் வியப்புகளை விளைத்தருளிவித்தக சோதிகளாய்விளங்குகின்றனர்.

ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலும்
எண்ணின் தவத்தான் வரும். (குறள், 264)

தவத்தால் வரும் அதிசய விளைவுகளைத் தேவர் இவ்வாறு குறித்திருக்கிறார். தாம் கருதியபடி எல்லாம் தவசிகள் செய்ய வல்லவர் என்பது இதனால் தெளிவாய்த் தெரிய வந்தது.

ஆகாய கங்கையை இங்கே பகீரதன் கொண்டு வந்தது தவத்தால்; திரிசங்கு மன்னனுக்கு விசுவாமித்திரர் சுவர்க்கம் தந்தது தவத்தால்; படைத்தல் காத்தல் அழித்தல்களைச் செய்வேன் என்று அவர் துணிந்து கூறினார். அவருடைய தவ மகிமையை வியந்து இந்திரன் முதலிய யாவரும் நேரே வந்து அவரைப் பணிந்து நின்றனர். அவர் ஆற்றிய அற்புதங்கள் அளவிடலரியன.

தன்னை யுடையவனைத் தவம் உன்னத நிலையில் உயர்த்தியருளும் என்பதை இவருடைய சரிதம் உணர்த்தி வருகிறது. அரிய மகிமைகள் யாவும் தவம் உடையார்க்கு உரிமையா அமைகின்றன. அவரது தலைமை அதிசய நிலைமையா நிலவுகிறது.

அல்லல்களை நீக்கி நல்ல கதிகளை நல்குதலால் தவம் சீவர்களுக்குத் தேவ அமுதமாய் மேவியுளது. ஆனவரையும் அதனைச் செய்து மனிதர் மேலான நிலைகளை அடைய வேண்டும் என நூல்கள் உரைத்துவருகின்றன. அவ்வுரைகள் உவகைதருகின்றன.

அசும்பு பாய்வரை அருந்தவம் முடித்தவர் துணைக்கண்
தசும்பு வேய்ந்தவர் ஒத்தவர் தமக்குவிண் தருவான

விசும்பு தூர்ப்பன வாமென வெயில்என விளங்கும்
பசும்பொன் மானங்கள் போவன வருவன பாராய்!
[இராமா, சித்திர 36)

சித்திரகூட மலையிலிருந்து அரிய தவங்களைச் செய்து முடித்தவரைப் பெரிய பொன் விமானங்கள் வந்து ஏந்திக் கொண்டு பரகதிக்குக் கொண்டுபோகிற காட்சிகளை இது காட்டியுள்ளது.

மய்யறு விசும்பில் மண்ணில் மற்றும்ஓர் உலகில் முற்றும்
மெய்வினை தவமே அன்றி மேலும்ஒன்று உளதோ? கிழோர்
செய்வினை நாவாய் ஏறித் தீண்டலர் மனத்தில் செல்லும்
மொய்விசும்பு ஓடம் ஆகத் தேவரின் முனிவர் போனார்.
(இராமா, குக, 61)

பரதனோடு கூடி வந்த தவசிகள் ஓடத்தில் ஏருமல் ஆகாய மார்க்கமாய்க் கங்கா நதியைக் கடந்து வந்துள்ளனர். அது தவத்தின் மகிமையால் அமைந்தது; ஆகவே மண் விண் முதலிய எவ்வுலகிலும் தவமே செய்ய வுரியது; அதனைச் செய்தவரே திவ்விய கதிகளை எய்திச் சிறந்து திகழ்கின்றனர் எனக் கவி நாயகன் இங்கே உணர்த்தி யிருப்பது ஓர்ந்து சிந்திக்க வுரியது.

நஞ்சு குடித்தாலும் நவையின்று தவம் நின்றால்
அஞ்சிஒளித் தாலும்அரண் இல்லைதவம் உலந்தால்
குஞ்சரத்தின் கோட்டிடையும் உய்வர் தவம் மிக்கார்
அஞ்சல்இலர் என்றும்அற னேகளைகண் என்பார்.
[சீவகசிந்தாமணி]

தவத்தின் மகிமையை இது வியனு விளக்கியுளது. நஞ்சைக் குடித்தாலும் அஞ்சத்தக்க கொடிய அபாயங்கள் நேர்ந்தாலும் தவம் காத்து அருளும்; அதனை யுடையவர் எவ்வழியும் சுகமாய் உய்தி பெறுவர் எனச் செய்தவ வலியை இது உணர்த்தியுளது.

இத்தகைய தவத்தை மாந்தர் ஆர்வமுடனும் செய்து அதிசய நிலைகளை அடைந்து கொள்ள வேண்டும். அவ்வாறு கொள்ளாதிருந்தால் பிறவிப் பயனை இழந்த பேதைகளாய் இழிந்து மேதைகளால் எள்ளப்படுவர். தவத்தால் பவத்துயர் நீங்குகிறது.

தவத்திடை நின்றவர் தாம்உண்ணும் கன்மம்
சிவத்திடை நின்றது தேவர் அறியார்;
தவத்திடை நின்றறி யாதவர் எல்லாம்
பவத்திடை நின்றதோர் பாடது வாமே. [திருமூலர்]

அழப்போகான் அஞ்சான் அலறினல் கேளான்
எழப்போகான் ஈடற்றூர் என்னுன்---தொழப்போகான்
என்னே இக் காலனேடு ஏற்பார் தவம்முயலார்
கொன்னே இருத்தல் குறை (ஏலாதி)

தவத்தை மறந்து நின்றவருடைய பரிதாப நிலைகளை இவை பரிவோடு காட்டியுள்ளன. உரிய தவம் செய்து பெரிய பயன் பெறுக எனத் திருமூலர், கணிமேதையார் முதலிய மேதைகள் இவ்வாறு மேலான உறுதி நலங்களைப் போதித்துள்ளனர்.

இளைத்தோர் இளமையொடு எனைப் பல கேள்வியும்
தவத்தது பெருமையின் தங்கின இவற்கு. [பெருங்கதை 1]

உதயணனை அவந்தி மன்னன் இவ்வாறு வியந்திருக்கிறான்.

இளமையிலேயே அரிய பல கலைகளை அறிந்திருந்தமையால் அது தவத்தது பெருமை என்று வியப்பு மீக்கூர்ந்தான்.

புரிமலர்த் துழாஅய் மேவன் மார்பினேய்!
அன்னை என நினை இ நின் அடி தொழுதனெம்
பன்மாண் அடுக்க இறைஞ்சினேம் வாழ்த்தினேம்
முன்னும் முன்னும்யாம் செய்தவப் பயத்தால்
இன்னும் இன்னும்எம் காமம் இதுவே. (பரிபாடல், 13)

பலகாலமும் யாம்செய்த தவப்பயத்தால் உன்னைத் தொழுது வாழ்த்தும் பேறு பெற்றேன் எனத் திருமாலை நோக்கி நல்லெழு நியார் என்னும் சங்கப் புலவர் இங்ஙனம் பாடியிருக்கிறார்.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

மருள் நீங்கி அருள் ஓங்குவதே தவம்.
கருதிய யாவும் தவம் தரும்.
தன்னை அறிதலே தலையான தவம்
தவம் தோயச் சிவம் தோயும்.
அதிசய வலிகள் அதனல் உளவாம்.
பேரின்ப நிலைகள் பெருகி வரும்.
ஞானம் தழுவிய தவம் வானஒளியா வயங்கும்.
மனம் தூய்மையே மாதவமாகும்.
அவம் படியாமல் தவம்படிந்து உயர்க.
செவ்விய தவம் திவ்விய பரம்.

கூள—வது தவம் முற்றிற்று.

# தொண்ணூற்றெட்டாம் அதிகாரம்

## தனிமை.

அஃதாவது ஏகாந்தமாய்த் தனித்திருக்கும் தகைமை. தவ நெறியில் ஒழுகுவாரது உவகை நிலையம் ஆதலால் தவத்தின் பின் இது வைக்கப்பட்டது. தவமும்தனிமையும்மிகவும்இனிமையாம்.

971. மாய வெறியில் மயங்கி யுழல்கின்ற
பேயர் தொடர்பு பிடியாமல்—தூய
மனமே துணையாய் மருவி யுறையும்
தனிமை இனிமை தவம். (க)

இ-ள்.

மாய மோகங்களில் வெறியராய் உழலுகின்ற பேயர்களோடு கூடாமல் தூய மனமே துணையாய் மருவி உறையும் புனிதமான தனிமை இனிமையான தவமாம் என்க.

அரிய இனிய தவ வாழ்வு அறிய வந்தது.

உலக வாழ்வுகள் பலவகை நிலைகளில் பரவியுள்ளன. மனிதர் எவ்வளவு தொகையினரோ அவ்வளவு வகையினவாய் வாழ்க்கைகள் வேறுபட்டிருக்கின்றன. வெளியே ஓர் இனமாய்க் கூடி இயங்கிவரினும் உள்ளே பெரிய மாறுபாடுகள் மீறி நிற்கின்றன.

எண்ணி வருகிற எண்ணங்கள், பழகி வருகிற பழக்கங்கள், முயன்று வருகிற முயற்சிகள், சேர்ந்து வருகிற சேர்க்கைகள் ஆகிய இவற்றின்படியே மாந்தருடைய வாழ்வுகளும் சூழ்வுகளும் மருவி வருகின்றன. புறத்தே பொங்கி நிற்கும் நிலைகளுக்ெகல்லாம் மூலகாரணங்கள் அகத்தே நன்கு தங்கி நிற்கின்றன.

சிறுமையான நினைவுகளால் மனிதர் சிறியராய்ச் சீரழிந்து போகின்றார். புனிதமான பெரிய சிந்தனைகள் மனிதரை எவ்வழியும் இனியராய் உயர்த்தி இன்ப நலங்களை அருளி வருகின்றன.

இழிந்த வழிகளிலேயே மக்கள் பெரும்பாலும் பழகி வருதலால் தெளிந்த அறிவை இழந்து யாண்டும் தேசு அழிந்து மாசுகள் படிந்து மங்கி யுழல்கின்றார். தூய நீர்மைகள் தோயாமல் தீய புலைகளிலேயே செருக்கித் திரிதலால் மனித உருவில் மருவி

யிருந்தும் மாயப் பேய்கள் என மானிடர் ஈனமடைய நேர்ந்த னர். ஊனஈனங்களை உணராமல் உளம் களித்து உழலுகின்றனர்.

அருந்தல் பொருந்தல்களில் திருந்திய நியமம் இன்றி நெறி கேடராய் வெறி கொண்டு அலைதலால் அந்தப் பேதைப் பித்தர் களின்வாழ்வு மாயவெறி எனவந்தது. மடமைக்களி மலிந்துளது.

வையக மாந்தர் இயல்பாகவே மையலான வாழ்வுகளை யுடையவர். அவற்றுள் மேலும் வெய்ய வெறியராய் விரிந்து போபவர் இழிந்த விலங்குகளாய்க் கழிந்து தொலைகின்றனர்.

அறிவு நலம் கனிந்து நெறிமுறைகள் தழுவி வருபவர் விழுமிய மகான்களாய் விளங்கி வியன் ஒளியா மிளிர்கின்றனர்.

புனிதம் தோய மனிதன் தெய்வம் ஆகிருன்; புன்மை தோயப் புலையா யிழிகிருன். தீய புலைகள் ஒருவிய அளவே தூய நிலைகள் பெருகி வருகின்றன; அவ்வரவு ஆனந்தமாகிறது.

தீயவர்கள் கொடிய தொத்து நோயினும் கெட்டவர்கள் ஆதலால் நல்லவர்கள் அவரை யாதும் ஒட்டாமல் விலகி விடு கின்றனர். புனித நிலை புலைநிலைகளை அஞ்சி அகலுகிறது.

தீயாரைக் காண்பதுவும் தீதே என்று ஒளவையார் இவ் வாறு கூறியதனுல் அந்தப் பார்வையிலேயே பழி துயரங்கள் விளைந்துவிடும் என்பது தெரிய வந்தது. கெட்டவர் தொடர்பால் கேடுகள் தொடர்ந்து இழி பழிகள் அடர்ந்து வந்து விடும்.

When the wicked cometh, then cometh also contempt, and with ignominy reproach. [Bible]

கெட்டவன் வரின் இழிவும் பழியும் அவமானங்களும் ஒட்டியே வரும் என்னும் இது ஈண்டு ஊன்றி உணர வுரியது.

உள்ளம் தூயவர்கள் தீயவரோடு சேராமல் ஒதுங்கியே வாழ்கின்றனர். ஞான நலம் கனிந்த பொழுது அது தவ வாழ் வாய்ச் சிறந்து திகழ்கிறது. திகழவே ஈனமான இழி வாழ்வின ரை அறவே அவர் விலகி விடுகின்றனர். தூயநிலை துறவுஆகிறது.

தனித்திரு; பசித்திரு; விழித்திரு.

என்பன தவ வாழ்வின் புனித நிலைகளாய்ப் பொலிந்து வந் துள்ளன. தனியே இருப்பது மகான்களுடைய வாழ்வாய் மகிமை பெற்றுள்ளது. தனிமுதலை நினைபவர் தனியராகின்ருர்.

இனியது எமக்குஉன் அருள் வருமோ எனக்கருதி
ஏங்குதே நெஞ்சம் ஐயோ!
இன்றைக்கு இருந்தாரை நாளைக்கு இருப்பர்என்று
எண்ணவோ திடம் இல்லையே;
அனியாய மாய்இந்த உடலைநான் என்றுவரும்
அந்தகற்கு ஆள் ஆகவோ?
ஆடித்திரிந்துநான் கற்றதும் கேட்டதும்
அவலமாய்ப் போதல் நன்றோ?
கனியேனும் வறியசெங் காயேனும் உதிர்சருகு
கந்தமூ லங்களேனும்
கனல்வாதை வந்தெய்தின் அள்ளிப் புசித்துநான்
கண்மூடி மௌனி யாகித்
தனியே இருப்பதற்கு எண்ணினேன் எண்ணமிது
சாமிநீ அறியாததோ?
சர்வபரி பூரண அகண்டதத் துவமான
சச்சிதானந்த சிவமே. [தாயுமானவர்]

தனியே இருந்து தவம் புரியும் வாழ்வைத் தாயுமானவர் விரும்பியுள்ளதை இதனால் உணர்ந்து கொள்கிறோம். தவமும் ஞானமும் தனிமையில் இனிமையாய் இன்பம்சுரந்து வருகின்றன.

உலக மக்களிடம் கலகக் கசடுகள் நிறைந்துள்ளமையால் அவரோடு ஒட்டாமல் ஒதுங்கி உறைவது உயர் தவமாய் நிறைகிறது. உள்ளம் தூய்மை ஆக உலகம் தூரமாகிறது.

மடமை கொடுமை பகைமை பொறாமை வஞ்சம் முதலிய நஞ்சுகள் தோய்ந்து இழிந்து உழலுகின்ற மாந்தரோடு சாந்த சீலர்கள் சாரலாகாது. புனித வாழ்வு தனியே நிலவுகிறது.

மனிதர் பொறி புலன்களில் புலையுறுகின்றனர்.

புனிதர் நெறி நியமங்களில் நிலைபெறுகின்றனர்.

தூயமனம் உடையவர் தூய இனத்தையே நாடுகின்றனர்; அந்த இனம் அமையவில்லையானால் தம் மனமே துணையாக மருவி மகிழ்கின்றனர். தனியான புனித வாழ்வில் பேரின்பம் இனிது கனிகிறது. இனிமையும் தவமும் தனிமையில் விளைகின்றன; அதனை நயமா இனிது பழகி வியனை அதிசய ஆனந்தம் பெறுக.

---

972. காலம் கடந்த கரையிலா மெய்ப்பொருளை
ஞாலம் கடந்தார் நணுகுவார்—மூலம்
அறிந்தார் எவரும் அறியாத இன்பம்
செறிந்தார் அமர்ந்தார் சிறந்து. (உ)

இ—ள்.

மூலமும் நடுவும் ஈறும் இன்றிக் காலம் கடந்து என்றும் நித்தியமாய் நிலைத்துள்ள மெய்யான பரம்பொருளைப் பொய்யான வையமையல் ஒழிந்தவரே நேரே கண்டுமகிழ்கின்றார்; அவ்வாறு கண்டவர் யாரும் காணாத பேரானந்தப் பெருக்கில் திளைக்கின்றார்; அவரது தகைமையும் நிலைமையும் தனி நிலையின என்க.

கடவுளுடைய நிலையைத் தெளிவா அறிதற்குக் காலம் சரியான கருவியாய் மருவியுளது. எதையும் காலம் சிதைத்து விடும்; யாவும் காலத்தின் வசமாயுள்ளன. காலம் கடந்து நிற்பது கடவுளே. கற்ப கோடி காலங்களும் அவன் எதிரே அற்பமாய்க் கழிந்து ஒழிகின்றன. ஆகவே காலாதீதன் என்று வேதங்கள் அவனைத் துதிக்க நேர்ந்தன. காலகாலன் என்னும் பெயர் ஞாலம் அறிய நின்றுள்ளது. மருவிய நாமங்கள் மன்னிய பொருளுடையன; யாவும் உன்னி உணர வுரியன.

இந்திரன் செல்வம் மாயும்; இமையவர் பதங்கள் மாயும்;
மந்தரம் பொடியது ஆகும்; மறிகடல் வறள்வது ஆகும்;
சந்திரன் இரவி மாண்டு தரையதும் அழியும் என்றால்
இந்தநீர்க் குமிழி யாக்கை இயல்பினை இசைத்தற்கு உண்டோ?
[குறுந்திரட்டு]

மகரநீர் கடல்குடிக்கும் வடமுகக் கனலே போலச்
சகலமும் விழுங்கும் காலன் சகத்திடை விழுங்கா தில்லைப்
புகலரும் பெரியோர் ஏனும் பொழுது ஒருகணமும் தாழான்
அகிலமும் விழுங்கித் தானே அகிலமாய் நிற்கும் அன்றே.
[வாசிட்டம்]

படுகலை முகூர்த்தம் காட்டைகள் என்று பகல்இராப் பக்கமேதிங்கள்
ஒடும்புணர் இருதுவாண்டுகத் தொடக்கத்து ஓதிய அவயவப்பகுப்பான்
இடும்பைதீர் காலம் கழிவுறும் காலத்து எல்லையில் யாவரும் இறுவர்
நெடும்புலக் குறும்பு கடந்துளீர் உலகில் நிலைப்பது ஓர் பொருளு
மற்றின்றால் [காஞ்சிப்புராணம்]

உகம்கோடி கண்டும் ஓசிவற நின்று
அகம்கோடி கண்டுள் அயலறக் காண்பர்கள்

சிவம்கோடி விட்டுச் செறிய இருந்தங்கு
உகம்கோடி கண்டங்கு உயருறு வாரே. [திருமந்திரம்]

பிறப்போடு இறப்பும் இலனாகிப் பிரமன் மாயன் முதல் எவர்க்கும்
சிறப்பால் உயர்ந்து கல்யாணன் ஆகித் தீதுஒன்று இன்றியே
அறத்தோர் அறிய உறைவனால் யாவும் மேவி ஆதலினால்
உறத்தான் உணர்ந்தோர் தாணுவென உணர்ந்தே நாளும்
உரைப்பரால். [வாயுசங்கிதை]

நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்;
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே;
ஏறு கங்கை மணல்எண்ணில் இந்திரர்;
ஈறு இலாதவன் ஈசன் ஒருவனே. (தேவாரம்)

கால வெள்ளத்தில் எல்லாம் நாசமாய் மறைந்து போம்; ஈசன் ஒருவனே என்றும் நிலைத்து நிற்கின்றான் என இவை விளக்கி யுள்ளன. தாணு, நித்தன், சம்பு, சதாசிவன் என்னும் பேர்கள் இறைவனுடைய நிலைமை தலைமைகளை நேரே உணர்த்தி நிற்கின்றன நித்தன் என்றும் சத்தனாய் நிலவுகிறான்.

இத்தகைய நிலையான பேரின்பப் பொருளை ஆர்வத்தோடு கருதி வருபவர் அழியாத ஆனந்த நிலையை எளிதே அடைந்து கொள்கின்றனர். உரிமையாக் கருதி வருவது உறவா வருகிறது.

மனிதன் எதைப் பிரியமா விரும்பி வருகிறானோ அதன் படியே அவன் அரும்பி வருகிறான். மானச தத்துவம் அதிசய விசித்திரம் உடையது. ஒருவன் இறக்கும் பொழுது எதை எண்ணுகிறானோ அதன் படியே நன்னி அவன் பிறக்கிறான்.

நினைந்து வரும் மனமே மனிதனை வனைந்து வருகிறது.

மநேவ மநுஷ்யாணும் காரணம்
பந்த மோக்ஷயோ:

மனிதனது நிலைமைக்கு மனமே மூலகாரணம்; பிறவித் துயரில் ஆழ்த்தி வருத்தவும், பேரின்ப வீட்டில் வாழ்த்தி யிருத்தவும் அது வல்லது என வேதமந்திரங்களும் இங்ஙனம் ஓதிவந்துள்ளன. புனித மனம் புனிதனை இனிது மருவுகிறது.

அதிசய ஆற்றலுடைய இந்த மனத்தை இனிமையா வசப்படுத்தியுள்ளவரே மகான்களாய் மகிமை பெற்றுள்ளனர். முனிவர் என்னும் பேர் புனிதமானமனம் உடையவர் என்னும் பொருளில் வந்துளது. இதயம் இனிதாயின் இறைமை இனமாம்.

மனம் இனியதாய்த் தூய்மை அடையின் அறிவு தெளிந்து வருகிறது; அது தெளியவே ஆன்மா ஒளி வீசி உயர்கிறது; அந்த உயர்ச்சி பரமான்மவை நோக்கி எழுதலால் பேரின்பங்கள் பெருகி வருகின்றன. இன்ப வரவு தனியே அடைய நின்றது.

ஆனந்த மயமான பரம்பொருளை அடையவே அழி பொருள்களில் இழிந்த அவல நசைகள் யாவும் அடியோடு ஒழிந்துபோம்.

உலகப் புலைகளை ஒருவி உயர் நிலை யுறுக.

---

973. பொறிவெறி இன்றிப் புலன்கள் அடங்கி
அறிவமைதி யாக அமர்ந்து—நெறிநிலையை
உன்னி யுணரின் உலவாத பேரின்பம்
மன்னி வருமே மணந்து. (௩)

இ—ள்.

பொறி நுகர்வில் வெறியராய் வீழாமல் புலன்களை அடக்கினல் அறிவு தெளிவாம்; அமைதி விளையும்; நெறி நியமங்கள் நேரே நிலவும்; அதனல் நிலையான பேரின்பம் வரும் என்க.

அரிய பொருளை அடைய நேர்ந்தவன் அதற்கு உரிய கருமங்களை உறுதியாச் செய்கிருன். விளைவுக்கு வித்து மூலமாய் இருத்தல் போல் கருதிய பலனுக்குக் கருமம் மூலமாய் உள்ளது.

சீவர்கள் அடைகிற சுகபோகங்கள் இருவகை நிலைகளில் மருவியுள்ளன. இக பர போகங்கள் என்று அவை பெயர் பெற்றிருக்கின்றன. உலக சுகங்கள் எவ்வளவு உயர்ந்தன ஆயினும் இழிவும் கழிவும் அழிவும் உடையன ஆதலால் சிற்றின்பம் என அவை சிறுமையுற்று நின்றன. தவ ஞானங்களால் அடைகிற பரகதி என்றும் நிலையாய் நின்று அதிசய ஆனந்தங்களை அருளுதலால் பேரின்பம் எனச் சீரோடு பேர் பெற்று நின்றது.

பொறிகளை அடக்கி நெறி நியமங்களோடு ஒழுகுகிற அரிய தவசிகளே இந்த அதிசய ஆனந்த நிலையை அடைகின்றனர்.

உரன்என்னும் தோட்டியான் ஓர்ஐந்தும் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்குஓர் வித்து. (குறள், 24)

மெய்யறிவு ஆகிய அங்குசத்தால் பொறிகளாகிய ஐந்து மதயானைகளையும் அடக்கி நிறுத்திய துறவியே மேலான பேரின்ப

முத்தியை அடைய வுரியவன் எனத் தேவர் இவ்வாறு அறிவுறுத்தி யிருக்கிறார். உருவகங்கள் கருதி யுணர வுரியன

ஆனைகள் ஐந்தும் அடக்கி அறிவென்னும்
ஞானத் திரியைக் கொளுவி அதனுட்புக்கு
ஊனை இருளற நோக்கும் ஒருவற்கு
வானகம் ஏற வழிஎளிது ஆமே. (1)

செயல்அற் றிருக்கச் சிவானந்தம் ஆகும்;
செயல்அற் றிருப்பார் சிவயோகம் தேடார்;
செயல்அற் றிருப்பார் செகத்தொடும் கூடார்
செயல்அற் றிருப்பார்க்கே செய்தியுண் டாமே. (2)

[திருமந்திரம்]

பிறவி தீர்ந்து பேரின்ப நிலையை அடைய வுரிய பெரியார் இயல்பைத் திருமூலர் இவ்வாறு தெளிவாக் குறித்திருக்கிறார்.

பொறிவெறியும் புலை நசையும் உலகபந்தங்களும் ஒழிந்த அளவே உயர்ந்த முத்தியை அருந்தவர் அடைய நேர்கின்றனர். சிற்றின்ப இச்சை அறவே அற்றபோதுதான் பேரின்பப் பேறு உறவாய்ப் பெறவருகிறது. உரிய தகவு அரிய பயனையுறுகிறது.

"மக்களை மனைவியை ஒக்கலை ஒரீஇ
மனையும் பிறவும் துறந்து நினைவரும்
காடும் மலையும் புக்குக் கோடையில்
கைம்மேல் நிமிர்த்துக் கால்ஒன்று முடக்கி
ஐவகை நெருப்பின் அழுவத்து நின்றும்,
மாரி நாளிலும் வார்பனி நாளிலும்
நீரிடை மூழ்கி நெடிது கிடந்தும்
சடையைப் புனைந்தும் தலையைப் பறித்தும்
உடையைத் துறந்தும் உண்ணாது உழன்றும்
காயும் கிழங்கும் காற்றுதிர் சருகும்
வாயுவும் நீரும் வந்தன அருந்தியும்
களரிலும் கல்லிலும் கண்படை கொண்டும்
தளர்வுறும் யாக்கையைத் தளர்வித்து ஆங்கவர்
அம்மை முத்தி அடைவதற்கு ஆகத்
தம்மைத் தாமே சாலவும் ஒறுப்பர்"

(பட்டினத்தார்

பிறவித்துயரம் நீங்கிப் பேரின்ப நிலையை அடைதற்குத் துறவிகள் புரிகிற அரிய நிலையை இது வரைந்து காட்டியுள்ளது.

காட்சிகளைக் கூர்ந்து நோக்குவோர் முத்திப் பேற்றின் அருமையையும், பெறுவாரது பெருமையையும் ஓர்ந்து உணர்வர்.

துறந்தவர் அருந்தவர் எனப் பேர்பெற்று வருபவர் எவ்வளவு பெருந்தகவினர்! எத்துணை விரதவைராக்கியங்கள்! எத்தனை தியாகங்கள்! யாவும் உய்த்து உணரவேண்டும். உலக சுகங்கள் எவ்வழியும் புலையானவை; யாண்டும் நீண்ட துயரங்கள் நிறைந்தவை; ஆகவே நிலையானபேரின்பநிலையை நேரே முயன்றுபெறுக.

---

974. பொல்லாத கூட்டம் புலைப்படுத்தும் ஆகலினால்
ஒல்லுமா றெல்லாம் ஒதுங்கியே—நல்ல
மதியோடு கூடி மருவி யுறைக
விதியும் விலகும் விரைந்து. (௪)

இ—ள்.

பொல்லாத இனங்களோடு கூடின் புலைகளே விளையும் ஆதலால் இயன்றவரையும் ஒதுங்கி நல்ல அறிவுடன் மருவி வாழுக; அவ்வாறு வாழின் வெவ்விய விதியும் விரைந்து விலகும்; எவ்வழியும் திவ்விய மகிமைகள் விளைந்து வரும் என்க.

உண்ணும் உணவால் மனிதன் உடலோடு வாழ்ந்து வருகின்றான்; ஆயினும் எண்ணும் எண்ணங்களும் இசைந்துள்ள இனங்களுமே அவனுடைய உயிர் வாழ்வை உருவாக்கி வருகின்றன. நல்ல எண்ணமும் நல்ல இனமும் நலம் பல புரிகின்றன; தீய நினைவும் தீய இனமும் இழி பழிகளை விளைத்து அழி துயரங்களையே செய்து யாண்டும் அவலங்களைத் தருகின்றன.

நல்லவர்கள் மிகவும் அரியராயுள்ளனர்; கெட்டவர்களே எங்கும் பெருகி நிற்கின்றனர். சிறைச்சாலையுள் குற்றவாளிகள் நிறைந்திருத்தல் போல் பரந்த இந்த உலகச் சிறையில் பாவ சிந்தனைகளையுடைய தீயவர்களே செறிந்து விரிந்திருக்கின்றனர்.

வைய மையல்களில் ஆழ்ந்து வெய்ய புலைகளையே விழைந்து புரிந்து இழிந்து உழலும் மாக்களை இழிவிலங்குகளாகவே கருதி வெறுத்து விலகி மெய்யறிவாளர் தனியே வாழ நேர்கின்றனர். புனிதமானவர் மோனமாய் ஒதுங்கி யுறைகின்றனர்.

அந்த வாழ்வினர் திவ்விய நிலையில் சிறந்து திகழ்கின்றனர்.

ஞானிகள், தவசிகள், யோகிகள், ஞானிகள், சித்தர்கள், முத்தர்கள் என உத்தமமான தெய்வீக நிலைகளில் ஒளி வீசியுள்ளவர் எல்லாரும் உள்ளமே துணையாய் உயர்ந்து நிற்கின்றனர்.

தனிமையில் இனிமையை நுகர்ந்து புனிதமா வாழுகின்ற ஞானசீலர்கள் மடமையாய் இழிந்துள்ள மாந்தரைக் கான விலங்குகளாகவே கருதி இகழ்ந்து உறுதி கூர்ந்திருக்கின்றனர்.

மாந்தரின் மகுட கோடி பரித்தபா ரதனில் வைகும்
மாந்தரை விலங்குஎன்று உன்னுமனத்தன்; மாதவத்தன்; எண்ணில்
பூந்தவிசு உகந்து ளோனும் புராரியும் புகழ்தற்கு ஒத்த
சாந்தனுல் வேள்வி முற்றின் துணையர்கள் உளராம் என்றான்.

(இராமாயணம்)

கலைக் கோட்டு முனிவரைக் குறித்து வசிட்டர் இவ்வாறு தசரத மன்னனிடம் உரைத்திருக்கிறார். அவருடைய மனத்தையும், மாதவத்தையும் விளக்கியிருப்பது நுனித்து உணரத்தக்கது. மாந்தரை விலங்கு என்று உன்னுவதால் அந்த மனம் எந்த நிலையில் பழகியிருக்கும் என்பதை ஈண்டு நாம் சிந்தனை செய்து கொள்ள வேண்டும். மெய்யறிவு பொய்யிழிவை விலகுகிறது.

கல்லாதவரையே விலங்கு என்றார் தேவர். பொல்லாத புலைகளில் இழிந்து நெறிகேடராய் நிலைகுலைந்து திரிகின்ற உலக மக்களைக் கொடிய வன விலங்குகள் என்று இயல்பாகவே முனிவர் எண்ணியிருக்கின்றார். மூடம், மூர்க்கம், புன்மை, பொறிவெறி, இழிநசை, பழிமொழி, அழுக்காறு, குரோதம், விரோதம் முதலிய தீமைகளிலேயே தோய்ந்து மக்கள் வளர்ந்து வருதலால் மகான்கள் அவரை வெறுத்து விலகி விடுகின்றனர்.

புனித நிலையில் புகுந்தவர் தனிமையான வாழ்வையே எவ்வழியும் விரும்புகின்றனர். அது செவ்விய இனிய தவவாழ்வாய்த் தேசுமிகுந்து திவ்விய மகிமையோடுசிறந்து திகழ்கிறது.

இனிது இனிது ஏகாந்தம்.

என்று ஔவையார் இவ்வாறு கூறியது அதன் திவ்விய நிலையைச் செவ்வையா அனுபவித்தேயாம். பெரியோர்களுடைய இனிய அனுபவங்களே அரிய போதனைகளாய் வெளிவருகின்றன. தனிமை இனிமையான தவயோக மாகிறது.

**Society than solitude is worse,**
**And man to man is still the greatest curse. (Barbauld)**

தனிமையாயிருப்பதே இனிது; மனிதரோடு கூடிவாழ்வது மிகவும் கேடே; மனிதனுக்கு மனிதன் கொடிய கேடுகளையே கருதிப் பெரிய சாபத் தீடாய் நிற்கிறான் என்று பால்பார்டு என்னும் பேரறிஞர் இவ்வாறு கூறியிருக்கிறார்.

**He who has lived well in obscurity has lived a good life.**
**[Ovid]**

தனியே ஒதுங்கி இனிது வாழுகின்றவனே புனித மான நல்ல வாழ்க்கையை யுடையவன் என ஓவிட் என்பவர் இங்ஙனம் குறித்துள்ளார். இனிய சீவியம் தனிமையில் மேவியுளது.

**The strongest man in the world is he who stands alone.**
**[Ibsen]**

தனியே ஒதுங்கியிருக்கிற மனிதன் இந்த உலகத்தில் அதிக பலசாலியாய் நிற்கிறான் என இப்சென் என்பவர் இங்ஙனம் உரைத்திருக்கிறார். தன்மையும்வன்மையும்தனியேவளர்கின்றன.

தனிமையான வாழ்வை எல்லாரும் செய்யமுடியாது; மனம் புனிதமானவரே அதனை இனிது செய்து இன்புறுகின்றனர்.

துறவு தவம் ஞானம் என்னும் தூய நிலைகளைத் தோய்ந்தவரே தனிமையுற நேர்கின்றனர். ஆன்ம சிந்தனையாளர் அகமுகமாயிருத்தலால் மயலான சகநிலையை நீங்கி அயலே ஒதுங்குகின்றனர். புனித ஒதுக்கம் தனிமையாய் இனிமை தருகிறது.

**Inspiration makes solitude anywhere. (Emerson)**

புனித ஞானம் எந்த இடத்தையும் தனிமை ஆக்கிக் கொள்கிறது என எமர்சன் இவ்வாறு ஏகாந்தத்தை உணர்த்தியுள்ளார்.

தவநிலை தழுவிவர அவநிலையாளர் தொடர்பு அயலே நழுவி ஒழிகிறது. தனிமையில் அமர்ந்து புனிதனை நினை; அதனால் அதிசயமான அரிய இனிய பேரின்பம் எதிரே எளிது பெருகி வரும்.

வைய மையல் மருளும் மயக்கமும்
வெய்ய தீமையும் மேவி விரிதலால்
மெய்யை நாடிய மேதை விலகியே
உய்தி எய்தி உயர்கதி கூடுமால்

இதனைச் சிந்தனை செய்து தெளிந்து கொள்ளுக.

975 பேரின்ப மான பெரும்பொருளைப் பேணிவரின்
பேரின்பம் எங்கும் பெருகிவரும்—பாரின்பப்
பாழுங் குழியில் படிந்தோ படுதுயரே
சூழும் கடிது தொடர்ந்து. (ரு)

இ—ள்.

பெரிய இன்பமுடைய அரிய பரம் பொருளைக் கருதிவரின் பேரின்பம் எங்கும் பெருகிவரும்; உலக போகங்கள் ஆகிய பாழான குழியில் இழிந்தால் கொடிய துயரங்களே தொடர்ந்து வருத்தும்; அவை தொடராமல் செய்து கொள்வதே உயர்வாம்.

கருதி வருகிற கருத்தின் படியே மனிதன் மருவி வருகிருன். மானச மருமங்கள் எவரும் எளிதில் அறிய முடியாத அதிசயங்களையுடையன. எண்ணங்கள் நல்லனவாயின் அந்த மனிதனுடைய வாழ்வு புண்ணியங்களோடு பொலிந்து வருகிறது; அல்லன ஆனல் பாவங்கள் படிந்து படுதுயரங்களாய் இழிந்து கழிகிறது. மலே உயர்ந்து மகிழ்வதும் கீழே கழிந்து அழிவதும் நிலையின் நிலைகளின் படியே யாண்டும் நிகழ்ந்து வருகின்றன.

சுகமும் பெருமையும் வேண்டும் என்றே எவரும் விரும்புகின்றனர்; துக்கங்களும் சிறுமைகளுமே எப்பக்கங்களிலும் பரவி வருகின்றன. நல்ல வழிகளில் பழகாமையால் மக்கள் எல்லா வழிகளிலும் எங்கும் அல்லல்களையே அடைகின்றனர்.

எவ்வளவு செல்வங்களை அடைந்தாலும் உண்மையான சுகத்தை ஒருவன் அடைய முடியாது; உள்ளம் தூயனாய் உயிரின் மூலத்தை உணர்ந்த போதுதான் துயரம் அடியோடு நீங்கி உயர் பேரின்பத்தை உரிமையோடு பெறுகிருன்.

இறைவன் ஒருவனே இன்பமயமான பொருள்; அந்த ஆனந்த சாகரத்தை அடைந்தவரே அழியாத விழுமிய பேரின்பத்தை நுகர்ந்து அதிசய பரவசராய் மகிழ்கின்றார்.

நித்திய அநித்திய நிலைகளை உய்த்து உணர்ந்து தெளிந்த தத்துவ ஞானிகளே இத்தகைய பேரின்ப நிலையைப் பெற நேர்கின்றனர்; பெருதவர் பித்தராய் வீழ்ந்து பிழையா யிழிகின்றார்.

பிறவித்துயரங்கள் யாவும் ஒழிந்து பேரானந்த நிலையை அடையாமல் பாவ வழிகளிலேயே பழகிச் சீவகோடிகள் பரிதாபமாய் இழிந்து கழிந்து எவ்வழியும் மறுகி உழலுகின்றன.

அரிய அறிவு இருந்தும் உரியதை உணராமையால் வறிய ராய் மடிந்து வசை துயர்கள் படிந்து வழிவழியே இழிகின்றார்.

பொருநிடம் கொண்ட பொன்னி புரக்கும்
மருதிடம் கொண்ட மருத வாண!
நின்னது குற்றம் உளதோ? நின் நினைந்து
எண்ணருங் கோடி இடர்ப்பகை கடந்து
கண்ணுறு சிற்றத்துக் காலனை வதையாது
இறப்பையும் பிறப்பையும் இகந்து சிறப்பொடு
தேவர் ஆவின் கன்றுஎனத் திரியாப்
பாவிகள் தமதே பாவம்; யாதெனின்,
முறியாப் பெறுக்கல் முப்பழம் கலந்த
அறுசுவை அடிசில் அட்டினிது இருப்பப்
புசியாது ஒருவன் பசியால் வருந்துதல்
அயினியின் குற்றம் அன்று; வெயிலின் வைத்து
ஆற்றிய தெண்ணீர் நாற்றமிட்டு இருப்ப
மடாஅ ஒருவன் விடாஅ வேட்கை
தெண்ணீர்க் குற்றம் அன்று; கண்ணகன்று
தேந்துளி சிதறிப் பூந்துணர் துறுமி
வாலுகம் கிடந்த சோலை கிடப்ப
வெள்ளிடை வெயிலில் புள்ளிவெயர் பொடிப்ப
அடிபெயர்த் திடுவான் ஒருவன்
நெடிது வருந்துதல் நிழல் தீங்கன்றே.

(திருவிடைமருதூர்மும்மணி)

சீவர்கள் இன்பநிலையை அடையாமல் துன்பப் புலைகளில் இழிந்து அழுந்தி உழல்வதை நினைந்து பட்டினத்தார் இவ்வாறு பரிந்து வருந்தியிருக்கிறார். பரிவுரைகளில் அறிவொளிகள் பெருகி யுள்ளன. மனிதர் மதிதெளிந்து உய்ய விதி நலங்கள் விளைந்தன.

ஆண்டவா! நீ பேரின்பமயமாய் என்றும் எங்கும் நிறைந் திருக்கிறாய்; உன்னை நினைந்து மாந்தர் உய்யாமல் இழிவழிகளி லேயே பழகி அழிதுயரங்களையே அடைகின்றார்களே! இவர் களுடைய மடமை இருள் மிகவும் கொடியது என அப்பெரிய வர் மறுகி உருகி யிருப்பது பெரிதும் கருதியுணர உரியது.

உன் உயிர்க்கு இனிய உயிராயுள்ள உயர் பரனை உரிமை யோடு நினை; அதனால் நீ புனிதம் ஆவாய்; துயரங்கள் எல்லாம்

அடியோடு ஒழிந்து போம்; நிலையான பேரின்பம் நேரே வரும்; அவ்வரவை விரைந்து பெறுக; அப்பேறே பிறவிப் பலனும்.

---

இந்த உடலே இறுதி இனியாண்டுமெ
எந்த உடலும் எடேன்என்னும்—அந்தவுயர்
வீர விரதம் உடையவரே மெய்த்தவம்
சார வருவர் தனித்து. (சு)

இ-ள்.

எடுத்த இந்த உடலே இறுதி; இனிமேல் வேறுபிறவியை நான் அடையேன் என்னும் வீர விரதம் உடையவரே புனிதராய்த் தனியே விலகி மெய்யான தவங்களைச் சார வருவர் என்க.

உலகில் வாழுகின்ற மக்களுள் மிகவும் சிலரே உணர்வு நலம் உடையராய் ஒளி பெற்று வருகின்றார். உணர்வு தெளிவாய் ஒளிமிகுந்து வரவே உண்மையான நிலையை உறுதியா உணர நேர்கின்றார். நேரே கண்டதைக் கொண்டு காணாததைக்கருதிச் சிந்திக்கின்றார். உலக வாழ்வின் நிலைகளை ஓர்ந்து நோக்கி அவற்றின் புலைகளைத் தேர்ந்து புனித நலனை ஓர்ந்து கொள்கின்றார்.

சீவகோடிகள் தோன்றி நின்று சிலகாலம் வாழ்ந்து வந்து பின்பு அடியோடு மறைந்து போகின்றன. பிறந்தும் இறந்தும் ஒழிந்து போகிற மாய வாழ்வில் ஓயாமல் சுழன்று உழன்று உளைந்து நொந்த சீவன் முடிவில் மாயாத தூய வாழ்வைச் சித்த சுத்தியால் உய்த்து உணர்கிறது; உணரவே அந்த வழியை விழி திறந்து காண்கிறது; காணவே உண்மை தெளிந்து உவந்து துள்ளுகிறது. உரிமையை அடைந்து கொள்வது உய்தியாகிறது.

என்றும் அழியாமல் எங்கும் இன்ப நிலையமாய் நின்று நிலவும் பொருள் ஒன்றே எல்லாவற்றிற்கும் மூலகாரணமாயுள்ளது. அந்தப் பரமாத்துவே இந்தச் சீவாத்துமாவுக்கு நிலையான உறவுரிமையுடையது; அதனை அடைந்த போது தான் துன்பப் புலைகள் ஒருங்கே ஒழியும்; இன்ப நிலையில் இனிது வாழலாம் என்று உறுதியாய்த் தெளிகிறது; தெளியவே அவ்ஒளிவழியே நோக்கிச் சென்று உரிய பொருளை அடைந்து மகிழ்கிறது.

அதிசயமான இந்த இன்ப நிலையை யாதும் அறியாமல் யாவரும் அறியாமையில் மூழ்கி யுழல்வது பரிதாபமாயுளது.

கோடிக்கு ஒருவர் கூடத் தமக்குச் சொந்தமான இந்த உரிமை யைச் சிந்திப்பதேயில்லை. சிந்தனைகள் நிந்தனைகளில் விரிகின்றன.

உனது பரம நாயகனான இறைவன் அடியை நினைந்து உருகு; பிறவிப் பெருந்துயரங்கள் எல்லாம் அறவே நீங்கிப் பே ரின்பநிலையை நேரே நீ பெறுவாய் என்று ஞான சீலர்கள் ஆன வரையும் போதித்து வருகின்றனர்; வந்தும் ஒருவரும் இந்த வழி யை எந்த வகையிலும் திரும்பிப் பார்ப்பதே இல்லை.

மாந்தர் பார்க்கும் பார்வை எல்லாம் கீழான புலைகளிலே யே கிளர்ந்து பாய்கின்றன; பாயவே அவர் கீழாயிழிந்து பா ழாய் ஒழிந்து பரிதாபமாய் அழிந்து போகின்றனர்.

உண்மை ஞானம் தோய்ந்து அருந்தவர் துறந்தவர் எனச் சிறந்து வருபவரைத் தேவதேவன் விழைந்து நோக்கி உவந்து நிற்கின்றான். தன்னை நோக்குவோரைத் தற்பரன் நோக்குகிறான்.

தனிமையில் புகுந்து பரமனை நினைந்து தவம் புரிகின்றவனி டம் அதிசய ஆற்றல்கள் நிறைந்து வருகின்றன. அந்த ஆதிபக வனும் இவனை நாடிவந்து நயந்து உறவாடி வியந்து மகிழ்கிறான்.

அரசை இழந்து அடவி புகுந்தபின் அருச்சுனன் தவம் புரிய விரைந்தான். இமயமலையை அடைந்தான்; இனிய ஒரு சாரலில் தனியே நின்று அரிய தவம் புரிந்தான். உண்ணும் உணவும் பரு கும் நீரும் துறந்து கண்ணுதல் கடவுளையே எண்ணி உருகி இவ் வீரன் புரிந்த தவநிலையை நோக்கி விண்ணோர் யாவரும் வியந்து துதித்தனர். அரிய தவம் எங்கும் அதிசயங்களை விளைத்தது

இவன் புரிந்து வருகிற அருந்தவ முறையைத் துரியோத னன் அறிந்தான். செய்யும் தவம் முடிந்தால் வையம் முழுவதை யும் எளிதே வென்று விடுவான் என்று அவன் அஞ்சினான்; சதி வஞ்சனை செய்யத் துணிந்தான். தனது நண்பனான தானவன் ஒரு வனைத் தனியே அழைத்தான். அவன் மூகன் என்னும் பேரி னன். வேகமான மாயாசாலங்களுடையவன்; கருதிய உருவங் களை எடுத்துக் கடுங்கேடுகள் செய்வதில் வல்லவன்; விசயன் தவத்தை விரைந்து கெடுத்து வரும்படி அவனிடம் அரசன் உரைத்து விடுத்தான். பெரிய ஒரு பன்றி வடிவம் கொண்டு அவன் கடுத்து வந்தான். அவனது வரவை உணர்ந்து சிவபெரு

மான் விரைந்து ஒருவேடனாய் வடிவம் கொண்டு வில் ஏந்தி வீரம் பீரமாய்த் தொடர்ந்தான். உமாதேவியும் வேடச்சியானாள்; என்றும் குமரனாயுள்ள முருகப் பெருமானை அன்று ஒரு இளங் குழந்தையாக் கையில் ஏந்திக் கொண்டு தன் நாயகன் பின்னே அத்தூயவள் நேயமாய்த் தொடர்ந்து நடந்து வந்தாள்.

ஓர்ஏனம் தனைத்தேட ஒளித்தருளும்
　　இருபாதத்து ஒருவன் அந்தப்
போர்ஏனம் தனைத்தேடிக் கணங்களுடன்
　　புறப்பட்டான்; புனங்கள் எல்லாம்
சீர்ஏனல் விளைகிரிக்குத் தேவதையாம்
　　குழவியையும் செங்கை ஏந்திப்
பார்ஏனை உலகனைத்தும் பரிவுடனே
　　ஈன்றாள்தன் பதியின் வந்தாள். (பாரதம்)

ஈசன் வேடனாய் வந்துள்ள நிலைமையை இது தலைமையா விளக்கியுள்ளது. பொருளின் சுவைகளைக் கருதி யுணர வேண்டும். ஏனம்=பன்றி. ஏனல்=தினை. புனம்=மலைச்சாரல்.

திருமால் ஒரு ஏனமாய் வடிவம் கொண்டு தனது அடியைத் தேட அப்பொழுது அவனுக்குத் தெரியாமல் உள்ளே ஒளித்து நின்றவன் இன்று ஒரு ஏனத்தைத் தேடிக் கான வேடனாய் வெளியே புறப்பட்டான்; ஈன்ற குழந்தையைக் கையில் ஏந்திக் கொண்டு அவன் மனைவியும் பின்னே தொடர்ந்து வந்துள்ளாள். தன்னை நினைந்து உருகும் அன்பர்பால் இறைவன் குடும்பத்தோடு உருகிவரும் உரிமையை இங்கே கருதியுணர்பவர் உள்ளம் உருகி இளகுவர். பேரன்பு பேரின்பத்தை நேரே பெறுகிறது.

இவ்வாறு பரமன் வரவே அம்மாயப் பன்றி விரைந்து விசயனை நெருங்கியது. கொலைநோக்கோடு தன்மேல் கொதித்து மூண்டுவருகிற அதன் நிலையைக் கண்டதும் அவ்வீரன் அடுத்து வைத்திருந்த வில்லைக் கடுத்து எடுத்து ஒரு கணை தொடுத்தான். அம்பு தலையில் பாய்ந்து ஊடுருவிப் போகவே பன்றி வீறிட்டு வீழ்ந்தது; அதே சமையம் வந்த வேடனும் ஒரு பகழி தொடுத்து அடுத்து வந்து விசயனோடு வாதாட நேர்ந்தான். அந்த வாதாட்டம் கோதாட்டமான போராட்டமாய்ப் பொங்கி மூண்டது.

வேடன்: என் வேட்டையில் தப்பி வந்த பன்றியை நீ ஏன் வம்பாய் அம்பு எய்தாய்?

விசயன்: அது கொலை நோக்கமாய் என் மேல் கொதித்து வந்தது; ஆகவே அதனைக் கொன்று வீழ்த்தினேன்.

வேடன்; தவம் செய்கின்ற நீ இவ்வாறு அவம் செய்யலாமா?

விசயன்: என் தவத்தைக் கெடுக்க மூண்டது; அதனால் அது மாண்டு வீழ்ந்தது.

வேடன்: உனது தவ வேடம் மிகவும் நவம் உடையது; புல்லையும் நோக மிதியாத எல்லையில் நின்று புனிதமாகத் தவம் செய்யவுரிய நீ இந்தப் பொல்லாத கொலையைச் செய்யலாமா?

விசயன்: தவத்துக்கு அல்லல் செய்ய நேர்ந்தது; அதனால் அதனை ஒல்லையில் தொலைத்தேன். என் கடமையை நான் செய்தேன்; நீ மடமையாய் வாதாடாதே.

வேடன்: பசுவின் தோலைப் போர்த்த பொல்லாத புலி நீ; நல்ல சமர்த்தாய்ப் பேசப் படித்திருக்கிறாய்; என் பன்றியை ஏன் கொன்றாய்? ஒல்லையில் பதில் சொல்; இல்லையேல் அமர்மூண்டு அல்லலே விளையும்.

விசயன்: ஏ வேடா! நீ வீணே வாதாடுகிறாய்; வம்பாகச் சண்டையை விளைக்கிறாய்; இந்தப் பன்றியை நீயே எடுத்துக் கொண்டு போ; அடுத்து நின்று தொந்தரவு செய்யாதே; மேலே பேசினால் வெய்ய துயர்மூண்டு விடும். ஒல்லையில் ஒதுங்கிப் போய் விடு;

வேடன்: ஏ! நீ பெரிய சுத்த வீரன்போல் என்னை வெருட்டி மருட்டுகிறாய்; நீ யார்? என் சொந்தமான இந்த மலைக்கு ஏன் வந்தாய்? உன் பேர் என்ன?

விசயன்; அருச்சுனன் என்பது என் பேர்.

வேடன்: சரிதான்; என் குல விரோதி; எனது சாதியான் ஆன ஏகலைவனை நீ அநியாயமாய் விரலைத் துணித்தவன் அல்லவா? உன் கையைத் துணிக்க வேண்டாமா? இன்று வலிய வந்து கிடைத்தாய்!

விசயன்: காட்டுத் தனமாய் உளறாதே; விரைந்து விலகிப் போய்விடு; போகாமல் நின்றால் சாகவே நேர்வாய்!

வேடன்: உன் வீரத்தையும் தீரத்தையும் இன்று அளந்து பார்த்துவிடவேண்டும்; என்னோடு நேரே போருக்கு வா! எடு வில்லை; தொடு அம்பை.

இவ்வாறு சொல்லிக் கொண்டே அந்த அதிசய வேடன் அம்பு தொடுத்தான். விசயன் மாறு தொடுத்துத் தடுத்தான். வில்லாடல் வீறோடு மூண்டது. மூண்டு போராடி வருங்கால் விசயன் வில் நாண் அறுந்து போயது; போகவே வேகமாய்ப் பாய்ந்து தன் வில்லால் முடிவில்லாதவன் முடிமேல் அடித்தான்; அந்த அடி அகில சராசரங்கள் எங்கும் பட்டது. விசயன் முடியிலும் இரத்தம் ஒழுகியது; கைலை வேடன் மறைந்து போனான்; வியந்து மேலே பார்த்தான். சிவபெருமான் உமா தேவியோடு விடைமேல் தோன்றியருளினர். அந்தக் காட்சியைக் கண்டதும் விசயன் பரவசனாய் உருகி அழுதான். கண்ணீர் மார்பில் பெருகி ஓடியது; உள்ளம் உவந்து துள்ளிப் பாடினன். பாடிய அன்புமொழிகள் இன்பஒளிகளா எழுந்தன.

ஆடினன்; களித்தனன்; அயர்ந்து நின்றனன்;
ஓடினன்; குதித்தனன்; உருகி மாழ்கினன்;
பாடினன்; பதைத்தனன்; பவள மேனியை
நாடினன்; நடுங்கினன்; நயந்த சிந்தையான். (1)

விழுந்தரு வினையினின் மெலிந்து நாயினும்
அழுந்திய பிறவியின் அயருவேன் முனம்
செழுஞ்சுடர் மணிப்பணித் திங்கள் மௌலியாய்
எழுந்தருளியது இஃது என்ன மாயமோ? (2)

பையரா அணிமணிப் பவள மேனியாய்!
செய்யவாய் மரகதச் செல்வி பாகனே!
ஐயனே! சேவடி அடைந்தவர்க்கெலாம்
மெய்யனே! எங்குமாய் விளங்கும் சோதியே! (3)

[பாரதம்]

பரமனைப் பார்த்துக் களித்துத் திளைத்த பார்த்தன் இவ்வாறு பரவசமாய்த் துதித்திருக்கிறான். தவம் கடவுளையும் நேரே காட்டும்; தவசியிடம் அதிசய ஆற்றல்கள் உளவாம்; சிவபெருமானும் அவனை உறவுரிமையோடு உவந்து கொண்டாடுவன் என்பதை ஈண்டு உணர்ந்து தெளிந்து வியந்து கொள்கிறோம்.

**தனிமையாய்த் தவம் புரி; சிவமும் இனிமையாய் எதிர் வரும்.**

977. மடமை கொடுமை மடிமை சிறுமை
கடமை அறியாக் கயமை—இடமெங்கும்
நீண்டு பரவி நிறைந்திருக்கும் நோய்களை
ஈண்டு விலகல் இனிது. (எ)

இ—ள்.

மடமை முதலிய கொடிய நோய்களே எங்கும் விரிந்து பரந்து நிறைந் திருக்கின்றன; ஈனமான அந்த இழிவுகளை அணுகாமல் மோனமாய் விலகியிருப்பதே இனியநன்மையாம் என்க.

அறிய வுரியதை அறியாமல் மூடமாயிருப்பது மடமை என வந்தது. பேதைமை, அஞ்ஞானம், அறிவின்மை, அவித்தை என வருவன யாவும் இந்த மடமையின் பிரிவுகளே. எல்லா இழிவுகளுக்கும் எல்லா அழிவுகளுக்கும் எல்லாத் துயரங்களுக்கும் இதுவே மூலகாரணம். மனிதன் எனத் தலைமையான நிலையில் பிறந்திருந்தாலும்மடையன்என்பவன்மிகவும்கடையன் ஆகிருன்.

உண்மையை உரிமையோடு உணர்வது ஞானம்; அந்த ஞானம் ஈனமான துன்பங்களை எல்லாம் ஒருங்கே நீக்கி மேலான பேரின்ப நிலையை அருளுகிறது. மெய்யுணர்வு எய்திய பொழுது மனிதன் தெய்வீக நிலையில் தேசு மிகுந்து திகழ்கிருன். இந்த ஞான ஒளியை இழந்தவன் எவ்வழியும் ஈனமாய் இழிந்து கழிகிருன். மருளும்இருளும் மாயத்துயர்களாய் மருவியுள்ளன.

இழி புலைகளிலேயே பழகி வருபவர் உயர்வான நிலைகளை இழந்து விடுகின்றனர். கெட்ட பழக்கத்தால் கேடாய்த் தாழ்ந்தவர் பின்பு நல்வராய் வருதல் அரிது ஆதலால் அல்லலான வழிகளிலேயே இழிந்து எவ்வழியும் அவலராய் உழலுகின்ருர்.

நினைவும் சொல்லும் செயலும் புனிதமாய்ப் பழகிவரின் அந்த மனிதன் புண்ணிய வானுய் உயர்ந்து மேலான கதிகளை மேவுகின்ருன்; அவை பழுதாய் இழிவழிகளில் பழகினுல் அவன் பாவியாய் அழிதுயரங்களையே அடைகிருன்.

இழிவுகளையும் துன்பங்களையும் தனக்கு விளைத்துக் கொள்ளுகின்றவன் எவ்வளவு மடையன் ஆகின்ருன்? எத்துணைக் கடையனு யிழிகின்ருன்? அவன் தோற்றம் பிழையான இழிவாய்ப் பழியுறுகின்றது. இதனைத்தெளிவாஉணரவேண்டும்.

மிருகங்களை விட மனிதன் சிறந்தவனாய்ப் பிறந்திருக்கின்றான்; இப்பிறப்பு நல்ல அறிவின் அமைப்பால் சிறப்படைந்து வந்துள்ளது; அறிவுக்குப் பயன் அறிய வுரியதை அறிந்து கொள்வதே; நன்மை தீமைகளை நாடி அறிந்து தீயபுலைகளை விலக்கித் தூயநிலைகளில் ஒழுகி வருவதே விழுமிய அறிவாய் விளங்கி நிற்கின்றது.

நெறி முறைகளை உணர்ந்து ஒழுகாதவர் அறிவிலிகளாய் இழிந்து படுகின்றார். அறிவு கெட்ட மூடர்கள் கொடிய நோய்கள் போல் நெடிய துயர்களுக்கே நிலைக்களமாய் நிற்கின்றார். அவர் இருக்கும் இடத்தை அணுகினாலும் ஈனப்புலைகள் விளைந்து விடும். தீவினையாளர் தொடர்பு தீயினும் கொடியது.

> தொன்னாள்தவம் முயன்றோர்களும் தொழில் வெய்யவர் உறையும்
> அன்னாட்டிடை புக்கார்குணம் அம்மூர்க்கரொடு ஒப்பார்;
> முன்னாட்டிய மதுரக்கனி முதிர்உப்பளம் உற்றால்
> பின்னாள்தனது உருவத்தொடு பேரும்பிறி தாமால்.
>
> (மெய்ஞ்ஞானவிளக்கம்)

நல்ல தவம் உடையவர் ஆனாலும் கெட்டவர் இருக்கும் நாட்டில் புகுந்தால் கெட்டே போவார் என இது குறித்துள்ளது. மதுரமான மாங்கனி உப்பளத்தில் சேர்ந்தால் அதன் அழகிய உருவம் மாறி இனிய சுவையும் கெட்டுப் பேரும் வேறாய்ப் போம்; அது போல் பொல்லாதவர் தொடர்பால் நல்லவர் எல்லா மேன்மைகளையும் இழந்து விடுவர். இந்த உவமான நிலையை ஊன்றி உணர்ந்து பொருளின் நயங்களைத் தேர்ந்து கொள்ள வேண்டும். கெட்டவர்களோடு பழகினால் கேடுகளே வரும்.

தீயவர்கள் தொடர்பானல் கொடிய தீமைகள் கடிது விளையும் ஆதலால் அவரைத் தூயவர்கள் சிறிதும் அணுகலாகாது.

> சிற்றினம் அஞ்சும் பெருமை. (குறள், 451)

தூய பெரியார் இயல்பைத் தேவர் இதில் தலக்கியிருக்கிறார். தீயவர் நஞ்சு போல் நாசம் செய்வர் ஆதலால் அந்த இனத்தைத் தூயவர் அஞ்சுவர் என்றார். சிறுமையை அஞ்சுவதே பெருமைக்குத் தெளிவான சிறந்த அடையாளம்.

> குற்றத்தை நன்றுஎன்று கொண்டு குணம்இன்றிச்
> செற்றம் முதலா உடையாரைத்---தெற்ற

அறிந்தார்என்று ஏத்தும் அவர்களைக் கண்டால்
துறந்தெழுவார் தூய்க்காட்சி யார். [அறநெறிச்சாரம்]

குற்றம் உடையவரை வெறுத்து விலகுவதே நல்லவர்க்கு இயல்பாம்; அவ்வாறு விலகாமல் அவரைப் புகழ்ந்து கொண்டாடி நின்றால் நல்லவர் ஆயினும் அவரைப் பொல்லாதவர் ஆகவே கருதித் தெளிந்த மேலோர் விரைந்து விலகிப் போவர் என இது விளக்கியுள்ளது. இனம் தெரிவது மனம் தெளிவதாம்.

இழிந்த புலைகளை உணர்ந்து ஒதுங்குவோரே தெளிந்தவராகின்றார்; ஆகவே உயர்ந்த நிலைகளை விரைந்து அடைய நேர்கின்றார்.

பேரின்ப வீட்டுக்கு நேரே போதற்குச் சீரான முதல்படி சிறிய இனங்களைச்சேராமையே. தீயதுஒழியத்தூயது விளைகிறது.

தீயவரைத் தீர்தல், தூயவரைச் சேர்தல், அறிவு நூல்களை ஆய்தல், நெறி நியமங்களோடு ஒழுகுதல், ஆருயிர்கள் பால் அருள்புரிதல், ஆன்ம சிந்தனை தோய்தல் ஆகிய இவை ஆனந்த முத்திக்கு வாயில்களாம். தீங்கினர் தொடர்பு நீங்கிய பொழுதே நன்மைகள் எல்லாம் ஓங்கி வர நேர்கின்றன சுத்தமான இந்த முதல்படியை அடைந்தால் முத்தியை நேரே அடைந்த படியாம்.

நாலாம் பூமியில் வருமுன் மூன்றுபூமியும்
அடைந்து நடந்து மாண்டோர்,
மேலான பதம் அடைந்து பிறந்து மெள்ள
மெள்ளவந்து வீடு சேர்வார்;
மாலான பவத்தில் விழார்; முதல்பூமி
கிடைப்பதுவே வருத்தம் மைந்தா!
காலான முதல்பூமி கைவந்தால்
முத்தியும்கை வந்தது ஆமே. (கைவல்லியம்)

வெய்யதீயரை விலகி மெய்வழி நாடுவதே முத்தியின் முதல் நிலையம்; அந்த உத்தமமான தனிமையை உரிமையா அடைக.

---

978. பற்றின்றி உள்ளம் படிந்து பரனருளைப்
பற்றி யிருந்து பழகிவரின்—முற்றியபேர்
ஆனந்தம் அங்கே அமைந்துவரும் எவ்வழியும்
மோனந் ததும்பும் முதிர்ந்து. (அ)

இ—ள்.

உலகப் பொருள்களை வெறுத்து விலகிப் பரம் பொருளைத்

தோய்ந்த கிழமையாய்ப் பழகிவரின் நிறைந்த பேரின்பம் விரைந்து வரும்; எவ்வழியும் மோனம் ததும்பி முதிர்ந்து விளங்கும்; அந்த ஆனந்த நிலையை அடைதல் அதிசய நலமாம் என்க.

தாம் செய்த வினைகளின் விளைவுகளைச் சீவர்கள் எவ்வழியும் தவருமல் அனுபவித்து வருகின்றனர். அவ்வரவில் அளவிடலரிய பிறவிகள் தொடர்ந்து வந்துள்ளன. துன்பங்களையும் இன்பங்களையும் நுகர்ந்து கொண்டு மாறிமாறி உயிரினங்கள் உடல்களை மருவியும் ஒருவியும் ஓயாமல் சுழன்று வருவது மாயாத மாயச் சுழலாய் விரிந்துள்ளது. பிறவிநிலை பெருஞ்சூறையாய் நின்றது.

விறகுகளைப் பற்றிக்கொண்டு தீ மூண்டு எரிகிறது; வினைகளைப் பற்றிக் கொண்டு பிறவி நீண்டு வருகிறது. பிறந்த பிறவிகள் தோறும் யான் எனது என்னும் பாச பந்தங்கள படிந்து வருதலால் மேலும் மேலும் பிறவிகள் படர்ந்து அடர்ந்து பரவி நிற்கின்றன. பாசப்பற்ருல் நீசப்பிறவிகள் நெடிது நீண்டன; நீளவே ஈசனை விலகி இடர்க் கடலுள் வீழ்ந்து உயிர்கள் என்றும் தீராத துயர்களாய் யாண்டும் உழன்று வர நேர்ந்தன.

பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு. (குறள், 347)

நீங்காத நெடிய கொடிய துயரங்களை அனுபவிக்கின்றவர்கள் யாவர்? என்பதைத் தேவர் இவ்வாறு தெளிவா வரைந்து காட்டி யுள்ளார். உன் உள்ளத்தில் பற்றியுள்ள உலகப் பற்றை நீ விட்டால் ஒழிய உன் உயிரைப் பிறவித் துயரம் விடாது என மனித மரபுக்கு உரிய நலனை இது இனிது போதித்துள்ளது.

இந்தக் கொடிய மாயப் பிணக்கை உயிர் தாய் வயிற்றுள் இருக்கும் போது சிறிது உணர்கிறது; உலகில் பிறந்தால் பாசம் யாதும் தோயாமல் ஈசனைத் தோய்ந்து உய்யவேண்டும் என்று உறுதி பூண்டு வருகிறது; மண்ணில் பிறந்ததும் அதனை மறந்து போகிறது. அந்த மறப்போடு பிறப்பும் பெருகி வருகின்றது.

இறப்பொடு பிறப்பில் பன்முறை இதுகாறு
இடர் உழந்தனம் இனிப் பிறந்தாங்கு
அறப்பெருங் கடவுள் பூசனைப் பேற்ருல்
அவற்றினை அறுத்தும் என்று எண்ணிச்
சிறப்புற இருக்கும் உயிர்கருப் பையும்

செறிவழுக் குதகமும் மற்றும்
உறப்பெரிது அழிந்து மோகக்கால் மிளிர்ப்ப
உணர்விழந்து அரிதில் மண்சாரும். (1)

சூக்கும உடலைப் பற்றியே எழுந்த
தூலதே கத்தினுள் முன்னர்
ஆக்கிய அறம்பா வங்களின் பயனை
அவ்வினை எனப்பின்பு பயக்கும்
நீக்கரும் வினைகள் வளாவியான் என்னும்
செருக்கினால் நித்தலும் அருந்திப்
போக்கொடு வரவில் படும்உயிர் இறைவன்
பொருவில் பாதம்புகு காறும். [2]
(தணிகைப்புராணம்)

கருப்பையில் இருக்குங்கால் உயிர் கருதி யிருந்ததைப் பிறந்தபின் மறந்து வைய மையல்களில் அழுந்தி வெய்ய துயரங் களை அடைந்து உழல்வதை இவை வரைந்து காட்டியுள்ளன.

பாசப் பற்றுகள் ஆகிய மாசுகள் நீங்கிய பொழுது தான் உயிர் ஈசனை அடைய நேர்கிறது. தனக்கும் இறைவனுக்கும் உள்ள உறவுரிமைகளைத் தெளிவாக அறிந்தவர்கள் ஞானிகள் ஆகின்றனர்; ஆகவே நீச ஆசைகளை எல்லாம் அறவே நீங்கி ஈசனையே கருதி உருகுகின்றனர்; உருகவே பிறவி நீங்கிப் பேரின்பம் பெறுகின்றனர்; அவ்வாறு பெறுபவர் நித்திய முத்தர்களாய் நிலவி நிலையான ஆனந்த நிலையில் நிலைத்து நிற்கின்றனர்.

துறவும் தவமும் பிறவித் துயரங்களை அறவே ஒழித்துப் பேரானந்தம் தருவன ஆதலால் அவற்றைத் தழுவியுள்ளவர் உலகப் புலைகளை அருவருத்து வெறுத்துத் தனியே ஒதுங்கி யிருந்து இறைவனை நினைந்து இன்பம் மீதூர்ந்துள்ளனர்.

நிலைநீர் மொக்குளின் விளைவாய்த் தோன்றி
வான்தவழ் உடல்கறை மதிஎனச் சுருங்கிப்
புல்லர்வாய்ச் சூள்எனப் பொருளுடன் அழியும்
சிறுணவு இன்பத் திருந்தா வாழ்க்கையைக்
கான்றிடு சொன்றியில் கண்டு அருவருத்துப்
புலன்அறத் துடைத்த நலனுறு கேள்வியர்
ஆரா இன்பப் பேர்அமுது அருந்தித்
துறவுஎனும் திருவுடன் உறவுசெய் வாழ்க்கையர்
வாயினும் கண்ணினும் மனத்தினும் அகலாப்
பேரொளி நாயகன்; கார்ஒளி மிடற்றன். (கல்லாடம், 81)

உலக வாழ்வு நீர் மேல் குமிழிபோல் நிலையில்லாதது; புலை படிந்தது; அவலத் துயரங்கள் நிறைந்தது என்று அறிந்து பாசபந்தங்கள் யாவும் துறந்த துறவிகள் இறைவனையே கருதி உரிமையோடு உறைந்திருக்கும் நிலைமையை இது உணர்த்தியுளது.

கான்றிடு சோன்றி என்றது வெளியே கக்கி வாந்தி எடுத்த சோற்றை. வேண்டாம் என்று வெறுத்துவிட்ட உலக போகங்களை மீண்டு யாண்டும் விரும்பார் என அவரது வைராக்கிய உறுதி நிலைகளை விளக்குதற்கு ஈண்டு இது உவமையாய் வந்தது.

சிற்றின்பப் புலைகளை நீங்கினவரே பேரின்ப நிலையினை அடைகின்றார். பரமானந்தப் பொருளைப் பற்ற நேர்ந்தவர் பழி படிந்த பற்றுக்கள் முற்றும் அற்றவராய் வரமானநெறியில் இருக்கின்றார்.

நீத்தார், துறந்தார் என்னும் பெயர்கள் துறவிகளுடைய நிலைமை தலைமை நீர்மைகளைத் தெளிவா விளக்கி நிற்கின்றன.

அகப்பற்றும் புறப்பற்றும் அற்றவரே பிறப்புகள் முற்றும் அற்றுப் பேரானந்த நிலையை நேரே இனிது பெறுகின்றார்.

இருவகைப் பற்றுஇல் ஒருவனே ஞானி
　　எனப்படின் புறப்பற்றதுஏனும்
ஒருவுதல் இலரும் எவணம்அப் பெயருக்கு
　　உரியர்? வேர் ஒன்றுமில் கொடியும்
தரும்இலை மலர்காய் எனின்அகப் பற்றில்
　　தவர்புறப் பற்றையும் தணவார்
மருவினும் அஃது ஓரொருவர் வேரன்றீர்
　　மலர்க்கொடி வாடுருவகையே. (வைராக்கியதீபம் 40)

பாசப்பற்றுகள் முற்றும் அற்றவரே துறவி, ஞானி, என்னும் மகிமையான பெயர்களுக்கு உரியர் ஆகின்றார்.

இருளிலிருந்து நீங்கினவன் ஒளியைக் காண்கிறான்.

துன்பப் புலையைக் கடந்தவன் இன்பநிலையை எய்துகிறான்.

பாசபந்தம் ஒழிந்தவன் ஈசனை அடைகிறான்.

கண்ணில் காசம் படர்ந்தால் அது எதையும் சரியாக் காணாது; மனத்தில் பாசம் படிந்தால் உண்மையான நிலையை அது உணர முடியாது. மாசு தீர்ந்தபோதுதான் மனிதன் புனிதனாய் உயர்ந்து பரம புனிதனான ஈசனை இனிது தெரிந்து இன்பம் உறுகிறான்.

ஒருவன் உள்ளம் தூய்மை தோயின் பொல்லாச் சூழல்களை ஒல்லையில் ஒதுங்கித் தனியே தங்க நேர்கின்றான். தனிமையில் தங்கி உரிமையைச் சிந்திக்கின்றவன் உயர்ந்த கதியை விரைந்து பெறுகிறான். பொறிபுலன்கள் ஒடுங்கி அறிவு ஒளிவீசி எழுவதே ஆன்மசோதியாய் மேன்மைமிகுந்து பன்மைசுரந்து திகழ்கிறது.

கண்முதல் புலன்கள் யாவையும் ஒடுக்கிக்
 கரண ஆகுலம் அறக்கடிந்து அங்கு
உண்மைகாண் விருப்போடு உயிர்க்கெலாம் பரிவுற்று
 உற்ற சிற்றின்பத்தை உவர்த்து
வண்மையாம் உணவு வந்தவா கண்டு
 வாட்டமும் மகிழ்ச்சியும் இன்றித்
தண்மையாம் உடம்புதான் தனது என்னுத்
 தன்மையோன் தத்துவம் உணர்வான். (குறுந்திரட்டு)

தத்துவ ஞானியின் உத்தம நிலைகளை இது உணர்த்தியுள்ளது. குறித்துள்ள நீர்மைகளைக் கூர்மையா உணர்ந்து கொள்ள வேண்டும். உலகஆசைகள் ஒழியவே உயிர் ஒளிவீசி எழுகிறது.

தூய தன்மைகள் உள்ளே தோய்ந்து வருந்தோறும் தீய புன்மைகள் வெளியே தேய்ந்து விரைந்துமாய்ந்து போகின்றன.

உள்ளத்தில் அழுக்கு ஏறின் உயிர் இழுக்காய் அல்லல்களே அடையும்; அந்த மாசு ஒழியின் தேசுமிகுந்து தெய்வீக இன்பங்களை எய்தி மகிழ்கிறது புல்லியபுலை நீங்க நல்ல நிலை ஓங்குகிறது.

உன்னைப் படுதுயர்களில் ஆழ்த்துகின்ற பற்றை ஒழித்து விடு; உனக்கு என்றும் நிலையான பேரின்பங்களை அருளுகின்ற பரம்பொருளைப் பற்றிக் கொள். அதிசயமான ஆனந்த நிலை உன்னிடமே உள்ளது; உன்னை உரிமையாக் கருதிவரின் உயர் கதி பெருகிவரும்; இந்த உண்மையை உணர்ந்து உய்தி பெறுக.

---

979. பேசாத மோனம் பெரியதவ ஞானமாய்த்
தேசாகி இன்பம் திகழுமே—மாசான
புன்மை புகாமல் புறங்காத் தினிதோம்பி
நன்மை புரியும் நயந்து. (௯)

இ-ள்.

வாய் பேசாத மவுனம் அரிய பெரிய தவ ஞானமாம்;

அதில் தெளிவான பேரின்பம் விளையும்; இளிவான புன்மை புகாமல் காத்து யாண்டும் நன்மையே அது நல்கி அருளும் என்க.

மவுன நிலையில் மகிமைகள் விளைந்து வருகின்றன.

பேசுகின்ற திறம் மனிதனுக்குத் தனி உரிமையாய் அடைந்துள்ளது. மிருகங்கள் பேசா; மனித மரபே பேசவுரிய பெருமையோடு பெருகி வந்துள்ளது. வாய் மொழிகளை வழங்கியே மனித சமுதாயம் எவ்வழியும் வாழ்க்கைகளை நடத்தி வருகிறது.

உலக வாழ்வை இனிது நடத்தி உணர்வின் மணமாய் ஒளி வீசி வருகிற மொழியைப் புனிதமாப் பேணுமல் வீணே பாழ்படுத்துபவர் வெய்ய பேதைகளாய் இழிந்து படுகின்றனர். பயன் இல்லாமல் வறிதே பேசுகின்றவன் அறிவின் சிறுமையை வெளியிடுகின்றான். வெறுஞ்சொல் விரிய வீணன் தெரிகிறான்.

உள்ளே உணர்வு பெருகி யிருப்பின் வெளியே உரைகள் அருகி வருகின்றன. எவனுடைய வாயிலிருந்து பயன் இல்லாத வார்த்தைகள் அதிகமாய் விரிகின்றனவோ அவன் ஒரு மதிகேடன் என்பதை அவை தெளிவா வெளியே வார்த்துக் காட்டுகின்றன. பேசும் பேச்சால் மனிதன் எளிதே காணப்படுகிறான்.

பேச வாய் திறந்தால் பயனுடைய மொழிகளை நயமாப் பேசுக. அவசியம் இல்லாதபோது யாண்டும் பேசலாகாது. நா வடங்கி வந்தால் அதில் நலங்கள் பல நன்கு அடங்கிவருகின்றன.

அடங்காத வாய் மடங்காத நோயாய்க் கொடிய துயரங்களை விளைத்து விடும். பேசப் பேசப் பிழை என்பது பழமொழி. இந்த முது மொழியின் குறிப்பைக் கூர்ந்து நோக்கி ஓர்ந்து மதி தெளிய வேண்டும். மோனம் வர ஞானம் வருகிறது.

அகமுகமாய் ஆன்ம சிந்தனை செய்யும் ஞானிகள் யாதும் பேசாமல் சித்த சாந்தியாய் அடங்கி யிருக்கின்றனர். உண்மையான பரமானந்தத்தில் திளைத்துள்ளமையால் உரைகள் அடங்கி விடுகின்றன. உள்ளம் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கவே சொல்லும் செயலும் சோர்ந்து தொலைந்து போகின்றன.

தேனை நாடிப் பறந்து திரிகிற வண்டு ஒலித்து ஓலமிட்டு உழலுகின்றது; அதனைக் கண்டு உண்ண நேர்ந்தால் ஒலி அடங்கி விடுகிறது. ஆன்ம சுகம் ஆகிய அமுதை அடையாத

வர் ஆரவாரமாய்ப் பேசிப் பிதற்றிப் பிழையாய் அலைகின்றனர்; அதனை அடைந்தவர் அமைதியாய் ஆனந்த நிலையில் அமர்ந்திருக்கின்றனர். உள்ளம் அடங்கிவர உரைகள் ஒடுங்கி விடுகின்றன.

தேனை நாடித் திரிந்துழல் வண்டுகள்
வான வீதியில் வாய்ஒலி செய்தன;
மோனம் கொண்டன மொண்டதை உண்டன;
ஞானம் கொண்டவர் கண்டன மானவே.

இந்த உவமையும் பொருளும் ஓர்ந்து சிந்திக்கத் தக்கன.

அனுபவ ஞானிகளின் இனிய அடையாளமாக மோனம் மருவி யுள்ளது. அந்த உண்மை இங்கே கருதியுணர வந்தது. வான மதியில் வயங்கும் சீதளம் போல் ஞான மதியில் மோனம் விளங்கியுளது. ஆன்ம அமைதி அதிசய சுகமாகிறது.

தியானம், சமாதி என்னும் ஞான சீலங்களில் மோனம் குடி கொண்டு உள்ளமையால் அதன் நிலைமையும் நீர்மையும் எத்தகையன என்பதை உய்த்து உணர்ந்து கொள்ளலாம் பேச்சு ஒடுங்கினால் அன்றிப்பேரின்ப போகத்தை நேரே பெறமுடியாது.

"பேசாத ஆனந்த நிட்டைக்கும் அறிவிலாப்
பேதைக்கும் வெகு தூரமே:"

பேசுகின்ற பேதைக்கும் பேசாத ஆனந்த சமாதிக்கும் வெகு தூரமே என்று தாயுமானவர் இவ்வாறு தமது நிலைமைக்கு இரங்கி மறுகி யிருக்கிறார். மவுன நிலையில் அதிசய சுகங்களை அனுபவித்த மகாதவசி ஆதலால் பேசாத நீர்மையை இங்ஙனம் வியந்து புகழ்ந்துள்ளார். அனுபவ அமைதி அறிய வந்தது.

பேசா அனுபூதியை அடியேன்
  பெற்றுப் பிழைக்கப் பேர்அருளால்
தேசோ மயம்தந்து இனி ஒருகால்
  சித்தத்து இருளும் தீர்ப்பாயோ?
பாசாடவியைக் கடந்த அன்பர்
  பற்றும் அகண்டப் பரப்பான
ஈசா! பொதுவில் நடம் ஆடும்
  இறைவா! குறையா இன்னமுதே. [தாயுமானவர்]

பேசாஅனுபூதியை அளித்த அருளும்படி ஈசனிடம் தாயுமானவர் இங்ஙனம் வேண்டியுள்ளார். மோன நிலையில் வான

மழைபோல் வந்து ஆனந்தம் பொழியும் ஆதலால் அந்தப் பரம் பொருளிடம் அதனை விநயமா விழைந்து வேண்டியிருக்கிறார்.

அலையிலாத சாகரம்போல் அனிலம்சேரா விளக்கதுபோல்
அருங்கல் இரும்பொன்சமம்ஆகி அனதராசின் நுனியதுபோல்
நிலைஒன்றியநற் சமாதியுற்று நின்தாள்கமலத்து எழும்பிரச
நிறைவாரிதியில் புகுந்ததனில் நேசித்துஅடியேன் இருப்பேனோ?
விலையில்மகுடத் திருமுடியாய்! மிளிர்குண்டலங்கள் செறி காதாய்!
வியன்கேயூரத் திருத்தோளாய்! விஞ்சுஞ்சதங்கை சூழ் தாளா!
புலையும்கொலையும் களவும்இல்லாப்புனிதத்தவத்தோர்தொழுதுஏத்தும்
புராரி குமரா! உமை சிறுவா! போரூர் முருகப் பெருமானே!
[திருப்போரூர்சந்நிதிமுறை]

அமைதியான சமாதியில் விளையும் பேரானந்த நிலையைச் சிதம்பர சுவாமிகள் இதில் இனிது குறித்திருக்கிறார். குறிப்புகள் கூர்ந்த அனுபவங்களால் ஓர்ந்து உணர்ந்து கொள்ள வுரியன.

சொல்ஒழியப் பொருள்ஒழியக் கரணம் எல்லாம்
சோர்ந்துஒழிய உணர்வுஒழியத் துளங்காநின்ற
அல்ஒழியப் பகல்ஒழிய நடுவே நின்ற
ஆனந்த அனுபவமே! அதீத வாழ்வே!
நெல்ஒழியப் பதர்கொள்வார் போல இன்ப
நிறைவொழியக் குறைகொள்மத நெறியோர் நெஞ்சக்
கல்ஒழிய மெய் அடியர் இதயம் எல்லாம்
கலந்துகலந்து இனிக்கின்ற கருணைத் தேவே.
[அருட்பா]

இறைவனுடைய இன்ப நலம் எய்தும் துறையை இராமலிங்க அடிகள் இவ்வாறு துலக்கியிருக்கிறார். சொல் ஒழிந்த அமைதியில் விளையும் நல்ல ஆனந்தபோகம் இங்கு அறிய வந்தது.

உலக நசைகளை நீங்கி உரை அடங்கியிருப்பது ஞானயோகமான மோனம் ஆம். சாந்த சீலமான இந்த மவுனத்தில் உள்ளம் உணர்வோடு தோய்ந்து உயிரை நோக்குகிறது; நோக்கவே பரமன் ஒளி வெளியாகிறது; ஆகவே பேரின்ப வெள்ளம் பெருகிஎழுகிறது பேசாத மவுனம் பேசஅரிய பேரானந்தத்தை அருளுதலால் அது அரிய தவம், பெரிய ஞானம், அற்புத யோகம், அதிசய சீவ அமுதம் எனத் துதிகொண்டு நின்றது.

Silence is the ecstatic bliss of souls, that by intelligence converse. (Otway)

அறிவோடு அளவளாவுகிற அமைதியான மவுனம் ஆன்மாவின் பரவசமான பேரின்பமாம் என ஓட்வே என்னும் அறிஞர் மோன விளைவினை இங்ஙனம் விளக்கிக் கூறியிருக்கிறார்.

புனிதமான அறிவும் சிந்தனையும் பெருகிவர அங்கே ஆன்மானந்தம் மருவி வருகிறது; தூய பரம்பொருளோடு தோய்ந்து மகிழ்வதே யோக சமாதியாய் ஒளி வீசியுள்ளது.

They always talk who never think. (Prior)

ஒருபோதும் சிந்திக்காதவர் தாம் எப்போதும் பேசுகின்றனர் எனப் பேச்சின் இழிவை இது காட்சியாக் காட்டியுளது.

பயன் இன்றி வீணே பேசுகின்றவர் பழுதான இழுதைகளாய் இழிவுறுகின்றனர். இழிவு ஒழிய உயர்வு வருகிறது.

வெளியே பேசுவதைச் சுருக்கு; உள்ளே சிந்தனையைப் பெருக்கு. தனியான மோன நிலையோடு இனிது பழகித் தனி முதல் தலைவனை நலமாக் காணுக; இக்காட்சி அரிய மாட்சியாம்.

---

980. இனிதான ஏகாந்தம் ஈசனருள் இன்பம்
துனியான சூழல் துயரே—தனியே
இருந்து பழகி இனியபே ரின்பம்
அருந்தி மகிழ்க அமர்ந்து. (ல)

இ-ள்.

மடமையான சூழல் கொடிய துயரமே தரும்; ஏகமாய் ஒதுங்கியிருக்கும் தனிமை ஈசன் அருளுகிற இனிய இன்ப நிலையமாம். அவ்வாறு இருந்து பழகிப் பேரானந்தங்களை அருந்தி மகிழ்க.

புனிதமான இனிய சுகம் தனிமையில் விளைகிறது.

கடவுள் தனிமுதல் தலைவன்; ஏக பராபரனை அந்த ஆதி பகவனை அடைய நேர்ந்தவன் எல்லாவற்றையும் துறந்து ஏகமாய் ஒதுங்கி ஏகாந்தமாய் இருப்பதே ஆன்ம விவேகமாய் அமைந்து நின்றது. தூய நிலை தோயத் தீய புலை தொலைகிறது.

தனியே இனிது அமர நேர்ந்தபோது மனிதன் புனிதன் ஆகிறான். தனிநிலை தன்னை அறிய நேர்கிறது. எள்ளலான இழி தொடர்புகள் நீங்கவே உள்ளம் குவிந்து உயிரை நோக்குகிறது; அந்த நோக்கம் பேரின்பத்தை நேரே ஆக்கி அருளுகிறது.

மக்கள் கூட்டம் பெரும்பாலும் மாக்கள் நீட்டமாய் இருத்தலால் அந்தத் தொடர்பு அவகேடுகளையே விளைத்து அல்லல்களில் ஆழ்த்தி விடும். பொல்லாத இனத்தோடு பழகிவரின் மனம் புலையான வழிகளில் அலைய நேரும்; நேரவே ஆன்ம நிலையில் மேன்மையான காட்சியைக் காணமுடியாது; ஆகவே உலகப் போக்கில் ஓடி அவலப் புலைகளையே நாடி உழன்று நைந்து தொலையவரும் ஆகலால் மேலே உயர்ந்து போக நேர்ந்தவர் எந்த வகையிலும் எவரோடும் சேராமல் புனிதமாய்த் தனியே இருப்பதே நல்லது. உரிய தனிமையில் அரிய இனிமைகள் வருகின்றன.

சிறந்த மனிதன் என வந்தும் பிறந்த பயனை உணர்ந்து பேரின்ப நிலையை அடைய முயலாமல் கடையராயிழிந்து மடையரா யழிந்து போவதே மக்களின் நிலையாய் மருவி வருகிறது.

குழவியாய்ப் பாலனாய்க் குமரன் ஆகியே
கிழவனாய் விழுகிறான் கிழமை ஓர்கிலான்
பழகிய பழியிலே படிந்து பாழனாய்
இழவையே புரிகிறான் இறந்து போகிறான்.

மனித வாழ்வின் நிலைகளையும் புலைகளையும் மாய மருள்களையும், தீய போக்குகளையும் நோக்குகளையும் இது விளக்கியுளது.

தனது உயிரையும் உயிர்க்கு உயிரான ஈசனையும் எண்ணி இன்ப நிலைகளை எய்தாமல் நீச வழிகளிலேயே இழிந்து நாசமாய்ப் போவது பழகிவந்த வாசனைகளின் பலன்களையே விளக்கி நிற்கின்றது. மையல்மருள்கள் வெய்ய இருள்களாயின.

பாலஸ் தாவத் க்ரீடா ஸக்த:
தருணஸ் தாவத் தருணீஸக்த:
விருத்தஸ் தாவத் சிந்தாஸக்த:
பரே ப்ரஹ்மணி கோபி ந ஸக்த: (பஜகோவிந்தம்)

பாலர் காலத்தை விளையாட்டில் கழிக்கின்றார்; வாலிபர் மங்கையர் மய்யலில் கழிக்கின்றார்; கிழவர் கவலைகளில் உழலுகின்றார்; ஒருவனாவது மேலான பரமனைக் கருதுவதே இல்லை என மனித மரபின் இழி நிலையை நினைந்து சங்கராச்சாரியார் இவ்வாறு பரிதாபமாய் இரங்கிப் பரிந்து வருந்தி யிருக்கிறார்.

உயிர்க்கு உரிய உறுதி நலங்களை மறந்து துயர்க்கே வழி தோண்டி எவ்வழியும் மையலாய் உழலுகிற உலகரை ஒட்டாமல்

விலகித் தனியே ஒதுங்கிப் புனித நிலையில் பொருந்தி இனிய ஆன்ம சிந்தனை செய்து வருபவரே மேன்மையான துறவிகள், மேலான ஞானிகள், மெய்யான தவசிகள் என ஒளிபெற்றனர்.

தவயோகிகள் அகமுகமாய் ஆனந்த நிலையை நாடி இருத்தலால் சகமுகமான அவல நிலைகள் யாவும் நீங்கி அமைதியாய் அடங்கி யுள்ளனர். மன அமைதி மாதவம் ஆகிறது.

ஏகநாயகனைக் காட்டிப் பேரின்பத்தை ஊட்டி வருதலால் ஏகாந்தம் யோகாந்தமாய் நேர்ந்தது. புனித மான முனிவர்கள் இனிது இருக்கும் இடம் ஆதலால் தனிமை தெய்வீக நிலையமாய்த் தேசு வீசி ஈசன் அருளை எவ்வழியும் எய்தி யுள்ளது.

**The nurse of full-grown souls is solitude. (J. R. Lowell)**

ஆன்ம ஞானம் நிறைந்த மகான்களுக்கு ஏகாந்தம் இனிய செவிலித் தாயாயுள்ளது என்னும் இது இங்கு அறிய வுரியது.

புனித நிலையில் புகநீ விரும்பின்
தனிமை அரிய தவமாய்---இனிமை
பலவும் அருளும் பரமன் ஒளியாய்
நிலவும் இதனை நினை.

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

தனிமை இனிமையான தவம்.
அரிய அமைதி அதில் அமைகிறது.
இனிய சுகம் விளைகிறது.
உண்மை ஞானம் ஒளி வீசுகிறது.
பேரின்பம் பெருகி வருகிறது.
மேலான ஒளி மேவி மிளிர்கிறது.
இளிவு நீங்கித் தெளிவு ஓங்குகிறது.
ஆனந்தம் பொங்கி அதிசயம் தருகிறது.
பேசாத மோனம் பெரிய ஞானம்.
ஈசன் அருள் அங்கே இனிது வெளியாம்.

கூ அ---வது தனிமை முற்றிற்று.

---

# தொண்ணூற்றொன்பதாம் அதிகாரம்.

## இனிமை

அஃதாவது புனிதமான இனிய இன்ப நீர்மை. தவம் தோய்ந்து தனியே யுறையும் முனிவரது ஆன்ம சுகத்தை உணர்த்துகின்றமையால் இது ஈண்டு வைக்கப்பட்டது. தனிமை இனிமைகளின் புனிதநிலைமைகள் உறவா இனிது காணவந்தன.

981. வந்த பிறவி வகையை வகுத்தறிந்து
பந்த வினையைப் பறித்தெறிந்து—சந்ததமும்
தோய்ந்துவந்த துன்பங்கள் எல்லாம் தொலைந்தொழிய
ஏய்ந்த பிறப்பே இனிது. (க)

இ—ள்.

நேர்ந்துள்ள பிறவியின் அருமையை ஓர்ந்து உணர்ந்து பாசப் பிணிப்புகளைப் பறித்து எறிந்து என்றும் தொடர்ந்து தோய்ந்து வந்த துன்பங்கள் யாவும் ஒருங்கே அழிந்து ஒழிய விளைந்து வந்த பிறப்பே சிறந்த இன்பம் உடையது என்பதாம்.

இனிது என்னும் சொல் சுகம், நன்மை, மேன்மை முதலிய பொருள்களை உணர்த்திவரும். உள்ளத்தில் உவகையை விளைத்து வருவது இனிமை என வந்தது. ஆறு சுவைகளுள் இனிப்பு தலைமையாயுள்ளது. அரிய இனிய சுகம் இங்கு அறிய வந்தது.

மக்களுடைய நிலைமைக்குத் தக்கபடி இனிமைகள் நேர்ந்துள்ளன. சார்ந்து சுவைத்துவரும் சார்புகள் மக்களுடைய தகுதிகளை ஓர்ந்து உணரச் செய்கின்றன. இழிந்தது, பழி படிந்தது, நிலையற்றது, மாயமயக்கங்கள் மருவியது, மையல் மோகங்கள் தழுவியது ஆகிய இந்நிலைகளில் உள்ள புலைகளையே இனிது, இனிது என்று மக்கள் ஒக்க நுகர்ந்து களித்து வருகின்றனர். இளிப்பான களிப்புகள் எங்கும் செழித்து நிற்கின்றன. உயிரின் உயர் இனிமை உன்னத நிலையில் ஓங்கி உள்ளது

உண்மையான இனிமை தோய்ந்தவர் புன்மையான களிப்புகளை இழித்து ஒதுக்கித் தனி நிலையில் இனியராய் ஒளி சிறந்து நிற்கின்றார். அவரது நிலை தவநலம் உடையதாய்த் தழைத்துளது.

மேலான இனிமை எது? என்பதை உலகம் செவ்வையாய்த் தெரியும்படி சேவ்வேள் ஒருமுறை ஒளவையாரை வினயமா வினவினர்; அவ்வாறு வினவிய பொழுது அந்தப் பாட்டி பாட்டிலேயே பதில் உரைத்தாள்; விழுமிய இனிமையை விழி தெரிய விளக்கி ஒளிமிகுந்து வந்த சுவையான அக்கவி அயலே வருகிறது.

இனியது கேட்கின் தனிநெடு வேலோய்!
இனியது இனியது ஏகாந்தம் இனியது;
அதனினும் இனியது அறிவினர்ச் சேர்தல்;
அதனினும் இனியது அறிவுள் ளோரைக்
கனவினும் நனவினும் காண்பதுதானே. (ஒளவையார்)

ஏகாந்தத்தின் புனிதநிலையை இது இனிது உணர்த்தியுள்ளது. தனிமையே இனிமை என்றது அதன் பயனையும்நயனையும் வியனு விளக்கி மேலான ஞான நீர்மையை நன்கு துலக்கி நின்றது.

வெளியே யாரோடும் கூடாமல் தனியே ஒதுங்கியிருப்பது தவத்தின் வழியாய் ஒளிமிகுந்து மகத்துவம் மருவியுள்ளது.

உலகப் புலைகளை ஒருவிய பொழுதான் துறவி என ஒருவன் ஒளிபெற்று வருகிறுன். துறவுக்கு உறவாயிருப்பதால் தனிமையின் தகைமையையும் இனிமையையும் ஒருங்கே உணர்ந்து கொள்ளுகிறேம். மனிதன் தனித்த போது உள்ளத்தோடு தோய்ந்து உயிரோடு உறவாடுகிறுன்; ஆகவே அந்தச் சீவ ஒளியில் திவ்விய சுகங்கள் பெருகி வருகின்றன. ஆன்மவுள்ளம் ஆனந்த வெள்ளத்தில் ஆழ்வதை அரிய தவயோகிகள் அனுபவித்துள்ளனர். மகான்களின் அனுபவம் மகிமை மிக வுடையது.

உலகநசையும், பொறி வெறிகளும் இழி துயரங்களையே விளைத்தலால் ஞானிகள் அவற்றை ஒழித்து மோனமாய் அடங்கியிருக்கின்றனர். அந்த அமைதியில் அதிசய இன்பங்கள் விளைகின்றன. சித்த சாந்தி திவ்விய நிலையமாய் நிலவுகிறது.

ஐவாய வேட்கை அவா அடக்கல் முன் இனிதே;
கைவாய்ப் பொருள்பெறினும் கல்லார்கள் நீர்வு இனிதே;
நில்லாத காட்சி நிறையில் மனிதரைப்
புல்லா விடுதல் இனிது. (இனியவை நாற்பது, 26)

புலன்களை அடக்குக, கல்லாதாரோடு சேராதே, பொல்லாதாரோடு கூடாதே; அவ்வாறு ஆயின் உன் வாழ்வு எவ்வழி

யும் இனிமையாம் என மனித மரபுக்குப் பூதஞ்சேந்தனுர் இவ்வாறு போதித்திருக்கிருர். புனிதமான இனிமை புலன் தெரிய வந்தது. ஆன்ம சுகம் அகம் தூய்மையில் விளைகிறது.

உலக போகங்களிலும், கலையின் சுவைகளிலும், விஞ்ஞான விளைவுகளிலும், மெய்ஞ்ஞானநிலைகளிலும் இன்பங்கள் தோன்றுகின்றன; அத்தோற்றங்கள் எல்லாவற்றுள்ளும் ஈற்றிலுள்ளதே உண்மையான இன்பமாய் என்றும் உவகை சுரந்து வருகிறது.

பிறவி, துன்பங்கள் நிறைந்தது; பிறவாமை, இன்பங்கள் அமைந்தது. ஆகவே, எடுத்த உடலோடு இறுதியாக அடுத்த பிறவியை எவன் அடையாமல் செய்து கொள்ளுகிருனே அவனே நிலையான பேரின்ப நலனை நேரே பெற்றவனுகிருன்.

மாளவ தேசத்து மன்னன் சிறந்த நீதிமான்; பல நூல் கலையும் ஓதி உணர்ந்தவன்; சிகித்துவசன் என்னும் பேரினன். அவனுடைய மனைவி பெயர் சூடாலே; பேரழகி. அவளோடு கூடி இனிய போகங்களை நுகர்ந்து அரசு முறை புரிந்து வந்தான். வருங்கால் ஒருநாள் மேல் மாடத்தில் தனியே இருந்து சிந்தனை செய்தான்: "உலக வாழ்வு நிலையில்லாதது; எவ்வழியும் துயரங்களையுடையது; வெவ்விய இப்புலேகளில் உழல்வது தன் உயிரைக் கொலை செய்தபடியாம்; மாயமருள் நீங்கித் தூயபரனைத் தோய்வதே சிறந்த அறிவின் பயனாம்; உயர்ந்த இந்த மனிதப் பிறவியிலிருந்து உய்ய வில்லையானுல் பின்பு என்றும் வெய்ய துயரங்களே" என்று இவ்வாறு உணர்ந்து தெளிந்து உறுதிநாடினுன்; பலவகையான தானதருமங்களைச் செய்தான்; செய்தும் அமைதியான இனிமையை அடைய முடியவில்லை; ஆகவே தனியே துறந்து போகத் துணிந்தான்; தனது மனநிலையை இனிய மனைவியிடம் உரிமையாக உரைத்தான். அன்று அவன் உரைத்த அரிய மொழிகள் என்றும் ஞான ஒளிகளை வீசி எல்லா உலகங்களும் தெளிய நின்றுள்ளன. சில அயலே வருகின்றன.

அருந்தானம் பலகொடுத்தான் தவமமிகச்செய்
தான்தீர்த்தம் அனைத்தும் தோய்ந்தான்
வருந்தாமை அவற்றுலும் பெற்றிலன்பேர்
இடராலே மனம்நொந்து ஓர்நாள்

இருந்தான்ஏ காந்தத்தின் மடிமேலே
சூடாலை இருக்கச் செய்து
பெருந்தாபம உறுகின்ற துயர்எல்லாம்
அவளுக்குப் பேசல் உற்றான்: (1)

ஆண்ட அரசினும்புசித்த செல்வத்தும்
இன்றுநான ஆசை அற்றேன்;
நீண்டவனம் புகநயந்தேன் துக்கசுகம்
ஆபத்து நிதிகள் எல்லாம்
மாண்டவனத்து உறைவோரைத் துயர்செய்யா
புவிபொருட்டால் மயங்க வேண்டா
காண்டகுதன் கிளைநாசம் தோன்றாத
நாட்டினும்வன் காடு நன்றே. (2)

பற்றின்றித் தனி இருக்கும் மனத்தைப்போல்
பனிமதியும் பதுமத் தோனும்
பொற்றிரள்சேர் இந்திரனும் சுகம்அடையார்
ஆதலின்கான் போகும் என்னைக்
குற்றம்என விலக்கலைநீ கணவர்நயந்
ததுவிலக்கார் குலத்தின் மாதர்
சிற்றிடையாய்! என்றுரைத்த மன்னனுக்குச்
சூடாலை செப்பல் உற்றாள். (3)

(ஞானவாசிட்டம்)

அரசன் கருதி மொழிந்துள்ள உறுதிநிலைகளை இவை தெளிவா உணர்த்தி நிற்கின்றன. பற்று இன்றித் தனி இருக்கும் மனம் பரமசுகத்தில் பெருகி நிற்கும் என்றது இங்கே கருதியுணரவுரியது.

பிறவித்துயர்கள் நீங்கிப் பேரின்ப நிலையை அடைய விரைந்த இத்தகைய தத்துவ தரிசிகளே உத்தம ஞானிகளாய் ஒளி சிறந்து நிற்கின்றார். இந்தநிலை அதிசய மகிமையுடையது ஆதலால் எவரும் துதிசெய்து யாண்டும் போற்றி வருகின்றார்.

எவ்வழியும் ஒழியாமல் ஒட்டிவந்த துயர்களை ஒட்டாமல் ஒழித்தவனே உயர் வீரனாகிறான். ஞானவீரன் மோனமாயிருந்து தனிமையில் அமர்ந்து புனிதமான இனிமைகளை நுகர்கிறான். ஆன்ம போகமான அந்த அனுபவநிலையை இனிது மருவுக.

———

982 தெள்ளிய ஞானத் திருவுடைய ராகியே
உள்ளிய சீல முடன்ஒழுகின்—ஒள்ளிய
இன்பநலம் எல்லாம் எதிர்வருமே என்ஞான்றும்
இன்பமே காண்பாய் இனிது. (உ)

இ—ள்.

தெளிந்த ஞானத் திருவுடன் சீலம் தோய்ந்து ஒழுகி வருக; அவ்வாறுவரின் கருதிய சுகங்கள் யாவும் எதிரே பெருகிவரும்; என்றும் இன்ப நிலையமாய் இனிது வாழ்வாய் என்பதாம்.

அறிவினல் மனிதப் பிறப்பு சிறப்படைந்து வந்துள்ளது. விலங்கினங்களினும் மனித இனம் உயர்ந்தது என நேர்ந்தது எதனுல்? எதையும் கூர்ந்து பகுத்து நோக்கி ஓர்ந்து உணரும் திறத்தினுலேயே மனிதன் யாண்டும்சிறந்து உயர்ந்து நிற்கிருன்.

உலக நிலைகளையும், கலைகளையும் ஆராய்ந்து அறிபவர் அறிஞர் என விளங்கி வருகின்ருர். தான் மருவிநின்ற வழிகளிலேயே மனிதன் அறிவாளியாய் வெளியே தெரிய நேர்கிருன். நெறிமுறையோடு சேர்ந்த பொழுதுதான் அறிவு பெருமை பெறுகிறது; சரியான வழியில் சேரவில்லையாஞல் அது பரிதாபமாய் இழிவுறுகிறது. நல்ல நெறியை விட்டு விலகினுல் அது புல்லறிவு, புலையறிவு, பொய்யறிவு எனப் பழிபடுகின்றது. நல்வழி நழுவின் பல்வழிகளிலும் படுதுயரங்களே கடிது அடைய வருகின்றன.

தனக்கு யாதொரு அல்லலும் நேராமல் எவன் நெறியே ஒழுகி வருகிருனே அவனே நல்ல அறிவுடையவன் ஆகிருன். பின்னே நேர்வதை முன்னதாகக் கூர்மையாய் அறிந்து சீர்மையா நடந்து கொள்பவர் சிறந்த மேதைகளாய் உயர்ந்து வருகிருர். உயிர்க்கு உறுதி புரிவது உயர் அறிவாகிறது.

அறிவுடையார் ஆவது அறிவார்; அறிவிலார்
அஃதறி கல்லா தவர். (குறள், 427)

அறிவுடையவர் யார்? அறிவு இல்லாதவர் எவர்? என்று சரியாகத் தெரிய விரும்புவார்க்குத் தேவர் இவ்வாறு தெளிவா விளக்கி யிருக்கிருர். எதை அறிந்தால் உயிர் துயர் நீங்கி உய்தி பெறுமோ அதை உரிமையா அறிவதே ஆவதை அறிவதாம்.

ஆகாததை அவாவி அறிந்து மோகமாயிழிந்து வந்தசனுலே தான் எல்லாக் கேடுகளும் வேகமா விளைந்து வந்துள்ளன. துன்ப விளைவையே இன்பமாக விழைந்து வருவது ஈனமருளாய் விரிந்து வருகிறது. மய்யல்விளைவுகள்வெய்ய துயர்களாகின்றன.

அழிதுயரங்களை நாளும் வாழ்வில் அறிந்திருந்தும் அல்லல் தீரும் வழியை நாடாமல் பொல்லாத புலைகளிலேயே புரண்டு மாந்தர் மருண்டு உழலுவது மடமைக்கொடுமையாய் நிற்கிறது.

ஒழிந்தன காலங்கள்; ஊழியும் போயின;
கழிந்தன கற்பனை நாளும் குறுகிப்
பிழிந்தன போலத்தம் பேரிடர் ஆக்கை
அழிந்தன கண்டும் அறம்அறி யாரே. (1)

அறம்அறியார் அண்ணல் பாதம் நினையும்
திறம்அறியார் சிவலோக நகர்க்குப்
புறம்அறியார் பலர் பொய்ம்மொழி கேட்டு
மறம்அறிவார் பகை மன்னிநின் றாரே. (2)

முன்னை அறிவினில் செய்த முதுதவம்
பின்னை அறிவினைப் பெற்றால் அறியலாம்;
தன்னை அறிவது அறிவாம்; அஃது அன்றிப்
பின்னை அறிவது பேய்அறி வாமே. (3)

(திருமந்திரம்)

நல்ல தெய்வ அறிவையும் பொல்லாத பேய் அறிவையும் திருமூலர் இவ்வாறு விளக்கியிருக்கிறார். அறிய உரியதை அறிபவன் பெரிய ஞானி ஆகிறான்; அல்லாதவைகளை அறிபவன் எவ்வளவு வல்லவன் ஆனாலும் அல்லல்களையே அடைகின்றான்.

தன்னை என்றது ஆன்மாவை. தனது சுய சொரூபமான சீவனை அறிபவன் திவ்விய நிலையை எய்துகிறான் நான் என்னும் சொல்லுக்கு உரிய பொருள் உயிரே. அதனை மறந்து உடலையே கருதி ஊனநிலைகளில் இழிந்து உழல்வது ஞான சூனியமாய் வளர்ந்து வருகிறது. யான், எனது என மயலாய் மருவிவருகிற அகங்கார மமகாரங்கள் ஒழிந்த போதுதான் உயிர் உயர் கதி யுறுகிறது. மாய மருள் நீங்கினார் தூய அருள் தோய்கின்றார்.

பிரயாகை அயலே ஒருமுறை இருபதினாயிரம் பேர்கள் கூடிய பேரவையில் போதிமாதவன் போதனை புரிந்தான். அந்த ஞான

சிலாத அமுத மொழிகளை அனைவரும் ஆவலோடு கேட்டு நின்றனர். அப்பொழுது புத்தர் ஒரு கேள்வி கேட்டார். பிறவித்துயர்கள் நீங்கிப் பேரின்ப வீட்டை அடைய வுரியவன் இந்தக் கூட்டத்தில் யாராவது உண்டா? என்று விநயமா வினவினர். யாரும் பதில் கூற முடியாமல் எல்லாரும் மவுனமா யிருந்தார். முதிர்ந்த ஒரு கிழவர் எழுந்தார்: "நான் போனல் போகலாம்" என்று மொழிந்து நின்றார். யாவரும் வியந்து திகைத்தார். புத்தர் உவந்தார்; அந்தச் சொல்லின் பொருளைத் தெளிவாக்கி யருளினார். நான் என்னும் செருக்கு அடியோடு அற்றுப் போனல் அவன் பேரின்ப வீட்டுக்குக் குடிபோகின்றான்; இந்த உண்மை வண்மையாய் ஈண்டு உணர வந்தது என்று உணர்த்தியருளினர்.

மையலான மாயமருள்கள் ஒருவிய அளவு தூய இன்பங்கள் பெருகி வருகின்றன. புலையான நிலையில் புலன்களால் அனுபவிப்பன இனிய சுகங்கள் போல் தோன்றினும் அவை கொடிய துக்கங்களே; உள்ளம் தூய்மையாய் வருவது உயர் பேரின்பமாம்.

அழிவில்லாத அதிசய ஆனந்தத்தை அடைவதே விழுமிய அறிவின் பயனும். தெளிவான ஞானஒளியில் அது வெளியாகிறது. புனித உணர்வு தோய்ந்து பூரண சுகம் தோய்க.

---

983. ஈனத் தொடர்புகள் ஏறு தயல்நீக்கி
ஞானத் தொடர்பை நயந்துமே—மோனத்தைப்
பேணி வருக பெரிய மகிமைகள்
காண வருமே கனிந்து. (ந)

இ—ள்.

இழிவான ஈனத்தொடர்புகள் படியாமல் ஒதுங்கி உயர்வான ஞானச் சார்புகளை நயந்து மோனத்தைப் பேணிவருக; அவ்வாறு வரின் அரிய மகிமைகள் இனிது பெருகி வரும் என்க.

இழிந்த இயல்புகளும், இழிவான இனங்களும் ஈனம் என வந்தன. நல்ல மனத்தாலும், நல்ல இனத்தாலும் மனிதன் உயர்ந்து நலம் பல பெறுகின்றான். இனமும் மனமும் தீயனவாயின் தீமைகளே நேர்கின்றன. சுற்றிச் சூழ்ந்துள்ள சூழல்களின் படியே மனிதனுடைய வாழ்வுகள்வாய்ந்து வருகின்றன.

உயர்ந்த நிலைகளை அடைய நேர்ந்தவன் தாழ்ந்த இனங்களைச் சாரலாகாது. தூய மனம் உடையவர் தீய இனங்களை வெறுத்து விலகி விடுகின்றனர். சித்த சுத்தி தெய்வீக நிலையை நோக்கி எழுதலால் அசுத்தங்களை அருவருத்து ஒதுங்குகிறது.

புனித நீர்மை எவ்வழியும் செவ்விய தனிமையையே நாடுகிறது; அந்தத் தனிமையில் அரியபல இனிமைகள் விளைகின்றன.

துறவிகள் ஆன்ம சிந்தனையாளராய் இறைவனோடு உறவு கொள்ளும் இயல்பினர் ஆதலால் உலகப்புலைகளை ஒருவி ஒதுங்கித் தனியே வாழ நேர்கின்றனர். தனிமையில் இனிமை காண்பது புனித போகமாய்ப் பொங்கி வருகிறது. மெய்யுணர்வு மேலான நிலைகளையே எவ்வழியும் செவ்வையாய் மேவி மிளிர்கிறது.

உரிய பரம்பொருளைப் பிரிந்து கொடிய பிறவித் துயரங்களில் அழுந்தி நெடிது உழந்து வருகிற அந்த அவல நிலையை உணர்ந்து உள்ளம் வருந்துவர் ஆதலால் பரமனை நினைந்து நினைந்து நெஞ்சம் கரைந்து அழுகின்றனர். எதையும் விரும்பாமல் எல்லாம் துறந்தவர் இறைவனை எண்ணிக் கண்ணீர் சொரிந்து அழுவது அந்தப் புண்ணியரது உண்ணீர்மையை உணர்த்தியுளது.

நீறு ஆர்த்தமேனி உரோமம் சிலிர்த்துளம் நெக்கு நெக்குச்
சேறுய்க்கசிந்து கசிந்தே உருகிநின் சீரடிக்கே
மாறுத் தியானம்உற்று ஆனந்தமேற்கொண்டு மார்பில்கண்ணீர்
ஆறுய்ப் பெருகக்கிடப்பது என்றோ?கயி லாயத்தனே! (1)

சினந்தனை அற்றுப் பிரியமும் தானற்றுச் செய்கை அற்று
நினைந்ததும் அற்று நினையாமையும் அற்று நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனியே இருந்து ஆனந்த நித்திரை தங்குகின்ற
அனந்தனில் என்றிருப்பேன் அத்தனே கயி லாயத்தனே! (2)
[பட்டினத்தார்)

முற்றத்துறந்த பட்டினத்தார் முழுமுதல் பரமனைக் கருதியுருகி அழுது புலம்பியிருப்பதை இவை விழிதெரிய விளக்கியுள்ளன. தன்னம் தனியே இருந்து ஆனந்தம் அனுபவிக்கும் அமைதியை ஆண்டவனிடம் இவர் வேண்டியிருப்பது ஈண்டு ஊன்றி உணர்ந்து ஓர்ந்து தெளிந்து கொள்ளவுரியது.

உலக வாழ்வு யாதும் நிலையில்லாதது; தீதான புலைகளையுடையது; யாண்டும் துயரங்களே நீண்டு நிறைந்தது என்று

ஞானிகள் நன்கு தெளிந்து கொள்ளுகின்றார்; கொள்ளவே நிலையான பரம்பொருளை நினைந்து உள்ளம் உருகி மறுகுகின்றார்; அந்த உருக்கத்தில் கண்ணீர் வெள்ளம் பெருக்கெடுத்து வருகிறது. சிந்தை உருகி மொழிகிற அந்த உரைகளில் அரியபல உண்மைகள் உரிமையாய் வெளியே தெரிய வருகின்றன

*ஐந்துவகை ஆகின்ற பூதபே தத்தினால்*
*ஆகின்ற ஆக்கை நீர்மேல்*
*அமர்கின்ற குமிழிஎன நிற்கின்றது என்னநான்*
*அறியாத காலம் எல்லாம்*
*புந்திமகி ழுறவுண்டு உடுத்து இன்பம் ஆவதே*
*போந்தநெறி என்றிருந்தேன்;*
*பூராய மாகநினது அருள்வந்து உணர்த்த இவை*
*போனவழி தெரிய வில்லை;*
*எந்தநிலை பேசினும் இணங்கவிலை அல்லால்*
*இறப்பொடு பிறப்பை யுள்ளே*
*எண்ணினால் நெஞ்சது பகீர்எனும் துயில்உறாது*
*இருவிழியும் இரவு பகலாய்ச்*
*செந்தழலின் மெழுகான தங்கம்இவை என்கொலோ*
*சித்தாந்த முத்தி முதலே!*
*சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே*
*சின்மயா னந்த குருவே!*

[தாயுமானவர்]

தாயுமானவருடைய அனுபவ நிலைகளை இது இனிது காட்டியுள்ளது. மெய்யுணர்வு தோன்றுமுன் பொய்யான புலைகளைப் போற்றியிருந்ததும், ஞானம் உதயமான பின் அந்த ஈனங்கள் எல்லாம் போனவழி தெரியவில்லை என்று வியந்து விளம்பியுள்ளதும் நினைந்து சிந்திக்கத் தக்கன. உயிர் பரங்களின் உறவும், பிறவித் துயரும், பிறவா நிலையில் விளையும் பேரின்ப விளைவும் இங்கே தெரிய வந்தன. நீர் மேல் குமிழிபோல் நிலையில்லாத மாய வாழ்வை நம்பி மயங்கி இழியலாகாது என்று உலகம் தெளிய உணர்த்தியிருக்கிறார். உணர்வுரை நுணுகிய நிலையது.

All that we see or seem
Is but a dream within a dream. (Edgar)

நாம் காணுகிற எல்லாம் ஒரு கனவுள் கனவே என இது குறித்துளது. மாய வாழ்வுகள் மனம் தெளிய வந்தன.

நிலை இல்லாத பொய் வாழ்வுள் நிலையான மெய்யை உணர்ந்து கொள்வோரே மேலோராய் உய்தி பெறுகின்றார். புலையான புல்லரோடு கூடாதே; உள்ளம் தூயவரோடு உறவுகொள்; தனியே இருந்து சிந்தனை செய்துபார்; எதையும் தெளிவாத் தெரிக; அது புனிதமான ஞானமாய் இனிமையை விளைக்கும்.

984 இன்ப மயமாம் இறையை மருவியுறின்
துன்பம் முழுதும் தொலையுமே—இன்ப
நிலையை அறிந்து நினைவில் உயர்ந்து
தலைமை யுறுக தனித்து. (ச)

இ—ள்.

இன்ப மயமான இறைவனை மருவிவரின் துன்பம் முழுவதும் தொலைந்துபோம்; எவ்வழியும் இன்பமே விளைந்து வரும்; அந்த அதிசய ஆனந்த நிலையை விரைந்து பெறுக என்பதாம்.

அகில சராசரங்களுக்கும் தலைமையாய் ஒரு பொருள் நிலவியுள்ளது. அது ஒன்றுதான் என்றும் நிலையானது; நித்திய சத்தியமாய் நிலைத்து யாண்டும் ஆனந்த மயமாய் அமர்ந்திருக்கிறது. சூரியனிடமிருந்து ஒளி பரந்து வருதல்போல் அந்தப் பரஞ்சோதியிடமிருந்தே சகல சீவகோடிகளும் தோன்றியிருக்கின்றன: பிரிந்துபோன உயிரினங்கள் மாசுபடிந்தமையால் ஈசனை அடையமுடியாமல் அயலே கடையாய் அலைய நேர்ந்தன. அல்லலும் அவலமும் எல்லையில்லாதனவாய் எங்கும் பொங்கிவர இழிந்து நிற்கின்றன. இழி நிலைகள் பழிவழிகளால் வந்தன.

சீவர்கள் அடைகிற துயரங்கள் யாவும் தீவினைகளால் விளைந்தனவே. நினைவும் சொல்லும் செயலும் நல்ல வழிகளிலேயே பழகி வந்தவர் எல்லா நிலைகளிலும் இன்பங்களை எய்துகின்றார்; பொல்லாத புலைகளில் பழகினவர் யாண்டும் அல்லல்களையே அடைகின்றார். வினைகளின் விளைவை ஞானிகள் நன்கு தெரிந்துகொள்ளுகின்றனர்; கொள்ளவே உள்ளம் உரை செயல்களை ஒருங்கே அடக்கி உயர்ந்த பேரின்ப நிலையைப் பெறுகின்றனர்.

உள்ளம் உரை செயல்
உள்ளஇம் மூன்றையும்

உள்ளிக் கெடுத்து இறை
உள்ளில் ஒடுங்கே. (திருவாய்மொழி, 1, 2-8)

தம்முடைய மனம் மொழி மெய்களை ஒடுக்கி நம்மாழ்வார் பரமனோடு ஒருமையாய் மருவியிருந்துள்ளமையை இவ்வுரையால் உணர்ந்து கொள்ளுகிறோம். தனிமையில் ஒதுங்கி இனிமையை நுகர்ந்த தவயோகிகளில் இவர் தலைசிறந்து நிற்கின்றார். இவரது ஆன்ம அநுபவம் அதிசய மேன்மை யுடையது.

புலன் நுகர்ச்சிகளான அருந்தல் பொருந்தல்களிலேயே உலக மாந்தர் இன்பங்களைக் கண்டு வருகின்றனர்; பசி காமம் என்னும் இருவகை நோயால் எவ்வழியும் சீவர்கள் வருந்தி வருதலால் அந்தப் பிணிகளுக்கு மருந்துபோல் அருந்தல் பொருந்தல்கள் அமைந்திருக்கின்றன. நோய்க்கு மருந்தாய் நேர்ந்தவைகளே இன்பங்கள் என்று வாய்க்கு மொழிய வந்துள்ளன.

பொறிநசை எவரையும் வெறியராக்கி விடுகிறது. விடவே பித்தர்களா யிழிந்து மக்கள் எங்கும் பேதைகளா யுழலுகின்றனர். நெறி நின்று பொறிகளை வென்றவர் தத்துவஞானிகளாய்த் தலைசிறந்து உத்தம நிலைகளை அடைந்து ஒளிமிகுந்திருக்கின்றனர்.

தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்;
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவன் அருளாலே. (1)

மனம்வாக்குக் காயத்தால் வல்வினை மூளும்;
மனம்வாக்கு நேர்நிற்கில வல்வினை மன்னா;
மனம்வாக்குக் கெட்டவர் வாதனை தன்னால்
தனைமாற்றி ஆற்றத் தகுஞானி தானே. (2)
(திருமந்திரம்)

ஞானிகளுடைய புனித நிலைகளை இவை இனிது காட்டியுள்ளன. தத்துவக் காட்சிகள் உய்த்து உணரத் தக்கன.

உலக ஆசைகளில் புலையாய் ஓடி யுழலும் அளவு வினைகள் நீடிவரும்; அதனால் எவ்வழியும் தொலையாத துன்பங்கள் தொடர்ந்து படர்ந்து அடர்ந்து உயிர்களை வதைத்து வருகின்றன.

கொடிய துயர்களின் விளைவுகளை ஞானிகள் தெளிவாய்த்

தெரிகின்றனர். தெரியவே பொய்யான புலைகளை ஒருவி மெய்யான நிலையில் மேவி நிற்கின்றனர். அந்த நிலையில் மேலான பேரின்பங்கள் விளைந்து வருதலால் அவர் உவந்து திகழ்கின்றார்

உயிரை விடாமல் பற்றி நின்ற துயர்கள்விட்டு ஒழியவே அது உயர் பரமாய் ஒளி மிகப் பெறுகிறது. தன் உயிர்க்கு நலமா உறுதியைச் செய்து கொள்பவன் உயர்ந்த மகானாய்ச் சிறந்து திகழ்கிறான். அங்ஙனம் செய்யாதவன் இழிந்த பேதையாய்க் கழிந்து ஒழிகிறான். உணர்வு ஒழிய உயர்வுகள் ஒழிந்தன.

மனிதப் பிறவி சிறந்த அறிவால் உயர்ந்து வந்துள்ளது அரிய அந்த அறிவுக்கு உரிய பயனை அடைந்து கொள்ள வேண்டும். எதை அடைந்தால் எல்லாத் துன்பங்களும் ஒருங்கே ஒழிந்துபோமோ அதை அடைவதே அறிவாம். அங்ஙனம் அடையாதுஒழியின் அது கடையாயிழிந்து வறிதேகடிது அழியும்.

கற்றதனால் ஆய பயன் என்? [குறள், 2)

அறிவினான் ஆகுவது உண்டோ? (குறள், 315)

கல்வியையும், அறிவையும் நேரே தூக்கி நிறுத்தி உலகத்தை நோக்கி இரண்டு கேள்விகளைத் தேவர் இவ்வாறு கேட்டிருக்கிறார். மதியுடைய மனிதன் பதில் கூற வேண்டும் என்பது விதி. சிந்தித்து உய்யுமாறு இந்தவாறு விந்தையாப் போதித்துள்ளார்.

வாலறிவன் ஆன இறைவனைக் கருதி யுருகுவதே கல்விக்குப் பயன்; சீவர்களுக்கு யாதும் இடர் புரியாமல் யாண்டும் இதம் செய்வதே அறிவுக்குப் பயன் என்பதை இவை தெரியச் செய்துள்ளன. நல்ல பயன்களை இழந்தபொழுது கல்வியும், அறிவும்பொல்லாத வழிகளில்புலையாடநேர்ந்துஇழிவுறுகின்றன.

உள்ளே கபட வஞ்சனைகளை நெஞ்சம் துணிந்து செய்து கொண்டு வெளியே நல்லவர்களைப் போல் நடிக்கின்ற பொல்லாதவர்களை எங்கும் பார்த்து இரங்கி வருந்துகின்றோம்.

தங்கள் கல்வியறிவைப் புலையான வழிகளில் செலுத்தித் தலைவர்கள் என்று களித்து வருகிற இவர் தமக்கும் பிறர்க்கும் தொலையாத தொல்லைகளையே விளைத்து வருகின்றனர். “கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்” என்று தாயுமானவர்

சொல்லியுள்ள பாடல் இப்பொல்லாதவர்களைக் காணும்போ தெல்லாம் நேரே காட்சியாய் ஞாபகத்துக்கு வருகிறது.

Since learned men had appeared, honest men were nowhere to be found. [Rousseau]

கல்வியாளர் தோன்றின பின்பு நல்ல யோக்கியமுள்ளவரை எங்கும் காணமுடியவில்லை என்று ரூசோ என்பவர் இவ்வாறு கூறியிருக்கிறார். அவர் கண்ட காட்சி நேரே சாட்சியாய் வந்தது.

இயல்பாகவே நல்ல உள்ளம் உடையவர் கற்ற கல்விதான் நலம் பல தருகின்றன; கெட்டவர் கற்றால் கேடும் செருக்குமே வளர்ந்து வருகின்றன. புல்லறிவு புலையாய் விரிகிறது.

Knowledge is proud that he has learned so much;
Wisdom is humble that he knows no more. [Cowper]

அதிகம் கற்றிருக்கிறோம் என்று செருக்குவது அறிவு; யாதும் அறியவில்லை என்று அடங்கியிருப்பது ஞானம் என்னும் இது ஈண்டு அறிய வுரியது. அறிவாளிக்கும் ஞானிக்கும் உள்ள வேற்றுமையை இங்கே நன்கு தெரிகிறோம். நூல்களைக் கல்லாமலே சிறந்த ஞானிகளாய்ப் பலர் உயர்ந்திருக்கின்றனர். கற்றும் கடையராய்ப் பலர் இழிந்து கழிந்து ஒழிந்து போயுள்ளனர்.

உள்ளம் புனிதமா யிருத்தலால் ஞானி வானசோதி போல் ஒளிவீசி நிற்கிறான். அவன் எதிரே கல்விமான்கள் மின்மினிகள் போல் மெலிந்து மழுங்கிப் புல்லிதாய் ஒழிகின்றனர்.

No man is the wiser for his learning; wit and wisdom are born with a man. (Selden)

தன் கல்வியால் எவனும் ஞானி ஆக முடியாது; விவேகமும் ஞானமும் மனிதனோடு கூடவே பிறந்து வருவன என இது குறித்துளது. இனிய இயல்பே புனித விவேகம் ஆகிறது.

இதமான மனநலம் உடையவனே மகானாய் வருகிறான். இதய பரிபாகத்தில் ஞானம் உதயம் ஆகிறது. உள்ளம் அன்பு கூர்ந்து பண்பாய் உருகிவரின் அங்கேயே இன்பம் பெருகி வரும்.

இரக்கம் கருணை என்பன ஞான நீர்மைகள். புல்லும் நோகாமல் தண்ணளி புரிந்து வருபவர் நல்ல புண்ணிய சீலராய்ப் பொலிந்து எவ்வழியும் திவ்விய தேசு மிகுந்து சிறந்து வருகிறார்.

மனம் கனிந்தவரின் மனிதன் புனிதனுய் உயர்ந்து வருகிருன். அது கொடுமையாளுல் அவன் மிருகமாய் இழிந்து போகிருன். நீர்மை அளவே மேன்மைகள் விளைகின்றன.

**Worse than a bloody hand is a hard heart. [Shelley]**

கொலைபுரிகிற கொடிய கையினும் கடினமான இதயம் மிகவும் கொடியது என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு அறிய வுரியது. இனிய இதயம் புனித மனிதனை அருளுகிறது.

மனம் தூய்மையாய் அமைந்தபோதுதான் தூய்மையான கடவுளை அடையமுடியும். அரிய பொருள் உரிய அருளால் உறுகிறது. உள்ளத்தைப்புனிதமா இனிமைஆக்கிஉயர்கதி காணுக.

---

985. காணும் உலகினின்று காணரிய பேரின்பம்
பூணும் மனிதர் புனிதராய்—மாணப்
பிறந்தபயன் பெற்றுப் பெருமகிமை பெற்ருர்
சிறந்தார் அவரே திகழ்ந்து. (ரு)

இ-ள்.

நேரே காணுகின்ற இந்த உலகில் பிறந்த மனிதர் யாரும் எளிதே காணமுடியாத பேரின்ப உலகை அடையவுரிய புனிதர் ஆயின் பிறந்த பயனைப் பெற்ற பெருமகிமையாளராய்ச் சிறந்து திகழ்வர்; அவரது காட்சி அற்புத மாட்சியுடையது என்க.

கண்டு கேட்டுக் கருதி உணரும் திறம் மனிதரிடம் தனியுரிமையாய் இனிது மருவி யிருக்கின்றது. காட்சி அளவிலேயே களித்து நின்று வாழ்நாளைக் கழித்து ஒழிபவரே வையகத்தில் கலித்து வருகின்றனர். மெய்யறியுடையராய் உய்தியை நாடுபவர் மிகவும் அரியராகின்ருர். சூறைக் காற்றில் அகப்பட்ட செத்தைகளைப்போல் மாயச் சுழல்களில் சிக்கி மக்கள் மாய்ந்து ஒழிகின்றனர். ஆவதை அறியாமல் சாவதையே அறிகின்ருர்.

அரிய பிறவிப் பயனை அறவே மறந்து வறிதே அழிந்து ஒழிவது பரிதாபங்களாய் விரிந்து வருகிறது. பிறந்தவர் யாவரும் இறந்து மறைந்து போகின்றனர். தாய் தந்தை மனைவி மக்கள் ஒக்கல் எனப் பக்கத்தே வந்தவர் எல்லாரும் செத்து ஒழிவதை நேரே கண்டிருந்தும் தம் உயிர்க்கு யாதொரு உறுதியும் காண

மல் மடமையாய் மாந்தர் மாய்ந்து போவது மாய மருளாய்த் தொடர்ந்து தீய பேயிருளாய் அடர்ந்து படர்ந்து நிற்கிறது.

நீ நாளும் இறந்து கொண்டே இருக்கிருய்! ஒவ்வொரு நிமிடமும் சாவு உன்னை நெருங்கிக் கொண்டே வருகிறது; வேகமாய்ச் சாகப் போகிருய்; சாகு முன்னரே உன் உயிர்க்கு ஏதேனும் ஓர் உறுதியைத் தேடிக் கொள்க என்று மனிதனுக்கு அழிவு நிலையைத் தெளிவாக நினைவுறுத்தவே நிலையாமை என ஒரு தலையாய குறிப்பை நூலோர் பலரும் வலியுறுத்தி வருகின்றனர். சாவை நினைவுறுத்தி வாழ்வைத் தெளிவுறுத்துகின்ருர்.

நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர் ஈரும் வாள்.
(குறள், 334)

காலத்தைக் கருதி யுணர்ந்து விரைந்து கதி காணும்படி இது காட்டியுள்ளது. நாள் உயிர் ஈரும் வாள் என்றது அது கழியுந்தோறும் ஆள் சாவதை அறிந்து ஆவதைத் தெளிந்து கொள்ள வந்தது. நாளை வாளா நினையின் வாழ்வு பாழாகாது.

ஊர்எலாம் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணம்என்று பேரிட்டுச்
சூறையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பு ஒழிந்தார்களே. (திருமந்திரம்)

மனித வாழ்வின் நிலைமையைத் திருமூலர் இவ்வாறு குறித்துள்ளார். இப்படி நிலையற்ற நிலையில் இருக்கின்ற நீ இறக்கு முன்னமே உயிர்க்குத் தலைமையான உறுதியைச் செய்து கொள்க என உரிமையா இனிய உய்தியை உணர்த்தியிருக்கிருர்.

கடுங்கால் நெடுவெளி இடுஞ்சுடர் என்ன
ஒருங்குடன் நில்லா உடம்பிடை உயிர்கள்.
(சிலப்பதிகாரம், 10)

சூறைக் காற்றின் எதிரே நீட்டிய விளக்கு அவிதல் போல் உயிர்கள் இறந்து மறைந்து போம் என இது விளக்கியுள்ளது. இறப்பு நிலையை இங்ஙனம் குறித்தது பிறப்பின் பயனை மறந்து போகாமல் விரைந்து பெற வேண்டும் என்று கருதியேயாம்.

Death is here and death is there,
Death is busy everywhere. [Shelley]

சாவு இங்கும் அங்கும் எங்கும் வேகமாயிருக்கிறது என்னும் இது இங்கே அறிய வுரியது. பிறந்து வருவதும் இறந்து போவதும் யாண்டும் நீண்டு தொடர்ந்து நடந்து வருகின்றன.

அழிவு நிலைகளை விழி தெரிந்தும் வழி தெரியாமல் இழிந்து உழலுவது ஈனமருளாய் விரிந்து நிற்கிறது. மரணத்தின் வாயிலேயே மனிதன் வாழ்ந்து வருகிறான்; வாழ்வு முடியுமுன் வந்த பிறவியின் பயனைச் சிந்தனை செய்து கொள்பவன் சிறந்த மகானாய் உயர்ந்து திகழ்கிறான். சிந்தியாதவன் சிந்தி அழிகின்றான்.

அறிய உரிய உறுதி நலனைத் தெளிவா அறிந்து கொள்வதே ஞானம் ஆகிறது. உடம்பு அழிந்து போவது; உயிர் என்றும் நிலையாய் நிற்பது; அது தலையான இன்ப நிலையை அடையும்படி ஆற்றி வருபவன் அதனைப் போற்றி வருகிறான். புனிதமான இனிய நினைவுகளும் நல்ல செயல்களும் புண்ணியங்களாய் வருதலால் அவையே ஆன்மாவுக்கு ஆன்ற துணையாய் யாண்டும் இன்பத்தை விளைத்தருளும். நல்ல வினைகளைச் செய்பவன் அல்லல்களை நீங்கி எவ்வழியும்செவ்வியனாய் இனிய சுகத்தை அடைகிறான்.

தாம்செய் வினைஅல்லால் தம்மொடு செல்வதுமற்று
யாங்கணும் தேரின் பிறிதுஇல்லை;---ஆங்குத்தாம
போற்றிப் புனைந்த உடம்பும பயன்இன்றே
கூற்றம்கொண்டு ஓடும் பொழுது. (நாலடி, 120

தன் உயிர்க்கு உறுதியாய் உடன் தொடர்ந்து வருவது தருமமே; அந்த அருமைத் துணையை விரைந்து உரிமை செய்து கொள்ளுக என மனிதனுக்கு இது இனிது போதித்துள்ளது.

இன்னமை நீங்கி இனிமை ஓங்க வேண்டின் யாண்டும் ஒருவன் இதமே கருதி வர வேண்டும். நல்லதே எண்ணி நலமே புரிந்துவரின் அதிசய இன்பங்கள் விதி முறையே விளைந்து வருகின்றன. விளைவு தெரிவதே விழுமிய விவேகமாம். துன்பத் தொடர்புகள் தொடாமல் ஒதுங்கி இன்ப விளைவை எய்தி மகிழுக.

மனமொழி புனிதமா மருவின் மாதவம்
இனமுடன் எதிர்வரும்; இனிமை எங்கணும்
நனவிலும் கனவிலும் நணுகும்; நன்மையாம்
நினைவிலே நிலையெலாம் நிலவு கின்றன.

———

986. உள்ளம் பரத்தோ டுறவுகொளின் பின்புலகின்
எள்ள லுறும் வாழ்வே தும் எண்ணுனே—தெள்ளமுதம்
உண்டோன் புளிங்காடி உண்ண உறுவானே
கண்டோனும் அத்தகையே காண். (சு)

இ-ள்.

தனது உள்ளம் உயர்ந்த பரத்தோடு தோய்ந்தவன் பின்பு எள்ளலான இழிந்த வாழ்வுகளை எண்ணுன்; தெளிந்த அமுதத்தை உண்டவன் கழிந்த புளிங்காடியை உண்ண நேரான் என்க.

இதயம், மனம், உள்ளம் என்பன அறிவு, மதி, உணர்வுகளுக்கு முறையே கரணங்களாயுள்ளன. இவை இனிமையாய் அமையின் அந்த மனித வாழ்வு புனித நிலையில் பொலிந்து விளங்கும். புறத்தே தெரிகின்ற உயர்வு தாழ்வுகளுக்கு எல்லாம் உரிமையான மூலகாரணங்கள் அகத்தே மருவியுள்ளன. வித்தும் வேரும் மரமும் போல் மனமும் நினைவும் மனித நிலையும் இனமா இசைந்திருக்கின்றன. உள்ளமே மனித உலகமாயுள்ளது.

நல்ல தெளிவான மனம் உடையவன் எல்லா நலங்களையும் எளிதே அடைந்து கொள்கிருன். உள்ளம் தெளிந்த பொழுது உண்மை நிலைகளை அது நன்கு உணர்ந்து கொள்கிறது. செல்வம் முதலிய வளங்கள் பலவும் நிறைந்து உலக வாழ்வு எவ்வளவு உயர்ந்ததா யிருந்தாலும் நிலை இல்லாதது; விரைந்து அழிந்து போவது என்று தெளிந்து கொள்வதையே ஞானம் என்று நாம் வழங்கி வருகிறோம். மெய்யறிவு இவ்வழி மையல் விரிகிறது.

அறிய வுரியதை அறியாமல் அவமே மருண்டு மயங்கியிருப்பது அஞ்ஞானம் என வந்தது. மடமையான இந்த மருளே பிறவித் துயரங்களுக்கு ஏதுவாய் நின்றது. தேக போகங்கள் சோகமே தருவன என்று தெரிந்தும் அவற்றையே மீண்டும் மீண்டும் விழைந்து நுகர்ந்துமாண்டு மடிந்து ஓயாத துன்பங்களைத் தோய்ந்து தோய்ந்து சீவர்கள் துடித்து உழலுகின்றனர்.

கையினுல் அறையுண்ணும் பந்துபோலக்
காலனுல் அறையுண்டு கணக்கிலாத
மெய்யிலே புகுந்தலுத்து விவேகம் பெற்றும்
விரகிலார் சிலர்பிறப்பில் மீண்டும் வீழ்ந்தார்;
மையினுல் மூன்றுலகாம் பணதி செய்து

வருகிற்கும் போமாகி வளர்ந்து வாளாப்
பொய்யினல் மிகவிரியும் வேலை யூடே
பொருதிரைபோல் பரபதத்தே புரிந்தமாயை. (1)

பேதமுறு புந்தியே மாயை ஆகும்
பெரிதுவருந் தியுமிதனைப் போக்கல் வேண்டும்;
போதமுறு பேற்றினல் அன்றி மாயைப்
பொருநதியின் கரைதோன்ருது; பொருந்தத்தோன்றில்
ஏதமறும் அப்பதமே இறவா வீடாம்;
இம்மாயை பிறப்பிடம்ஏது என்ன வேண்டாம்
சேதமுறக் கொல்வழிஏது என்று தேர்வாய்
சிதைவுற்ருல் இதன்இயல்பு தெரியுமன்றே.
(ஞானவாசிட்டம்)

காலால் உதைபடும் பந்துபோல் காலனல் அடிபட்டுச் சீவ கோடிகள் தீராத துயரங்களில் உழந்து வருகின்றன; மெய் யுணர்வினல் மையல் தெளிந்தபோதுதான் வெய்ய துயரங்கள் ஒழியும் என இவை விளக்கியுள்ளன. ஞான யோகிகளுடைய அரிய இனிய அனுபவ மொழிகள் நுணுகி உணர வுரியன.

பொய்யான உலகப் பொருள்களைப் பற்றி உழலும் ஆசை அற்றபோதுதான் மெய்யான பரம்பொருளை அந்த உள்ளம் நன்கு பற்ற நேர்கிறது. தன் உள்ளம் எதனேடு தோய்ந்து வருகிறதோ அதன்படியே மனிதன் வாய்ந்து வருகிருன். பொறி நசைகளில் விழுந்தால் வெறியனய் இழிந்து உழலுகின்ருன். புலையான அந்த ஆசை தொலையின் நிலையான ஈசனைக் கருதி யுருகி நிறை பேரின்பம் பெறுகிருன். உலக ஆசைகள் ஒழிந்தபொழுது மனிதன் மகான் ஆகின்ருன்; மகாதேவனேடு உறவாய் மகிமை கள் உறுகின்ருன். மையலான புலைகள் ஒருங்கே ஒழியவேண்டு மாளுல் மெய்யான ஞானம் தலையெடுத்து மேலே வரவேண்டும்

ஐயுணர்வு அடக்கிய மெய்யுணர்வு அல்லதை
உவாக்கடல் சிறுக உலகெலாம் விழுங்கும்
அவாக்கடல் கடத்தற்கு அரும்புணை இன்றே;
வலனுயர் சிறப்பிற் புலியூர்க் கிழவ! நின்
அருள்பெற்று உய்தற்கு உரியன் யான்எனின்
பல்லுயிர்த் தொகுதியும் பவக்கடல் அழுந்தி
அல்லல் செய்யும் அவாஎனப் படும்அவ்
வறுமையின் நின்றும் வாங்கி

அறிவின் செல்வம் அளித்தருள் எனக்கே.

[சிதம்பரமும்மணி 26]

ஆசை கொடிய துயரங்களை விளைக்கும்; நெடிய நீசம் உடையது; அதனை அடியோடு நீக்கி என்னைக் காத்தருள் என்று ஈசனைநோக்கிக் குமரகுருபரர் இவ்வாறு வேண்டியிருக்கிறார்.

உடலோடு கூடி வாழ்வது எவ்வழியும் துன்பமே; அருந்தல் பொருந்தல்களில் சிறிது சுகம்போல் தோன்றினும் அது உண்மையான சுகம் அன்று. தீ பற்றி எரியும்போது கொஞ்சம் தண்ணீர் வார்ப்பதுபோல் பசித் தீ காமத் தீக்களுக்குப் பொறி நுகர்வு சிறிது ஆறுதல் தருகிறது. துன்பம் கொஞ்சம் ஓய்ந்துள்ளதையே இன்பம் என்று மையலாய் கருதுகின்றனர்.

Pleasure is nothing else but the intermission of pain.

[Selden]

துன்பம் சிறிது இடையே ஓய்ந்திருப்பதைத் தவிர இன்பம் என வேறு யாதும் யாண்டும் இல்லை என்று இது குறித்துளது.

மனம் அடங்கி அகமுகமாய் ஆன்ம சிந்தனை செய்துவரின் மேன்மையான இன்பம் அங்கே மேவி வரும். பரமான்மா ஆனந்த மயமான பொருள் ஆகலால் அதனைக் கருதி வருவதில் அரிய ஆனந்தம் பெருகி வருகிறது. சித்த சாந்தியே சிறந்த பேரின்பமாம். அகத்தில் அமைதி இல்லையேல் அல்லலே யாம்.

There is no joy but calm. (Tennyson)

மன அமைதியைத் தவிர மகிழ்ச்சி வேறு இல்லை என டென்னிசன் என்னும் ஆங்கிலக் கவிஞர் இங்ஙனம் கூறியிருக்கிறார். உன் உள்ளத்தைப் புனிதமாக்கிப் பரம புனிதனை இறைவனைக் கருதி வருக; அது பேரின்ப வெள்ளமாய்ப் பெருகி வரும்; அவ்வரவே பிறவியின் பெரிய பயனும்.

987. அகரம்போல் எங்கும் அறிவாய் நிறைந்து
பகவன் விளங்கும் படியைத்—தகவோங்க
எண்ணிநின் றெவ்வுயிர்க்கும் இன்னருளைச் செய்தொழுகின்
மண்ணில் அவன்வாரான் மற்று (எ)

இ-ள்.

அகர உயிர்போல் இறைவன் எங்கும் நிறைந்துள்ளான்;

அந்த நிலைமையை உணர்ந்து எவ்வுயிர்க்கும் அருள் புரிந்து இனியனாய் வரின் அவன் பிறவி நீங்கிப் பேரின்பம் பெறுவான் என்க.

உயிர் இனங்களுக்கு ஆதாரமாயுள்ள நிலமண்டலத்தை உலகம் என்று சொல்லி வருகிறோம். கடல்களும் மலைகளும் சீவகோடிகளும் இதில் நிறைந்திருக்கின்றன. இதன் மேலே வானமண்டலம் தெரிகிறது. அங்கே சூரியன் சந்திரன் முதலிய ஒளிப் பிழம்புகள் வியப்புகளை விளைத்து விளங்கி நிற்கின்றன.

அண்ட கோடிகளின் நிலைகளையும் சீவகோடிகளின் வரவு செலவுகளையும் சிறிது கருதி யுணர்ந்தாலும் பெரிய அதிசய ஆச்சரியங்கள் தெரிய நேர்கின்றன காணுந்தோறும் கருதுந்தோறும் யாண்டும் யாதும் எல்லை காணமுடியாத காட்சிகளே எங்கும் விரிந்து பரந்து நிற்றலால் இந்த நிலைகளுக்கெல்லாம் தலைமையான பொருள் ஒன்று உண்டு என்று பண்டுதொட்டே மனிதன் கண்டு கொண்டான். யூகமாய்க் கருதிக் கொண்ட அந்தக் காட்சியில் விவேக ஒளிகள் எவ்வழியும் எதிர் வீசி வருகின்றன.

மனிதன் பிறக்கின்றான்; இருக்கின்றான்; சாகின்றான்.

இந்த மூன்று நிலைகளையும் நேரே கண்டவன் இவற்றிற்குத் தனித்தனியே கடவுளை உண்டு பண்ணினான். பிறத்தல் முதலிய மூன்றையும் முத்தொழில்கள் ஆக்கினான். படைத்தல், காத்தல், அழித்தல் என முறையே பெயர் கொடுத்தான். படைக்கும் கடவுள், காக்கும் கடவுள், அழிக்கும் கடவுள் என்று அமைத்துக் கொண்டு பிரமன் திருமால் சிவன் எனப் பெயர்களும் சூட்டினான். இன்னவாறு மனிதன் படைத்த படைப்பில் நின்று கடவுள் பலவகையிலும் காட்சி புரிந்து வருகிறார். இவ்வகையில் இவரைச் செவ்வையா அறிந்து தெளிவாய்த் தெரிந்து கொள்ள கலையுலகில் உவமைகள் பலவந்துள்ளன. அவற்றுள் அகரம் ஒன்று.

அகரம் முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு. (குறள், 1)

அகரத்தின் நிலைமையை எடுத்துக் காட்டி இறைவனுடைய தலைமையைத் தேவர் இவ்வாறு விளக்கி யிருக்கிறார். எங்கும் நிறைந்து எல்லாமாய் இருந்து அகில சராசரங்களையும் இயல்பா இனிது இயக்கி வருபவன் என்பதை இது துலக்கி நின்றது.

தன்னுழைப் பலவுயிர் தனித்தனி படைத்துப்
பரப்பிக் காட்டலின் பதுமன் ஆகியும்,
அவ்வுயிர் எவ்வுயிர் அனைத்தும் காத்தலின்
செவ்விகொள் கருமுகில் செல்வன் ஆகியும்,
கட்டிய கரைவரம்பு உட்புக அழித்து
நீர்நிலை தரித்தலின் நிமலன் ஆகியும்,
தருவும் மணியும் சங்கமும் கிடைத்தலின்
அரிமுதிர் அமரர்க்கு அரசன் ஆகியும்,
மூன்று அழல் நான்மறை முனிவர் தோய்ந்து
மறைநீர் உகுத்தலின் மறையோன் ஆகியும்,
மீனும் கொடியும் விரிதிணை ஐந்தும்
தேனுறை தமிழும் திருவுறை கூடலும்
மணத்தலின் மதிக்குல மன்னவன் ஆகியும்,
நவமணி எடுத்து நற்புலம் காட்டலின்
வளர்குறி மயங்கா வணிகன் ஆகியும்,
விழைதரும் உழவும் வித்தும் நாறும்
தழைதலின் வேளாண் தலைவன் ஆகியும்,
விரிதிரை வையைத் திருநதி சூழ்ந்த
மதுரையம் பதிநிறை மைம்மலர்க் களத்தன்.

[கல்லாடம், 11]

பிரமன், மால், சிவன், இந்திரன், அந்தணன், அரசன், வணிகன், வேளாளன் என இறைவன் அருள் புரிந்திருக்கும் நிலையைக் கல்லாடர் இங்ஙனம் கருதித் துதித்திருக்கிறார். பொருள் நிலைகளை உள்ளம் ஊன்றி உணர்ந்து கொள்ள வேண்டும். சிலேடை அணிகள் அரிய பல இனிய சுவைகளையுடையன.

எல்லாம் வல்ல பரம்பொருள் ஒன்று என்றும் நிலையாயுள்ளது. அதனைத் தங்கள் தங்கள் நிலைமைக்குத் தக்கபடியே மாந்தர் புனைந்து போற்றி வருகின்றனர். மேலான பரமனை உரிமையோடு நினைந்து வருபவர் மேன்மையான மகிமைகளை அடைந்து வருகின்றார். சார்ந்த சார்பு தேர்ந்த தெளிவாகிறது.

காணுகின்ற உயிரினங்களைக் கடவுள் உருவங்களாக் கருதிக் கருணை புரிந்து ஒழுகுவதே விழுமிய ஞானமாய் விளங்கி வருகிறது. சீவர்களுக்கு இதம் செய்து வருகிறவன் தேவகிருபையை எய்திச் சிறந்து திகழ்கிறான். தரும நலம் இருமையும் தருகிறது.

எவ்வுயிர்க்கும் எவ்வழியும் தண்ணளி புரிந்து வருபவர் புண்ணிய ஞானிகளாய்ப் பொலிந்து வருகிறார். ஞானமும் கருணையும் வானுயர் இன்பங்களை நேரே வளர்த்து வருகின்றன.

**When wisdom entereth into thine heart, and knowledge is pleasant unto thy soul. (Bible)**

உனது இதயத்தில் ஞானம் உதயமாகும் பொழுது உன் ஆன்மாவுக்கு அது பேரின்பம் ஆகிறது என்னும் இது இங்கே அறிய வுரியது. அறிவு தெளியவே ஆனந்த ஒளி வீசுகின்றது.

மெய்யுணர்வால் வையமையல் நீங்குகிறது; நீங்கவே மேலான இனிமைகள் தனியே விளைந்து ஓங்கி வருகின்றன

தத்துவ ஞானம் தனிமை இனிமையாய்ப்
புத்தமுத போகம் புரிதலால்---முத்தாந்த
ஆனந்த வாழ்வில் அமர்ந்து மகிழ்சிறந்து
மோனந் தழைந்துள்ளார் முந்து.

இனிமை விளைவுகளை இனிது தெளிந்து கொள்க.

---

988. கடலில் அலைகள் கலித்த திரைபோல்
உடலுயிர்கள் ஓங்கி ஒடுங்கும்—அடல்கொள்
பரத்தில் எனும்உண்மை பார்த்துத் தெளிந்து
வரத்தில் உறைக வரைந்து. (அ)

இ—ள்.

கடலில் அலைகள் கலித்து எழுந்து மறைதல் போல் உடல் உயிர்கள் பரத்தில் தோன்றி மறைகின்றன; இந்த உண்மையை உணர்ந்து உறுதி நலனைத் தெளிந்து உய்தி பெறுக என்பதாம்.

பலவகை நிலைகளில் பரந்து விரிந்து தோன்றுகிற உலக உயிர்களுக்கு உரிய மூல நிலையை இதில் உணர வந்துள்ளோம். காணுகின்ற காட்சிகளைக் கருதி ஓர்ந்து உறுதியான உண்மையை ஓர்ந்து உணர்ந்து தேர்ந்து தெளிவது உயர்ந்த ஞானமாம்.

யூக விவேகங்கள் மாய மோகங்களால் மயங்கி யிருக்கும் வரையும் மெய்யை உணர முடியாமல் தியங்கி நிற்கின்றன. மயக்கம் தெளிந்தால் மனித அறிவு புனித ஞானமாய்ப் பொலிந்து விளங்குகிறது. ஒளிமுன் இருள் போல் அதன் முன் மருள்கள்

ஒழிந்து போகின்றன; போகவே மெய்யான பொருளை அது நன்கு தெளிந்து மேலான நிலையை அடைந்து கொள்கிறது.

உலகில் தோன்றின பொருள்கள் யாவும் மறைந்து போகின்றன; மறைந்து போனவை மீண்டும் பிறந்து வருகின்றன; இவ்வாறு வருகிற உயிரினங்களுள் மனித மரபு மதிநலம் உடையதாய்ப் பெருகியுளது. எவ்வழியும் இன்ப நலங்களையே விருப்புகிறது; யாண்டும் உயர் நிலைகளையே நாடுகிறது; இயல்பான இந்த விருப்பமும் நாட்டமும் அது உயர்வான ஒரு பொருளிலிருந்து வந்துள்ள உண்மையை ஒளியாமல் வெளியிடுகின்றன.

இறைவன் ஒருவனே இன்ப மயமானவன்; என்றும் மங்காத துய நிலையினன்; ஒப்பு அற்ற உயர் பொருள்; அந்த ஆதிமூலப் பொருளிலிருந்தே அகில சீவகோடிகளும் தோன்றியுள்ளன.

அளவிடலரிய அலைகள் கடலில் எழுகின்றன; திரை, நுரை, குமிழி, தளி, திவலை என வேறு வேறு பேர்கள் பெறுகின்றன; மாறி அதிலேயே மடங்கி அடங்கி மறைகின்றன. அது போலவே சராசரங்களும் அகில உலகங்களும் பரமனிடமே தோன்றி ஒடுங்குகின்றன. ஆகவே ஆனந்தக் கடலா அது ஓங்கியுள்ளது.

பொருகடலில் திரைமுதலாய்ப் பிறந்த எல்லாம்
புனல்ஆகி விளங்காமல் புழுதி ஆமோ?
ஒருபொருளாம் பிரமமாத் திரமே அல்லால்
உபயம் எனும் கற்பனைப்பேர் ஒன்றும் இல்லை;
எரியிடத்தில் சூடுமாத் திரமே அல்லால்
இரண்டுஉண்டோ? அவ்வகைபோல் என்றும் ஒன்றும்;
சரியைகிரி யாயோகப் பதத்தின் முற்றிச்
சாதனங்கள் நிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும்.
(ஞானவாசிட்டம்)

ஒரு பொருள் ஆகிய பிரமத்திலிருந்தே பல வகையான சீவகோடிகளும் அண்டகோடிகளும் தோன்றியுள்ளன என்று காரண காரியங்களோடு இது காட்டியுள்ளது. வித்தக நிலையில் விளக்கியுள்ள தத்துவக் காட்சிகள் உய்த்து உணரத் தக்கன.

தன்னுளே திரைத்துஎழும் தரங்கவெண் தடங்கடல்
தன்னுளே திரைத்துஎழுந்து அடங்குகின்ற தன்மைபோல்

நின்னுளே பிறந்துஇறந்து நிற்பவும் திரிபவும்
நின்னுளே அடங்குகின்ற நீர்மை நின்கண் நின்றதே
(திருச்சந்தம், 10)

திருமழிசை ஆழ்வார் பரமனை இவ்வாறு துதித்திருக்கிறார்.

கடல் நீரில் திரைகளும் நுரைகளும் எழுந்து அடங்குதல் போல் இறைவனிடம் சராசரங்கள் தோன்றி மறைகின்றன என்றதனால் உலக உயிர் பரங்களின் நிலைகளை உணர்ந்து கொள்ளுகிறோம். ஒரு பரம் பொருளிடமிருந்தே அகிலமும் பிறந்துள்ளன.

சேய்களுக்குத் தாயும் தந்தையும் போல் சீவகோடிகளுக்கு ஈசன் அமைந்திருத்தலால் அம்மையப்பன் என அவருக்கு ஒரு பேர் அமைந்து நின்றது. "அம்மையே! அப்பா" என்று மாணிக்க வாசகர் ஆர்வத்தோடு அழைத்து உருகி யிருக்கிறார்.

தந்தை தாயும்நீ என்உயிர்த் துணையும்நீ சஞ்சலமது தீர்க்க
வந்த தேசிக வடிவுநீ உனை அலால் மற்றுஒரு துணைகாணேன்;
அந்தம்ஆதியும் அளப்பரும் சோதியே! ஆதியே அடியார்தம்
சிந்தை மேவிய தாயுமானவர்எனும் சிரகிரிப் பெருமானே.

இறைவனை நினைந்து தாயுமானவர் இவ்வாறு உருகி உரை யாடியிருக்கிறார். உணர்வு நலம் சுரந்து உள்ளம் கனிந்து உருகி வருதலால் உரைகள் தெய்வ மணம் கமழ்ந்து திவ்விய ஒளிகளை வீசிவருகின்றன. பரிபாகநிலைமொழிகளில்தெளிவாத்தெரிகிறது.

உரிய உறவு தெரியவே அரிய பரமனை ஞானிகள் கருதி மகிழ்கிறார். தாம் சேர்ந்த வண்ணமே சீவர்கள் சேர்ந்து வருத லால் ஈசனைச் சிந்தித்து வருபவர் தேசுமிகுந்து திவ்விய மகான் களாய்ச் சிறந்து திகழ்கின்றார். உள்ளம் உயர மனிதன் உயர் பரம் ஆகிறான். சீவாத்துமா, மகாத்துமா, பரமாத்துமா என் னும் தொடர்புகளிலுள்ள உறவுரிமைகளை ஓர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும். ஆன்ம நிலைகள் அதிசயம் உடையன.

புனிதமான உயர்ந்த சிந்தனைகளால் மனிதன் தெய்வமாய் மகிமை பெறுகிறான். மேலான மெய்ப் பொருளைத் தியானித்து வருதலால் யோகிகள், ஞானிகள், தவசிகள் தெய்வ இனங் களாய்த் தேசு வீசி நிற்கின்றார். அவர் நிலை அவன் கலை ஆகிறது.

உள்ளம் பரனை உருகியுறின் ஆனந்த
வெள்ளம் பரவும் விரிந்து.

இன்பமூர்த்தியைக் கருதி வருபவர் இன்ப வாரியில் மூழ்கி வருகிருர். மருவிய சிந்தனை வழியே மாந்தர் நேர்ந்து திகழ்கிருர்.

Through the contemplation of superhuman beauty mystics and poets may reach the ultimate truth. [Alexis Carrel]

மேலான தெய்வ நீர்மையைச் சிந்தித்து வருவதின் மூலம் முனிவர்களும் கவிஞர்களும் நிலையான மெய்ப் பொருளை நேரே அடைந்து கொள்கிருர்கள் என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்ள வுரியது.

உள்ளம் புனிதமாய் உயர்ந்தால் மனிதன் ஈசன் ஆகிருன்; அது பழுதா யிழிந்தால் நீசனய்ப் பாழ்படுகின்ருன். உயர்ந்த பரம் பொருளிலிருந்தே நீ வந்திருக்கின்ருய்; உனது உண்மை நிலையை உணர்ந்து நன்மைகளில் உயர்ந்து உய்தி பெறுக.

---

989 அண்டங்கள் கோடி அணுவாம் பரநிலையில்
கண்டங் குரிமை கவரும்நீ—துண்ட
விடக்கை விழைந்துழலும் வீண்நாய் எனவே
படக்கருதி ஓடல் பழி. (கூ)

இ-ள்.

அளவிடலரிய பெரிய அண்டங்கள் சிறிய அணுக்கள்போல் இறைவிடம் அடங்கியுள்ளன; அந்த அதிசய நிலையை உணர்ந்து தெளிந்து உயர்கதி பெறுக; அவ்வாறுபெருமல் இழிந்து உழல்வது பழியாம்; உனது விழுமிய நிலைமையை விழி திறந்து தெளிக.

தனது தலைமையையும் நிலைமையையும் உணர்ந்தபோதுதான் மனிதன் உயர்ந்து வருகிருன்; மறந்துவிடின் இழிந்து போகிருன்; உண்மையாக உணர வுரியதை உரிமையோடு உணர்வதே ஞானம் என வந்தது. அது வான ஒளியாய் மகிமை தருகிறது.

அறிவு மயமாய் ஆனந்த நிலையமாயுள்ள பரமனை அறிபவர் மெய்ஞ் ஞானிகளாய் மேலான கதிகளை அடைகின்றனர். தெளிந்த கண்ணுடியில் தன் உருவத்தைப் பார்த்து ஒருவன் மகிழ்வதுபோல் பரிசுத்தமான தன் உள்ளத்தில் பரமனை நோக்கி யோகி உவந்து திளைக்கிருன். உரிய ஆன்மாவில் அரிய பரமானை நோக்கிப் பெரிய மகான்கள் பேரானந்தம் அடைந்து வருகின்றனர். அவரது காட்சி அதிசய மாட்சியா ஒளிமிகுந்துளது.

உள்ளம் தூய்மையாய் உயிரை நோக்குபவர் பேரின்ப வெள்ளத்தில் மூழ்கிக் களிக்கின்ருர். வெளியே புலன்களில் இழிந்தவர் புலேயான பழி வழிகளிலேயே அழுந்தி இழி சுவை களேயே நுகர்ந்து அவலராய் அழிந்து ஒழிகின்ருர். பழகி வருகிற இழிபழக்கங்கள் எவ்வழியும் மனிதரைப் பாழாக்கி வருகின்றன

புறமே நோக்கிப் பொறி வெறியராய் உழல்பவர் அறிவிலி களாய் அவகேடுகளேயே அடைகின்ருர்; அக நோக்குடையவர் தத்துவ ஞானிகளாய் உயர்ந்து நித்திய சுக சீவிகளாய் நிலவி நிற்கின்ருர். வெளி விழைவால் இழி புலேகளே விளேகின்றன•

சகமுகமாய் ஓடிநீ சாகின்ருய் நெஞ்சே!
அகமுகமாய் நாடின் அமிர்தாம்---யுகமுடிவும்
காணுத பேரின்பம் கண்டு களிக்கலாம்
வீணய் விளியல் விரிந்து.

தன் நெஞ்சை நோக்கி ஒரு ஞான யோகி இவ்வாறு கூறி யிருக்கிருர். உலக நாட்டமாய் ஓடி உழல்பவர் உடலே வளர்த்து உயிரை அழிக்கின்ருர்; உணர்வு நாட்டமாய்க் கூடி நிற்பவர் உயிரைப் பரமா உயர்த்தி உய்தி பெறுகின்ருர். இவ்வுண்மையை எண்மையா இதில் கூர்ந்து ஓர்ந்து உணர்ந்து கொள்ளுகிருேம்.

சிறந்த மனிதப் பிறவியை அடைந்தவன் பிறந்த பயனேப் பெறவில்லையாளுல் அது பாழான சன்மமாய்ப் பழிபடுகின்றது.

உற்ற பிறவிக்கு உரிய பயன்ஓரின்
மற்ருேர் பிறவி மருவாமல்---பெற்ற
பிறப்பே இறுதியாப் பேரின்பம் காணும்
சிறப்பே பெறுக தெளிந்து.

மனிதப் பிறவிக்கு உரிய இனிய பயனே இது தெளிவா உணர்த்தியுள்ளது. அருமையான தன் உயிருக்கு உரிமையான இனிமையைச் செய்து கொள்ளாதவன் உலக வாழ்வில் எவ்வளவு பெருமையாய் உயர்ந்திருந்தாலும் பேதைப் பித்த ளுய் இழிந்து பிழைகளே மருவிச் சிறுமையே உறுகிருன்.

ஒரு பெரிய அரசன்; செல்வ வளங்களில் சிறந்து உயர்ந்த சுகபோகங்களே அனுபவித்து வந்தான். தேக போகங்களேயே சுகித்துக் களித்து ஆன்ம நலனே மறந்திருந்த அவன் இறந்து

போனான். அவனுடைய உடலைக் கொண்டுபோய் உரிய இடத்தில் தனியே புதைத்தார். ஆறு அடி அளவுள்ள குழியில் அவ்வுடல் ஆழ்ந்து மறைந்தது. "பெரிய நில மண்டலத்தை ஆண்டு வந்த வேந்தன் இப்படி மாண்டு மடிந்தான். கூடக் கொண்டு போனது ஒன்றும் இல்லையே!" என்று கண்டு நின்றவர் எல்லாரும் கருதி இரங்கினர். இறந்து போகின்றவரை எண்ணி யுணரும் போது மண்ணோரிடம் சிறந்த ஞானம் பிறந்து வருகின்றது.

எண்சாண் உடம்புக்கு இடமே மனிதனுக்குக்
கண்காண வந்துளது கண்டிருந்தும்---மண்காண
மூடி அலைந்தே ஒருபலனும் காணுமல்
வீடி அழிகின்ருர் வெந்து.

முடி சார்ந்த மன்னரும் பிடி சாம்பலாய், மடி மண்ணாய் மடிந்து மறைவதை அறிந்திருந்தும் பிறந்த பயனை அறியாமல் வீணே இழிந்து அழிந்து ஒழிவது வெய்ய மூடமாய் விரிந்துளது.

உற்ற உடல் ஒழியு முன்னர் உரிய உயிர்க்கு உறுதி நலனைத் தழுவிக் கொள்ளின் அவன் பெற்ற பிறவி பெருமகிமை அடைகிறது; அவ்வாறு தழுவாது ஒழியின் வழி வழியே அழி துயரங்களை விளைத்தவனாகிருன். அழிவு நிலை அறிவதே விழுமிய அறிவாம்.

உயிர் உயர் பரமனோடு உறவுரிமையுடையது; அவனுடைய பேரின்ப நிலையை இனிது பெறவுரியது; பழமையின் கிழமையை உணர்ந்து விழுமிய உரிமையை விரைந்து அடைந்து கொள்ளுக.

---

990. எல்லாம் உடையனாய் இன்பமீக் கூர்ந்திருக்க
வல்லாய் அதனை மறந்துநீ—பொல்லா
இழிநிலையில் ஓடி இளைகின்ருய் உன்னை
ஒழியவே றில்லை உணர். (ம)

இ-ள்.

நீ எல்லாம் உடையனாய் என்றும் இன்பம் நிறைந்திருக்க உரியவன்; உண்மையான அந்த உரிமையை மறந்து புன்மையாய் இழிந்து புலையாடி அலைகின்ருய்; புலை நிலை ஒழிந்து உனது தலைமையை உணர்ந்து உரிய தகைமையை அடைக என்பதாம்.

ஈசனும் சீவனும் அநாதி நித்தியமான உறவுகள் உடைய

வர். சூரியனும் சந்திரனும் போல் நேரிய நிலையினர். கதிர் ஒளியால் கண் ஒளி இலங்கி வருதல் போல் பரஞ்சோதியால் சீவசோதி துலங்கி வருகிறது. எங்கும் பரந்து நிறைந்துள்ள அவனைச் சீவர்கள் அறிந்தும் அறியாமல் மயங்கியுள்ளனர். கண்டவர் கண்டபடி எல்லாம் சொல்லிவர அவன் காட்சி புரிந்து வருகிறான்; உண்டு என்பவர்க்கு உளனாய் ஒளி புரிகிறான்; இல்லை என்பவர்க்கு இலனாய் எளிது மறைகிறான்.

பரமனுடைய நிலைமையும் தலைமையும் அதிசய விசித்திரங்களுடையன. எவரும் எவ்வழியும் தெளிவாக அறிய முடியாதன. அவரவருடைய நிலைமையின் அளவே அவனது அருளாடல்கள் வெளியாகின்றன. தெளிவான சிந்தை தெய்வ ஒளி ஆகின்றது.

கண்டார் கண்ட காட்சியும் நீ!
காணார் காணக் கள்வனும் நீ!
பண்டார் உயிர்நீ யாக்கையும் நீ!
பலவாம் சமயப் பகுதியும் நீ!
எண்தோள் முக்கட் செம்மேனி
எந்தாய்! நினக்கே எவ்வாறு
தொண்டாய்ப் பணிவர்? அவர்பணி நீ
சூட்டிக் கொள்வது எவ்வாறே? (1)

சூட்டி எனது என்று இடும் சுமையைச்
சுமத்தி எனையும் சுமையாளாக்
கூட்டிப் பிடித்து வினைவழியே
கூத்தாட்டினையே! நினது அருளால்
வீட்டைக் கருதும் அப்போது
வெளியாம் உலக வியப்பனைத்தும்
ஏட்டுக் கடங்காச் சொப்பனம் போல்
எந்தாய் இருந்தது என்சொல்வேன்? (2)

(தாயுமானவர்)

இறைவனுடைய அற்புத விளைதங்களைத் தாயுமானவர் இவ்வாறு விற்பன விவேகமா விளக்கியிருக்கிறார். உரைகளில் உணர்வு நலன்கள் ஒளி புரிந்துள்ளன. பொருள்களைக் கருதி நோக்குவோர் உயிர் பரங்களின் உறவுகளை நுணுகி உணர்ந்து கொள்வர். ஞான மொழிகள் வான ஒளிகளா மிளிர்கின்றன.

நினது அருளால் வீட்டைக் கருதும் போது உலக வியப்பு அனைத்தும் சொப்பனம் போல் இருந்தது என்றது ஈண்டு நினைந்து சிந்திக்கத்தக்கது. வீடு பெறுவது மெய்யுணர்வின் பேறாகிறது.

மனம் தூய்மை ஆனபொழுது மனிதன் மகானாய் வாய்மைகளைத் தெளிவாத் தெரிகிறான்; தெரியவே உலக உயிர்கள் உய்ய அறிவு நலங்களை அருளுகிறான். புனித போதனை இனிய அமிர்தம்.

மாசடைந்து மண்ணை மருவிநின்ற மாமணிபின்
தேசடையச் செய்யின் தெளிவுறல்போல்---பாசம்
மருவியுள்ள சீவன் மயக்கொழிந்தால் தேசு
பெருகி ஒளிரும் பெரிது.

புழுதி படிந்து மண்ணில் மறைந்து கிடந்த மாணிக்கமணி அந்த மாசுகள் நீங்கினபின் மன்னன் மணி மகுடத்தில் தலைமையாய் ஒளி பெற்று விளங்கும்; அது போல் உலக பந்தங்களில் அழுந்தி இழிந்து கிடந்த சீவன் பாசம் நீங்கினால் தேசு மிகுந்து ஈசனை அடைந்து எழில் மிகுந்து திகழும் என்பது இதனால் தெளிய வந்தது. மாசு ஒளிய ஈசன் வெளியாகிறான்.

புன்மையான மருள் ஒழிந்த அளவே உண்மையான பொருள் தெரிய நேர்கிறது. நேரவே உரிமையை அடைந்து பெருமை மிகப் பெறுகிறது. மெய்யை உணராமையால் வைய மையல்கள் விரிந்து பரந்து வெய்ய துயரங்கள் விளைந்து வந்துள்ளன.

உள்ளம் தெளிந்தால் உறுதி நலம்உணர்ந்து
கள்ளம் கழிந்து கதிகாணும்---உள்ளமே
யாவும் அருளும் அதுபுனிதம் ஆயினதேசு
தேவும் வெளியாம் தெளி.

மனத்தின் மகிமையை இது உணர்த்தியுள்ளது. மனம் மாசு படியாதிருந்தால் அங்கே ஈசன் குடிபுகுந்து அருளுகிறான்.

இறைவனுடைய இனிய இனமான நீ மனிதன் என வந்திருக்கிறாய்; செய்த வினைகளால் பிறவிகள் எய்த நேர்ந்தன.

எண்ணில்லாத பிறவிகளில் பிறந்து கண்ணில்லாத குருடன் போல் யாதொரு உண்மையும் காணாமல் மண்ணாய் மடிந்து போயினாய்; மீண்டும் மீண்டும் அவ்வாறே மாண்டு மாண்டு மறைந்து தொலைந்து ஈண்டு இந்த உருவை எடுத்து வந்துள்ளாய்;

கை கால் முதலிய அவயவங்களோடு தேகம் தெரிய வருகிறது; உள்ளே உணர்வு மயமான சீவ சோதி மேவி யுளது. வெளியே கூடியுள்ள கூட்டையே நான் நான் என்று கோட்டி கொண்டு குலாவுகின்றாய்; குலம், செல்வம், கல்வி முதலிய நிலைகளையே நினைந்து செருக்கி வீணே நிலைகுலைந்து திரிகின்றாய்; புலையான இந்தப் புன்மைகளை ஒழிந்து நிலையான உண்மை தெளிந்து என்றும் நித்தியமான நன்மைகளை நன்கு அடைந்து கொள்க.

தூய்மையான பரமனுடைய உரிமையான உறவுநீ; உனது மெய்யான நிலைமையை உணர்ந்தால் மேலான தலைமை வெளியாம்; உன் உள்ளத்தைப் புனிதம் ஆக்கு; உயர்ந்த சிந்தனைகளை ஓர்ந்து செய்; பேரின்ப வெள்ளத்தை நீ நேரே காணலாம்.

தனிமையில் அமர்ந்துநீ தன்னை நோக்கினால்
துனிமையல் ஒழிந்துபோம் தூயன் ஆகுவாய்!
இனிமைகள் பொங்கியே எங்கும் நேர்வரும்
அனையபே ரின்பினை அடைந்து வாழுக.

ஊன்றி உணர்ந்து ஓர்ந்து சிந்தித்து வரும் அளவே மனிதன் உயர்ந்து வருகிறான். உணர வுரியதை உணர் பவரே உண்மை ஞானிகளாய் உயர் கதி யுறுகிறார். மதிதெளியக் கதி தெரிகிறது.

தனது ஆன்ம நிலையைக் கருதாமல் அயலே மயலாய்க் கண்டு களிப்பன எல்லாம் கடுவெறிகளாய் விரிந்து நெடு மூடங்களாகவே நீண்டு நிற்கின்றன. அல்லல்கள் நீங்கி ஒழிய ஆய்ந்து காண்பதே நல்ல காட்சியாய் ஓங்கி நலம் பல அருளுகிறது.

தன் சீவனைக் காண்பவன் தேவனைக் காண்கின்றான். உரிமையான பொருளைக் கண்டவன் அரிய பல மகிமைகளைக் கண்டு அதிசய இன்பங்களை அடைந்து துதிகொண்டு திகழ்கிறான்.

மனிதன் இயல்பாகவே இனிமைகளை நாடுகிறான்; அவை நேரே வருகிற வழியை அறியாமல் அயலே மயலாய்ப் போகின்றான். மையல் வாழ்வுகள் வெய்ய தாழ்வுகளையே விளைத்து வருகின்றன. துன்ப விளைவுகள் தெரியாமல் இன்பமாக் களிப்பது இழி மடமை யாகிறது. மாய மருள் ஒழியின் தூய வழி தெரியும்.

தன் உயிர்க்கு உறுதி காண்பவனே உத்தம மேதை ஆகிறான். தெளிவான அறிவும் விழுமிய சீலமும் தெய்வ ஒளி களாய்த்

தேசு மிகுந்துள்ளன. மாசு படியாத மனம் ஈசனுக்கு இனிய இடம் ஆகின்றது; ஆகவே அதன் தனி மகிமை தெரியலாகும். புனித மனம் உடையவரே முனிவர் என நேர்ந்துள்ளனர்.

தன் உள்ளத்தைத் தூய்மையாப் பேணி வருபவன் எல்லா மேன்மைகளையும் எளிதே எய்தி மகிழ்கிறான். சித்த சுத்தியுடையவன் தத்துவ ஞானியினும் உத்தம முத்தனாய் ஒளி மிகுந்து நிற்கின்றான். உரிய இதயம் இனியது ஆனால் அரிய இனிமைகள் யாவும் அங்கே உதயம் ஆகின்றன. எல்லா நன்மைகளுக்கும் மூலமாயுள்ளமையால் மனநலம் மனிதனுக்கு அதிசய பாக்கியமாய்த் துதி மிகப்பெற்றது. உயிரின் உயர்வு உள்ளத்திலுள்ளது.

**Keep thy heart with all diligence; for out of it are the issues of life. (Bible)**

உள்ளத்திலிருந்தே உயிர்க்கு உயர் நலங்கள் உளவாகின்றன; ஆதலால் உன் இதயத்தை எவ்வழியும் புனிதமா இனிது பேணுக என்னும் இந்த ஆங்கில வாசகம் ஈங்கு அறிய வுரியது.

துன்பம் நீங்கி மனிதன் யாண்டும் இன்பம் அடைய வேண்டுமானால் அவனுடைய மனம் பழுது படாமல் எவ்வழியும் விழுமிய நிலையில் புனிதமா யிருக்க வேண்டும். இதயத்தின் இனிய தூய்மையிலிருந்தே ஞானம் உதயமாய் வான சோதி போல் வயங்கி வருகிறது. சீவன் ஆதிபகவனுடைய ஞாதி என்பதை ஞானம் காட்டி யருளுகிறது. அத்தகைய வித்தக விவேகமும் சித்த சுத்தியால் சிறந்து திகழ்தலால் இதன் உத்தம சித்தியை உணர்ந்து கொள்ளலாம். இனிய மனம் இன்பநிலையம் ஆகிறது

மந்திரி எனலாம் உண்மை மருவுறும் விசாரத்தாலே;
இந்திரி யங்கள் என்னும் இடர்ப்பகை அறுத்த லாலே
தந்திரி எனலாம்; இட்டம் சமைத்தலால் ஏவல் ஆளாம்;
மொந்திரி கிலாத உள்ளம் நோக்கிய விவேகத் தோர்க்கே. (1)

ஆலிக்கும் இன்பத் தாலே அன்புறு மனைவி ஆகும்;
பாலிக்கும் இயல்பி னாலே பாவன தந்தை ஆகும்;
சீலிக்கும் உறுதி யாலே தேடரு நட்பும் ஆகும்;
தூலிக்கும் வினைகள் இல்லாத் தூய்மனம் விவேகத் தோர்க்கே.
(ஞானவாசிட்டம்)

இனிய மனமும் அரிய விவேகமும் இங்கே தெரிய வந்துள்ளன. உண்மையை விசாரித்து உறுதி கண்டு உதவி புரிதலால் உயிர்க்கு மனம் மந்திரி போல் மருவியுள்ளது; புலன்கள் ஆகிய பகைகளை வென்று நலம் பல புரிதலால் சேனதிபதி போல் சிறந்து நிற்கிறது; அமைதியாய் இனிய சுகம் தருதலால் மனைவி போலவும், யாதொரு தீதும் நேராமல் பாது காத்து வருதலால் தந்தை போலவும் தாய் போலவும் நண்பன் போலவும் நல்ல மனம் உள்ளது. அந்த உண்மையைச் சுவையா இவை உணர்த்தியுள்ளன.

தீய அழுக்குகள் படியாமல் மனம் தூயது ஆனல் அதிலிருந்து ஞான ஒளி வீசுகிறது; தெளிவான அந்த ஒளியில் எல்லா உண்மைகளும் எளிதே தெரிய வருகின்றன. ஈசனுடைய இனிய இனமே சீவன் என்று தெளிவாய் அறிகிறது; அறியவே அதிசய ஆனந்தம் அடைகிறது. பேரின்ப நிலையமாய்ப் பெருகியுள்ள பரமான்மாவினுடைய வரமான உறவே ஆன்மா; அந்த உரிமையை உணர்ந்து உறுதி நலம் தெளிந்து உயர் கதி யுறுக.

சீவன் என்னும் சிறுமை ஒழிந்துஉயர்
தேவன் என்னும் தெளிவு வெளிவரின்
ஏவல் உன்வழி யாவும் எதிர்வரும்
மேவும் முத்தியின் மெய்த்திரு மெய்ம்மையே.

இந்த உண்மையை ஓர்ந்து தேர்ந்து உயர்ந்து கொள்ளுக.

இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு.

இனிமை என்பது புனிதநிலையில் விளைவது.
ஞான சீலம் தோய்ந்தது.
மோன நீர்மை வாய்ந்தது.
இறைவன் உறவாய் வருவது.
பிறவி நீங்கப் பெறுவது.
பரமன் அருள் படிந்தது.
சீவ கருணை செறிந்தது.
தேவ நிலைமை தெளிந்தது.
பிழைவழிகள் ஒழிந்தது.
பேரின்பம் நிறைந்தது.

கூகூ—வது இனிமை முற்றிற்று.

# நூறுவது அதிகாரம்.

## வீடு

அஃதாவது பேரின்ப நிலையமான முத்தித் தலம். துறவு தவங்களை யுடைய ஞானிகள் அடைய வுரியது ஆதலால் இறுதியில் வைக்கப் பட்டது. முடிவில் இன்பம் உடையது முடிவில் நின்றது. அதிசய ஆனந்த உலகம் மதி தெளிய வந்தது.

991. என்றும் நிலையான இன்பம் கருதியே
ஒன்றி உயிர்கள் உலாவுமால்—நன்றென்று
தொட்டதெல்லாம் பந்தம் துயராய்த் தொடருதலால்
விட்டது வீடு விடு. (க)

இ—ள்.

உயிர் இனங்கள் என்றும் எவ்வழியும் இன்பங்களையே நாடி அலைகின்றன; உலக பந்தங்கள் யாவும் யாண்டும் துன்பங்களையே தொடர்ந்து தந்து படர்ந்து வருகின்றன; ஆகவே அவற்றை அறவே விட்டதே பேரின்ப வீடு எனப் பெருமை பெற்றது.

வீட்டு நிலையை இது காட்டுகின்றது.

அறிவுடைய உயிர் வகைகளுள் மனிதன் பெரியவனாய் நெறியே பெருகி வந்துள்ளான். உடலோடு கூடிய வாழ்வையும் உலக நிலைகளையும் பலவகைத் தொடர்புகளையும் கருதி யுணர்ந்தான். மருவிய உரிமைகள் மதிநலங்களை அருளின.

உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் இயல்பாக வேண்டியுள்ளமையை நேரே தெரிந்தான். பொறி புலன்களின் சுவை நுகர்வுகளைச் சுகம் என நினைந்தான். அந்த நுகர்ச்சிகளுக்கு உரிய முயற்சிகளைச் செய்தான். தேக போகங்கள் இன்பம் என நேர்ந்தன. சுகமான வாழ்வுகளை விரும்பவே அவற்றிற்கு உரிய கருவிகள் பொருள்கள் என வந்தன.

இன்பமும் பொருளும் உரிமையாய்த் தெரியவே அவை நிலைத்துவர வேண்டுமே என்னும் ஆவலால் பிறர்க்கு உபகாரங்களைச் செய்தான்; இதமான அச்செயல் தருமம் என வந்தது.

மனித வாழ்வுக்கு இம்மூன்றும் இனிமையா யிருந்தாலும் சிறிது காலம்தான் சேர்ந்து நிற்கின்றன; உடல் அழிந்துபோ

னல் யாவும் மறைந்து போகின்றன. உயிர் என்றும் நிலையாய் நின்று வாழுவதற்கு உரிய நிலையம் ஒன்று இருக்க வேண்டும் என்று துணிந்தான். தான் கண்டது சிற்றின்ப வீடு ஆதலால் அதற்குப் பேரின்ப வீடு என்று பேர் தந்தான். ஆறறிவுடைய மனிதனால் இந்த நான்கும் அடையவுரியன என்று அருளினன்.

அறம்பொருள் இன்பம்வீடு அடைதல் நூற்பயனே.
(நன்னூல்)

நூலின் பயனை இலக்கண நூலார் இங்ஙனம் குறித்திருக்கிறார். வைப்பு முறை மிகவும் செப்பமான நுட்பம் உடையது.

இந்த நான்கையும் புருடார்த்தம் என்பர். புருடனால் உரிமையா அடையத் தக்கன புருடார்த்தம் என வந்தன. தர்மம் அர்த்தம் காமம் மோக்ஷம் என வடமொழியாளர் இவ்வாறு கூறி வருகின்றனர். சீவநிலைகள் ஆவலோடு தெரிய நேர்ந்தன.

உயிர் வாழ்வில் இயல்பாக நிகழுகின்ற நிகழ்ச்சிகளை வகுத்து வரம்புசெய்து வைத்திருப்பது நுனித்து உணர வந்தது. உற்ற தேகத்தை மனிதன் உரிமையா வளர்க்க நேர்ந்தான்.

இன்ப நுகர்ச்சிகளை விரும்பினன்; அவற்றிற்கு அவசியமான பொருளை ஈட்டினன்; அது பெருகி வருதற்குப் புண்ணியத்தைச் செய்தான்; அதனல் மறுமை இன்பமும் பெறலாம் என்று உறுதி செய்து கொண்டான். இந்த நான்கின் நிலைகளையும் கலையுணர்வுடன் ஔவையார் செவ்வையா விளக்கியிருக்கிறார்

ஈதல் அறம்; தீவினைவிட்டு ஈட்டல்பொருள்; எஞ்ஞான்றும்
காதல் இருவர் கருத்து ஒருமித்து---ஆதரவு
பட்டதே இன்பம்; பரனைநினைந்து இம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு. (ஔவையார்)

அறம் என்றால் என்ன? பொருள் எது? இன்பம் யாது? வீடு எத்தகையது? என்னும் இத்தகைய கேள்விகளுக்கு வித்தக விநோதமா விடை கூறியிருக்கும் அழகை இதில் வியந்து காணுகின்றோம். விரிந்த பொருள்களைச் சுருக்கித் தொகுத்து நயமாக் குறித்திருப்பது கூர்ந்து சிந்தித்து ஓர்ந்து உணரத் தக்கது.

இன்பமே வேண்டும் என்று மனிதன் யாண்டும் விரும்புகிறான். உலகில் அனுபவிக்கிற சுகங்கள் நிலையில்லாதன; பல

துயரங்கள் தோய்ந்தன; அல்லலும் இழிவும் அழிவும் உடையன ஆதலால் அவை சிற்றின்பம் எனச் சிறுமையாக் கூறநேர்ந்தன.

இந்தச் சிற்றின்பத் தொடர்புகள் முற்றும் அற்ற போது தான் பேரின்ப நிலையை முத்தர்கள் பெற நேர்கின்றனர்.

தொட்டது எல்லாம் துயராய் வருதலால் விட்டது வீடு என வந்தது. வீடு என்னும் சொல் விடுதலை அடைந்தவர்க்கு இடமாயுள்ளது என்னும் பொருளை யுடையது. பாச பந்தங்களிலிருந்து விடு பட்டவர்கள் வாச மாயிருப்பது வீடு என வசமா வந்தது.

என்றும் நிலையானது; எவ்வழியும் அழியாதது என்பதும் இதனால் வெளியாயது. விடுதல்=பிரிதல், நீங்கல், ஒழிதல். இந்த அழிவுகள் யாதும் யாண்டும்இல்லாதது வீடு என நின்றது.

கேடான பற்றுகள் யாவும் அடியோடு நீங்கிய மகான்களுக்கே இந்த அரிய ஆனந்த வீடு உரிமையான குடியாகின்றது.

ஒன்றாய் ஞானம் கடந்துபோய் நல்இந்திரியம் எல்லாம் ஈர்த்து
ஒன்றாய்க்கிடந்தஅரும்பெரும்பாழ் உலப்பிலதனைஉணர்ந்துஉணர்ந்து
சென்றாங்கு இன்ப துன்பங்கள் செற்றுக் களைந்து பசை அற்றால்
அன்றே அப்போதே வீடு அதுவே வீடு வீடு ஆமே.

அதுவே வீடு வீடுபேற்று இன்பம் தானும் அதுதேறி
எதுவே தானும் பற்றுஇன்றி யாதும் இலிகள் ஆகிற்கில்
அதுவே வீடு வீடுபேற் றின்பம் தானும் அது தேறாது
எதுவேவீடு? ஏதுஇன்பம்? என்று எய்த்தார் எய்த்தார் எய்த்தாரே.
(திருவாய்மொழி)

பேரின்ப வீட்டைக் குறித்து நம்மாழ்வார் இவ்வாறு பேசியிருக்கிறார். உரைக் குறிப்புகள் ஊன்றி உணர வுரியன. பசை அற்றால் அப்போதே வீடு; அதுவே வீடு என்னும் உறுதி மொழிகள் அந்த உள்ளத்தின் தெளிவை வெளியாக்கியுள்ளன.

புலையான பாச பந்தங்கள் நீங்கி நிலையான ஈசனுடைய சம்பந்தத்தை அடைக; அதுவே ஆனந்த வீடாம். புனித மான புண்ணிய எண்ணங்களைப் பழகி வருக; பாசங்கள் ஒழிந்து மாசுகள் கழிந்துபோம்; போகவே ஏகமான இன்ப நிலை எய்தலாம்.

பழகிய தருமத்தின் பலத்தினால் உளம்
அழகிய புனிதமாய் அமைதி நாடுமே;
மழவியல் மனமது மாசு தீரினே
விழுமிய உயிரது வீடு சேருமே.

இதன் பொருளைக் கருதி உணருக. உரிய உயிர்க்கு அரிய இன்ப வீட்டை உரிமை செய்து உயர்வாய்ப் பெருமை பெறுக.

992. கூட்டுள் இருக்கும் குருவிபோல் இவ்வுடம்பாம்
வீட்டுள் இருக்கும் விரகினுல்—பாட்டுள்
உயிர்க்கு நிலையான ஓரின்ப வீடு
பெயர்க்கு நிலையாய்ப் பெறும் (உ)

இ—ள்.

கூட்டுள் கூடியிருக்கும் குருவி போல் இந்த உடம்பு ஆகிய வீட்டுள் உயிர் குடி இருக்கிறது; ஆகவே அந்த உறவுரிமையால் உயிர்க்கு என்றும் நிலையான பேரின்ப வுலகமும் வீடு என்னும் பெயரை மேவி நின்றது; அதனை நாடி அடைந்து கொள்ளுக.

உலகப் பறவையும் உயிர்ப் பறவையும் ஒருங்கே தெரிய வந்தன. கூடும் வீடும் சோடியாய் நாடி அறிய நின்றன. நிலையில்லாத கூடும் நிலையுடைய வீடும் நேரே காண வந்தன.

உயிர் உணர்வு உடையது; உடலோடு கூடி வாழ்வது; இந்த வாழ்வு வினைப் போகங்களை அனுபவிக்க நேர்ந்தது; எவ் வழியும் இடர்களை யுடையது ஆகலால் பிறவி துயரம் என வந்தது. பிறந்து இறந்து ஓயாது உழந்து வருவது ஒழியாத துன்பமே என்று தெளிந்து கொண்ட ஞானிகள் அதனை அறவே நீங்கி உய்தி பெற நேர்கின்றார். துயர்கள் யாவும் ஒழிந்து அமைதியாய் உயிர் தங்கியிருக்கும் இடம் பேரின்ப வீடு எனப் பேர் பெற்றுள்ளது. நித்திய ஆனந்த நிலயம் உய்த்து உணர வந்தது.

பரகதி, முத்தி, மோட்சம் என வருவன காரணக் குறிகளைப் பூரணமாக் காட்டி நிற்கின்றன. துயரான இழி புலைகளை எல்லாம் கடந்து உயர் வான சுகநிலையை உயிர் அடைந்திருப்பது ஆனந்தத் தலம், அதிசய உலகம் என அமைந்தது.

கேவலம் கைவலம் கதி சித்தி மோக்கம்
அமுதம் பரம்சிவம் முத்தியும் ஆகும். (பிங்கலந்தை)

மோட்சத்துக்கு இவ்வாறு பேர்கள் அமைந்துள்ளன.

பாசங்கள் யாவும் கழிந்து இரு வினைகளும் அறவே நீங்கிய பரிசுத்த ஞானிகள் அடைய வுரியது ஆதலால் அந்த முத்தி நிலம் அதிசய மகிமைகள் உடையதாய்த் துதி கொண்டு நின்றது.

தேவராசனென இந்திரன் ஒரு முறை சரபங்க முனிவர்பால் வந்தான்; அவரது அரிய தவ நிலையை வியந்து புகழ்ந்தான்; தன்னோடு பொன்னுலகத்திற்கு வரும்படி விரும்பி வேண்டினன். அந்த வேண்டுகோளுக்கு அவர் இசையவில்லை: "உனது உலகம் இனிய சுக போகங்களைத் தருவது; ஆயினும் நிலையில்லாதது; ஆதலால் நிலையான பரமபதமே நான் அடையவுரியது" என்று நேரே அவர் கூறியருளினர். அன்று அவர் உரைத்த அவ்வுரைகள் ஆழ்ந்த பொருள்களையுடையன. அயலே காண வருகிறோம்.

*சிறுகாலை யிலா; நிலையோ திரியா;*
*குறுகா; நெடுகா; குணம்வேறு படா;*
*உறுகால் கிளர் பூதம்எலாம் உகினும்*
*மறுகா நெறி எய்துவன் வானுடையாய்!*

(இராமா, சரபங்கர், 20)

வானவர் கோனை நோக்கி மாதவர் இவ்வாறு கூறியுள்ளார். முத்தித் தலத்தைக் குறித்து முத்தர் மொழிந்துள்ள வித்தக மொழிகள் உய்த்து உணரத் தக்கன. பகல் இரவு என்னும் கால நிலைகள் யாதும் இல்லாதது; என்றும் நிலையானது; எவ்வழியும் செவ்வையாய்த் திவ்விய மகிமை யுடையது; நிலம் நீர் முதலிய பூதங்கள் யாவும் அழியினும் யாதொரு அழிவும் நேராமல் ஈசன் போல் எழில் மிகுந்திருப்பது என மொழி புரிந்துள்ளார். வீட்டைக் குறித்து விளக்கியிருப்பது வியப்பை விளைத்துளது. இதனுல் அதன் விழுமிய நிலைகளை ஓரளவு யூகித்து உறுநிலங்களை உரிமையோடு உணர்ந்து கொள்ளுகிறோம்.

இருவகை வினைகளும் இல்லது; இவ்வழி
வருவகை இலாதது; மறுவில் மாதவர்
பெருவழி யாச்செலும் பெயர்வில் சூளிகைக்கு
ஒருவழி அல்லது இங்கு உரைப்பது இல்லையே. (1)

கடையில் எண்குணத்தது; காமராகர்கள்
இடைநனி இலாதது; இல் இயற்கை இல்லது;
மிடையொடு விழைவு வேர் அறுத்த வீரர்கள்
அடைவது ஓர்நிலை பிறர்க்கு அறியலாகுமோ? (2)

மணிமலர்ந்து உமிழ்ஒளி வனப்பும், சந்தனத்
துணிமலர்ந்து உமிழ்தரும் தண்மைத் தோற்றமும்,
நணிமலர் நாற்றமும், என்ன அன்னதால்
அணிவரு சிவகதி யாவது இன்பமே.

(சூளாமணி, முத்திச்சருக்கம்)

பரகதி நிலையை இவை இவ்வாறு குறித்துள்ளன. குறிப்புகளைக் கூர்ந்து ஓர்ந்து பொருள்களைத்தேர்ந்து கொள்ளவேண்டும்.

அரிய புண்ணியமும் பொருந்தாமல் பிரிந்த போது தான் உயிர் உயர்ந்த முத்தியை அடைகிறது. புண்ணியம் இருந்தால் அதன் பயன் ஆகிய இனிய போகங்களை யூட்டித் திவ்விய தேகங்களில் ஆட்டி வரும்; அவ்வரவும் ஒருவிய அளவே வரமான பரகதியை மருவ நேரும். வினை ஒழிவே விழுமிய வீடாம்.

இறைவன் போல் என்றும் நிலையாய் இன்ப மயமா யுள்ளதையே பரமபதம், முத்தி, மோட்சம், வீடு என இன்னவாறு கூறிவருகிறோம். இதனை யாரும் எளிதே அடைய முடியாது. பற்று யாதும் இல்லாமல் பரமன் போல் வரமான நிலையை மருவிய ஆன்மா தான் பிறவி தீர்ந்து பேரின்ப வீட்டை அடைய நேர்கின்றது. வீடு காண்பவர் வேறு காண்கிலர்.

உலகப் புலைகளான எல்லா ஆசைகளில் இருந்தும் அறவே விடுபட்ட உயிர்க்குத்தான் மேலான வீடு உரிமையாம்என்பதை அப்பேரே உணர்த்தி அதன் அருமை பெருமைகளை விளக்கியுளது.

விட்டவனுக்கே வீடு;

தொட்டவனுக்கோ காடு.

என்பது பழமொழி. பற்று விட்டவன் பரமானந்த வீட்டில் சுகமாய் அமர்ந்தான்; அதனைத் தொட்டவன் பிறவிக் காட்டில் அலைந்து பெருந்துயரங்களையே அடைகிறான் என்பதை இம் முதுமொழி மதி தெளிய விளக்கி வீட்டு நிலையைத் துலக்கியுள்ளது.

வீடுமின் முற்றவும்
வீடு செய்து உம்உயிர்
வீடுடை யான் இடை
வீடு செய்ம் மினே. (1)

அற்றது பற்று எனில்
உற்றது வீடு உயிர்
செற்றது மன்னுறில்
அற்றிறை பற்றே. (2)

பற்றிலன் ஈசனும்
முற்றவும் நின்றனன்

பற்றிலையாய் அவன்
முற்றில் அடங்கே. (3) (திருவாய்மொழி)

பேரின்ப வீட்டை அடையும் படி நம்மாழ்வார் இவ்வாறு போதித்திருக்கிறார். ஈசன் யாதொரு பற்றும் இல்லாதவன்; சீவனும் அவ்வாறு பற்று இன்றி நின்றால் அந்த ஈசனை உடனே அடையலாம்; பற்று அற்றது எனில் வீடு உற்றது; இந்த உண்மையை உணர்ந்து உய்தி பெறுக என உணர்த்தியுள்ளார்.

தான் பற்றியிருந்த பற்றை ஒருவன் நீங்கினால் வீடு விரைந்து அவனை உரிமையாப் பற்றிக் கொள்ளும்; எனவே பற்று இன்மைக்கும் வீட்டுக்கும் உள்ள ஒற்றுமையை நாம் உணர்ந்து கொள்ளுகிறோம். பந்தம் வீடவே அந்தமில் இன்பமாம்.

மயலான மாயத் தொடர்புகளால் உயிர் படுகிற துயர நிலைகளையும், அது உய்தி பெறும் வழியையும் தெளிவாய் அறிதலால் ஞானம் திவ்விய ஒளி எனச் சிறந்து நின்றது. மெய்யான ஞானம் மேவிய பொழுதே பொய்யான புலைகள் புறம் ஒழிகின்றன; ஒழியவே புனித மான உயர்கதி இனிது மருவுகின்றது.

உள்பொருள் இதுஎன உணர்தல் ஞானமாம்;
தெள்ளிதின் அப்பொருள் தெளிதல் காட்சியாம்;
விள்வற இருமையும் விளங்கத் தன்னுளே
ஒள்ளிதின் தரித்தலை ஒழுக்கம் என்பவே. (1)

கூடிய மும்மையும் சுடர்ந்த கொந்தழல்
நீடிய வினைமரம் நிரைத்துச் சுட்டிட
வீடுஎனப் படும்வினை விடுதல் பெற்றது அங்கு
ஆடெழில் தோளினாய் அநந்த நான்மையே. (2)

[சீவகசிந்தாமணி]

ஞானம், காட்சி, ஒழுக்கம் ஆகிய இந்த மூன்று ஒளிகளும் ஒருங்கே எழுந்த பொழுது இரு வினைகளும் அறவே அழிந்து ஒழிகின்றன; அழியவே உயிர் அழிவில்லாத ஆனந்த வீட்டை அடைகிறது என இது காட்டியுளது. வினை விடுதல் உற்றது வீடு பெற்றது என்றது சீவனுடைய முத்தி நிலையை உய்த்துணரச் செய்தது. கேடான பற்று வீடவே வீடு ஆம்.

கெடுக்கப் படுவது தீக்கருமம்; நாளும்
கொடுக்கப் படுவது அருளே; ---அடுத்தடுத்து

உண்ணப் படுவது நன்ஞானம்; எப்பொழுதும்
எண்ணப் படுவது வீடு. [அறநெறிச்சாரம்]

தீவினைகள் நீங்கி, அருள் ஞானம் ஓங்கி, எப்பொழுதும் வீட்டையே கருதி உய்க என முனைப்பாடியார் இப்படி நினைப் பூட்டியிருக்கிறார். துன்ப வீடு விட்டு இன்ப வீடு காணுக.

———

993 துச்சில் இருந்து துயரமாய் வாழ்கின்ற
எச்சில் இழிவாழ் விகந்தொரீஇ—நச்சிநின்ற
பேரின்ப வாழ்வைப் பெறவந்த அப்பிறப்பே
ஓரின்ப மாகும் உணர். (ங)

இ—ள்.

ஒதுக்குக் குடியாய் உடம்புகள் தோறும் அலைந்து இழிந்து வாழ்ந்து வருகிற அந்த இழி நிலை நீங்கி என்றும் நிலையான பேரின்ப வீட்டை எந்தப் பிறப்பு அடைகிறதோ அதுவே மேலான உயர்ந்த மகிமை யுடையதாம்; அதனை விரைந்து அடைக.

உயிர் வாழ்வு நிலையில்லாத நிலையில் எவ்வழியும் புலையாய் நடந்து வருகிறது. நீர்மேல் குமிழி போல் நிலை அற்ற உடல் களில் புகுந்து பார்மேல் உயிர்கள் பரிதாபமாய் உழன்று வரு கின்றன. அவல வாழ்வுகள் அழி துயரங்களே உடையன.

துச்சம் என்னும் சொல் கீழ்மை, சிறுமை, வெறுமை இழிவுகளைக் குறித்து வரும். துச்சமான இல் துச்சில் என வந்தது. புல்லிய புலைக் குடிலில் அல்லல்களே உள்ளன.

சிறிய குடிசையில், வறிய குச்சில்களில் ஏழைகள் குடி யிருந்து வருகின்றனர்; அந்தக் குடியிருப்பாவது கொஞ்சம் உறுதியானது; உரிமை யுடையது; பல வருடங்கள் வாழலாம் என்ற தைரியம் உண்டு; பொள்ளலான உடலில் எள்ளலாய் இருந்து வரும் உயிர் நாளும் அல்லலே அடைந்து வருகிறது. மலசலங்களோடு மருவிப்பல இழிவுகள் படிந்து அழி துயரங்களில் அழுந்தி அவலமாய் உழலுகிறது. புலையான இப் புன்புலால் நிலை யைக் கருதி யுணர்ந்து உறுதிநலன்களைத் தெளிந்தவரே தலையான உயர் கதியை அடைய வுரிய தத்துவ ஞானிகள் ஆகின்றார்.

ஈன இளிவான இவ்வுடலின் புன்மையினை
ஞான ஒளியால் நயந்தறிவார்---வானமுயர்

வீட்டை விழைந்து விழுமியராய் மேலான
தேட்டை அடைந்தார் தெளிந்து

பொய்யான புலையை அறிபவர் மெய்யான நிலையை அடைகின்றார். துன்பத் தொடர்பு ஒழிய வழிகாணும் அளவு இன்ப ஒளிகள் நேரே வெளியாகின்றன. ஒட்டை உடம்பின் நிலைகளையும் உலகப் புலைகளையும் உணர நேர்ந்தவரே வீட்டை அடைய விரும்பித் தான தருமங்களைச் செய்கின்றார்; தவங்கள் புரிகின்றார்; துறவிகளாய்க் காட்டை யடைந்து கதிநலம் காணுகின்றார்.

இடும்பைக்கு இடும்பை இயலுடம்பி தன்றே
இடும்பொய்யை மெய்யென் றிராதே--,இடுங்கடுக
உண்டாயின் உண்டாகும் ஊழின் பெருவலிநோய்
விண்டாரைக் கொண்டாடும் வீடு. (நல்வழி, 3)

உடம்பின் நிலையை எடுத்துக் காட்டி உயிர்க்கு உய்தி காணும் படி ஒளவையார் இவ்வாறு போதித்திருக்கிறார். புலையான துன்பங்கள் நிலையாய் நிறைந்திருக்கும் நெடிய மூட்டை என்பார் இடும்பைக்கு இடும் பை என்றார். அல்லலான இந்தப்பையை மெய் என்று நம்பி அவலமாய் அழிந்து போகாமல் காலம் உள்ள பொழுதே மேலான வீட்டுக்கு உரிய தருமசீலங்களை உரிமையா அடைந்து கொள்ளுங்கள் என உறுதியா அறிவுறுத்தி யுள்ளார்.

விண்டாரைக் கொண்டாடும் வீடு என்றது பற்று விட்டவர்க்கும் வீட்டுக்கும் உள்ள ஒற்றுமையான உறவுரிமையை உணர்த்தி நின்றது. பித்த மயக்காய்ப் பற்றியுள்ள பாச பந்தங்களை விட்டு ஒழியுங்கள்; பேரின்ப வீடு உங்களுக்கு வாசமாய் வரும் என வரவு நிலையை உறவாத் தெளிய விளக்கினார்.

எல்லாப் படியாலும் எண்ணினால் இவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை---நல்லார்
அறிந்திருப்பார் ஆதலினால் ஆங்கமல நீர்போல்
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு. [நல்வழி, 7]

உயிர்க்கு நிலையமாய் நேர்ந்துள்ள உடலின் புலையை ஓர்ந்தவர் உலக பந்தங்களை ஒருவி உயர் கதி காணுவர் என இது உணர்த்தியுள்ளது. பொய்யான மாய மையல்களை நீங்கினவரே மெய்யான தூய முத்தியை நேயமாய்த் தோய நேர்கின்றார்.

எடுத்த உடல்கள் அழிவதையும் அடுத்த உறவினங்கள் ஒழிவதையும் எல்லாரும் எதிரே கண்டு வரினும் உள்ளம் தூய நல்லோரே உண்மையை ஊன்றி உணர்ந்து உயிர்க்கு உறுதி நலங்களைக் காண்கின்றார். தெளிவான அந்தக் காட்சியாளரே விழுமிய ஞானிகளாய் மாட்சியடைந்து மிளிர்கின்றார். வாழ்வை மாயக்கனவாக் காணவே வைய மையல்கள் ஒழிந்து போகின்றன; போகவே மெய்யான முத்தியை மேவி நித்திய முத்தராய் நிலவி நிற்கின்றார். மெய்யுணர்வு தெய்வ ஒளியாகிறது.

உறங்கும் போது கனவு கண்டவன் விழித்தவுடனே தன்னைத் தவிர வேறு ஒன்றையும் காணுவதில்லை; அது போல் மாய வாழ்வில் மனைவி, மக்கள், செல்வம், சீர் எனப் பல வகையான இனிய தொடர்புகளைக் கண்டு களித்து வந்தவன் தூய ஞானம் தோன்றிய போது எல்லாம் மாயக் கூத்துகள் என்று தெளிந்து கொள்ளுகிறான்- கொள்ளவே ஆன்ம நாட்டமாய் உள்ளே நோக்கி உரிமையான பரமான்மாவைத் தோய்ந்து உலவாத பேரின்பத்தை அடைகிறான். அந்த இன்பப் பேறே மோட்சம், வீடு என மாட்சியுறுகிறது. உள்ளம் உருக உயர்கதி வருகிறது.

நெஞ்சகம் குழைந்து நெக்கு நெக்கு உருகநின்
குஞ்சித சரணம அஞ்சலித்து இறைஞ்சுதும்;
மும்மலம் பொதிந்த முழுமலக் குரம்பையில்
செம்மாந்து இருப்பது தீர்ந்து
மெய்ம்மையில் பொலிந்த வீடுபெறற் பொருட்டே.

(சிதம்பரச்செய்யுள், 68)

பிறவி தீர்ந்து பேரின்ப வீடு பெறும் பொருட்டு இறைவனைக் குமரகுருபரர் இவ்வாறு இறைஞ்சியிருக்கிறார். மும்மலம் பொதிந்த முழு மலக்குரம்பை என உடம்பைக் குறித்திருப்பது கூர்ந்து சிந்திக்கத்தக்கது. பொல்லாத புலையுடலை மறுபடியும் அடையாதபடி மேலான நல்ல வீட்டை அடைந்து கொள்ளுக.

---

994. விட்ட முதலை விடாது விரைந்துபோய்த்
தொட்ட பொழுதே தொடர்பாகப்—பட்டுவந்த
அல்லலெலாம் நீங்கிநல் ஆனந்தம் ஆகுமே
எல்லை தெரிக எதிர். (ச)

இ—ள்.

இழந்து விட்ட தனி முதலை மீண்டும் போய் உயிர் அடைந்த

பொழுது தான் துயரங்கள் எல்லாம் நீங்கி உயர் வான பேரின்பம் ஓங்கிவரும்; உரிமையையுணர்ந்துபெறுவதே பெருமையாம்; இந்த உண்மையை ஊன்றி உணர்ந்து உய்தி பெறுக என்பதாம்.

உயிர் துயர் தீர்ந்து உயர் பேரின்பம் அடையும் வழியை இது விழி தெரிய விளக்கியுள்ளது. முதல் என்றது பரம்பொருளை. எல்லா வற்றிற்கும் மூல முதல் ஆதலால் அந்தக் கோலமும் சீலமும் தெரிய வந்தது. முழு முதல் பரமனை நழுவியதிலிருந்தே அழி துயரங்கள் அடர்ந்து படர்ந்து தொடர்ந்து வர நேர்ந்தன. இன்ப முதலை இழந்த நாள் முதல் துன்பங்கள் சூழ்ந்து கொண்டன.

விட்ட என்றது அரிய இனிய பெரிய திருவை இழந்து பிறவிக்கடலில் விழுந்து பெருந் துயரங்களில் அழுந்தி இழிந்து உழலுகிற இழிவு நிலைகளை எல்லாம் எண்ணியுணர வந்தது. இழவை உணராமல் இழிவுறுவது ஈன மருளாய்ப் பெருகியுளது.

ஈசன் எவ்வழியும் எல்லை காண முடியாத பேரின்பக்கடல். அமுத மயமான அந்த ஆனந்த சாகரத்தைப் பிரிந்து வந்ததனாலே தான் பல வகையான உடல்களை எடுத்துப் பிறவித் துயரங்களைச் சீவன் அடைய நேர்ந்தது. பிழையாய்ப் பிரிந்து வந்த நிலையைத் தெரிந்து விரைந்து அதனை அடைந்து கொண்டால் அன்றி அல்லல்கள் யாதும் யாண்டும் நீங்கா. ஈசனைப் பிரியவே நீசப்பிறவிகள் நெடிதுதொடர்ந்தன; நாசத் துயர்கள்படர்ந்தன.

நேரான வழியை விட்டு விலகினவன் மாறான காட்டில் புகுந்து திசை தெரியாமல் மருண்டு அலைந்து மறுகுவது போல் மேலான பரமனை விட்டு விலகின சீவன் கீழான பிறவிக் காட்டில் இழிந்து எவ்வழியும் புலையாய் அலமந்து உழலுகின்றான்.

தன் கைப்பொருளை வைத்த இடத்தை ஒருவன் மறந்து போனான்; அது அரிய விலையுடைய பெரிய வயிரமணி; உயிர்க்கு உயிரான அதனைக் காணாமையால் துயரோடு யாண்டும் ஏங்கி அலைந்தான்; ஆண்டுகள் பல கழிந்தன; எங்கும் அகப்படவில்லை; அல்லலோடு வருந்தி வந்த அவனுக்கு முன்பு புதைத்து வைத்த இடம் சிறிது நினைவுக்கு வந்தது; வரவே விரைந்து ஓடினான்; நேரே தோண்டினான்; மணியைக் கண்டான்; பேரானந்தம் கொண்டான். அவ்வாறே பரம் பொருளை இழந்த சீவன் பிரிந்த

நிலையைத் தெரிந்து கொண்டால் பேரின்பம் அடைந்து கொள்ளும். தெரியாத வரையும் பிரியாத துயரமே பெருகி வரும்.

மனைக்குள் வைத்தபண்டங்களை மறந்தவன் வருடம்நூறு அழுதாலும்
நினைத்து உணர்ந்தபின் கிட்டும்; அப் படிஇந்த நின்மல ஆன்மாவும்
அனர்த்த மானதன் மறதியைக் கெடுத்துத்தன் அறிவினால் காணுமல்
கனத்த கர்மங்கள் நூறுஉகம் செய்யினும் காணுமோ? காணுதே.
(கைவல்லியம்)

தனது உண்மையான ஆன்ம நிலையை மறந்து புன்மையாய்த் திரிந்து உழலும் மாய மருள் தூயஞான ஒளியால் அன்றி வேறு எவ்வழியாலும் தொலையாது என்பதை உவமானத்தோடு இது உணர்த்தியுள்ளது. ஒப்பு நிலை ஓர்ந்து சிந்திக்க வுரியது.

மெய்யுணர்வு மேவிய பொழுது மெய்ப்பொருள் கைப்பொருளாய் வருகிறது. உலக வுறவுகள் யாவும் புலையான பொய்ப் பொருள்களாய்ப் பொன்றி ஒழிகின்றன. நிலையான மூலமுதலை அறியவே நெஞ்சம் கரைந்து உருகுகின்றனர் இறைவனோடு நேரே உரிமையாய்உறவாடி முறையீடுசெய்கின்றனர்.

பெற்றவர் பெற்ற பெருந்தவக் குன்றே
பெருகிய கருணைவா ரிதியே
நற்றவத் துணையே அனந்தக் கடலே
ஞாதுரு ஞான ஞேயங்கள்
அற்றவர்க்கு அருத நட்புடைக் கலப்பே
அநேகமாய் நின்னடிக்கு அன்பு
கற்றதும் கேள்வி கேட்டதும் நின்னைக்
கண்டிடும் பொருட்டன்றோ காணே.

அன்றுநால் வருக்கும் ஒளிநெறி காட்டும்
அன்புடைச் சோதியே! செம்பொன்
மன்றுள்முக் கண்ணும் காளகண்டமு மாய்
வயங்கிய வானமே! என்னுள்
துன்றுகூர் இருளைத் துரந்திடு மதியே!
துன்பமும் இன்பமும் ஆகி
நின்றவா தனையைக் கடந்தவர் நினைவே! (2)
நேசமே நின்பரம் யானே.

(தாயுமானவர்)

ஈசன் பால் உறவாய் உருகித் தாயுமானவர் நேசம் கொண்

டாடியுள்ள நீர்மையை இந்த வாசகங்களால் நாம் ஓர்ந்து உணர்ந்து கொள்கிறோம். கல்வி கேள்வி அறிவு முதலிய பெரிய விவேகங்களுக்கு உரிய பயன் அரிய பரம்பொருளை உணர்ந்து உய்தி பெறுவதேயாம் என இவர் உணர்த்தியிருப்பது ஈண்டு ஓர்ந்து சிந்திக்க வுரியது. இன்பம் தருவதே இனிய அறிவாம்.

நல்ல இன்பங்களை அனுபவிக்க வேண்டும் என்றே சீவர்கள் யாண்டும் விரும்புகின்றனர். உண்மையான இன்ப நிலை தெரியாமையால் புன்மையான பொறி புலன்களில் இழிந்து புலையான போகங்களைச் சுகங்கள் என்று கருதிக் களித்து மாய வெறியராய் மறுகி யுழல்கின்றனர். மையல் மருள் வெய்ய இருள்.

உள்ளம் தெளிந்து தூயராய் உயர்ந்த ஞானிகள் தேக போகங்கள் யாவும் மோக வெறிகள் என்று உணர்ந்து கொள்ளுகின்றனர். கொள்ளவே உலக சுகங்கள் யாவும் நீசங்கள் என்று வெறுத்து விலகி ஈசனையே கருதி இனியராய் இன்புறுகின்றனர்.

உலகில் நிலவும் உயர்சுகங்கள் எல்லாம்
கலக அவலமெனக் கண்டு---விலகிப்
பரமனொடு தோய்ந்து பதிந்து மகிழும்
உரமதே யோகம் உணர்.

புலன்களை அடக்கி மவுனமாயிருந்து மகான்கள் அனுபவிக்கின்ற பேரானந்த நிலையை இதனால் உணர்ந்து கொள்கிறோம்.

யோகம் என்னும் சொல் யூகமான பொருள் உடையது. சீவான்மா பரமான்வோடு கலந்து மகிழும் கலப்பே யோகம் என வந்தது. கூடியிருந்தால் யோகம் ஆதலால் பிரிந்து போதல் வியோகம் என நேர்ந்தது. முன்னது வாழ்வு; பின்னது சாவு.

உலக நசைகளில் உழல்பவர் ஈசனது பேரானந்த நிலையை இழந்தனர். புலன்களை அடக்கி அகமுகமா யிருந்தவர் அதிசய ஆனந்தங்களை அடைந்தனர். புலைநிலை ஒழிவதே புனித சுகமாம்.

காழ்த்தஐம் புலனும் செற்றுக் கரணங்கள் அடக்கி நாளும்
ஊழ்த்தமென் சருகு மாந்தி யோகினில் உறங்குகின்றார்
சூழ்த்துநான் முகனும் விண்ணோர் தொகுதியும் சுருதி நான்கும்
வாழ்த்துதற்கு அரிய முத்தி விட்டின்பம் மருவி வாழ்வார்.
(கூர்மபுராணம்)

இந்திய விடயம் தன்ஞெடு சிவணல்
யோகம் என்பார்சிலர்; சிலர்தம்
சிந்தனை உயிரோடு அடைதல்நல் யோகம்
என்பர்;ஈது அன்றியும் சிலர்தாம்
முந்திய பிராணன் அபானனேடு அடைதல்
என்பர்;இம் மொழிந்தவை அனைத்தும்
அந்தமில் யோகம் அல்ல;நற் சீவன்
பரத்துடன் அடைவதே யோகம்.

[காசிகாண்டம்]

யோகத்தைக் குறித்து இவை உணர்த்தியுள்ளன. பேரின்ப வீடு நேரே பெற உரிய வழி விழிதெரிய வந்தது. சீவன் பரத்துடன் அடைவதே யோகம் என்றதனுல் யோகத்தின அதிசய மகிமையையும் ஆனந்த நிலையையும் ஒருங்கே உணர்ந்து கொள்கிறேம்.

பரம் பொருளைப் பிரிந்து வந்து பரிதாபமாய் இழிந்து உழலுகின்ற சீவன் மறுபடியும் அதனை அடைந்து மகிழும்படி அருள் புரிதலால் முனிவர்கள் இதனை இனிது மருவி இன்புறுகின்றனர். சீவனுக்கும் சிவனுக்கும் உள்ள உறவுரிமையை உணரா திருப்பது மருளான இருள்; உணர்வது அருளான தெருள். உணர்ந்தவன் தத்துவ ஞானியாய் முத்தியின்பம் பெறுகிறுன்; உணராதவன் பேதைப் பித்தனுய் இழிந்து பிறவித் துயர்களில் உழல்கிறுன்.

தன்னைப் பேத மாய்க்காண்கை சகத்தில் காணப் பட்டதாம்;
தன்னைப் பேத மறச்சிவன் என்று அறிவோன் ஞானி தான் ஒருவன்
என்னக் கருதி மறைஅதுநீ ஆனுய் என்ன அத்துவிதம்
தன்னைப் புகலும்;கண்டதனைச் சாற்றல் மறையின் கருத்து அன்றே.

தூய்தாகியநெஞ் சுடையார்க்குத் தாமே சிவமாத் தோன்று மால்
தீதாகிய நெஞ் சுடையார்குத் தெளிய அபேதம் இகலின்றி
வேதாகமங்கள் விளம்பிடினும் விளங்காது; என்றும் வேறுஎன்னும்
வாதால் அழிவர்; அவர் மாயை மயக்க மயங்கும் மதியினுர். (2)

நெஞ்சம் சோகம் பாவனையில் நிற்க நிறுத்தி விடயங்கள்
அஞ்சும் துறவாத் துறந்தசிவ யோகி ஒருவன் அடியிணையில்
துஞ்சும் திருமால் முதல்அமரர் உள்ளம்; அவனைத் துதித்து இறைஞ்சாது
எஞ்சும் தவமா முனிவர்இலை எனநான் மறையும் இயம்புமால். (3)

[பிரபுலிங்கலீலை]

இவை காட்டியிருக்கும் கதி நிலைகளைக் கருதி யுணருக. அரிய ஞானக் காட்சிகள் எளிதே தெரிய வந்துள்ளன. தத்வ மஸி என்பது வேத மந்திரம். அந்தப் பரம் பொருள் நீயே என்பது இதன் பொருள். மாய மருளால் மறந்துள்ள பரம்பொருளைத் தூய தெருள் ஒளியால் தெளிந்து கொள்ள வேண்டும்.

விட்ட முதலை விடாமல் போய்த் தொட்டுக் கொள்; உன்னை ஒட்டியிருந்த துயரங்கள் யாவும் அடியோடு ஒழிந்து போம். பேரின்ப வீட்டில் குடி புகுந்து பெருமகிமையாய் விளங்குவாய்.

---

995. எடுத்த பிறவிக் கினியபயன் என்றும்
அடுத்த பிறவி அடையாது—உடுத்த
உடம்பு விழுமுன் உறுதி நலனை
அடைந்து மகிழ்தல் அறிவு. (ரு)

இ—ள்.

இப்பொழுது எடுத்து வந்துள்ள இந்தப் பிறவிக்கு உரிய இனிய பயன் இனிமேல் எப்பொழுதும் அடுத்த பிறவி அடையாமல் செய்து கொள்வதேயாம்: ஆகவே உற்ற உடம்பு பிணமாய் விழுமுன்னரே உறுதி நலனை விரைந்து அடைந்து கொள்க; அவ்வாறு பெறுவதே அது பெற்ற அறிவின் பெரியபேறும் என்க.

புழு பூச்சி முதலிய இழிவான பிறவிகளை எல்லாம் கடந்து உயர்வான மனித உருவை மருவி வருவது அரிய பெரிய பாக்கியமாம். அரும் பெறல் யாக்கை என்று மானிட தேகத்தை மேலோர் வியந்து புகழ்ந்துள்ளனர். பெரும் புண்ணியப் பேற்றால் கிடைத்துள்ள இப்பிறவியைக் கொண்டு உயிர்க்கு உறுதியைச் செய்து கொள்ளுபவர் உயர்ந்த உத்தம முத்தர் ஆகின்றார்.

அல்லல் யாதும் அணுகலாகாது என்று மனிதன் யாண்டும் அஞ்சுகின்றான்; நல்ல சுகங்கள் வேண்டும் என்றே எவ்வழியும் அவாவி அலைகின்றான். இயல்பான இந்த அனுபவங்களால் உயிர் துயர்களை வெறுக்கின்றது; உயர்வான இன்பங்களையே உவந்து கொள்ளுகின்றது என்னும் உண்மையை உணர்ந்து கொள்கிறோம். அனுபவ நிலை அதிசய ஞானமாய் இனிது மிளிர்கிறது.

இன்பமே வடிவமான பரமனிடமிருந்து பிரிந்து வந்துள்ளமையால் சீவனிடம் இந்த இயல்பு இயல்பாய் மேவியுள்ளது.

துன்பங்கள் யாவும் நீங்கி இன்பம் அடைய வேண்டுமானல் பிறப்பு ஒழிய வேண்டும். துன்ப நிலை ஒழிய இன்பம் விளையும். பிறவி எவ்வழியும் துன்பமே; பிறவாமை என்றும் இன்பமே.

பிறப்பின் துன்பமும் பிறவா இன்பமும்
அறத்தகை முதல்வன் அருளிய வாய்மை.

(மணிமேகலை, 28)

பிறவியின் துயரையும் பிறவாமையின் உயர்வையும் புத்தர் இவ்வாறு குறித்திருக்கிருர். ஈசனைக் கருதி உலக ஆசைகளை ஒருவிப் புனித நிலையில் மருவுவதே பிறவி நீங்கவுரிய வழியாம்.

பிறப்புஎனும் மாயைக் கரையதாய் எங்கும்
பிறிவறு பெரும் பொருள் தோன்றில்
இறப்புறு மாயைக்கு இச்சையே வடிவாம்;
இதனுடைய நாசமே வீடு;
சிறப்பில் சங்கற்பம் சிதைந்திடில் இதுதான்
தேய்ந்திடும்; சித்து எனும் கதிரோன்
புறப்படில் இதய விசும்பில் வாதனையாம்
பொங்கிருள் போம் எனப் புகல. (வாசிட்டம்)

ஆசையே பிறப்புக்கு மூலம்; அது நாசமானல் அதுவே பேரின்ப வீடு; ஞான சூரியன் உதயமானல் ஈன மருள்கள் ஒழிந்து போம்; ஈசனுக்கும் சீவனுக்கும் உள்ள நேச உறவுகள் நேரே தெரிய வரும் என்னும் இது இங்கே நன்கு அறியவுரியது.

உயிர்க்கு உயிர் என்று பரமனுடைய உரிமையை உணரவே உலக உறவுகள் யாவும் துறந்து அவனையே கருதி மகான்கள் உருகுகின்றனர்; அந்தப் பேரின்பப் பொருளைச் சரியாக அடையவில்லையே என்று உள்ளத்தோடு மறுகி உரைகளாடுகின்றனர்

ஆடுகின்றிலை கூத்துடையான் கழற்கு அன்பிலை என்புருகிப்
பாடுகின்றிலை பதைப்பதும் செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடுகின்றிலை தெருவுதோறு அலறிலை செய்வது ஒன்றுஅறியேனே.

(திருவாசகம்)

ஈசனை நாடி மாணிக்கவாசகர் உருகியுள்ள நிலைகளை இவ் வுரைகளால் உணர்ந்து கொள்கிறோம். உயிர்க்கு நலமாத் துணை புரியவில்லையே என்று உள்ளத்தை எள்ளி இகழ்ந்திருக்கிறார். பிண நெஞ்சே! என்றது இறைவனையே எண்ணி உருகாமல் உலகப் புலைகளில் போகின்றாயே என அப்போக்கை நோக்கி வந்தது. சிவனை நாடுவதே சீவனுள்ள நெஞ்சம்.

தேடு கின்றனை ஐம்பொறி களுக்கிரை தேடியும் கிடையாமல்,
வாடு கின்றனை வீடுசென்று என்றினி மருவுவை மடநெஞ்சே!
ஆடு கின்றிலை அழுகிலை தொழுகிலை அரங்கனைக் கரம்கூப்பிப்
பாடு கின்றிலை நினைகிலை பதின்மர்தம் பாடலின் படியாயே.
(திருவரங்கக்கலம்பகம் 35)

மடநெஞ்சே! பொறிகளுக்கு இரை தேடுகின்றனை; இறைவனை நாடுகின்றிலை; வீடு உனக்கு எப்படிக் கிடைக்கும்? என்று மணவாளதாசர் இப்படி மனத்தோடு சினந்து மறுகியிருக்கிறார்.

பொறி நசைகளில் ஓடாமல் பரமனை நாடுகின்றவரே பேரின்ப வீடு கூடுகின்றனர்; அந்த அதிசய ஆனந்த நிலையை அடைய நேர்ந்தவர் வேறு எதையும் நாடாமல் ஈசனையே நாடி எவ்வழியும் உரிமையோடு துதிசெய்து வருகின்றனர்.

பிறவியை நீக்கத் துணிந்து துறவு நிலையை அடைந்தவர் பிறவாத பெரியோனையே உறவாக் கருதி அன்புகனிந்து உள்ளம் உருகி உரையாடி வருவது அவரது பரிபாக நிலையை உலகம் அறியச் செய்கிறது. சித்த சுத்தர் முத்தர் ஆகின்றார்.

எடுத்த பிறவியே இறுதியாய் அடுத்த பிறவியை அடையாத சீவன் முத்தர்க்கே ஆனந்த வீடு தனி உரிமை ஆகின்றது.

---

996. ஆதியும் அந்தமும் இல்லாத அப்பரத்தின்
சோதிச் சுடராய்த் தொடர்ந்திருந்தாய்—மோதிஎழு
மாயப் பிணிப்பால் மயங்கி இழிந்துள்ளாய்
தூயனுய்த் தோய்க தொடர்ந்து. (சு)

இ—ள்.

மூலமும் நடுவும் முடிவும் இல்லாத முழுமுதல் சோதியின் விழுமிய துளியாய் நீ ஒளி மிகுந்திருந்தாய்; அதிலிருந்து எப்படி

யோ நழுவி மாயப் பிறவிகளில் விழுந்து இழிந்து உழல்கின்றாய்; இந்தத் தீயதொடர்பிலிருந்து விரைந்து விலகித் தூயனாய் உயர்க.

பரமனுடைய நிலை எவராலும் அறிய அரியது; ஆயினும் எவர் எவ்வாறு வரைந்து கூறினும் அவ்வாறெல்லாம் அவன் அமைந்து நிற்கிறான். என்றும் நிலையான நித்தியப் பொருள் ஆதலால் காலமும் கணக்கும் நீத்த காரணன் என வேதங்கள் வியந்து புகழ்ந்து வருகின்றன. முடிவு காண முடியாதவனைத் தாம் கண்ட முடிவின்படி வடிவும் வண்ணமும் புனைந்து பேரும் சீரும் கூறிச் சமயவாதிகள் யாண்டும் வாதாடி வருகின்றனர்.

அதிசய நிலையில் துதிகொண்டு விளங்குகின்ற அந்தப் பரஞ்சோதியிடமிருந்தே சீவசோதிகள் பிரிந்து வந்துள்ளன. இந்தப் பிரிவு நிலையைத் தெரியாமையால் உயிரினங்கள் துயிரினங்களாய் மறுகி யுழலுகின்றன. தெரிந்தபொழுது அந்த ஞானிகள் பரமனை நினைந்து உறவுரிமைகள் புரிந்து பரிந்து உருகுகின்றனர்.

> பெருநீர் அறச்சிறு மீன்துவண் டாங்கு நினைப்பிரிந்த'
> வெருநீர்மை யேனை விடுதிகண் டாய் வியன்கங்கை பொங்கி
> வருநீர் மடுவுள் மலைச்சிறு தோணி வடிவின் வெள்ளைக்
> குருநீர் மதிபொதி யுஞ்சடை வானக் கொழுமணியே.
>
> [திருவாசகம்]

நீரைப் பிரிந்து நிலத்தில் விழுந்து துடிக்கும் மீனைப்போல் ஈசனைப் பிரிந்து பரிந்து பதைக்கும் பரிதாப நிலையை மாணிக்கவாசகர் இதில் குறித்திருக்கிறார். நினைப்பிரிந்த வெருநீர்மையேன் என்று உள்ளம் உருகி மறுகியிருப்பது ஓர்ந்து சிந்திக்கவுரியது

பெற்ற தாயைப் பிரிந்துபோன சேய் பின்பு அதனைக் காண நேர்ந்தபோது அன்பால் உருகி அழுவது போல் பரமான்மாவின் உரிமையை உணர்ந்தபொழுது சீவான்மா கரைந்து கதறுகின்றது. தாய்மையும் சேய்மையும் வாய்மையா யுள்ளன.

உள்ளம் தெளிந்த ஞானிகள் உயிர்க்கு உயிரான பரமனுடைய உறவை உணர்ந்து கொள்ளுகின்றனர்; கொள்ளவே எள்ளலான உலக பாசங்களை எல்லாம் ஒருங்கே உதறித் தள்ளி ஈசனையே எண்ணி இன்புறுகின்றனர். அவரது அன்பு நிலை அவனைத் துதிசெய்யும் மொழிகளில் நன்கு ஒளிவீசி வருகின்றது.

என்னுடைய உயிரே என்உளத்து அறிவே
என்னுடை அன்புஎனும் நெறியாய்
கன்னல்முக் கனிதேன் கண்டு அமிர்து என்னக்
கலந்தெனை மேவிடக் கருணை
மன்னிய உறவே உன்னைநான் பிரியா
வண்ணம்என் மனம்எனும் கருவி
தன்னது வழிஅற்று என்னுழைக் கிடப்பத்
தண்ணருள் வரமது வேண்டும். (தாயுமானவர்)

இறைவனை நோக்கித் தாயுமானவர் இவ்வாறு முறையிட்டிருக்கிறார். உள்ளப் பரிவு உரைகளில் தெரிகிறது.

உன்னை நான் பிரியா வண்ணம் வரம் அருளவேண்டும் என்று வேண்டியிருத்தலால் ஆண்டவனிடம் இவர் பூண்டுள்ள அன்புரிமையை ஈண்டு நாம் உணர்ந்து கொள்ளுகிறோம். சிந்தை அடங்கித் தத்துவ சீலராய்ச் சித்த சாந்தியை அடைந்திருக்கின்றார்.

தத்துவ நிலையில் இம் மெய்த்தவர் உள்ளம் உயர்ந்துள்ள நிலையை உரைகள் தெளிவா உணர்த்தி நிற்கின்றன. புனிதமான தவயோகி ஆதலால் சிவானந்தபோகத்தை அனுபவித்துள்ளார். அவ் வுண்மை மொழிகள் தோறும் வெளியாய் வருகின்றது.

அத்தன், நித்தன், சுத்தன், முத்தன் என ஈசனுக்குப் பெயர்கள் அமைந்திருக்கின்றன. சகல சீவகோடிகளுக்கும் தந்தையா யுள்ளவன், என்றும் நிலையாயிருப்பவன், இயல்பாகவே தூய்மை யுடையவன், பற்றுக்கள் யாதும் இல்லாதவன் என்னும் நீர்மைகளை இப்பேர்கள் சீர்மையா விளக்கியுள்ளன. தலைமை நிலைமை தகைமை தன்மைகள் நேரே தெரிய வந்தன.

இத்தகைய முழுமுதல் பரமனை உழுவலன்போடு கிழமையாக் கருதி வருபவர் அவனது பழமையான பான்மையை வளமையாய் மருவி அதிசய மகிமைகள் பெருகி உயர்கின்றனர்.

நித்தியப் பொருளை நினைந்து வருகிற தத்துவ ஞானிகள் நித்திய முத்தராய் நிலவி நிற்கின்றனர். பாசபந்தங்கள் ஒழிந்தவுடனே மனிதன் மகானாய் மகிமை தோய்ந்து எவ்வழியும் தெய்வீகம் வாய்ந்து ஈசனோடு தேசு மிகுந்து திகழ்கின்றான்.

**Man and his greatness survive, lost in the greatness of God.** **[Watson]**

மகத்துவம் உடைய மனிதன் கடவுளுடைய மகிமையில் கலந்து என்றும் சிரஞ்சீவியாய் வாழுகிருன் என வில்லியம் வாட்ஸன் என்பவர் இவ்வாறுதிவ்விய நிலையைக்கூறியிருக்கிருர்.

மாசு இல்லாத மணிபோல் பாசம் இல்லாத சீவன் ஈசன் ஆகின்றது. பந்தம் அற்றபோது அந்தமில்லாத ஆனந்த வீட்டை என்றும் சொந்தமா அது அடைந்து மகிழ்கிறது.

மாயமருள் தூய மதி ஒளியால் ஒழிகிறது; ஒழியவே உயர் கதி வெளியாகிறது. தேகத்துள் இருக்கிற சீவன் ஈசன் உறவு என்று ஒருவன் உணர நேரின் உலகபாசம் அவனைவிட்டு ஒழிந்து போகிறது. உயர்ந்த தேசு அவனிடம் ஒளிவீசி வருகிறது.

பாசம்இன்றி உள்உணர்வைப் பதினைங் கடிகை பூசிக்கில்
ராச சூய இலக்கம் நிகர்; இவ்வாறு ஒருநாள் அருச்சிக்கில்
ஆசிலாத பரஒளியில் அமரலாகும்; இதுதானே
ஏசில் பரம யோகமிது தானே பரம கிரியையுமே. (வாசிட்டம்)

தனது ஆன்மாவை அகமுகமா நோக்கிச் சிறிது போது கருதி யுருகிஞல் பலகோடி வேள்விகள் செய்த பெரிய புண்ணியம் அவனை மருவுகிறது என மாதவர்கள் உறுதி செய்துள்ளனர். உயிர் நிலையை உண்மையா உணர்; உயர் நிலை எண்மையாய் வரும். ஆன்ம அறிவு பரமான்வை நேரே அருளுகிறது.

---

997. ஆசைத் தொடர்புகள் எல்லாம் அவமான
நீசத் தொடரே நிலையழியின்—பேசரிய
பேரின்ப முத்தியுனைப் பேணி எதிரேந்தி
ஓரின்பம் ஆக்கும் உவந்து. (எ)

இ—ள்.

பொறி புலன்களில் விரிகின்ற ஆசைகள் எல்லாம் உன்னை நீசப்படுத்தி நெடிய துயரங்களையே விளைத்து வரும்; அவற்றை ஒழித்து விடின் அல்லல் யாவும் ஒல்லையில் ஒழிந்து எல்லையில்லாத பேரின்ப நிலையை எய்தி என்றும் நீ இனிது மகிழ்வாய் என்க.

விருப்பம், இச்சை, ஆசை என்பன சீவ சுபாவங்களாய்

மேவியுள்ளன. மானச விருத்திகள் மானிடரை இயக்கி வருகின்றன. உள்ளத்தின் அசைவுகள் உயிரின்விசைகளாயுள்ளன.

உயிர் உடலோடு கூடியபோதே பசி குடலோடு கூடியது. அந்தப் பசி நோயை நீக்கி வாழ விரும்பிய வழியே விழைவுகள் முதலில் விளைந்து வந்தன; அவ்விழைவின் விளைவுகள் விரிந்து பரந்து அளவிடலரியபடி யாண்டும் நீண்டு வளர்ந்துள்ளன.

உடலின் தொடர்பால் விளைந்தது எவ்வழியும் கடக்க முடியாத கடலாய் விரிந்து உயிர்க்கு வெவ்விய துயரங்களை விளைத்து வருகிறது. பற்றிய நசை வழியே படு வசைகள்முற்றியுள்ளன.

துன்பங்களுக் கெல்லாம் மூலவித்தாய் உள்ள ஆசை அடியோடு ஒழிந்தபொழுதுதான் உயிர் ஈசனை அடையும்; அன்று தான் என்றும் நிலையான பேரின்ப வீட்டை நேரே அது பெற்று மகிழும். அவா நீங்கி ஒழியின் ஆனந்தம் ஓங்கி எழுகிறது.

*ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே*
*பேரா இயற்கை தரும்.* (குறள், 370)

ஆசைப் புலை நீங்கின் அந்நிலையே நிலையான பேரின்ப வீடு எனத் தேவர் இவ்வாறு கூறியிருக்கிறார். பொல்லாத துயரங்கள் எல்லாம் ஆசையால் விளைகின்றன; அது ஒழிந்தால் அல்லல்கள் யாவும் நீங்கி விடுகின்றன; அதிசய ஆனந்தம் ஓங்கி வருகின்றது. ஆராத அவா அறின் பேராத பேரின்ப வீடு நேராம்.

வாசியும் ஊசியும் வீசி வகையாப்
பேசி இருந்து பிதற்றிப் பயன்இல்லை;
ஆசையும் அன்பும் அறுமின்! அறுத்தபின்
ஈசன் இருந்த இடம்எளிது ஆமே. [திருமந்திரம்]

ஆசையை ஒழியுங்கள்; ஈசன் இருந்த இடம் எளிதே தெளிவாம் எனத் திருமூலர் இங்ஙனம் குறித்துள்ளார். நீசமான ஆசையிருக்கும் வரையும் ஈசனை யாரும் அடைய முடியாது. தூய பரனைத் தோய வேண்டின் தீய மருள் மாய வேண்டும்.

ஆர்வமும் செற்றமும் நீக்கி அடங்குதல்
சீர்பெறு வீட்டு நெறிஎன்ப---நீர்புகப்
பட்டிமை புக்கான் அடங்கினன் என்பது
கெட்டார் வழிவியக்கு மாறு. (அறநெறிச்சாரம்)

ஆசை அறுவதே வீட்டுநெறி என இது காட்டியுள்ளது.

பற்றுஎன்னும் பாசத் தளையும், பலவழியும்
பற்றறுது ஓடும் அவாத்தேரும்---தெற்றெனப்
பொய்த்துரை என்னும் பகையிருளும், இம்மூன்றும்
வித்தற வீடும் பிறப்பு. (திரிகடுகம்)

பாசப்பற்று ஆகிய வித்து அற்றபோதுதான் பிறப்பு அறும் என்று நல்லாதனர் இங்ஙனம் சிறப்பாச் சொல்லியுள்ளார்.

'ஆம்உன் இச்சையே மேலுமே லும்பிறப்பு
அளிக்கும் வித்துஎன நெஞ்சே!
நீமறுத்திடு ஆசைக்கடல் சுவறுமே
நினைவுஎனும் திரை மாயும்
போமிறந்தெலாம் நினைவும் எப்பொழுதில்அப்
பொழுது பூரணம் ஆய
சோம சேகரத்து எந்தைபொற் கழலையும்
தொழல் ஐயம்இலை நாமே. (வைராக்கியசதகம்)

தம் உள்ளத்தை நோக்கிச் சாந்தலிங்க சுவாமிகள் உரையாடியுள்ள இது ஈண்டு ஊன்றி உணர வுரியது உன் இச்சையே பிறப்புக்கு வித்து; ஆசையை அடக்கு; நசையான நினைவுகள் ஒழியின் இறைவனை எளிதே காணலாம்; அப்பொழுது பேரின்ப வீடு உனக்குக் காணியாம் எனத் தம் மனத்தோடு உரைத்திருப்பது மனித இனத்துக்கெல்லாம் இனித்த உரிமையாய் இசைந்து நின்றது. ஞான போதனை ஊன மருள்களை நீக்கி உய்தி புரிகிறது. ஈன நசை ஒழிந்தாலன்றி இனிய சுகம் எய்தாது.

தனக்கு மோசமா நாசத்தை விளைக்கின்ற ஆசையை மனிதன் விடாமல் பற்றி வருவது மாயமருளாய் மூற்றி வருகிறது. புலையான நசை உள்ளத்தில் புகவே நிலையான சுகத்தை இழந்து விடுகிறான். நெறிகேடனாய் இழிந்து நிலை குலைந்து உழலுகிறான்.

இருள்படு காட்டின் ஊடே இருந்துழல் சிதடராயோர்
தெருள்படு நகரம் தாமே சேர்அதர் அறிகலார் போல்
மருள்படு காம முன்னி வருவினை முயலா நிற்போர்
பொருள்படு நலஞ்செய் வீட்டில் புகும்அதர் அறிகலாரே.
பாகவதம்)

இருண்ட காட்டில் அகப்பட்ட குருடன் வழி தெரியாமல்

அலைவதுபோல் மருண்ட ஆசை யுடைய மனத்தவர் வீட்டுக்கு உரிய நெறி அறியாமல் வெய்ய துயரங்களில் உழலுவர் என இது காட்டியுள்ளது. சிதடர் = குருடர். அதர் = வழி.

ஆசைசற்று இருந்திடின் அதின் நிமித்தம் வந்து
ஓசைசால் வெருளியும் ஒருங்கு நண்ணிடும்;
மாசையார் அஃதுற மயக்கமும் உறும்
ஈசையார் அடிக்கலப்பு இரிக்கும் இன்னவே.

(காசிரகசியம்)

ஆசைத் தொடர்பால் விளையும் அவகேடுகளை இதில் அறிந்து கொள்ளுகிறோம். மையலான பாசங்கள் வெய்ய துயர்களையே விளைத்து வருதலால் அவற்றை ஒழித்தவரே மெய்யான சுகத்தை நேர்கின்றனர். மாய உறவுகள் நீங்கின் தூய இன்பம் ஓங்கும்.

மனைக்குரி மனையாள் தன்னை வாய்த்தநன் மைந்தர் தம்மைக்
கனைத்தலை சுருட்டும் வேலைக் கடல்நிகர் செல்வம் தன்னை
எனைத்தையும் இலம்பாடு என்றே இம்மெனத் துறந்துபெம்மான்
தனைச்சரண் அடைந்து ளாரே தனைநிகர் இல்லாச் செல்வர்.

(தணிகைப்புராணம்)

உலக போகங்களும் செல்வங்களும் எவ்வளவு வளமாயிருந்தாலும் அவை நிலையில்லாதன; புலையுடையன; மருளான அத்தொடர்புகளை விலகி மெய்ப் பொருளை உரிமையா அடைந்தவரே மேலான பாக்கியவான்கள் என இது குறித்துள்ளது.

பாச மருள்கள் படியாதவரே ஈசன் அருளை இனிது அடைகின்றார். சிறிய புலைகள் ஒழியவே பெரிய நிலைகள் வருகின்றன

பொல்லாப் புலைகள் புறமொழிய எவ்வழியும்
நல்ல அருள்நிலையை நாடிவரின்---அல்லலாய்
நேர்ந்த பிறப்பின் நிலையழிந்து பேரின்பம்
ஆர்ந்து வருமே அவண்.

பேரின்ப வீடு அடையவுரிய வழியை இது விழி தெரிய விளக்கியுளது நல்லசுகத்தைநாடுகிறவன் அல்லலைக்கூடலாகாது.

அவலமான ஆசை ஒழிந்த அளவு மனிதன் புனிதனாய் உயர்ந்து விளங்குகிறான். இச்சை ஒழியவே இனிய சுதந்தரங்களும் அரிய சுகங்களும் உச்சநிலையில் அங்கேஒளிவீசி எழுகின்றன.

இச்சையாம் விறகு மாண்டால், எண்ணமாம் வன்னி மாளும்;
நிச்சயம் ஆகும் தேயத் தியாகமாம் நெடுந்தேர் ஏறி
மெச்சிய உதாரக் கண்ணால் வேட்கையால் மிகவும் வாடும்
கொச்சை ஞாலத்தை நோக்கிக் குறைவற இருப்பாய் தீரா!
[வாசிட்டம்]

இச்சை அற்றபோது அந்த ஞானி அதிசய தீரனாய் உயர்ந்து பரமன்போல் உலகத்தை உல்லாச விநோதமா நோக்கி நிற்பான் என வசிட்ட முனிவர் இராமபிரானிடம் இவ்வாறு கூறியிருக்கிறார். நிராசையே நிமல ஈசனாய் நிலவுகின்றது.

துன்ப நிலையமான ஆசையை அடியோடு ஒழித்தவரே இன்ப நிலையமான அதிசய வீட்டில் குடி ஏறுகின்றனர். ஆனந்தப் பேற்றின் உண்மையை ஓர்ந்து உணர்ந்து தேர்ந்து கொள்க.

---

998. பேரின்ப வீடென்றும் பேசரிய முத்திஎன்றும்
பாரின்பம் ஆர்வார் பகர்வவெலாம்—ஓரின்பம்
உண்டென்று கேட்ட உணர்வுரையே உண்மையாக்
கண்டவரே காண்பார் கதி. (அ)

இ-ள்.

என்றும் நிலையான பெரிய இன்ப வீடு என்றும், சொல்ல முடியாத நித்திய முத்தி என்றும் உலக இன்பங்களை நுகர்ந்து வருபவர் உவந்து சொல்லி வருவன எல்லாம் மேலோர் வாய் மொழிகளைக் கேட்ட கேள்வி அளவேயாம்; அதனை அநுபவ நிலையில் உண்மையாக் கண்டவரே உயர்கதி கொண்டவர் என்க.

இந்த உலகில் அனுபவிக்கின்ற தேக போகங்கள் சிற்றின்பம் என்றும், இவற்றைத் துறந்து பந்த பாசங்கள் அற்ற முத்தர்கள் அந்த உலகில் நித்தியமாய்ப் பெற்று நிரதிசயமா அனுபவிப்பது பேரின்பம் என்றும் பேசப் படுகின்றன.

பெருமை சிறுமைகள் அவற்றின் மேன்மை கீழ்மைகளை முறையே உணர்த்தி நின்றன. ஊன உடலோடு தோய்ந்து வருகிற அருந்தல் பொருந்தல்கள் யாதும் நிலையாமல் யாண்டும் இழிந்து கழிந்து ஒழிந்தே போகின்றன; இவ்வாறு இழி புலைகளாய் ஒழியாமல் என்றும் நிலையான பரமானந்த போகமே பேரின்பவுலகம் என வழி முறையே வழங்கி வர நின்றது.

"பொறிவாயில் ஐந்து அவித்தான்" (குறள், 6)

என்று இறைவனுக்கு இவ்வாறு ஒரு பெயர் வந்துள்ளது. இந்த நெறியில் நின்று ஒழுகுகின்ற விழுமியோரே நித்திய முத்தராய் நீடு வாழுகின்றார். ஐம்புலன்களையும் வென்று அருந்தவ நிலையில் திருந்தி நின்றவர்க்கே அதிசய ஆனந்த வீடு விருந்து புரிந்து அருளுகிறது. அதனை உண்டவர் உணர்வரே அன்றி வெளியே மீண்டு வந்து யாண்டும் உணர்த்த முடியாது.

மீண்டு ஈண்டு வாரா மேல் நிலம் என்று வீட்டு நிலையை மேலோர் இவ்வாறு கூறியுள்ளனர். அங்கே போனவர் மீளார் ஆதலால் ஆண்டு நீண்டுள்ள ஆனந்த நிலையை யாராலும் யாதும் அறிய இயலாது. அறிந்தவர் பிரிந்து வந்து பேச மாட்டார்.

கண்டவர் விண்டிலர்;
விண்டவர் கண்டிலர்.

என்பது முதுமொழி. வீட்டின் இன்பத்தைக் கண்டவரையும் காணாதவரையும் இது காட்டியுள்ளது. தயிலும் சுவையையே அயலே சொல்ல இயலாது. பரமானந்த நிலையைப் பகருதல் எவ்வாறு? பேசரிய பேரின்ப முத்தி பேச வுரியதன்று.

ஆனந்த சொரூபியான இறைவனுடைய அருள் நிலையே வீடு என விளங்கியுளது. சிவலோகம், பரமபதம், கைலாசம், வைகுண்டம் என்று இந்நாட்டு இலக்கியங்கள் வீட்டைக் குறித்துக் காட்டி வருகின்றன. ஆன்மா அல்லலுறாமல் அமைதியாய்ப் பரமான்மாவோடு தோய்ந்திருப்பதே இன்ப வீடு என நேர்ந்திருக்கிறது. அதனை அடைவது மிகவும் அரிது; அரிய தவ நிலையினரே அணுக நேர்கின்றனர். பற்று முற்றும் அற்று இரு வினைகளும் அடியோடு ஒழிந்தவரே அதனை உரிமையோடு மருவுகின்றனர். பந்தம் இல்லாதவரே அந்தமில் ஆனந்தம் உறுகிறார்.

தாவரும் இருவினை செற்றுத் தள்ளரும்
மூவகைப் பகைஅரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர். (இராமா, தாடகை, 15)

விட்டவர் அல்லரேல் யாவர்வீடுளார்? (இராமா, மந்தி 20)

வினைகளை வென்றுமேல்வீடு கண்டவர் [இராவ, மந்திர 71

காடு பற்றியும் கனவரை பற்றியும் கலைத்தோல்

மூடுபற்றியும் முண்டித்தும் நீட்டியும் முறையால்
வீடு பெற்றவர். (இராமா, இரணியன் 31)

வீடு பெற உரியவரை இவை விளக்கியுள்ளன. குறிப்புகள் கூர்ந்து நோக்கவுரியன. நீத்தார் என்று துறவிகளுக்கு ஒரு பெயர். யாவும் விட்டவர் என்பதை அது விளக்கியுளது. உடல் உறவுகளை நீத்தவரே பிறவிக்கடலை நீந்திப் பேரின்பம் பெறுகின்றார். விடாதவர் விழுந்தார்; விட்டவர் எழுந்தார்.

துன்பங்களிலேயே தொடர்ந்து படர்ந்து வந்த சீவன் இன்ப நிலையமான ஈசனை அடைந்து இனிது மகிழ்ந்திருத்தலே மோட்சம் என வந்தது. சரியான பரிபக்குவம் அடைந்தபோது தான் உயிர் பரமனை மருவுகிறது. பரமபுருடனோடு இரண்டறக் கலந்து இன்புறுதலால் சீவனை நாயகி என்றும் சிவனை நாயகன் என்றும் கூறுவது மரபு. இதனை நாயகி நாயக நேயம் என்பர்.

பெண் பேதையாயிருக்கும் போது நாணுவதில்லை; யாரோடும் கூசாமல் பேசிப்பழகுவள்; பருவம் அடைந்ததும் வெளியே வரக் கூசுவள். முன்பு மறையாமல் திறந்து திரிந்த கொங்கைகளைப் பின்பு நன்கு மூடி எங்கும் யாருங்காணாதபடி பேணுவள். அவ்வாறு நாணிப் பேணி வந்தவள் மணந்த கணவனிடம் யாதும் கூசாமல் தேகம் முழுவதையும் ஏகபோகமாத் தந்து இனிது கலந்து இன்பம் மீதூர்வள். இந்தப் பெண்மைநிலை ஞானிகளுடைய உண்மை நிலையோடு உரிமை தோய்ந்து ஒப்பாயுள்ளது.

யாதும் உணராமல் பேதையாயிருக்கும் போது மனிதன் ஏதும் நாணாமல் எங்கும் கூசாமல் திரிகிறான்; அந்தப் பேதைமை நீங்கிப் புத்தியறிந்து மெய்யுணர்வு தோன்றினால் முன்பு நச்சித் திரிந்த கொச்சையான பொறி புலன்களின் நுகர்ச்சிகளில் அருவருப்பு அடைந்து ஒதுங்குகிறான். யாரோடும் பேசாமல் மோனமாய்த் தனியே இருக்கிறான். பருவமங்கை போல் உரிய ஒரு நாயகனைக் கருதி உருகுகிறான். ஞானமும் அன்பும் பெருந்தனங்களாய்ப் பெருகியிருத்தலால் எவரிடமும் நெருங்காமல் ஏகாந்தமாய்த் தங்கி ஏகநாயகனையே எண்ணி யோகம் மருவியுள்ளான். ஞான யோகியின் நிலை மான மங்கைபோல் மருவி மருமங்கள் பெருகி யிருப்பது இங்கே கருதி யுணர வுரியது.

முலைமுதிர நாணம் முதிரும் மகள்போல்
கலைமுதிர ஞானம் கனிந்து---தலைமகனைக்
கூடிக் களிக்கும் குணமே மணமாக
ஆடிக் களிக்கும் அது.

ஞான நீர்மையின் சீர்மையை இதில் கூர்மையா ஓர்ந்து கொள்கிறோம். முலை முதிர்வில் நாணம் விளைகிறது; கலைமுதிர்வில் ஞானம் கனிகிறது. அந்த நாணம் மானத்தைக் காப்பாற்றிப் பெண்மையை மகிமைப்படுத்தி இன்புறுத்துகிறது; இந்தஞானம் சீவனைப் பாதுகாத்துத் திவ்விய பேரின்பத்தை அருளுகிறது.

உலக ஆசைகள் யாவும் அற்றுப் பொறி புலன்களை அடக்கி ஈசனையே கருதி உருகுவது ஞானிகளுடைய இயல்பாயிசைந்தது.

என்புருகி நெஞ்சம் இளகிக் கரைந்து கரைந்து
அன்புருவாய் நிற்க அலந்தேன் பராபரமே! (1)

சுத்த அறிவாய்ச் சுகம்பொருந்தின் அல்லால் என்
சித்தம் தெளியாது என்செய்வேன் பராபரமே! (2)

சொல்லால் அடங்காச் சுகக்கடலில் வாய்மடுக்கின்
அல்லால் என் தாகம் அறுமோ பராபரமே! (3)

மாறு அனுபூதி வாய்க்கின் அல்லால் என்மயக்கம்
தேறுது என்செய்வேன் சிவமே பராபரமே. (4)

இரவுபகல் அற்ற இடத்து ஏகாந்த யோகம்
வரவும் திருக்கருணை வையாய் பராபரமே. (5)

இறைவனை நோக்கித் தாயுமானவர் இவ்வாறு உருகி உரையாடியிருக்கிறார். இரவு பகல் அற்ற இடம் என்றது பரமானந்த வீட்டை. சிவானந்த போகத்தை எண்ணி இவர் ஏங்கியுள்ள நிலை ஈங்கு அறிய வந்தது. பத்தியும் துறவும் முத்தியை மருவின.

அராப்புனை வேணியன் சேய்அருள் வேண்டும் அவிழ்ந்தஅன்பால்
குராப்புனை தண்டையம் தாள்தொழல்வேண்டும் கொடியஐவர்
பராக்கறல் வேண்டும் மனமும் பதைப்பறல்வேண்டும் என்றால்
இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே.

(கந்தரலங்காரம், 74)

பேரின்ப வீடு பெறுதற்கு அரியது என அருணகிரிநாதர் இவ்வாறு கூறியிருக்கிறார். பரமன்பால் பேரன்பு பூண்டு அவனுடைய அருளைப் பெற வேண்டும், பொறிபுலன்கள் அடங்க வேண்டும், உள்ளம் ஒடுங்கி உயர் ஞானம் ஓங்க வேண்டும்; இவ்வளவும் செவ்வையா அமைந்த போதுதான் திவ்விய ஆனந்த நிலையை அடையலாம் என இவர் உறுதியா முடிவுசெய்துள்ளார்.

வீடுபெறப் பாடுபடும் வித்தகனே முத்தியின்பம்
கூடும் பரமாக் குவிந்து.

---

999. பாசங்கள் ஆகிப் படர்ந்த படரெல்லாம்
நீசங்கள் என்று நினைந்தொதுங்கி—ஈசன்பால்
உள்ளம் மருவி உருகின் உயரின்ப
வெள்ளம் பெருகும் விரிந்து. (கூ)

இ—ள்.

பந்த பாசங்களாய்ப் படர்ந்து அடர்ந்து தொடர்ந்து வந்த தொடர்புகள் எல்லாம் நீசங்கள் என்று உணர்ந்து விலகி ஈசனை நினைந்து நீ உள்ளம் உருகிவரின் பேரின்ப வெள்ளம் உன் எதிரே பெருகி வரும்; இவ்வுண்மையை ஓர்ந்து உறுதி நலம் காணுக.

பசையாய் ஒட்டி உள்ளத்தை இழுத்து உயிரைத் துயரப் படுத்துவது பாசம் என வந்தது. சீவன் சிவனை அடையாதபடி இடையே தடையாயிருப்பது ஆகலால் இடையூறு என்று ஒரு பெயரும் பெற்றது. பந்தம் ஒழிந்தது பதியை அடைந்தது.

பாசம் படிந்தால் காசம் படிந்த கண்போல் உயிர் குருடு பட்டு உண்மை நிலையை உணராமல் புன்மையான புலைகளி லேயே இழிந்து உழலும். நேரே சூரியன் சோதி வீசி நின்றா லும் ஒளியிழந்த கண் அவனைக் காண முடியாது; அதுபோல் பரஞ்சோதியான ஈசன் எங்கும் பிரகாசமாய் என்றும் இன்ப நிலையாய் இருந்தாலும் பாசம் படிந்த சீவர்கள் அவனைக் கண்டு களித்துக் கதி நலம் காண இயலாது.

பாச இருள் ஞான ஒளியால் ஒழிந்து போம்; அவ்வாறு ஒழியின் உள்ளம் தெளிந்து பரம்பொருளை நேரே உணர்ந்து பேரின்பம் பெறும். புலையான பொய்த் தோற்றங்களைக் கண்டு மயங்காமல் நிலையான மெய்ப்பொருளை நேரே தெளிவதே ஞானம் ஆதலால் அது உதயம் ஆகவே ஊனமருள்கள் யாவும் ஒருங்கே ஒழிந்து போகின்றன; போகவே ஏகசுகம் வருகிறது.

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினின் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்

தண்ணிழலாம் பதிவிதி எண்ணும் அஞ் செழுத்தே.
(சிவஞானபோதம், 9)

உலக பாசங்கள் ஆகிய ஆசைப் புலைகள் நீங்கின் சீவனுக்கு ஈசன் இன்ப சோதியாய்த் தோன்றி இனிமை சுரந்தருளுவன் என இது உணர்த்தியுளது. பாசம் ஒருவப் பதி தண் நிழலாம் என்றது ஈண்டு நுண்ணிதாய் ஊன்றி நோக்கி உணர வுரியது.

பிறவித்துயரங்களில் நெடுங்காலம் தவித்துப் பதைத்த தாபம் எல்லாம் ஒல்லையில் ஒழிய இறைவன் அருள் இனிய குளிர் நிழலாய் அரிய பெரிய அதிசய சுகம் தருகிறது; உண்மையான அந்த இன்ப நிலை தெரியத் தண் நிழல் கண் எதிர் வந்தது.

பற்றியிருந்த புலை அழுக்கு நீங்கவே பரமபதி உரிமையாய்ப் பற்றிக்கொள்ளுகிறது; கொள்ளவே எல்லையில்லாத பேரின் பத்தை உயிர் எய்தி மகிழ்கிறது. ஈசனை நாடி உருகிவரின் மாசுகள் கழிகின்றன; கழியவே சீவன் தேசு மிகப்பெற்றுத் திவ்விய சுகத்தை அடைகிறது. பதியுடன் பதியவே அதிசய இன்பம் வந்தது.

பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும்
பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத் தாலே
நேசமொடும் உள்ளத்தே நாடிப் பாத
நிழல்கீழ் நில்லாதே நீங்கிப் போதின்
ஆசைதரும் உலகம்எலாம் அலகைத்தேர் ஆம்என்று
அறிந்தகல அந்நிலையே ஆகும் பின்னும்
ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க
உள்ளத்தே புகுந்து அளிப்பன் ஊனம்எலாம் ஓட.
(சிவஞான சித்தியார்)

பரமனை உரிமையாக் கருதி உய்யும் வழியை இது காட்டியுளது. மனம் கரைய மாசு கரைந்து தேசு நிறைகிறது.

மருவி நின்ற உலக பந்தங்கள் ஒழிந்த பொழுது மனிதன் உள்ளம் தெளிந்து புனித ஞானி ஆகிறான்; ஆகவே பரமனுக்கும் சீவனுக்கும் உள்ள உறவுரிமைகள் தெரிய வருகின்றன. உண்மை தெளியவே புன்மையான பிறவித்துயர்கள் நீங்கிப் போகின்றன; போகவே நேரேபேரின்பமுத்தியை அடைகிறான்.

தன்னைத்தான் தெளிய நோக்கித் தன்னிடைத் தண்பிலாத
என்னுரு வதனில் சேர்ந்தோன் இருவினைச் சிமிழ்ப்பின்எய்தி

மன்னிய திகிரி போலும் பவத்தினில் மயங்கான் ஆகி
உன்னரு முத்தி வீட்டின் உவந்தினிது இருப்பனன்றே.
(கூர்மபுராணம், சாங்கியயோகம் 34)

முத்தி வீட்டில் இருக்க உரியவனை இது தெரியச் செய்துள்ளது. தன்னையும் தலைவனையும் அறிபவன் இன்னல் நீங்கி இன்பம்பெறுகிருன். சுகஉருவனை மருவினவன் சுகமடைகிருன்.

ஆமாத்மஸ்தம் ய: அநுபச்யந்தி தீராஸ் தேஷாம்
ஸுகம் சாஸ்வதம் நேதரேஷாம்.

தன் ஆன்மாவிலுள்ள அந்தப் பரமான்வை யார் அறிகின்ருரோ அத்தீரர்களுக்கே நித்திய சுகம் உண்டாம்; வேறு எவர்க்கும் இல்லை எனக் கடவல்லி என்னும் உபநிடதம் இவ்வாறு குறித்துளது. இன்பம் இருக்கும் நிலை இனிது தெரிய வந்தது.

ஞாத்வா தேவம் ஸர்வ பாசாபஹாநி:

ஈசனை அறியவே எல்லாப் பாசங்களும் நாசமாம் எனச் சுவேதாசுவதரம் எனும் உபநிடதம் இங்ஙனம் கூறியுள்ளது.

நிலையில்லாத வெறும் பொருள்களை நிலை என நம்பிப் புலையுருமல் நிலையுடைய பரம்பொருளை உரிமையா நினைந்து வருபவர் உயர்ந்த ஞானிகளாய்ச் சிறந்து பிறவித்துயர்கள் நீங்கிப் பேரின்பம் பெறுகின்றனர். பாசம் அற்றவரே ஈசனை எய்துகின்றனர்.

வளங்கு லாவரும அணங்க ஞர்விழி மயக்கி லேமுலை
முயக்கிலே விழு மாந்தர்காள்!
களங்குலாம் உடல் இறந்து போயிடு காடு சேர்முனம்
வீடு சேர்வகை கேண்மினே
துளங்கு நீள்கழல் தழங்க ஆடல்செய் சோதியான் அணி
பூதியான் உமை பாதியான்
விளங்கு சேவடி உளம்கொளீர்யமன் விடுத்த பாசமும்
அடுத்த பாசமும் விலக்குமே.
(சிதம்பரச்செய்யுள், (55)

ஈசனை நினையுங்கள் எமபாசம் கடந்து இன்பம் அடையலாம் என இது காட்டியிருக்கிறது. மாசு மருவாமல் உயிர் சுகமாய்த் தேசுற வேண்டின் இறைவனையே கருதி உருகிச் சரண் அடைய வேண்டும். தீய இருள் நீங்கத் தூய ஒளி ஓங்குகிறது.

பாயிருக்கத் தரைகிடத்தும் வினையின் பான்மை
பழம்இருக்கக் காயுதிர்க்கும் பழுத்திடாத
காயிருக்கப் பழம்உதிர்க்கும் எனஒண்ணாத
கழிமடனும் அடுபிணியும் கலியும் நீக்காய்!
சேயிருக்கும் கொன்றையணி சொக்கே மிக்க
திலகநுதல் கயல்கண்ணனும் உலகம் ஈன்ற
தாயிருக்க நீஇருக்கத் துணையி லார்போல்
தளர்ந்திருக்க நீதியுண்டோ சரண்புக் கேனே.

(மதுரைப்பதிற்றுப்பத்து, 41)

வினையின் நீங்கிய பரமனை அடைந்தபோதுதான் வினைத் துயர்கள் நீங்கிச் சீவன் மேலான இன்ப நிலையை அடைகிறது. அந்த நிலைமை இங்கே தெரிய வந்தது. மாயப் பொருள்களில் மருவிய ஆசைகளை ஒருவித் தூய பரம் பொருளைக் கருதி யுருகு வோரே கதிநலங்களைக் காணும் தகுதிகளை அடைகின்றனர்.

பாசநிகளங்கள் எல்லாம் பஞ்சாகச் செஞ்செவே
ஈச எனை வா என்று இரங்கினால் ஆகாதோ.

(தாயுமானவர்)

ஈசனை நினைந்து தாயுமானவர் இவ்வாறு ஏங்கியிருக்கிறார்.

மனிதன் எதனை எண்ணி வருகிறானோ அவ்வண்ணமே நண்ணி வருகிறான். மேலான பரமனைக் கருதின் மேலாகிறான்; கீழான புலைகளை நினைந்து வந்தால் கீழான இழிநிலைகளையே அடைகிறான். அடுத்தபடி ஆகிவருவது இயற்கைநியமமாகிறது.

அற்புத ஆற்றலும் அதிசய ஆனந்தமும் உடையவன் ஆதலால் கடவுளை உரிமையோடு கருதி வருபவர் பெருமகிமைகளோடு பேரின்பங்களையும் ஒருங்கே பெறுகின்றார்.

புனித ஈசனை நேசித்துப் பூசித்துவரப் புண்ணிய போகங்கள் பெருகி வருகின்றன. முனிவரர், யோகியர், ஞானியர், மாதவர் துறவிகள் என உயர் பேர் பெற்றுள்ளவர் யாவரும் பந்த பாசங்கள் ஒழிந்து பரமனை நினைந்து உயர்ந்துள்ள முத்தர்களே.

What better thought than think on God, and daily him to serve. ? (Tusser)

கடவுளை நினைந்து நாளும் தொழுவதைக் காட்டிலும் நல்ல எண்ணம் வேறு என்ன உள்ளது? என்னும் இது ஈண்டு

எண்ண வுரியது. இறைவனை எண்ண இறைமை நண்ணுகிறது.

ஆண்டவனிடம் அன்பு பூண்டவர் நெருங்கிய கிளை உறவு கொண்டாடி யாண்டும் உரிமையோடு உவந்து துதிக்கின்றனர்.

My God, my Father, and my Friend,
Do not forsake me in the end. [Dillon]

என கடவுளே! என் தந்தையே, என் நண்பனே என்னைக் காத்தருள்; இறுதியில் கைவிட்டு விடாதே என டில்லன் என்பவர் ஆண்டவனைநோக்கி இவ்வாறு அன்பாய்வேண்டியிருக்கிறார்.

மாசு படியாமல் மனத்தைப் பாதுகாத்து வருவதே ஈசனை அடைவதற்கு நேரே வழியாம். சித்த சுத்தி தெய்வீக நிலையை அருளுதலால் அவ்வாறு வாழ்பவனே ஆனந்த நிலையை அடைகிறான். மனம் புனிதம் ஆக மனிதன் தெய்வம் ஆகிறான்.

Live pure, speak true, right wrong. (Tennyson]

சுத்தமாய் வாழ்; உண்மையே பேசு; பிழை நீங்கிச் சீர்திருந்தி ஓங்குக என்னும் இது ஈங்கு அறிய வுரியது.

பழுது படியாமல் உள்ளத்தைப் பாதுகாத்து முழு முதல் பரமனை உரிமையா நினைந்து வா; முத்தியின்பம்உன்பக்கம்வரும்.

---

1000. இந்த உடம்பை எடுத்திங்கு மானிடனாய்
வந்த வகையை வகுத்தறிந்து—முந்திநீ
சொந்தமா நின்ற சுகநிலையைத் தோய்ந்தாயேல்
அந்தமிலா இன்பம் அது. (ம)

இ-ள்.

இந்த உடம்போடு இங்கே இப்பொழுது ஒரு மனிதனாய் வந்திருக்கிறாய்; இந்தப் பிறவி வந்த வகையைப் பகுத்து அறிந்து முந்தி நீ சொந்தமாய் இருந்த அந்தச் சுக நிலையைத் தோய்ந்தாயேல் அது அந்தம் இல்லாத அதிசய ஆனந்தம் ஆம் என்க.

அண்மைச் சுட்டு உண்மையை ஓர்ந்துஉணர வந்தது. கண் எதிரே தோன்றியுள்ள இவ்வுடல் எண்ணரிய பிறவிகளைக் கடந்து பெரிய புண்ணியத்தால் கிடைத்துள்ளது; பெறுதற்கு அரிய பேறாய் வாய்த்துள்ள இந்தக் கருவியைக் கொண்டு பெறவுரிய பேரின்ப நிலையை விரைந்து பெறுபவனே சிறந்த மகிமையாளனாய் உயர்ந்து திகழ்கிறான். பிறவிப் பேறு பின்பு பிறவாமையே.

அரிய சாதனம் அமைந்துள்ள பொழுதே பெரிய ஊதியத்தைப் பெருது நின்றவர் பேதைகளாய் இழிந்து போகின்ருர்; பெற்றவர் மேதைகளாய் விளங்கி நிற்கின்ருர். மெய்யுணர்வு என்பது பொய்யிழிவுகளை நீக்கி மெய்யான இன்ப நிலையை எய்துவதே யாம். பெறவுரியதைப் பெறுபவன் பேருளனுகிருன்.

ஈனமும் இடர்களும் இகந்து தன் உயிர்க்கு
ஆனதை அறிவதே ஆன்ம ஞானமாம்.

தத்துவ ஞானத்தின் உத்தம உருவத்தை இது உணர்த்தியுள்ளது. உள்ளதை உள்ளபடி ஓர்ந்து தெளிவதே தெள்ளிய ஞானம். என்றும் உள்ள ஈசனை எய்தி இன்புறுக

பிறவி எவ்வழியும் துன்பம் என்பது அனுபவங்களால் செவ்வையாய்த் தெரிய வருகிறது. அல்லல்களே யாண்டும் நீண்டு தொடர்ந்து நெடிது படர்ந்து வருதலால் துயரப் பிறப்பு என்று பெயர் பெற்று அதன் இயல்பை விளக்கி நின்றது.

பற்றிய துன்பங்கள் எல்லாம் ஒருங்கே நீங்கி என்றும் அழியாத இன்ப நிலையைப் பெறுவதே முத்தி, வீடு என முடிவாயுள்ளது. பந்தநீக்கங்களை இந்த மொழிகள் தெளிவாக்கியுள்ளன:

துன்பம் தோற்றம்; பற்றே காரணம்.
இன்பம் வீடே; பற்றிலி காரணம் [மணிமேகலை, 30]

நான்கு உண்மைகளை இது நன்கு காட்டியுள்ளது. பிறப்பைத் தோற்றம் என்றது தோன்றி மறையும் மருமம் தெரிய.

தோற்றம் துன்பம்; அதற்குக் காரணம் பற்றே.
வீடு இன்பம்; அதற்குக் காரணம் பற்றுஇன்மையே.

என விளக்கியுள்ள இதனைக் கூர்ந்து சிந்திக்க வேண்டும்

துக்கம், துக்க விளைவு, துக்க நீக்கம், துக்கம் நீங்கும் நெறி என்னும் இந்த நான்கையும் சத்திய சதுட்டயம் என்பர். இந்த நிலைகளை உய்த்து உணர்ந்து உய்தி காண்போரே உத்தம ஞானிகள் ஆகின்ருர். அறிவதை அறிந்து அடைவதை அடைக.

இடும்பைகளே நிறைந்துள்ளமையால் உடம்போடு கூடி வாழும் உலக வாழ்வை வெறுத்து ஞானிகள் உய்தி காண நேர்ந்தனர். உண்மை கண்டவர் நன்மை காணுகின்ருர்.

இன்னது அம்ம இவ்வுலகம்
இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே. (புறம், 194)

இவ்வுலக வாழ்வு துன்பம் மிக வுடையது; ஆகவே நிலை யான இன்ப வீட்டை அடையும் நெறியினை விரைந்து காணுங் கள் என நன்கணியார் என்னும் சங்கப்புலவர் இங்ஙனம்போதித் திருக்கிறார். இன்னாமைகாணாமல் இனிமைகாண்பதேமகிமைஆம்.

உடல் அளவில் உள்ள உயிர் கடல் அளவு துயரங்களைக் கண்டு வருகிறது. நினைவுகளில் இருந்தே வினைகள் விளைந்தன; அந்த வினைகளின் பயன்களை நுகர்ந்து கழிக்கவே பிறவிகள் எழுந்தன. பிறப்பில்லாத பரமனிடமிருந்து பிரிந்து வந்து பிறவி களில் விழுந்த சீவன் துயர்களில் தோய்ந்து துடிப்பது மாயா விசித்திரமா மருவி யுள்ளது. மாயமருள்தெளிவதுதூயஒளியாம்.

முந்தி நீ சோந்தமா நின்ற சுக நிலை என்றது சீவனது இயல் பான உண்மை நிலையை ஓர்ந்து சிந்திக்கவந்தது. ஆனந்த நிலைய மான அந்தப் பரஞ்சோதியின் இனம் என்று தன்னை உணர்ந்து தெளிய நேர்ந்தால் மயலாய் விளைந்த இழிதுயரங்கள் எல்லாம் அயலேஒழிந்துபோய்விடும். போகவேஉயர் சுகம்ஒளிவீசிவரும்.

சிந்தை தெளிந்தால் சீவன் சிவனாய்
அந்தமில் இன்பம் அடைந்து மகிழும்
தந்தையும் தாயும் தனையனும் ஆகி
வந்த பிறவி வரவுகள் மறையும்.

என்றதனால் மெய்யான சிந்தனையின் மேன்மை தெளிய லாம். சித்தம் தெளியப் பித்தம் ஒழிகிறது. உத்தம உணர்வுகள் ஒளி வீசி எழுகின்றன. அந்த ஒளி ஆனந்த வெளியாகிறது.

சித்தம் சிவமாகச் செய்தவம் வேண்டாவால்;
சித்தம் சிவானந்தம் சேர்ந்தோர் உறவுண்டால்
சித்தம் சிவம்ஆக வேசித்தி முத்தியாம்
சித்தம் சிவம் ஆதல் செய்தவப் பேறே. (திருமந்திரம்)

சீவன் சிவமாய் முத்திபெறும் நிலையைத் திருமூலர் இவ் வாறு கூறியிருக்கிறார். தூயபரம் பொருளின் உறவு என்று உயி ரை உணர்ந்து உள்ளம் உயரும் ஆனால் துயரங்கள் யாவும் தொலைந்து போம். இயல்பான இன்பம் எங்கும் விளங்கும்.

இருவினை தாம்வரும் யான் எனலால் அவ்
இருவினை யால்வரும் இன்பொடு துன்பம்;
இருவினை யான்எனல் இன்றெனில் இல்லை;
இருவினை இல்எனில் இல்லை பிறப்பே. (1)

மனத்தை அடக்க மனம்துணை ஆகும்;
பினைத்துணை இன்று; அது பெற்றனன் ஆயின்
தனிச்சிவ மேஒரு தான்என வாழ்வன்
நினைத்து மறந்து நிலத்து உழலானே.
(பிரபுலிங்கலீலை, மனோலயகதி, 8, 9)

தீய நினைப்பின் விளைவுகளையும், தூய மனத்தின் மகிமையையும் அல்லம தேவர் இவ்வாறு நன்கு விளக்கியுள்ளார். சீவன் சிவமாய் வாழும் திவ்விய மந்திரம் இங்கே தெரிய வந்துள்ளது.

"அஹம் ப்ரமாஸ்மீத் யநுசந்தாநம் குர்யாத்."

நான் பிரமம் என்று உரிமையாச் சிந்தனை செய்க எனப் பைங்கலம் என்னும் உபநிடதம் இங்ஙனம் கூறியுள்ளது.

"ய ஏவம் தேவாஹம் ப்ரமாஸ்மீதி ஸ இதம்ஸர்வம் பவதி."

நான் தேவன் என்று எவன் இவ்வாறு பாவனை செய்து வருகிறானோ அவன் அவ்வாறே யாவும் ஆகிறான் என்பது பிருகதாரணியகம். வேத உபநிடதங்கள் இப்படிச் செப்பமா உணர்த்தி வருதலால் சீவனுக்கும் ஈசனுக்கும் உள்ள உறவுரிமைகள் தெளிவாயின. உரியசோதியுள் கலந்தது பெரிய ஆனந்தமாயது.

அறிவும் ஆனந்தமும் நிறைந்த ஆன்மா இறைவனை விட்டு நழுவிப் பிறவியில் விழுந்தமையால் மாடு ஆடு மனிதன் எனப் பெயர் பெறலாயது. சாதி மதம் தேசம் மொழி முதலிய நிலைகளால் பலவகையான பேதங்கள் பரந்து ஏதங்கள் விரிந்தன. நீண்டு மருண்டு மூண்டு இருண்டுள்ள இந்த மாய இருள் ஞான ஒளியால் அன்றி வேறு வழியால் என்றும் யாண்டும் ஒழியாது.

சித்த சுத்தி வாய்ந்து ஞானம் தோன்றியபோது ஈசனிடமிருந்தே சீவகோடிகள் பிரிந்து வந்துள்ளன என்று தெரிந்து கொள்ளுகின்றனர். தெரியவே அவனை நினைந்து உருகுகின்றனர்; அவனுடைய அதிசய மகிமைகளைத் துதிசெய்து போற்றுகின்றனர். அம்மொழிகளில் அரிய உண்மைகள் வருகின்றன.

பொருள்உணர்ந்து ஓங்கிய பூமகன் முதலா
இருள்துணை யாக்கையில் இயங்கு மன்னுயிர்
உருவினும் உணர்வினும் உயர்வினும் பணியினும்
திருவினும் திறலினும் செய்தொழில் வகையினும்

வெவ்வேறு ஆகி வினையொடும் பிரியாது
ஒவ்வாப் பன்மையுள் மற்றவர் ஒழுக்கம்
மன்னிய வேலையுள் வான்திரை போல
நின்னிடை எழுந்து நின்னிடை ஆகியும்
பெருகியும் சுருங்கியும் பெயர்ந்தும் தோன்றியும்
விரவியும் வேறாய் நின்றனை விளக்கும்
ஓவாத் தொல்புகழ் ஒற்றி யூர!
மூவா மேனி முதல்வ! நின் அருள்
பெற்றவர் அறியின் அல்லது
மற்றவர் அறிவரோ நின்னிடை மயக்கே. [ஒருபாஒருபது)

மூவா முதல்வ! பலகோடி அலைகள் கடலில் எழுந்து அடங்குதல் போல் அகில சீவகோடிகளும் உன்னிட மிருந்தே தோன்றி மீண்டும் ஒடுங்குகின்றன; இந்த அற்புத நிலையை உன் அருள் பெற்றவர் அன்றி மற்றவர் அறிதல் அரிது என ஈசனை நோக்கிப் பட்டினத்தார் இவ்வாறு பேசித் துதித்திருக்கிறார்.

சத்தியமாய் நித்தியமாய் ஆனந்த மயமாய் எங்கும் நிறைந்துள்ள இறைவனுடைய சொந்த உறவு நீ; இந்த உண்மையை உணர்ந்து மாய பந்தங்கள் யாவும் ஒழிந்து தூயனாய் உயர்ந்து உன்னுடைய இயல்பான பேரின்ப நிலையை இனிது பெறுக.

### இவ் அதிகாரத்தின் தொகைக் குறிப்பு

வீடு என்பது பேரின்ப நிலையம்.
ஈசன் போல் தேசு நிறைந்தது.
பாசம் நீங்கிய உயிர்கள் வாசம் செய்வது.
பரம்பொருள் அருள் பரவியுள்ளது.
அதனை அடைந்தவர் ஆனந்த நிலையினர்.
மாயமருள் நீங்கித் தூய அதைத் தோய்க.
ஆசை அறின் அது நேசமாய் வரும்.
அதிசய ஆனந்தம் அளவிட லரியது.
தூய மனம் அதனைத் தோய்ந்து மகிழும்.
உள்ளம் பரமானால் பேரின்பம் வெள்ளமாய் வரும்.

௱—வது வீடு முற்றிற்று.

தருமம் நீடூழி வாழுக.

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.





மனிதன் ஆகியிம் மாநிலம் வந்துளாய்!
புனித நீர்மை பொருந்தி ஒழுகுக;
இனிய ஈசன் இயலருள் எய்தியே
கனிய இன்பம் கதிநலம் காணலாம்.

இதனைக் கருதி நோக்கி உறுதிநலம் காணுக.